# வாழ்வின் ஒளி

பி. எம். கண்ணன்





கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் :: சென்னை-4

முதற் பதிப்பு—1946
இரண்டாம் பதிப்பு—1954
மூன்றும் பதிப்பு, பிப்ரவரி—1965

விலை ரூ. 5-00



1948 இல்
தமிழ் வளர்ச்சிக் கழகத்தின்
பரிசுபெற்ற நாவல்





PRINTED AT PEYESEN PRINTERS, MADRAS-2.

## இந்த நாவல்

இது என் இரண்டாவது நாவல். என் முதல் நாவலாகிய பெண் தெய்வத்தைப் படித்துப் 'பேஷ்' போட்ட கணக்கற்ற ரஸிகர்களுக்கு இந்த நாவலைச் சமர்ப்பணம் செய்யவேண்டியது என் கடமை. ஆனால் சம்பிரதாயத்தை ஒட்டிச் செய்யப்படும் இப்பேர்ப்பட்ட காரியத்தினால் மட்டும் நான் அவர்களைத் திருப்தி செய்துவிட விரும்பவில்லை. அவர்களது சிந்தனா சக்திக்கு இந்த நாவலில் கொஞ்சம் கடினமான வேலையைத்தான் கொடுத்திருக்கிறேன் என்பது என் துணிபு. வேலை சற்றே கடினமாயினும் அதை அவர்கள் பொருட்படுத்தாத விதமாகக் கதை சுவாரஸ்யமாக அமைந்துவிட்டதே, அது என் பாக்கியம். இந்தப் பாக்கியத்தை என் வெற்றி என்றுகூடச் சொல்லப்போகிறார்கள்; நிச்சயமாகத் தெரியும் எனக்கு. இந்த நவீனம் 'ஹநுமான்' பத்திரிகையில் தொடர் கதையாகப் பிரசுரமானபோது, பாராட்டியும் விமர்சனம் செய்தும் அத்தியாயம் அத்தியாயமாக அபிப்பிராயம் கூறியும் ரஸிகர்கள் எழுதியுள்ள கடிதங்கள்தாம் எனக்கு இத்தனை உறுதியை அளித்தன என்றால் அது மிகையாகாது.

முன்பின் அறியாத ஓர் ஆணும் பெண்ணும் தம்பதிகளாகிச் சர்வ சகஜமாக எத்தனையோ காலம் பழகியவர்கள் போல் குடும்ப வாழ்க்கை நடத்தும் அதிசயத்தைப்பற்றிச் சிந்தனை செய்து பார்த்தபோது பிறந்த கற்பனைதான் வாழ்வின் ஒளிக்கு அஸ்திவாரக் கல் நாட்டியது. ஆணைப் பெண்ணோடும் பெண்ணை ஆணுடனும் பிணைத்து வைக்கக்கூடிய அற்புத சக்தியாக விளங்கும் சரீர சுகம், காந்தம்போல் வசீகரிக்கும் காம இன்பம், சித்திக்கப் பெறாதவிடத்து, தாம்பத்திய வாழ்க்கை என்ன ஆகும் என்கிற விபரீதமான

எண்ணந்தான் இந்தக் கதையைப் பின்னத் தூண்டிவிட்டது. இயற்கையாகப் பிரவகிக்கும் உணர்ச்சி வெள்ளத்திலே அமிழ்ந்துபோய், அடித்துக்கொண்டு போய்விடாமல், அந்த வெள்ளத்தை எதிர்த்து எத்தனை தூரம் எதிர்ப்புறமாக வாழ்க்கைத் தோணியைச் செலுத்திக்கொண்டு போக முடியும் என்கிற மனோபாவத்துடன் இதில் இரண்டு பாத்திரங்கள் ஆட்டி வைக்கப்படுகின்றன. அதில் ஒன்று ஆண், மற்றொன்று பெண். பெண்ணுக்கு மாத்திரம் இந்த மனோபாவத்தைச் சிருஷ்டிப்பதற்காக நமது சமூகத்திலுள்ள புராதனமான, புனிதமான நம்பிக்கை யொன்றைப் பிரயோகம் செய்திருக்கிறேன். அந்த நம்பிக்கை நிலைத்து நிற்கத் தக்கவாறு சந்தர்ப்பங்களும் சூழ்நிலையும் அமைக்கப்பட்டிருக்கின்றன. அப்போதுதானே எதிர்ப்புறமாகச் செல்லும் வாழ்க்கைத் தோணி இயற்கை உணர்ச்சி என்கிற வெள்ளத்தில் தத்தளிக்கும்? இந்த இரண்டு பாத்திரங்களைச் சுற்றிச் சில உப பாத்திரங்கள் இயற்கையின் நியதியை ஒட்டி வாழ்ந்து 'வளைய' வருகின்றன.

இந்த நாவல் தொடர்கதையாக 'ஹநுமானி'ல் வெளிவர உதவிய அதன் நிர்வாக ஆசிரியர் ஸ்ரீ வி. சுந்தரம் ஐயர் அவர்களுக்கும், இதனைப் புத்தக ரூபத்தில் வெளியிட முன் வந்த 'கலைமகள்' காரியாலயத்தினருக்கும் என் நன்றியை இங்கே தெரிவித்துக்கொள்கிறேன்.

நமஸ்காரம்.

தியாகராயநகர்,
28-10-46.

பி. எம். கண்ணன்




# பொருள் அடக்கம்




# வாழ்வின் ஒளி

## 1

## ஸௌந்தரிய தேவதை

"ருக்கு! ருக்கு!!......ருக்கு!!!"

ருக்கு எங்கே இருக்கிருள்? ஆயிரம்பேர் பதினுயிரம் தடவை வேண்டுமானல் அவளைக் கூப்பிட்டுப் பார்க்கட்டுமே. ருக்குவின் காதில் விழப்போகிறதா? காலையில் எழுந்திருந்த போது இருந்தாளே, அதே ருக்குவா அவள் இப்போது? நேற்று அவள் எப்படி இருந்தாளோ, அப்படித்தான் இன்று காலையிலும் இருந்தாள். ஆனல் அதெல்லாம் காலை ஒன்பது மணியுடன் சரி. ஒன்பது மணிக்குமேல் அவள் அடியோடு மாறி விட்டாளே. சாதாரணமாக, ருக்கு நடந்து வரும் போது பார்க்கவேண்டும்: அன்னமும் தோகைமயிலுங்கூட அந்த நடைக்குப் பிச்சை வாங்க வேண்டும். "ஏண்டி, ஒரு காரியம் சொன்னுச் சட்டுனுதான் செய்வே! நன்னயிருக்கு! இப்படி எருமை மாடு ஆடி அசைஞ்சு அசை போட்டுண்டு நடக்கிறமாதிரி வந்தையானு, சுருக்கத்தான் காரியமாகும். நாளைக்கே போய்த் தனிக்குடித்தனம் பண்ணணுமே. ஒம்பது மணிக்கெல்லாம் இலையின் கீழே உக்கார்ந்துண்டு, ஆச்சா ஆச்சான்னு பறக்கப் போருனே; அப்போ தெரியும், இந்தச் சாய்ந்த நடையும் சாலக்கு வேலையும்" என்று செங்கமலம் பெற்ற தாயின் பிரத்தியேகமான வாஞ்சையுடனும் அங்கலாய்ப்போடும் அதிகாரம் செய்வதைக் கேட்டிருப்பவர்கள், அந்த ருக்கு வேறு, இவள் வேறு என்று எந்தக் கோவிலில் வேண்டுமானுலும் போய்ச் சத்தியம்

செய்யத் தயாராயிருப்பார்கள். அப்படி மாறிவிட்டாள் ருக்கு திடீரென்று.

அன்னத்துடன் போட்டியிட்ட அவள் நடை இப்போது மானுடன் போட்டி போடுகிறது. துள்ளியோடும் புள்ளிமான் போலக் காணப்படுகிருள் ருக்கு. இன்று காலை ஒன்பது மணி முதல் புதிதாகச் சிறகு முளைத்த பறவைக் குஞ்சு குப்பென்று இறக்கையை அடித்துக்கொண்டு வானத்தில் கிளம்பித் தொபீரென்று கீழே விழுமே, அந்த மாதிரியான தடுமாற்றம் அவள் நடையில் இருந்தது; அவளது ஒவ்வொரு செய்கையிலும் இருந்தது. அவள் நடந்தாளா ஓடினளா பறந்தாளா என்று சொல்ல முடியாது. அடக்கமும் கனிவும் ததும்பும் அவளது கரு விழிகளில் இன்று ஓர் அபூர்வமான பிரகாசம் தெரிந்தது. அவள் உள்ளத்தில் பொங்கிக்கொண் டிருந்த எல்லையற்ற ஆனந்தம், சொல்ல முடியாத வெட்கம், அந்த ரங்கமான ஒரு திகில், திகைப்பு எல்லாம் அவளது அழகிய கன்னங்களுக்கு ஒத்தடம் போட்டு அவைகளைச் சிவக்கச் செய்திருந்தன. குபீர் குபீரென்று தன் நெற்றியில் அரும்பும் வியர்வை முத்துக்களை அவள் எத்தனை தடவைதான் துடைத்துக்கொள்வாள்? கைகூட ஓய்ந்து போய்விட்டது அவளுக்கு. காரணம் இல்லாமலா அவளது இதழ்களில் அடிக்கடி மந்தகாசம் படர்ந்து பதுங்குகிறது.

இந்தப் பதினறு வருஷ காலமாக ஏற்படாத ஒரு புதிய அநுபவம் அவள் வாழ்க்கையில் நேர இருக்கிறது. அந்தப் புதிய அநுபவத்தை எதிர்பார்த்துத்தான் அவள் திடீரென்று ஒரு புது மனுஷியாக மாறிவிட்டாளோ? ஆம். அப்படித்தான் இருக்கவேண்டும்.

செங்கமலம் என்ன அத்தனை மௌட்டீகமா, தன் பெண்ணிடத்தில் தோன்றிய திடீர் மாறுதலை உணர்ந்து கொள்ளாமல் இருக்க? அவள் கவனித்துக்கொண்டுதான் இருக்கிருள். அவள் மனத்துக்கும் பெருமையாகத்தான் இருக்கிறது. ஆயினும் அவளுக்கு ஏன் மனசுக்குள்ளேயே, 'ஏனே இந்தப் பெண்ணுக்கு இப்படித் தலைகாலே தெரியவில்லை? உலகிலே எல்லோருக்கும் உண்டானதுதானே இது?'

என்று அடிக்கடி தோன்றுகிறது? 'சீ, இப்படி நமக்குத் தோன்றக்கூடாது' என்று தன்னைத்தானே அவள் கடிந்து கொள்ளத்தான் செய்கிறாள். இருந்தாலும் அவள் மனசு அவளுடன் ஒத்துழைக்கிறதா? அது தன் இஷ்டம்போல் என்ன என்னவோ எண்ணிக்கொள்ளுகிறது.

"ருக்கு! ருக்கு!! ருக்கு!!!...அடி ருக்மணீ...ஈ ஈ..."

இன்னும் என்ன வேண்டும்? செங்கமலத்துக்குக் கோபமான கோபம் வருகிறது. 'வெள்ளிக்கிழமையும் நாளுமாய் இந்தப் பெண் எங்கே போய்விட்டது? சாயந்திரம் விளக்கை ஏத்தினதும் சேவிக்கக்கூட இல்லாமே எங்கே தொலைஞ்சுதோ?' என்று கசந்துகொண்டே வாசல் பக்கம் வந்தாள் செங்கமலம். ஆனால் வாசலில் இருந்தால் தானே ருக்கு?

செங்கமலம் வாசலுக்கு வருவதற்கும் சாரதா எதிர்ப் படுவதற்கும் சரியாக இருந்தது. "ஏன் மாமி, ருக்கு எங்கே? காலம்பர முதல் அவளைக் கண்ணிலேயே காணுமே?" என்று கேட்டாள் சாரதா.

"உங்க வீட்டுக்குத்தான் போயிருக்காளோ என்ன மோன்னு நெனைச்சேன். அங்கே கூட வரல்லையா அவள்?"

"இல்லையே. அவள் அங்கே வரவேயில்லை. காலம்பர இந்த வாசலிலே நின்றிருந்தாளே அப்போ பார்த்ததுதான் அவளை."

"கோவிலுக்குப் போக நாழியாறதே. இப்பவே இருட்டற சமயமாச்சு. இன்னும் எப்ப கோவிலுக்குப் போறது? எப்ப திரும்பறது?"

"அதற்காகத்தான் நானே வந்தேன். இன்றைக்குக் கோவிலிலே ஏதோ விசேஷமாம். ஒருவேளை ருக்கு முன்னடியே அங்கே போய்விட்டிருப்பாளோ?"

"அப்படியெல்லாம் அவள் என்னண்டை சொல்லாமே கோவில் குளம்னு ஒரு நாளும் போனதில்லே. இப்படித்தான் யாரோடேயாவது பேசிக்கிண்டு உட்கார்ந்திருப்பாள். உங்க வீட்டுக்குத்தான் வரலேன்னு சொல்லிவிட்டாய். வேறே எங்கே போனாளோ?"

"உம். சரி. நான் கோவிலுக்குத்தான் புறப்பட்டேன். ருக்கு வந்தாளானல் சீக்கிரம் அவளை அனுப்புங்கள்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள் சாரதா.

சிறிது நேரம் வாசலிலேயே இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு நின்ருள் செங்கமலம். ஆனல் ருக்கு எந்த வீட்டிலிருந்தும் வரவில்லை. செங்கமலமும், 'உம்' என்றுகொண்டே உள்ளே திரும்பினுள்.

கூடத்தில் ஊஞ்சல் சங்கிலிகள் 'கிரீச், கிரீச்' என்று சப்தம் செய்தது அவள் காதில் விழுந்தது. வெளி முற்றத்தில் கையெழுத்து மங்கும் மங்கலான வெளிச்சம் இருந்தது; அந்தக் குருட்டு வெளிச்சம் கூடத்திலும் பாய்ந்து ஊஞ்சலை ஆட்டிக்கொண்டு ஒய்யாரமாக வீற்றிருந்த ஒரு யுவதியைச் செங்கமலத்துக்கு அறிமுகப்படுத்தியது.

"ஏண்டி, எங்கிருந்தடி இங்கே வந்து மொளச்சே? ஆயிரம் தடவை கத்து கத்துன்னு கத்தினேனே. அப்ப வெல்லாம் உன் காதில் விழல்லையா? ஆமாம். கோவிலுக்குப் போகவேண்டாமா? வெள்ளிக்கிழமை. விளக்கேத்தினல் சேவிக்கக்கூடச் சேவிக்காமே எங்கே போனுய்?" என்று சரமாரியாகக் கேட்டாள் செங்கமலம்.

"ஆமாம். எங்கே போயிட்டேன்? எல்லாம் இங்கேதான் இருந்தேன். கொஞ்ச நாழி மாடியிலே நின்றுகொண் டிருந் தேன். இதுக்குள் பிரளயமே வந்துவிட்டாற்போல அடித் துக்கொள்கிருயே!" என்று கழுத்தை ஒரு திருப்புத் திருப்பி மோவாய்க் கட்டையை 'மளுக்'கென்று தோள்பட்டையில் இடித்துக்கொண்டே சொல்லிவிட்டு, ஊஞ்சலிலிருந்து ஒரு குதி குதித்து 'ஜிவ்'வென்று சிட்டுக்குருவி போலக் கிளம்பிச் சமையலறைப் பக்கம் போனுள் ருக்கு.

"நன்னுத்தாண்டியம்மா இருக்கு உன் நாட்டியம்! நல்லதைச் சொன்னு, கசக்கத்தான் கசக்கும்" என்று செங்கமலம் சொன்னதும், ருக்கு குதித்த வேகத்தில் ஊஞ் சல் உயரக் கிளம்பி ஊசலாடியதும், அதன் சங்கிலிகள் பின் னும் பன்மடங்கு அதிகமாகக் 'கிரீச்' சிட்டதும் ருக்குவின் காதில் விழுந்தனவா என்ன?

சமையலறைக்கு முன் அறையில்தான் ஆராதனைக்காகப் பெருமாள் மேடை போட்டு அதன்மேல் கோவிலாழ்வாரும் சுவரில் சுவாமி படங்களும் பொருத்தப்பெற்றிருந்தன. திருவனந்தபுரத்து வெண்கலக் குத்துவிளக்கு ஒன்று பெருமாள் மேடைமேல் நின்றிருந்தது. அந்தக் குத்துவிளக்கின் பிரகாசந்தான் அறை முற்றும் பரவியிருந்தது.

ருக்கு பெருமாள் மேடையின் எதிரே போய் நின்றாள். ஒரு தடவை சுவாமி படங்களையும் கோவிலாழ்வாரையும் அவளது ஒளி நிறைந்த கண்களால் பார்த்தாள். அவள் முகத்தில் என்றைக்கும் இல்லாத ஒரு சோபை தங்கியிருந்தது. அதற்கேற்றாற்போல் மேடைமேல் இருந்த குத்துவிளக்கிலும் எவ்வளவு பிரகாசம்!

குத்துவிளக்கில் ஒரே திரிதான் எரிந்துகொண் டிருந்தது. அந்தத் திரியின் ஒளி சாதாரணமாக அறையின் மத்திய பாகத்தை மாத்திரம் பிரகாசப்படுத்தப் போதுமானது. அறையின் மூலைகள், கதவின் இடுக்குகள், மேல்கூரையில் சில பாகங்கள் இவற்றுக்கெல்லாம் அந்தக் குத்துவிளக்கின் வெளிச்சம் தெரிய முடியாது. ஆனால் அன்றைத்தினம் அறை முற்றும் துளிகூட இருட்டே தங்காதபடி தீபத்தின் ஜோதி துடைத்துவிட்டிருந்தது. ஒரு குட்டிச் சூரியனைக் கொண்டு வந்து உள்ளே வைத்ததுபோல் இருந்தது அந்த வெளிச்சம். அதேமாதிரிதான் இருந்தது ருக்குவின் முக விலாசமும் அப்போது. அடக்கமான அழகுடன் விளங்கிய ருக்கு, அப்போது ஒரு சௌந்தரிய தேவதையாகத் திகழ்ந்தாள். அழகைப் பிழிந்தெடுத்துச் செப்பனிடப் பட்டவைபோல் அமைந்திருந்தன அவள் அங்கங்கள் எல்லாம். மொத்தத்தில் சொல்லப் போனால், அந்தப் பூஜாக்கிருகத்தைப் பிரகாசப்படுத்திய தீப ஒளியைவிட ருக்குவின் தேஜோ மயமான வடிவம் அந்த அறைக்கு ஓர் ஒப்பற்ற அலங்காரத்தை அளித்தது.

ருக்கு வழக்கம்போலப் பெருமாள் மேடையின் எதிரே குனிந்து சேவிக்கவில்லை. அவள் கைகள் மடியில் இருந்த ஏதோ ஒன்றைப் படபடப்புடன் எடுத்தன. அந்தக் கைகளில் தான் எத்தனை நடுக்கம்! அந்த வஸ்துவை எடுப்பதற்குள்

அவள் முகத்திரையில் எத்தனை நூதனக் காட்சிகள் மாறி மாறி எழுந்தன! ஆனால் மடியிலிருந்து எடுத்த வஸ்து கைகளில் நின்றதா? கைகளின் பிடியினின்றும் நழுவியது. கீழே எரிந்துகொண் டிருந்த குத்துவிளக்கில் பட்டது. சட்டென்று குனிந்தாள் ருக்கு. ஆனால் அவள் அதை எடுக்கும் போது அதன் ஒருபக்கம் தீப்பற்றிக் கொண்டு எரிந்து போய் விட்டது. நல்ல வேளை, முழுவதும் எரிந்து போகவில்லை.

ருக்குவுக்கு மனம் 'திக்'கென்றது. எரிந்துபோன அந்தப் பொருளை அவள் விளக்கின் வெளிச்சத்தில் ஒரு முறை பார்த்தாள். ஆம், அது ஒரு கடிதம். அன்று காலை ஒன்பது மணிக்கு வந்தது. அந்தக் கடிதமேதான் அவளிடத்தில் அதுவரையில் காணப்படாத புதுமையைச் சிருஷ்டித்தது. அவள் உள்ளத்தில் உவகையை மலர வைத்த கடிதம் அது. அவள் நடையிலும் உடையிலும் பார்வையிலும் பேச்சிலும் பாவனையிலும் எல்லாவற்றிலுமே படபடப்பையும் வசீகரத்தையும் அளித்தது அந்தக் கடிதமேதான். ஆனால் அதே கடிதம் ஒருபாகம் எரிந்து கருகி அவள் கையில் இருக்கிறது இப்போது, முழுக் கடிதத்தைக் கண்டு பூரித்திருந்த அவள் இருதயத்தின் ஒரு மூலையில் இப்போது ஒரு பாகம் கருகிப்போன கடிதம் கொஞ்சம் இருட்டைக் கொண்டுவந்து திணித்தது. களங்கமற்றுத் துலாம்பரமாக விளங்கின அவள் வதனத்தில், அவளது இருதயத்தில் படிந்த இருளின் சாயை லேசாகப் படர்ந்து சந்திரனுக்குள்ள களங்கத்தைப்போல் தோற்றுவித்தது.

அவள் கண்களில் ஜலம் துளும்பிற்று. அவளையும் அறியாமல், 'இந்தக் கடிதத்துக்கா இந்தக் கதி ஏற்படவேண்டும்? இந்தக் கடிதம் கருகினதுபோல, என் வாழ்வும்...' என்று ஏதோ எண்ணின அவளது மனத்தை அவள் தனது திட சித்தத்தால் தடுத்துக்கொண்டாள். ஆயினும் மறுபடியும் மறுபடியும் அதே எண்ணமோ அதையொட்டி வேறு விதமான எண்ணமோ தோன்றுவதென்றால், அதை எப்படி அவள் தாங்குவாள்? அவள் தேகமெல்லாம் நடுங்கியது. மற்ற எண்ணங்களையெல்லாம் விட்டு, எதிரே மேடைமேல் இருந்த சுவாமியிடம் மனத்தைப் பறிகொடுக்க முயன்றாள் அவள்.

'எதற்கும் சுவாமி இருக்கிறார்; அவர் காப்பாற்றுவார்' என்று பிரார்த்தித்துக்கொண்டே சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து சேவித்தாள். அவள் மெய்ம்மறந்து வணங்கியபோது அவள் கையில் இருந்த கருகிப்போன கடிதம் கையைவிட்டு நழுவிப்போயிற்று.

அதே சமயத்தில் அங்கே வந்தாள் செங்கமலம். குத்து விளக்கில் எண்ணெய் வற்றிப்போய்த் திரி படர்ந்து எரிகிறது. அதனால் அறை முற்றும் சிறிது நிழல் கூட இல்லாமல் ஒரே வெளிச்சம். அந்த வெளிச்சத்தில் தன் மகள் சுவாமியை வணங்கி எழுந்திருப்பதைக் கண்டாள் அவள். ருக்கு தரையிலிருந்து எழுந்திருந்தபோது அவள் பக்கத்தில் கிடந்த காகிதத்தைக் கவனித்தாள் செங்கமலம். அதை அவள் போய்க் குனிந்து எடுத்ததை ருக்கு பார்க்கவில்லை.

கடிதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு நிமிர்ந்த தாய், மகளின் முகத்தை ஏறெடுத்துப் பார்த்தாள். அவள் பார்வை அடுத்த விநாடியே படர்ந்தெரியும் விளக்கு வெளிச்சத்தின் மேல் விழுந்தது. [இன்னும் சில விநாடிகளில் அணைய இருக்கும் அந்த ஜோதியைப்போல அத்தனை பிரகாசம் இவளுக்கு எங்கிருந்து வந்தது?-இப்படித்தான் நினைத்தது செங்கமலத்தின் அபலை மனசு.] அவள் என்ன செய்வாள் பாவம்? பெற்றெடுத்த தாய்! வேண்டுமென்றா அப்படி நினைப்பாள்? ஆனால் அவள் மனத்தின் ஓட்டத்தை அவளால் கட்டிப் பிடித்து அடக்க முடியவில்லையே!

ருக்கு எழுந்து நின்றுகொண்டு இரு கைகளையும் கூப்பி மனத்திற்குள்ளேயே ஸ்தோத்திரம் செய்தாள். அவள் தாய் அவளுக்குப் பின்புறத்திலேயே நின்றுகொண்டு கையில் இருந்த கடிதத்தைப் பார்த்தாள். ஆம், மாப்பிள்ளை எழுதியிருந்த கடிதம். அன்று காலையில் வந்ததுதான். அந்தக் கடிதமா விளக்கில் கொளுத்தப்பட்டிருக்கிறது?

இது என்ன காரியம்? ருக்குவா இப்படிச் செய்தவள்? செங்கமலத்தால் நம்ப முடியவில்லை. அவள் மனம் பதை பதைத்தது. "ஏண்டீ ருக்கு, இதென்ன காரியம்? இந்தக்

கடுதாசியை இப்படியா கொளுத்துவது?'' என்று வெடுக்கென்று கேட்டுவிட்டாள்.

தாயின் குரலைக் கேட்டுச் சட்டென்று திரும்பினாள் ருக்கு. "நான் கொளுத்தவில்லையம்மா. கை தவறி விழுந்து...'' அவளால் வார்த்தையை முடிக்க முடியவில்லை. ஏதோ ஒன்று தொண்டையை அடைத்ததுபோல் இருந்தது.

செங்கமலத்துக்கு மனசில் 'சிவுக்'கென்றது. "இன்னும் அப்பா பார்க்கல்லையே இதை? இப்படி எதை எடுத்தாலும் என்ன தவறல் வேண்டியிருக்கு! இதைக் கொண்டுபோய்க் கொடுத்தால் அவர் என்ன சொல்லுவார்?'' என்றாள் செங்கமலம்.

"நான் என்ன செய்வேன்! வேண்டுமென்று விளக்கில் போட்டேன்?'' என்று கூறி, ருக்கு மேலும் ஏதோ சொல்லப் போனாள். அதற்குள் வேண்டுமென்றே செய்வதுபோல, விளக்குக்கு நேராக உயரத்தில் வட்டமிட்டுக்கொண் டிருந்த ஒரு விட்டில், சரேலென்று விளக்கின்மேல் பாய்ந்தது. படர்ந்து எரிந்துகொண் டிருந்த தீபத்தின் ஒளியை அது அணைத்துவிடும்போல் இருந்தது ஒரு விநாடி. அந்த விட்டில் பூச்சி விளக்கின்மீது விழுந்த வேகத்தில் அறையில் ஒரு கணம் அந்தகாரம் சூழ்ந்தது. ஆனால் மறு விநாடியே மீண்டும் விளக்கின் வெளிச்சம் தெரிந்தது. எனினும் விளக்கில் விழுந்த விட்டில் அங்கே இறந்து கிடக்கவில்லை. அது எங்கே மாயமாய் மறைந்ததோ?

அதே தீபத்தில் ஒளி இன்னும் இருந்துகொண் டிருக்கிறது. அதை விழுங்க வந்த விட்டில் தோல்வியுற்று மறைந்தது. ஆயினும் அந்த ஒளி நிரந்தரமான ஒளி அல்ல. நின்று நிதானித்து எரியும் தீபத்தின் ஒளியல்ல அது. எண்ணெய் இல்லாமல் படர்ந்தெரியும் விளக்கின் பிரகாசம். அதை விழுங்க ஒரு விட்டில் வேண்டாம். அது தானாகவே சில விநாடிகளில் மறைந்து விடும். ஆனால் அந்த ஒளி மறையக் கூடாதே என்றுதான் எண்ணினாள் செங்கமலம். அவள் மனத்தில் என்ன தோன்றியதோ என்னவோ? "ருக்கு, இப்படி வா, நாழியாச்சு. கோவிலுக்குப் போய்

வரலாம்'' என்று சொல்லிக்கொண்டே கடிதமும் கையுமாகப் பூஜை அறையை விட்டு வெளியே போனாள். ருக்குவும் தாயைப் பின்தொடர்ந்து மௌனமாகவே சென்று, கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டாள். ஊஞ்சலும் 'கிரீச்'சிடத் தொடங்கிற்று.

செங்கமலம் கூடத்திலிருந்து ஏதோ நினைத்துக் கொண்டவள்போல் உள்ளே போனாள். பூஜை அறையில் விளக்கு அணையும் தறுவாயில் இருந்தது. அறையில் சற்று முன் இருந்த பிரகாசம் போய்இருள் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரவேசித்துக்கொண்டிருந்தது. சட்டென்று மாடத்திலிருந்த ஒரு புதுத் திரியை எடுத்து எண்ணெயில் நனைத்து அணைந்து கொண்டிருக்கும் தீப ஒளியில் அதை ஏற்றிக் குத்து விளக்கில் இட்டாள். பிறகு அதற்கு எண்ணெயும் வார்த்தாள். அடியோடு அணைய இருந்த தீபம் மறுபடியும் அறையில் ஒளி வீசலாயிற்று. செங்கமலத்தின் மனத்திலும் ஒருவிதமான நிம்மதி ஏற்பட்டதுபோல் இருந்தது அப்போது. சுவாமி முன்னிலையில் ஒருதரம் வணங்கி எழுந்து கூடத்துப் பக்கம் வந்தாள்.

ஊஞ்சல் மெதுவாக ஆடிக்கொண்டிருந்தது. அதன் ஒரு சங்கிலியின்மேல் முதுகைச் சாய்த்த வண்ணம் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள் ருக்கு.

"ருக்கு!"

"அம்மா!"

"ஒரு சமாசாரம்."

"என்ன?"

"அப்பா வரும் சமயம் ஆச்சு. அந்தக் கடுதாசியை அவர் இன்னும் பார்க்கல்லே. பார்த்தாலும் மூளியா இருக்கிறதைப் பார்த்துக் கோவிச்சுக்குவார். அவராண்டை அதைப்பத்தி ஒண்ணும் சொல்லாதே."

"அது எப்படியம்மா முடியும்? அவர் வருகிறதாக எழுதியிருக்கிறாரே. அப்பாவுக்குச் சமாசாரம் தெரியாமற் போனால்?"

"நான் எப்படியாவது சமாசாரத்தை அவருக்கு எட்ட வைத்துவிடறேன். நீ சும்மா இரு. கடுதாசியை எங்கேயோ

கைதவறி வச்சுவிட்டதாக நான் சொல்லிவிடறேன். இல்லாமப்போனு, இந்த மூளிக் கடுதாசியைப் பார்த்து, அவர் விஷயம் தெரிஞ்சா ரொம்ப ஆத்திரப்படுவார். மனசும் ரொம்பக் கஷ்டப்படும் அவருக்கு.''

"அம்மா, எனக்கு என்னமோ பயமாயிருக்கு.''

"அசடு, அதெல்லாம் ஒண்ணும் இல்லே. உள்ளே போய்ச் சுவாமி சந்நிதியிலே இன்னெரு தரம் சேவிச்சுவிட்டு, கொஞ்சம் தாயார் குங்குமத்தை இட்டுண்டு வா. அப்பா வரத்துக்குள்ளே கோவிலுக்குப் போய்த் திரும்பிவிடலாம்.''

ருக்கு அதற்குமேல் ஒன்றும் பேசவில்லே. தாயின் வாக்கு அவளுக்குத் தெய்வவாக்குப்போல் இருந்தது அத் தருணத்தில். ஊஞ்சலே விட்டு எழுந்தாள். உள்ளே போனுள், ஆனுல், 'உள்ளே இதற்குள் விளக்கு அணேந்து போய்ச் சுவாமி சந்நிதியில் ஒரே இருட்டா யிருக்குமே!'— இந்த நினேவு அவள் மனத்தில் கலக்கத்தை உண்டாக்கியது. ஆயினும் அவள் கால்கள் அவளேயும் மீறிப் பூஜை அறையண்டை அவளே அழைத்துச் சென்றன. அங்கே அவள் கண்ட காட்சி என்ன? அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது.

குத்துவிளக்கு எரிந்துகொண் டிருக்கிறது. அணேவதற்கு முன் அந்த அறையில் தெரிந்த ஒரு பேய்ப் பிரகாசம் அப்போது காணப்படவில்லே. நின்று தணிந்து எரியும் அந்த அழகிய இயல்பான ஒளியின் முன் அஞ்சலி செய்து நிமிர்ந்தாள் ருக்மிணி.

"ருக்கு, நாழியாச்சு, வா" என்று கூடத்திலிருந்து தாயின் குரல் கேட்டது.

ருக்கு கூடத்துக்கு வந்தபோது செங்கமலம் ஒரு தட்டில் வெற்றிலே, பாக்கு, தேங்காய், புஷ்பம் முதலிய நிவேதனப் பொருள்களுடன் நின்றுகொண் டிருந்தாள்.

வெளியில் சென்றிருந்த தேவராஜ ஐயங்கார், அப்போதுதான் "ருக்கு!'' என்று கூப்பிட்டுக்கொண்டே வந்தார்.

தேவராஜ ஐயங்கார் உள்ளே வந்ததும் கூடத்தில் வெற்றிலே பாக்குத் தட்டுடன் நின்றிருந்த செங்கமலத்தைப் பார்த்தார். "ஏண்டி, இதை வைத்துக்கொண்டு இங்கே

நின்றிருந்தால் என் மூக்கிலே மணக்குமா என்ன? ஏது ராஜமரியாதையாக இருக்கிறதே. வாசற்படியண்டை வைத்துக்கொண்டு நின்ருல் ஜோராக இருக்கும். என்ன, என்றைக்கும் இல்லாதபடி இன்று இத்தனை உபசாரம் எனக்கு?'' என்று கிண்டலாய்க் கேட்டார்.

''போதும். கொழந்தை இல்லாத வீட்டிலே கெழவன் துள்ளித் துள்ளி விளையாடினனும். அந்த மாதிரிதான் இருக்கு நீங்க பண்ணறது. கோவிலுக்குப் போகலாம்னு புறப்பட்டேன். அதுக்குள்ளே நீங்களும் வந்தேக. இதுக்குப் போய் இத்தனை கேலியா? ஏதுடா பக்கத்திலே குதிராட்டமா வளர்ந்த பொண் ஒத்தி இருக்காளேன்னு கூடத் தோணல்லியே ஓங்களுக்கு?'' என்று புது நாட்டுப் பெண் போல நாணிக் கோணிக்கொண்டு பேசினுள் செங்கமலம். அவள் முகத்தைப் பார்த்தால் பதினைந்து வயது திடீரென்று குறைந்து போய்விட்டதுபோலத் தோன்றிற்று.

அப்பா வேடிக்கையாகப் பேசுவதைக் கேட்டதும் ருக்மிணிக்கே சிரிப்பு வந்தது. சற்று முன் மனத்தில் நிகழ்ந்த போராட்டத்தைக்கூட மறந்தாள் அவள். ''அம்மா, அந்தத் தட்டை இப்படிக் கொடு, நான்மாத்திரமாவது கோவிலுக்குப் போய்விட்டு, சாரதா வரும்போது கூட வந்துவிடுகிறேன்'' என்ருள் சங்கோசத்துடன்.

''இதோ இரு. அப்பாவுக்குக் கொஞ்சம் காபி கொடுத்து விட்டுவந்துடறேன்'' என்ருள் செங்கமலம்.

''இப்போதே இருட்டிவிட்டது. இரண்டு பேருமே போங்கள். காபி கீபியெல்லாம் நானே எடுத்துச் சாப்பிட்டுக் கொள்ளுகிறேன்'' என்ருர் தேவராஜ ஐயங்கார்.

''ஆமாம். போருமே சவரணை. உங்களுக்கு அவ்வளவு தெரிஞ்சிருந்தா நான் ஏன் இப்படி இருக்கேன்? அங்கே அலமாரியிலே ஓரிடத்திலே எருமைப்பால் வச்சிருக்கு. இன்னேரிடத்திலே பசும்பால் வச்சிருக்கு. ஒண்ணுக்கொண்ணு தெரியாமே எதையாவது எடுத்து என்னமாவது பண்ணி வைப்பேக. காபி டிகாஷன் அடுப்புமேலே வச்சிருக்கேன், பக்கத்திலேயே அப்பளாம் பொரிச்ச

எண்ணெயை அடுக்கிலே கொட்டி வச்சிருக்கேன். டிகாஷனுக்குப் பதில் எண்ணெயை எடுத்துப் பாலிலே கலந்து வைப்பேக. நீங்க வெறுமே இருங்கோ. அஞ்சு நிமிஷத்திலே ஓர் அர்ச்சனை பண்ணிவச்சுட்டு வந்துடறேன்'' என்று சொல்லிவிட்டுச் செங்கமலம் கிளம்பினாள். ருக்குவும் தாயைப் பின் தொடர்ந்தாள்.

தேவராஜ ஐயங்கார் சகதர்மிணியின் உத்தரவை மீற முடியாமல் ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டார். ஊஞ்சல் கிரீச்சிட்டுக்கொண்டே அசையத் தொடங்கியது.

## 2

## தபஸ்வியின் தரிசனம்

**கோ**விலில் சாதாரணமாகவே வெள்ளிக்கிழமையன்று கூட்டம் அதிகம். அன்றைத் தினம் ஏதோ ஒரு திருநாள். சுற்றுப் பக்கத்தில் இருக்கும் கிராமங்களிலிருந்து ஜனங்கள் வந்திருந்தார்கள். கோவில் பிரம்மாண்டமான கோவில் அல்ல. சின்னக் கிராமக் கோவில்களைப் போன்றதுதான் அது. எனவே சுமார் இருநூறு ஜனங்கள் வந்தாலும் இரண்டாயிரம் பேர் போலக் காட்டும். அன்றைத் தினம் கேட்கவேண்டுமா?

கூட்டத்தைக் கண்டு ஒரு கணம் செங்கமலமே பிரமித்துப் போனுள். இந்தக் கூட்டத்தில் நுழைந்துபோய்த் தாயார் சந்நிதியில் ஓர் அர்ச்சனை செய்துவிட்டுத் திரும்புவது பிரம்மப் பிரயத்தனமாக இருக்கும்போல் தோன்றிற்று அவளுக்கு. வீட்டில் தன் கணவர் தான் வருவதற்குள் அவசரப்பட்டுக் கொண்டு பாலைக் கொட்டி, மோரைக் கொட்டி ஒன்றுக் கொன்று குழறுபடியாக ஏதாவது செய்துவைக்கப் போகிருரே என்கிற அலைச்சல் அவளுக்கு. அர்ச்சனை பண்ணுவிட்டால் போகிறது. வீட்டுக்குத் திரும்பிவிடலாம் என்றுகூடத் தோன்றிற்று.

என்றைக்கும்போல அவள் மனம் அன்றைக்கும் இருந் திருந்தால், கோவிலுக்கு வந்தது போதும் என்று ருக்குவையும் திருப்பி அழைத்துக்கொண்டு வீடு போய்ச் சேருவாள். ஆனல் சற்றுமுன் நிகழ்ந்த சம்பவம் அவள் மனத்தின் ஒரு மூலையில் குறுகுறுத்துக்கொண்டே யிருந்தது. கண்ணைக் கெட்டியாக மூடிக்கொண்டு மனத்தைத் திறந்து தாயார் முன்னிலையில் வேண்டிக்கொண்டால்தான் மனத்திலிருந்த பளுவானது குறையுமென்று தோன்றிற்று அவளுக்கு. எனவே கூட்டத்தையும் பாராமல் மெல்ல மெல்ல முன்னேறித்

தாயார் சந்நிதியை அடைந்தாள் அவள். ருக்குவும் அவளைப் பின்பற்றியே நடந்தாள்.

தாயார் சந்நிதியில் அர்ச்சனை செய்து முடிந்தது. ருக்குவுடன் செங்கமலம் சந்நிதியை வலம் வந்து வீடு திரும்ப எண்ணினாள். சந்நிதிப் பிராகாரத்தில் இருவரும் நடந்து சென்றபோது பின்புறத்திலிருந்து, "ருக்கு, ருக்கு" என்று கூப்பிட்டுக்கொண்டே வந்தாள் சாரதா.

ருக்கு திரும்பிப் பார்த்தாள். செங்கமலமும் நின்றாள்.

"ஏன் மாமி, எத்தனை தரம் கூப்பிடறது? கும்பலிலே கத்து கத்துன்னு கத்தினேனே. காதிலேயே விழவில்லை போல் இருக்கு" என்றாள் சாரதா.

"கூப்பிட்டயா என்ன? இந்தச் சந்தை இரைச்சலிலே காது எங்கே கேட்கிறது? ஒரே கோஷம்!"

"ஆமாம். நீங்கள் போகிற அவசரத்தைப் பார்த்தால் கோவிலுக்கு வந்தவர்கள்போல இல்லையே! ஏதோ சினிமாவுக்கு அவசர அவசரமாகப் போகிறமாதிரி இருக்கிறதே."

"இல்லேடீ நாங்க பொறப்படறபோதுதான் மாமா ஆத்துக்கு வந்தார். காலம்பரச் சாப்பிட்டுவிட்டுப் போனவர்; இன்னும் காபிகூடக் கொடுக்கல்லே. அதுக்கோசரந்தான் சீக்கிரமே திரும்பிப் போறேன்."

"ஆமாம். ஆண்டாள் சந்நிதிப் பக்கம் போகவில்லையா?"

"இல்லே. இன்னொரு நாள் சாவகாசமாப் போனாப் போறது. இப்ப நேரா வீட்டுக்குப் போகணும்."

"அட ராமா! உங்களுக்குச் சமாசாரம் தெரியாதா?"

"என்ன சமாசாரம்? ஒண்ணும் தெரியாதே!"

"ஆண்டாள் சந்நிதி மண்டபத்திலே சாயங்காலம் முதல் ஒரு சந்நியாசி வந்து உட்கார்ந்துகொண் டிருக்கிறாராம். பார்த்தால் மகா தபஸ்வி மாதிரி இருக்கிறதாம். எல்லோரும் போய்த் தரிசனம் பண்ணிவிட்டுப் போகிறார்களே."

"உம். உத்ஸவகாலமோன்னோ? யாராவது தேசாந்திரியாத் திரியறவாளா யிருக்கும். ஊர் ஊராப் போறபோது

இங்கே வந்திருக்கலாம். அவளைப் போய் நாம் என்னத் துக்குப் பார்க்கிறது?''

"இல்லே, இதுவரையில் இந்த மாதிரி ஒரு தபஸ்வி இங்கே வந்ததே கிடையாதென்று பேசிக்கொள்ளுகிறார்கள். ரொம்ப வயசானவர்போலக் காணப்படுகிறாராம். சாக்ஷாத் நாராயணனே இந்த ரூபத்தில் வந்திருக்கிற மாதிரி, அத்தனை தேஜஸுடன் இருக்கிறாராம் அவர்'' என்று சாரதா கூறியதைக் கேட்ட ருக்கு, "ஏன் அம்மா, அப்படிப் போய்த்தான் பார்த்துவிட்டுப் போகலாமே'' என்றாள்.

"இப்பவே இருட்டி ரொம்ப நாழியாச்சு. உங்க அப்பா பட்டினியும் பசியுமாக் காத்துண் டிருப்பார். நான் போறேன். நீ சாரதாவோடே போய்ப் பார்த்துவிட்டுச் சுருக்கத் திரும்பி வந்து விடு'' என்று சொன்னாள் செங்கமலம்.

சாரதாவும் ருக்குவும் ஆண்டாள் சந்நிதிக்குப் போகக் கிளம்பினார்கள். செங்கமலம் வீட்டுக்குப் புறப்பட்டாள்.

ஆண்டாள் சந்நிதி மண்டபத்தின் ஒரு தூணில் சாய்ந்த படி ஒரு பெரியவர் உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றி ஒரே கூட்டம். கோவிலுக்கு வந்திருந்த ஜனங்களில் பாதிப் பேருக்குமேல் அந்தப் பெரியவரைச் சுற்றி நின்றிருந்தார்கள். அவர் கண்மூடி நிஷ்டையில் இருப்பவர்போலக் காணப் பட்டார். சாரதாவும் ருக்குவும் அவர் அருகில் போக முடியாதபடி ஜனத் திரள் மறைத்துக்கொண்டு நின்றது. எனவே சாரதா, மண்டபத்துக்குச் சற்றுத் தூரத்தில் பிராகா ரத்தில் இருந்த ஒரு சிறு சந்நிதியண்டை போய் ருக்குவுடன் உட்கார்ந்துகொண்டாள்.

சற்று நேரம் இரண்டு பேரும் பேசவில்லை. மௌனமாக இருந்தனர். ருக்கு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பது போலத் தோன்றியது சாரதாவுக்கு.

"ருக்கு!'' என்றாள் மெதுவாக.

ருக்கு சாரதாவைப் பார்த்தாள்.

"காலை முதல் உன்னைக் காணவே காணோமே. எங்கே போயிருந்தாய்?''

ருக்குவுக்கு அன்றைய நிகழ்ச்சிகளைத் தூண்டிவிட்டது போல் இருந்தது சாரதாவின் கேள்வி.

"சாரதா!" என்றாள்.

அவள் முகத்தைப் பார்த்தால் சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லலாமா வேண்டாமா என்று தடுமாறுவது போலத் தோன்றிற்று சாரதாவுக்கு.

"ருக்கு, ஏன்? என்ன சமாசாரம்? என்னிடம் சொல்லக் கூடாத விஷயமா?" என்றாள்.

"அப்படி ஒன்றும் இல்லை."

கோவில் பிராகாரத்தில் தொங்கிக்கொண் டிருந்த தீபத்தின் மங்கிய வெளிச்சத்தால் ருக்மிணியின் கண்களில் நீர் தேங்கி நிற்பதைப் பார்த்தாள் சாரதா.

"ருக்கு, உன் மனசு இத்தனை சங்கடப்படும்படியான விஷயம் என்னடீ, சொல்லேன்" என்றாள் மிருதுவான குரலில்.

"அவர் வரப்போகிறாராம். என்னை அழைத்துக் கொண்டு..."

சாரதா கலகலவென்று சிரித்த சிரிப்பின் எதிரொலி அந்த இடத்தையே கிடுகிடுக்கச் செய்துவிட்டது. "அடி அசடே, அகத்துக்காரர் வந்து அழைத்துக்கொண்டு போகப் போகிறார் என்றால் ஒரு பெண்ணுக்கு எத்தனை சந்தோஷம் இருக்கும்? நீ நேர்மாறாக இருக்கிறாயே. இதில் விசனப்பட வேண்டிய விஷயம் என்ன இருக்கிறது...? உம். ஐயோ பாவம்! பச்சைக் குழந்தை. அம்மா அப்பாவை விட்டுப் பிரிய மனசு வரவில்லையோ! அடி கர்நாடகம்!" என்று கிண்டல் செய்தாள் சாரதா.

ஆனால் அவள் மேலும் பரிகாசம் செய்யாமல் தடை செய்தாள் ருக்கு.

காலை ஒன்பது மணிக்குத் தன் கணவனிடமிருந்து கடிதம் வந்தது முதல், அவள் எல்லையற்ற ஆனந்தம் கொண்டது முதல், சாயந்தரம் கடிதம் விளக்கில் கருகினது வரையில் ஒன்று விடாமல் தன் அந்தரங்கத் தோழியிடம் எடுத்துக் கூறினாள் ருக்கு.

சாரதா ருக்குவின் வார்த்தைகளைக் கேட்டுவிட்டுச் சிறிதுநேரம் யோசனையில் ஆழ்ந்தாள். இருப்பினும் அவளது புத்திசாலித்தனமும் சமயோசிதமான சாதுரியமும் அவள் உதவிக்கு வந்தன. "அசட்டுப் பெண்ணே, இந்த அல்ப விஷயத்துக்காகவா இப்படி வேதனைப்படுகிறாய்? இதை விடப் பெரிய பெரிய அபசகுனங்கள் ஏற்பட்டும் எத்தனையோ பேர் எவ்வளவோ நன்றாயிருக்கிறார்கள். கேவலம் எழுதப் படிக்கத் தெரியாத, மூட நம்பிக்கையுள்ள கர்நாடகப் பெண்டுகள் போல நீயும் நினைக்கிறாயே. அப்பேர்ப் பட்டவர்களே இந்தச் சாங்கியமெல்லாம் பார்க்கிற தில்லை. நீ என்ன எட்டு வகுப்புப் படிக்கவில்லை? நீ படித்த படிப்பெல்லாம் இதற்குத்தானா உதவிற்று? ஏதோ கையிலிருந்த கடிதம் நழுவி நெருப்பில் விழுந்துவிட்டால் அதனால் என்ன முழுகிப்போச்சு? எங்கள் வீட்டிலே சொல்லு வார்கள்: என் அத்தை கல்யாணத்தில் மாலை மாற்றும்போது மாலை சிக்கிக்கொண்டு அறுந்து போய்விட்டதாம். எல்லோ ரும் அபசகுனம் என்று முனகினார்கள். ஆனால் இதோ இன்றைக்குக்கூட அவள் தாலியைக் கட்டிக்கொண்டு பச்சுப் பச்சென்று இருக்கிறாள். ஒரு குறைச்சலும் இல்லை, அவளுக்கு. போடி அசடு" என்று புராணம் படித்து விட்டாள் சாரதா.

ருக்குவுக்கும் அவள் சொன்னது மிக்க ஆறுதல் அளித் தது. வாஸ்தவத்தில் தன் மனக்கவலை அஸ்திவார மற்றது என்று தோன்றிற்று அவளுக்கு. ஒரு சின்ன விஷயத்தைப் பற்றி அநாவசியமாக மூளையைக் குழப்பிக்கொண்டது அறி யாமையே என்று நினைத்தாள். எத்தனை தரம் எத்தனை வகுப்பில் அவள் மூட நம்பிக்கை சம்பந்தமான கட்டுரைகளையும் கதைகளையும் படித்திருக்கிறாள்? அவ் வளவும் அந்தச் சந்தர்ப்பத்தில் பயனற்றுப் போயின அன்றோ? இந்த நினைவு அவளுக்கே அவமானமாக இருந் தது. 'படித்த படிப்பெல்லாம் பள்ளிக்கூடத்துடன் போவதா? அப்படியானால் எதற்காக எட்டு வகுப்பு வரையில் படிப்பது?' என்பதுபோல ஏதேதோ எண்ணினாள். சாரதாவும் அவள்

மனம் தெளிவடைந்து அதில் எதிர்காலத்தின் இன்பக்கனவுகள் உதயமாகும்படி பேசத்தொடங்கினுள்.

ருக்குவின் மனத்தில் மறுபடியும் மகிழ்ச்சி குடிகொண்டது. நேரம் போவதே தெரியவில்லை. அவள் ஏதேதோ பேசினுள் சாரதாவிடம். தன் உள்ளத்தில் அலையலையாகப் பொங்கி எழும் இன்பமயமான உணர்ச்சிகளை, ஒரு பெண்ணுக்குத் தன் அந்தரங்கத் தோழியிடம் உள்ள சுவாதீனத்துடனும் வெள்ளை மனத்தோடும் வருணித்தாள். சொல்லப்போனல் பேச்சு மும்முரத்தில் அவர்கள் இருவருமே தம்மை மறந்துவிட்டனர்.

கடைசியில் கோவில் சுவர்களிலிருந்து தங்கள் குரல்களே கணீர் கணீரென்று எதிரொலித்தபோதுதான் அவர்கள் பேச்சுக்குத் தடை உண்டாயிற்று. அப்போது எதிரில் ஆண்டாள் சந்நிதியண்டை இருந்த ஜனக்கூட்டத்தைக் காணவில்லை. ஒரு சிறு துரும்பு கீழே விழுந்தாலும் காது கேட்கும்படியான நிச்சப்தம் நிலவியிருந்தது, அந்த இடத்தில்.

சரேலென இருவரும் எழுந்தனர். ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர். அவர்கள் இருவருக்குமே என்னவோ போல இருந்தது. "ஏண்டீ ருக்கு, எல்லோரும் போய் விட்டதுகூடத் தெரியவில்லையே!" என்ருள் சாரதா.

ருக்குவுக்குப் பதிலே சொல்லத் தெரியவில்லை. இறக்கைகள் இருந்தால் வீட்டுக்குப் பறந்தே போய்விடலாம்போல் இருந்தது.

ஆனல் சாரதா அவ்வளவு லேசில் விட்டு விடுகிருளா அவளை? "ருக்கு, அதோ பார்; அந்தச் சந்நியாசி அங்கே தூணில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருக்கிருர். போய் நமஸ்காரம் பண்ணிவிட்டுப் போகலாம்" என்ருள்.

"எனக்கு என்னவோபோல் இருக்கிறது. நேராக வீட்டுக்குப் போய்விடலாம் வா" என்ருள் ருக்கு.

"அதெல்லாம் போகக்கூடாது. அவரை நமஸ்காரம் பண்ணிவிட்டு ஒரே ஓட்டமாகப் போய்விடலாம்" என்று கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போனுள் சாரதா.

அவளை மீறி ருக்குவால் ஒன்றும் செய்ய முடியவில்லை. இருவரும் ஆண்டாள் சந்நிதிக்குச் சென்றனர்.

சந்நிதி மண்டபத்தின் மத்தியில் ஒரு 'குளோப்' விளக்குத் தொங்கிக்கொண் டிருந்தது. அதில் ஏற்றி வைக்கப்பட்டிருந்த சில தீபங்கள் மண்டபத்தை வெளிச்சப் படுத்தின. வெளிச்சமிருந்த ஓர் இடத்தில்தான் அந்தச் சந்நியாசி பத்மாசனம் போட்டு உட்கார்ந்திருந்தார். அவர் கண்கள் திறந்திருந்தனவாயினும் சுற்றிலும் வியாபித்துள்ள நர உலகத்தை அவை பாராதவைபோலத் தோற்றமளித்தன. கண்ணுக்கு எட்டாமல் வெகு தூரத்தில் இருக்கும் ஏதோ ஒரு பொருளைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்தினால், எப்படிக் கண்கள் சூழ்நிலையை மறந்து அந்த ஒரு வஸ்து வைக் காண்பதிலேயே லயித்துப்போகுமோ அப்படிப் பார்ப்பதுபோல் இருந்தன அவர் கண்கள்.

அந்தக் கண்களில் ஒளி இருந்ததா இல்லையா என்று சொல்ல முடியாது. ஒரு நிரந்தரமான சாந்தியின் இருப் பிடம்போலத் தோன்றின அவை.

சாரதாவும் ருக்மிணியும் சந்நியாசியின் எதிரில் போய் நின்றார்கள். சாரதா முதலில் நமஸ்கரித்து எழுந்தாள். அவள் நமஸ்காரம் செய்ததையோ எழுந்ததையோ கண்டு கொண்டதாகத் தெரியவில்லை, சந்நியாசியின் முகத்தைப் பார்த்தால்.

சாரதாவின் பக்தி பெருகியது; 'ஆஹா, நாம் நமஸ் காரம் செய்ததைக்கூட உணர்ந்தும் உணராமல் இருக்கும் என்ன அபூர்வமான நிஷ்டை!' என்று எண்ணிக்கொண்டது அவள் மனம். அவள் கண்கள் சந்நியாசியையே நோக்கிக் கொண் டிருந்தன.

ருக்மிணி சந்நியாசியைச் சேவித்தாள். அப்போதும் சாரதா சந்நியாசியின் முகத்தையே கவனித்துக்கொண் டிருந்தாள். ருக்மிணி சேவித்துவிட்டு எழுந்திருக்கும்போது சந்நியாசியின் சாந்தி நிறைந்த கண்களில் சலனம் ஏற்படு வதைக் கண்டாள் சாரதா. அந்தக் கண்கள் சட்டென்று மூடின ஒரு விநாடி. மூடிய இமைகளிலிருந்து இரண்டு

சொட்டுக் கண்ணீர் உதிர்ந்ததைக் கண்ணுற்ருள் சாரதா. சந்நியாசியின் தேஜஸ் நிரம்பிய நெற்றியில் பல சுருக்கக் கோடுகள் தென்பட்டன. அந்தக் கோடுகளில் எத்தனை கோணல்கள்! அவர் வேண்டுமென்றே முகத்தைச் சுளித்துச் சுருக்கங்களை வெளிப்படுத்திஞரோ என்றுகூடத் தோன்றிற்று, சாரதாவுக்கு. அவர் தமது முகச்சுளிப்பின் மூலம் ருக்குவின் நமஸ்காரத்தை அங்கீகரிக்க மறுத்தாரோ என்கிற எண்ணம் உண்டாயிற்று அவளுக்கு. ஆனல் அமைதி நிலவும் ஆசிரமங்கள் போலிருந்த அவரது கண் மலர்களிலிருந்து ஜலம் ஏன் வரவேண்டும்? அந்த மகா தபஸ்வியின் மனத்தில் ஏதோ வேதனை ஏற்பட்டிருக்க வேண்டும் என்றெல்லாம் எண்ணிஞள் சாரதா. சற்று முன் சாதுரியமாக ருக்குவுக்குப் பதில் சொன்ன சாரதாவுக்கே மனத்தில் ஏதோ உறுத்துவதுபோல் இருந்தது. அவளது புன்னகை பூத்த முகம் வெயிலில் போட்ட புஷ்பம்போல் வாட்டம் அடைந்தது. ஆனல் ருக்கு சாரதாவின் முகத்தையாவது சந்நியாசியின் முகத்தையாவது கவனிக்கவில்லை.

ருக்கு சேவித்து எழுந்ததும் சாரதாவும் ருக்குவும் சந்நிதியை விட்டுப் புறப்பட்டனர். இருவரும் பத்தடி கூட நடந்திருக்க மாட்டார்கள். சாரதா ஏதோ உணர்ச்சியால் தூண்டப்பட்டவள் போலத் திரும்பிச் சந்நியாசியைப் பார்த்தாள். மௌன ஸ்வரூபியாக விளங்கிய அவர், "ஹூம்" என்று பெருமூச்சு விடுவது அவளுக்குக் கேட்டது.

உடனே பக்கத்தில் வரும் ருக்குவைத் திரும்பிப் பார்த்தாள். ருக்கு ஏதோ ஒரு பாட்டின் அடியை முணுமுணுத்துக்கொண்டே நடந்தாள். சாரதாவும் அவளது மானஸிகமான சங்கீதத்தைக் கெடுக்க விரும்பவில்லை. மௌனமாகவே ஏதோ எண்ணமிட்டுக்கொண்டு நடந்தாள்.

கோவிலை விட்டுத் தாண்டியதும் ருக்கு பாட்டை நிறுத்திவிட்டுப் பேச்சில் இறங்கிஞள். அவள் மனத்தில் ஒருவித உத்ஸாகம் இருந்தது. "ஏண்டீ சாரதா, கொஞ்ச நேரத்துக்கு முன்னே பெரிய 'லெக்சர்' அடித்தாயே, மூட நம்பிக்கையை யெல்லாம் விட்டுவிட வேண்டுமென்று. இந்தச் சந்

நியாசியைப் பார்த்ததிலிருந்து பெரிய மௌனியாகப் போய் விட்டாயே. உன்னைப் பார்த்தால், அவர் பக்தி முழுவதையும் உனக்குத் தத்தம் செய்துவிட்டாரோ என்று நினைக்கும்படி யல்லவா தோன்றுகிறது?'' என்று பரிகாசமாகக் கேட்டாள்.

சாரதா பழைய உத்ஸாகத்துடன் இல்லை. இருந்த போதிலும் சமாளிக்கப் பார்த்தாள். ''ஆமாம். மூட நம்பிக்கை கூடாதென்றுதான் சொன்னேன். பக்திக்கும் மூட நம்பிக்கைக்கும் உள்ள வித்தியாசங்கூடத் தெரியாமல் ஏதோ பேசுகிறாயே'' என்றாள் சாரதா.

''ஓஹோ! நீ நம்பினால் பக்தி; நான் நம்பினால் மூட நம்பிக்கை. அப்படித்தானே?''

''போடி அசடு.''

''அசடென்ன? நீ இந்தச் சந்நியாசியைப் பார்த்து ஏதோ தெய்வ லோகத்திலிருந்து நேரே வந்துவிட்டவர் என்று நம்பிக்கை கொண்டு விட்டாய். உனக்கு அதிகமான பக்தி ஏற்பட்டுவிட்டது. நான் ஒரு காரியத்தைச் செய்த போது ஏதோ அசந்தர்ப்பமாக நேரிட்டுவிட்டதே என்று எண்ணினேன். அது மூட நம்பிக்கையாகப் போய் விட்டது...'' என்று சொல்லும்போது இடைமறித்துச் சாரதா, ''ருக்கு, தபஸ்விகளைப் பழிக்கக்கூடாது. அது பாவம். தபஸ்விகளுக்கு உரிய மரியாதையை அளிப்பது தவறல்ல. அசட்டுப் பிசட்டென்று பேசாதே'' என்று வெடுக்கென்று கூறினாள். ஆயினும் அவள் மனத்தில் ருக்கு கூறிய கடைசிவார்த்தைகள் ஆழமாகப் பதிந்துவிட்டன. ''நான் ஒரு காரியத்தைச் செய்த போது ஏதோ அசந்தர்ப்பமாக நேரிட்டுவிட்டது...'' என்று ருக்கு கூறிய வார்த்தைகள் சாரதாவுக்கு வேறு அர்த்தம் கற்பித்தன.

ருக்கு சேவித்தபோது அசந்தர்ப்பம் போலச் சந்நியாசியின் கண்களில் கண்ணீர் துளிப்பானேன்? இந்தக் கேள்விதான் சாரதாவின் மனத்தில் எழுந்தது. ருக்கு இதையறிந்து தன்னிடம் சொல்லியிருந்தால் அவள் அதை மூட நம்பிக்கையென்று உடைத்தெறிந்து ருக்குவைச் சமாதானப்படுத்தியிருப்பாளல்லவா? ஆனால் இப்போது அவள் மனமே ஏன்

சஞ்சலப்படுகிறது? இதை உணர்ந்து தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள் சாரதா. எனினும் இதற்குப் பதில் என்ன என்பதுதான் அவளுக்குத் தெரியவில்லை.

வழியில் ருக்கு சாரதாவை ஏதோ கேட்டாள். அவள் கொஞ்ச நேரத்துக்குமுன் குதூகலமாகப் பேசியது போலன்றி, கேட்ட கேள்விக்கு மட்டும் ஒருவாறு பதில் சொல்லுவதும் தானாகப் பேச்சில் கலந்துகொள்ளாமல் மௌனமாகவே நடந்து வருவதும் ருக்குவுக்குப் பிடிக்கவில்லை.

"ஏண்டீ, என்னை அவர் வந்து அழைத்துக்கொண்டு போகப்போகிறார் என்று உனக்கு என்னடீ இத்தனை பொருமை? இப்படிப் பொருமைப்படுகிறவள் கல்யாணம் பண்ணிக்கொண்டிருந்தாலும் எப்படியாவது உன் அகத்துக்காரருக்குச் சமாசாரம் தெரியப்படுத்தி உன்னையும் கூட்டிக் கொண்டு போகும்படி ஏதாவது ஏற்பாடு பண்ணலாம்" என்று நிஷ்டுரப்படுத்தி ஏளனமாகப் பேசினாள் ருக்கு.

"போதும் போதும். பைத்தியம் மாதிரி உளருதே. அதுவும் இது நடு ரோட்டு. தெரிகிறதா?"

"ஆமாம். நீ மாத்திரம் என்னை அசடு, பைத்தியம் என்று எது வேண்டுமானாலும் சொல்லலாம். நான் உன்னை ஒன்றுமே சொல்லக்கூடாது" என்று கோபித்துக்கொண்டு சற்று எட்ட நடந்தாள் ருக்கு.

'ருக்கு, நீ உலகமே தெரியாதவள். உலகமே தெரியாத அபலைப் பெண்களைத்தான் தெய்வம் சோதனை செய்கிறது. உன் தலையில் என்ன எழுதியிருக்கிறதோ?' என்று சாரதாவின் மனம் தனக்குத்தானே பிரலாபித்துக்கொண்டது.

ஆனால் அவள் வாய்மட்டும், "ருக்கு, நீ எவ்வளவு வேண்டுமானாலும் என்னைப் பரிகாசம் செய். உனக்கு அவ்வளவு பாத்தியதை இல்லையா என்னிடத்தில்? ஏதோ விளையாட்டாகக் கண்டித்தால் இத்தனை கோபமா?" என்று கூறியது.

ருக்கு திரும்பிப் பார்த்துச் சிரித்தாள். அந்தக் களங்கமற்ற சிரிப்பில் சாரதாவும் கலந்துகொள்ள முயன்றாள்.

சற்றுத் தூரத்தில் அவர்களுடைய வீடுகள் தெரிந்தன.

3

## விநோத மனுஷ்யர் !

கோவிலுக்குச் சென்றபோது அங்கிருந்த கூட்டத்தைக் கண்டு பிரமிப்படைந்த செங்கமலம், கோவிலை விட்டுத் திரும்பும்போது கூட்டத்தைக் கொஞ்சமும் லக்ஷ்யம் செய்யவில்லை. கும்பல் கும்பலாக நிற்பவர்களை நெருக்கித் தள்ளிக்கொண்டே அவசர அவசரமாக அவள் நடந்தாள். தன் புருஷர் தேவ ராஜ ஐயங்கார் எங்கே காபி டிகாக்ஷனைக் கெடுத்துவிடுகிருரோ பாலைக் கொட்டிவிடுகிருரோ எண்ணெயைக் கொட்டி மெழுகி வைக்கிருரோ என்கிற எண்ணமேதான் அவள் கால்களுக்கும் மனத்துக்கும் அத்தனை வேகத்தைக் கொடுத்தது.

அன்றியும் அன்றைத்தினம் மாப்பிள்ளையிடமிருந்து வந்த கடிதத்தைப் பற்றி எப்படியாவது அவரிடம் சீக்கிரம் சொல்லிவிடவேண்டுமென்று அவள் மனம் துடித்தது. ஆனல் எப்படி அந்தக் கருகிப்போன கடிதத்தை அவரிடம் கொடுக்காமல் சமாசாரத்தைமட்டும் சொல்லுவது என்றுதான் அவளுக்குத் திட்டமாகப் புரியவில்லை. இருந்தபோதிலும் எப்படியாவது செய்தியை அவரிடம் சொல்லிவிட்டால்தான் மனம் சமாதானம் அடையும்போல் இருந்தது. எனவே அவள் வெகு வேகமாக நடந்து வீட்டை அடைந்தாள்.

தேவராஜ ஐயங்கார் ஊஞ்சலில் உட்கார்ந்தவர் உட்கார்ந்தவர்தாம். அதைவிட்டு எழுந்திருக்கவேயில்லை. காலை முதல் அலைந்த ஒய்ச்சல் தீர, ஊஞ்சலில் உட்கார்ந்து மெல்ல ஆடிக்கொண்டே இருந்தார். செங்கமலம் வந்து பார்க்கும்போதும் ஊஞ்சல் கிரீச்சிட்டுக்கொண்டே யிருந்தது.

"என்னு, எழுந்து உள்ளே போகவேயில்லைபோல் இருக்கே!" என்று ஒரு கேள்வி போட்டு நிச்சயித்துக் கொள்ளப் பார்த்தாள் செங்கமலம்.

"ஆமாம். உள்ளே போகக்கூடாது என்று 'ஹோம் டிபார்ட்மென்டிலே' உத்தரவு. ஊஞ்சலே கதி என்று கிடக்கிறேன்" என்ருர் தேவராஜ ஐயங்கார்.

"இந்தக் குறும்புக்கு ஒண்ணும் குறைச்சலில்லே. ஏதுடா கல்யாணம் பண்ணி ஒரு வருஷ மாகப்போறதே. பெண்ணைக் கொண்டுபோய் விடணுமே. ஊஹூம். இந்த யோசனை யெல்லாம் ஏதுக்கு? வயசு ஏற ஏறக் குறும்பும் கேலியுந்தான் அதிகமாறது" என்று பெண் வர்க்கத்துக்கே சகஜமான தோரணையில் பேசிவிட்டுச் சமையலறைப் பக்கம் போனுள் செங்கமலம்.

தேவராஜ ஐயங்கார் ஊஞ்சலை விட்டு எழுந்து அவள் பின்னுல் பேசிக்கொண்டே நடக்கலானுர்: "ஏன், போன வருஷம் வரைக்கும் பெண்ணுக்கு வயசாகிவிட்டது, கல்யாணம் பண்ணவில்லை என்று ரகளை. இப்போது அவளைக் கொண்டுபோய் விடவில்லை யென்று 'திமிலோகம்'. அப்பப்பா! இந்தப் பொம்மனுட்டிகளோட சகவாசம் பண்ணுவது இருக்கிறதே......"

"ஆமாம். நான்கூட அதைத்தான் சொல்றேன். அந்தப் பொண்ணைக் கொண்டுபோய் அவள் ஆம்படையானண்டை விட்டுவிட்டு, கூப்பிடாமே சந்நியாசம் வாங்கிண்டு காசி, ராமேசுவரம்னு பொறப்படுங்கோ. வர வர யார் இருந்தாலும் இல்லே, இல்லாதபோனுலும் இல்லே, நீங்க பண்ணற பரிகாசமும் குறும்பும் என்னுலே பொறுக்க முடியல்லே" என்று சொல்லிக்கொண்டே காபி டிகாக்ஷனுக்குப் பால் விட்டுக் கலந்து எடுத்துக்கொண்டு வந்தாள் செங்கமலம்.

சுடச் சுட இருந்த அந்தக் காபியை வாங்கிக் குடித்தார் தேவராஜ ஐயங்கார். "அப்பாடா! திவ்யமான காபி!...... செங்கமலம், நீ சொல்வது ரொம்ப சரி. ருக்குவைக் கொண்டு போய் விட்டுவிட்டு, சந்நியாசம் வாங்கிக்கொண்டு காசிக்குப் போய்விடுகிறேன். உனக்கும் என் உபத்திரவம் இல்லா

திருக்கும். ஆனால் போகிற இடத்திலே தினம் இந்த மாதிரி காபி யார் போட்டுக் கொடுப்பார்கள்? அதுதான் யோசனையா யிருக்கிறது?''

செங்கமலத்துக்கே சிரிப்பு வந்துவிட்டது. இப்படிப்பட்ட மனுஷ்யரிடத்தில் எப்படித்தான் பேசி ஜயிப்பது? கேலி வேண்டாமென்றால் அதற்கும் ஒரு கேலி! ஆனால் சமாசாரத்தைச் சொல்லவேண்டுமே. அதற்காகச் சற்று நேரம் மௌனமா யிருந்துவிட்டுப் பின்னர், ''ஏன்னா...'' என்றாள்.

ஆனால் அந்த, ''ஏன்னா'' எங்கே இருக்கிறார்? காபி குடித்து முடிந்ததும் மறுபடியும் ஊஞ்சலுக்கே வந்து உட்கார்ந்தார். செங்கமலம், ''ஏன்னா, சொல்லிண்டேயிருக்கேன். காதிலே போட்டுக்கொள்ளாமே வந்துட்டேளே'' என்று அவர் பின் பக்கமாக வந்து ஊஞ்சல் சங்கிலி யொன்றைப் பிடித்தபடி நின்று கேட்டாள்.

''இதோ பார். செங்கமலம், காலை முதல் அலைந்தது ரொம்பக் களைப்பாயிருக்கிறது. என் காதிலே கீதிலே ஒன்றையும் போட்டுக்கொள்ள முடியாது. என் கன்னத்திலே வேண்டுமானாலும் போட்டுக்கொள்ளுகிறேன்'' என்று சிரித்துக்கொண்டே சொன்னார் தேவராஜ ஐயங்கார்.

அதற்குமேல் செங்கமலம் ஒன்றும் பேசவில்லை. ஊஞ்சல் சங்கிலியை விட்டு விட்டு உள்ளே போனாள்.

'இந்த மனுஷ்யன் எந்தச் சமயத்தில்தான் ஒரு விஷயத்தைப்பற்றிக் குறும்பு, கோமாளித்தனம் ஒன்றுமில்லாமல், நிஜமாகவே நிதானத்துடன் ஆலோசிக்கப் போகிறார்? வாழ்க்கையின் சிக்கல்களைப் பற்றியோ கடினமான உண்மைகளைப் பற்றியோ என்றைக்குத்தான் இவருக்குத் தெரியப் போகிறது? எப்படியோ விதி இருந்து ருக்குவுக்குக் கல்யாணம் ஆயிற்றே தவிர, இவராகத் தலைபோட்டுக்கொண்டு கல்யாணத்துக்காக ஓடி ஓடி வரன் தேடினாரா? இரவும் பகலும் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகவேண்டுமே என்று தூக்கங் கூட இல்லாமல் அவஸ்தைப்பட்டாரா? இப்போதும் அவள் கல்யாணத்துக்குப் பிறகு—அதுதான் சகஜமாக நடக்கும் பதினாலு வயசுக்கு மேற்பட்ட கல்யாணமாயிற்றே!—அவளைச்

சீக்கிரத்தில் புருஷனிடம் கொண்டுபோய் விடவேண்டுமே என்கிற அக்கறை அவருக்கு இருக்கிறதா? அதைப்பற்றி இதுவரையில் ஒரு வார்த்தையாவது செங்கமலத்திடம் பேசி யிருக்கிறாரா? அல்லது அவளே பிரஸ்தாபம் செய்த போதாவது தக்கவாறு பதிலளித்து அவள் மனத்தைத் திருப்தி செய்திருக்கிறாரா? என்ன விநோதமான மனுஷ்யர் இவர்? ஒரு விஷயத்தைச் சொல்ல வந்தால், சொல்ல வந்த விஷயமே மறந்து போகும்படி பரிகாசம் பண்ணி வார்த்தையை மாற்றி விடுகிறாரே! இவரிடம் எப்போதுதான் நறுக்கென்று ஒரு சமாசாரத்தைச் சொல்லிக் காரியத்தைச் சாதித்துக்கொள்வது?' இப்படி எண்ணமிட்டுக்கொண் டிருந்தாள் செங்கமலம்.

ஆனால் தேவராஜ ஐயங்காரைத் தாங்கிக்கொண்டே ஊஞ்சல் தாலாட்டுப் பாட்டுடன் ஆடி, அவரைத் தூங்கப் பண்ணிவிட்டது. ருக்கு கோவிலிலிருந்து வந்தபோது தன் தகப்பனார் உட்கார்ந்தபடியே ஊஞ்சலில் தூங்கிவிழுவதைப் பார்த்தாள். ஒரு தலையணையை எடுத்துவந்து போட்டு, "அப்பா, இப்படியே படுத்துக்கொள்ளுங்கள்" என்றாள். தேவராஜ ஐயங்கார் படுத்த சற்று நேரத்துக்கெல்லாம் குறட்டை விடத் தொடங்கினார்.

ஊஞ்சலும் ஆடி நின்றுவிட்டது. எனவே சங்கிலிகள் கிரீச்சிடும் சப்தம் நின்று போயிற்று. ஆனால் ஊஞ்சல் சங்கிலிகளின் 'கிரீச்' சுக்குப் பதிலாக தேவராஜ ஐயங்காரின் 'குர்புர்' சப்தம் கூட்டத்தை அலங்கரித்தது.

தேவராஜ ஐயங்கார் ஒரு விநோதமான மனுஷ்யர்தாம். முள் நிறைந்த பாதைகள், படுகுழிகள், மேடுகள், பள்ளங்கள் எல்லாம் நிறைந்தது 'வாழ்க்கை' என்று யாராவது சொன்னால் அவர் கலகலவென்று சிரித்துவிட்டுப் போய்விடுவார். வாழ்க்கைப் பாதையிலுள்ள கரடுமுரடுகளையெல்லாம் அவர் கேலிச் சிரிப்பு, சமன் செய்துவிடும். உலக நாடக மேடையில் சோக நாடகங்களுக்கு இடமே கொடுக்கக் கூடாது என்பது அவரது கொள்கையோ என்னவோ? 'வாழ்க்கை' என்னும் நாடகத்தை மேடையில் நடிக்கும் எல்லா நடிகர்களும் அதை ஒரு கேலிக்கூத்தாகச் செய்வதைக்கூட அவர் பெரிதும் விரும்

புவார். அதை ஒரு பெருஞ் சுமையாகக் கருதி அந்தச் சுமையைக் கட்டி யிழுத்துச் செல்வதில் உள்ள கஷ்ட நஷ்டங்களை விளக்குவதற்காக நடிகர்கள் உதவுவதாயிருந்தால், அந்த நாடகத்தையே வெறுத்துத் தள்ளுவார் அவர். அவரது ஒரே கொள்கை, கவலை என்பதற்கு எப்போதுமே மனத்தில் இடம் கொடுக்கக்கூடாது என்பதுதான். இல்லாவிட்டால் மாதம் நூறு ரூபாய் வருமானமுள்ள சர்க்கார் உத்தியோகத்தை நொடிப் பொழுதில் உதறித் தள்ளிவிட்டு, வேதவரம் கிராமத்தில் காய்ந்து போய்க் கிடக்கும் எட்டு ஏகரா நன்செய் நிலத்தை நம்பி வந்ததோடு நிற்காமல், அந்த நிலத்தைக்கூடச் சொந்தமாகப் பயிர் செய்யாமல் குத்தகைக்கு விட்டுவிட்டுத் தெருத் திண்ணைமேல் குந்திக்கொண்டு அமைதியாகக் காலங் கழித்து வேடிக்கைப் பேச்சுப் பேசி வருவாரா?

'சிரிப்பார் கண்முன்னே இடறி விழுந்தாற்போல இருக்கிறதே இவர் செய்கை' என்று செங்கமலம் நெஞ்சு குமுறிய காலமும் உண்டு. ஆனல் அதெல்லாம் பழங்கதை. மூன்று வருஷ கிராம வாழ்க்கைக்குப் பிறகு அவளுக்குப் பழைய பட்டண வாழ்க்கையே மறந்து போய்விட்டதென்று கூடச் சொல்லலாம். இருந்தாலும் ஒரோர் சமயம் அவளுக்குப் பழைய ஞாபகங்கள் வந்து அவள் மனத்தைப் புல்லரிக்கும்.

'கோட்டும் தலைக் குட்டையுமாக அவர் அன்று ஆபீஸுக்குப் போன போக்கென்ன? இன்று துண்டை உதறி தோள்மேல் போட்டுக்கொண்டு வயல் வெளிகளைப் பார்க்கப் போகும் பரிதாபமென்ன?' — இப்படி நினைப்பாள் செங்கமலம். அப்போது பளபளவென்று ஊளைச் சதை போட்டுப் பரங்கிப் பழம்போல் இருந்த அவரது ஸ்ரீரம் இப்போது கறுத்து, இறுகி வைரம் பாய்ந்த கருங்காலி மரம் போல மாறிவிட்டது. அந்த 'உத்தியோகத் தொந்தி'யும் ஒய்யார நடையும் எங்கேயோ மறைந்துவிட்டன.

நாசுக்கான நகர வாழ்க்கையிலிருந்து நீங்கி, கடினமான கிராம வாழ்க்கையை மேற்கொண்டார் தேவராஜ ஐயங்கார். ஆனுலும் அவர் மனம் மாத்திரம் அன்றிருந்த வலிவுடனேயே இன்றும் இருந்தது.

செங்கமலத்துக்கு மாத்திரம் அவர் அத்தனை அவசரப் பட்டு வேலையை ராஜீநாமாக் கொடுத்திருக்கக்கூடாது என்று எண்ணம். ஆனால் சர்க்கார் உத்தியோகம் இல்லா விட்டால் மனுஷ்யன் செத்தா போய்விடுவான்? காலை 10-மணி முதல் மாலை 5-மணி வரையில் கைகட்டி வாய் புதைத்து மேலதிகாரிகளுக்கெல்லாம் அடங்கி ஒடுங்கி வேலை செய்தும், ஒரு திருணமாக மதித்து நடத்தப்பட்டால் மனுஷ் யனுக்கு என்னமாயிருக்கும்? வெளியூரிலிருந்து சௌகரி யத்தை உத்தேசித்துச் சென்னைக்கு மாற்றப்பட்ட ஒரு பெரிய மனுஷ்யன் பிள்ளைக்காக வேண்டி, தேவராஜ ஐயங்கார் தம் ஸ்தானத்தைக் காலிசெய்து கொடுத்துவிட்டுச் சென்னையில் இருந்து எங்கோ முந்நூறு மைலுக்கு அப்பால் இருக்கும் 'ஒரு தண்ணீரில்லாத காட்டு'க்குப் போகவேண்டுமென்று நிர்ப் பந்திக்கப் பட்டால் அவருக்கு ஆத்திரம் உண்டாவது நியா யந்தானே! இந்த நிர்ப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள முடியா தென்று கூறிவிட்டார் அவர். ஆனால் அவர் என்ன பிரிட்டிஷ் அரசாங்கத்தின் செல்லப்பிள்ளையா தம் இஷ்டப்படி செய் வதற்கு? தம்மிஷ்டப்படி அவர் செய்யக்கூடியது ஒன்றுதான் இருந்தது. அதைச் செய்ய அவர் தயங்கவும் இல்லை; அந்த விஷயத்தில் பிறருடைய புத்திமதிகளை விரும்பவும் இல்லை; எனினும் அவை தாமாகவே அவரை வந்து அணுகின. அவற்றை அவர் பொருட்படுத்தவும் இல்லை. தம் சுயமரி யாதையையோ மான அபிமானத்தையோ இழக்கவும் தயாரா யில்லை. பலன்: இன்று வேதவரம் கிராமவாசம் சித்தியானது தான்.

வேலையை விட்ட பிறகு மறுபடியும் தன் கணவன் ஏதா வது வேலையென்று ஒன்று பார்க்க வேண்டும் என்று எத் தனையோ ஆசைப்பட்டாள் செங்கமலம். ஆனால் அவள் ஆசைகளில் எதைத்தான் பூர்த்தி செய்தார் தேவராஜ ஐயங்கார்? கம்மென்று கிராமத்தில் வந்து குந்திக்கொண்டார். அத்துடன் எட்டு வகுப்பு வரையில் படித்த ருக்மிணியின் படிப்புக்கும் முற்றுப்புள்ளி வைக்கவேண்டிய தாயிற்று.

இதெல்லாம் செங்கமலத்துக்குத் தீராக் குறைகளே யாகும். ருக்மிணியும் மேலே படிக்க வேண்டுமென்று தான் விரும்பினுள். ஆனல் சந்தர்ப்பம் வேறுவிதமாக இருந் ததே. என்ன செய்வது? அவளைப்பொறுத்தவரையில் அவள் தன் பிதாவின் செய்கையைத் துளிகூடக் குறைகூறவில்லை. தனக்கு அவ்வளவுதான் பிராப்தம் என்று உணர்ந்துகொண் டாள். அவள் மனத்தில் கொஞ்சமும் ஆயாசமே ஏற்பட வில்லை. தந்தையின் குஷியான மனப்பான்மையை நன்கு அறிந்திருந்த ருக்மிணிக்குச் சமயத்துக்குத் தக்கவாறு அநு சரித்துக்கொண்டு போவது கஷ்டமாகத் தெரியவில்லை. செங்கமலத்துக்கு மாத்திரம் ஆரம்பத்தில் கொஞ்சம் சங்கட மாகவே இருந்தது.

நாளடைவில் அவளுக்கும் எல்லாம் சகஜமாய்ப் போய்விட்டது. ஆனல் ஒரே ஒரு விஷயத்தில் மாத்திரம் அவளுக்கு மிகுந்த வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அந்த ஒரு விஷயத்தில்தான் அவளுக்குச் சந்தோஷமும் 'இருந்தது என்பதை அவளேகூட மறைக்கமுடியாது. அந்த ஒரு விஷயந்தான் தேவராஜ ஐயங்காரின் குஷியான சுபாவம். எத்தனை கடுமையான பிரச்னை யானலும் சரி, அவர் அதைப் பெரிதாகப் பாராட்டாமல், 'ஏனே தானே' என்றிருக் கிருரே, கூடக் குறும்புத்தனமாகப் பேசிப் பரிகாசம் செய்து கொண்டே காலத்தை ஒட்டிவிடுகிருரே என்று செங் கமலம் கவலைப்பட்டாள். ஆனல் அவர் அப்படி யெல்லாம் இருப்பதால்தான்* தன் குடும்ப வாழ்க்கையில் ஆனந்தம் காணப்படுகிறது என்றும் உணர்ந்தாள் அவள்.

அவள் ஏதோ எண்ணமிட்டுக்கொண்டே உட்கார்ந்திருக் கும்போதுதான் ருக்மிணி கோவிலிலிருந்து திரும்பி வந்து தன் தகப்பனர் தூங்கி வழிவதைக் கண்டு ஒரு தலையணையைக் கொடுத்து அவரைப் படுக்கச்செய்தாள்.

அன்றிரவு நெடுநேரம் வரையில் செங்கமலம் மாப்பிள்ளை யிடமிருந்து கடிதம் வந்ததைத் தன் புருஷனிடம் எப்படிச் சொல்வது என்று யோசித்துப் பார்த்தாள். அதற்கு ஆரம்ப மாகத்தான் பெண்ணைக் கொண்டுபோய் விடுவது சம்பந்த

மாகப் பேச்சுக்கொடுத்தும் பார்த்தாள். ஆனால் ஆரம்பத்தி லேயே அவர், பேச்சை வெட்டி யெறிந்து, பரிகாசத்தில் ஈடு பட்டு விட்டதால் மேலே ஓடவில்லை.

குத்தகைக்காரன் பின்னால் அன்று காலை முதல் சுற்றி விட்டுக் களைத்து வந்திருக்கிறார் தேவராஜ ஐயங்கார். எனவே செங்கமலம் அவரிடம் கடிதத்தைப்பற்றி அப்போது ஒன்றும் சொல்லவேண்டாமென்றுகூட எண்ணினாள். ஆனால் கூடவே, 'சொல்லாமல் இருந்தால் எப்படியாகுமோ?' என்றும் தோன்றிற்று. கடிதம் கருகிப் போயிராவிட்டால் அதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவோ அதை அவரிடம் கொடுக்கவோ இத்தனை யோசனை செய்திருக்கமாட்டாள் அவள். தன்னைப் போல் அவர் இந்த எதிர்பாராத சிறு சம்பவங்களுக் கெல்லாம் விபரீத வியாக்கியானம் செய்துகொள்ள மாட்டார் என்பதும் அவளுக்குத் தெரிந்த விஷயமே யாகும். இருப் பினும் தன் பெண்ணின் வேலை, கடிதத்தைப் பார்த்ததும் அவரை வெடுக்கென்று ஏதாவது சொல்லச் செய்துவிடுமோ என்கிற பயமேதான் அவளுக்கு. குதர்க்கமும் கோணல் பேச்சும் நிறைந்த அவர் வாய் ஏதாவது உளறி வைத்தால்? - அதற்குத்தான் அஞ்சினாள். கடைசியாக அன்றிரவு அவரை அமைதியாகத் தூங்கும்படி விடவே செங்கமலம் தீர்மானித் தாள்.

அடுத்த நாள் அவள் கடிதத்தைப் பற்றிச் சொல்லும்படி யான சந்தர்ப்பமே வாய்க்கவில்லை.

காலையில் எழுந்ததும் தினசரி வேலையில் ஈடுபட்டுப் போனாள் அவள். தேவராஜ ஐயங்காரும் வாசலில் வந் திருந்த குத்தகைக்காரனிடம் நில விஷயமாக ஏதோ பேசிக் கொண் டிருந்தார். ஒன்பது மணி சுமாருக்கு வந்த தபால் காரன் அவரிடம் நேரிலேயே ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனான்.

அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்த்தார் தேவராஜ ஐயங்கார். "ஏண்டீ, அதற்குள்ளே அத்தனை அவசரப்பட்டு விட்டாயே! இதோ பார். மாப்பிள்ளையிடமிருந்தே கடுதாசி வந்துவிட்டது. இரண்டு வாரம் லீவு 'ஸாங்ஷன்' ஆகி

யிருக்கிறதாம். நாளைய சாயந்தரமே வந்து ஒரு வாரம் இருந்து விட்டு, போகிறபோது ருக்குவைக் கூட்டிக்கொண்டு போய் விடுகிறாராம்'' என்று உரக்கச் சொல்லிக்கொண்டே உள்ளே போனார் அவர்.

"மாப்பிள்ளையண்டே யிருந்து கடுதாசி வந்ததா?'' என்று திகைப்புடன் கேட்டாள் செங்கமலம்.

"இதோ பாரேன். இப்பத்தான் வந்துகொண்டே இருக்கிறது. வாங்கிக்கொண்டு நானும் வந்துகொண்டே இருக்கிறேன்.''

"இப்பவா வந்தது? இன்னிக்கா?''

"ஆமாம்! ஆமாம்!''

"நாளைக்குச் சாயந்தரம் வரேன்னு எழுதியிருக்கார்?''

"ஆமாம்.''

"செங்கமலம் மனத்திற்குள்ளேயே ஒரு தீர்மானம் செய்துகொண்டாள். முன் கடிதத்தில் மாப்பிள்ளை வரப் போவதாக மட்டும் தெரிந்ததே யொழிய எப்போது வரப் போகிறார், எப்போது பெண்ணை அழைத்துக்கொண்டு திரும்பிப் போகப்போகிறார் என்றெல்லாம் தகவல் இல்லை. ஆனால் இந்தக் கடிதத்தில் முழுத்தகவலும் இருந்தது. அன்றியும் முன் கடிதத்தைப்பற்றி அதில் பிரஸ்தாபம் இருந்ததாகத் தன் கணவர் சொல்லவில்லை. ஒருவேளை அதை அவர் கவனிக்கவில்லையோ என்று எண்ணினாள் அவள். எனவே அதை அறிந்துகொள்ளும் நிமித்தம் செங்கமலம், "இப்படித் திடுதிப்புன்னு கடுதாசி போட்டு, நாளைக்கு வரேன், ஒரு வாரத்திலேயே திரும்ப அழைச்சுண்டு போகணும்னு எப்படி முடியும்? ஒரு நாளா கிழமையா சாங்கியமா முகூர்த்தமா ஒண்ணும் பார்க்க வேண்டாமா? வரத்தைப்பத்திக் கொஞ்சம் முன்னாடியாவது கடுதாசி போட்டிருந்தாலும் தேவலை. இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கே எதிலேயும் அவசரம்'' என்று ஒரு ஸொட்டு வைத்துப் பேசிப் பார்த்தாள் செங்கமலம்.

"ஏண்டீ, நேற்று வரையில் பெண்ணைக் கொண்டு போய்விட நான் எந்த ஏற்பாடும் பண்ணவில்லை என்று

குதித்தாய். இன்றைக்கு மாப்பிள்ளையே வந்து கூட்டிக் கொண்டு போக வந்தால் முன்னாடியே ஒருமாச காலம் நோட்டீஸ் கொடுக்க வேண்டும் என்கிறாய்.''

'' ஆமாம், உங்களுக்கென்ன ? எதுக்கெடுத்தாலும் என்னைக் கேலி பண்ணத்தான் தெரியும். திடும்னு வந்து அழைச்சுண்டு போகணும்னா, அனுப்பறத்துக்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் பண்ண வேண்டாமான்னு சொன்னேன். முன்னாடியே கடுதாசி போட்டிருந்தா செளகரியமாயிருக்கும். அவர் போட்டிருந்தாலும் போட்டிருப்பார் ; தபாலிலே தவறிப் போயிருக்கும்.''

'' அதெல்லாம் உனக்கு ஏற்கனவே நோட்டீஸ் கொடுத் திருப்பதாக ஒன்றும் எழுதவில்லை. ஆபீஸிலே லீவு கிடைத்த பின்தான் இந்த யோசனை என்று தெரிகிறது.''

செங்கமலத்துக்கு, மாப்பிள்ளை முன் கடிதத்தைப்பற்றிப் பிரஸ்தாபிக்கவே இல்லை என்பது ஊர்ஜிதமாகிவிட்டது. எனவே அவள் அதைப்பற்றித் தன் புருஷரிடம் கூறவேண் டாம் என்று முடிவு செய்துகொண்டாள். ருக்கு மாத்திரம் எதற்காக அதைப்பற்றிப் பிதாவிடம் சொல்லப் போகிறாள்?

## 4

## அதே சந்நியாசி

கீழ்வானத்தில் ஒரு சிறிய வெள்ளிக்கோடு தெரிந்தது. சிறு குழந்தையின் உதட்டு வரம்பில் பல் முளைப்பது போன்ற வெளுப்பு அது. பூமியின் மற்றப் பாகங்களைத் தழுவியிருந்த மையிருட்டுக்கு விளிம்பு கட்டியதுபோல் இருந்தது அந்த வெள்ளிக்கோடு. அந்த வெள்ளிக் கோட்டிலிருந்து வீசிய இரண்டோர் ஒளிக்கதிர்கள் இருளில் மறைந்து கிடந்த மரம், செடி, காடு, ஆறு எல்லாவற்றையும் வெளியுலகத்துக்குப் புலனாக்கின. உஷக் காலத்தின் காற்று ஜிலுஜிலுவென்று அடித்தது. பக்ஷி ஜாலங்களின் சிறகடிப்புச் சப்தமும் காற்றின் ஓசையுடன் கலந்து கேட்டது, பனஞ்சோலைப் பக்கமாக ஏர் மாடுகள் மணியோசை செய்துகொண்டு நடந்து சென்றன. அந்த ஏர் மாடுகளுக்குப் பின்னால் தார்க்குச்சிகளைக் கையில் பிடித்துக்கொண்டு, தோளில் சுமந்த கலப்பைகளுடன் குடியானவர் இருட்டைக் கிழித்துக்கொண்டு செல்லும்போது, இருட்டும் அவர்களுக்குப் பயந்ததுபோல் ஓடிக்கொண்டிருந்தது. வானத் தோட்டத்தில் வாடின மலர்கள் போல் இருந்த நக்ஷத்திரங்கள் ஒவ்வொன்றாக மறையத் தொடங்கின. ஆதித்தன் கீழ்த்திசையில் தோன்றினான். வானத்தின் இருட்டும் வையத்தின் இருட்டும் நீங்கின. பனஞ்சோலை மீது அவன் கிரணங்கள் பட்டுப் பனை ஓலைகள் மரகதக் கற்கள் பதித்த தங்கத் தகடுகள்போல் மின்னின. 'கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்' என்று உதயகீதம் பாடிக்கொண்டே பனந்தோப்பின் பக்கமாக எதிரே வந்துகொண்டிருந்த ஒரு முதியவரைக் கண்டனர் ஊர்க் குடியான

வர்கள். ஆனால், 'ஆண்டிபரதேசிகள் ஆயிரம் பேர் சீமையிலே' என்று அவர்கள் எண்ணிக்கொண்டார்களோ, அல்லது, 'ஆயிரம் வேலை நமக்கு, அவரைப் பார்த்துக்கொண்டிருந்தால் ஆகுமா?' என்று நினைத்தார்களோ? ஒருவராவது சற்று நின்று அவரைப் பார்க்கவேண்டுமே! அதுதான் இல்லை.

முதியவரும் அவர்களைக் கவனித்ததாகத் தெரியவில்லை. தம் போக்கில் உதய ராகம் பாடிக்கொண்டே பனந்தோப்பைத் தாண்டிச் சென்றார். பனந்தோப்புக்கு அப்புறம் ஒரு தாமரைக் குளம். அந்தத் தாமரைக் குளத்தை அடைந்தார் முதியவர். குளத்தங்கரை மீது படித்துறைகளை அலங்கரிப்பவைபோல அரச மரங்களும் ஆல மரங்களும் வேப்ப மரங்களும் புளிய மரங்களும் நின்றிருந்தன. குளத்தைச் சுற்றி நான்கு படித்துறைகளில் வடக்குப் பக்கத்திலிருந்த படித்துறையின் இரு பக்கங்களிலும் இரண்டு பெரிய அரச மரங்கள் இருந்தன. கிழக்குப் பக்கமாக இருந்த அரசமரத்தின் கீழே கல்லில் அடிக்கப்பட்ட நாகங்களைப் பிரதிஷ்டை செய்து மேடை கட்டியிருந்தது. முதியவர் குளத்தில் இறங்கிக் கைகால்களை அலம்பிக்கொண்டு, சூரியனைப் பார்த்த வண்ணம் சில விநாடிகாலம் ஏதோ ஜபம் செய்துவிட்டுக் கரையேறினார். அந்த அரசமரத்தின் பக்கமாகச் சென்று மேடைமேல் அமர்ந்தார்.

அந்தக் காலை நேரத்தில் அந்தப் பிராந்தியம் முழுவதிலுமே அம்முதியவரைத் தவிர வேறு யாரையும் காணவில்லை. புது நாள் பிறந்ததும் அக் குளத்தில் முதல் முதலாகக் கால் வைத்தவர் அவர்தாம். அடுத்தபடியாகச் சிறிது நேரம் வரையில் யாரும் குளத்தில் இறங்கவில்லை. முதியவர் அடி வைத்ததால் ஏற்பட்ட நீர்ச்சுழி குளம் முற்றும் பெருகி வியாபித்து மறைந்த பிறகும் சிறிது நேரம் சென்றது. குளத்தங்கரை அரச மரத்திலிருந்து ஓர் இலையோ ஆலமரத்திலிருந்து ஒரு பழமோ வேப்பமரத்திலிருந்து ஒரு காம்போ ஒன்றுமே குளத்தில் விழுந்து நீர்ச்சுழி உண்டாக்கவில்லை. தண்ணீருக்குள் சஞ்சரிக்கும் ஒரு சிறு மீன்கூட நீர் மட்டத்துக்குமேல்

துள்ளிக் குதித்துச் சுழி உண்டாக்கவில்லை. மரத்திலிருந்த பறவைகளும் இரை தேடச் சென்றுவிட்டன, அவற்றின் சிறகடிப்புச் சப்தமும் இல்லை. பனந்தோப்பின் பக்கமாகச் செல்லும் மாட்டுக்காரப் பையன்களின் தில்லானுப் பாட்டுகள் கூடக் கேட்கவில்லை. அவர்கள் வெகு தூரம் சென்றுவிட்டனர். மாடுகளின் குளம்புச் சப்தமும் ஓய்ந்தது. முதியவரின் உதய கீதமும் முடிந்தது. ஆனுல் எங்கிருந்தோ ஓர் ஆந்தை கிளை கூட்டுவது மட்டும் அந்தப் பிரதேசத்தின் அமைதியைக் குலைத்தது. அந்த ஆந்தையின் அலறலோசை வரும் திக்கில் அடிக்கடி முதியவர் திரும்பிப் பார்த்த வண்ணம் இருந்தார். அப்பொழுது வந்தாள் அவள்.

அவள் விதி அவளை அத்தருணத்தில் அங்கே இழுத்து வந்தது என்று யாராவது சொல்ல முடியுமா? அவள் முகத்தில் எத்தனை தேஜஸ்! அவள் இதழ்களில் என்னவசிகரமான புன்னகை! அவள் கண்களில் எவ்வளவு வெறி! அவள் ஆடைகளில் எத்தனை அலங்காரம்! அவள் நடையில்தான் எத்தனை சிங்காரம்! வாய் நிறையப் பாட்டு; வழிநிறைய ஆட்டம்! அடடா! அந்தப் பெண் அப் பிரதேசத்தின் அமைதியையே விரட்டி யடித்துவிட்டாள். முதியவர் கால் வைத்த அதே படித்துறையில் அந்த மோகினியும் அடிவைத்து இறங்கிவிட்டாள்.

அவள் பாதம் தண்ணீரில் பட்டது. மறுபடியும் தண்ணீரில் சுழியுண்டாயிற்று. சில விநாடி காலமாகக் கேட்காத ஆந்தையின் அலறல் திடீரென்று கொஞ்சம் அதிகமாகவே கேட்டது. அலறல் வந்த திக்கில் முதியவர் திரும்பினுர். அத் திக்கில்தான் அவளும் இருந்தாள்.

'சீ, சனியன்! ஜலத்தில் கால் வைத்ததும் வைக்காததுமாய் ஆந்தை கிளை கூட்டுகிறது' என்று முணு முணுத்துக் கொண்டாள் அவள். ஆனுல் மறுகணம் அவள் சிரித்த சிரிப்பு அந்தப் படித்துறையையே கலகலக்கச் செய்துவிட்டது. 'ஆம், என்ன அசட்டுத்தனம். வெறும் மூட நம்பிக்கை!' என்று கொஞ்சம் கெட்டியாகவே பேசிக்கொண்டாள் அவள்.

அவள் தன் இடுப்பிலிருந்த குடத்தைப் படித்துறைமேல் லொட்டென்று வைத்தாள். அந்தக் குடத்தைப் பார்த்ததும் அவளுக்குப் பிரமாதமாகக் கோபம் வந்துவிட்டது. 'ஆமாம் உன்னுல்தானே எழுந்ததும் எழுந்திராததுமாய் என் பிராண சிநேகிதியிடம் வசவு வாங்கிக்கொண்டேன். உன்னைக் கீழே வைத்துவிட்டால்தான் என்ன? உன் கௌரவம் குறைந்து போய்விட்டதோ? நல்ல தூக்கத்திலிருந்த அவள் தலையில் போய் இடித்து அவள் என்னை வையும்படி செய்தாயே! இல்லாவிட்டால் ஒரு நாளாவது அவள் என்னைச் சனியன் என்று திட்டுவாளா? எல்லாம் உன்னுல்தானே! அடடே! நானும் அவளும் அவ்வளவு சிநேகமாயிருக்கிருேமே என்று உனக்கு எத்தனை பொருமை! அவர் வரப் போகிருர் என்று நான் அவளுடன் சொன்னது முதல் அவளே என்னைப் பார்த்துப் பொருமைப்படுகிருள். அவளுடன் நான் சிநேகமா யிருப்பதைக் கண்டு நீ பொருமைப் படுகிருய். அடேயப்பா! இந்த உலகந்தான் எத்தனை கபடம் நிறைந்தது. உயிருள்ளது முதல் உயிரில்லாதது வரையில் எல்லாமா இப்படி ஒன்றைப் பார்த்து ஒன்று பொருமைப்பட வேண்டும்? ஆனுல் இந்தப் பொருமையால் மட்டும் காரியம் நின்றுவிடப் போகிறதா? இதோ இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் அவர் வரத்தான் போகிருர். அவரை ஏற்றிவர வண்டிகூடப் போய்விட்டதே!' என்று மனம் விட்டுப் பேசினுள் அவள். அவள் பேச்சைக் கேட்டுக்கொண்டு எதிரில் யார் இருந்தது? அவளுடைய குடமேதான்.

அசட்டுப் பெண்! குடத்துடன் சொன்னுல் அது பதிலா சொல்லப் போகிறது? 'கல்லே, என் கதையைக் கேள்; மரமே, என் கதையைக் கேள்' என்று பேசும் திரேதா யுகத்துக் கதா நாயகியா அவள்? இல்லை. அதெல்லாம் ஒன்றும் இல்லை. அவள் புராணத்தில் வரும் கதா நாயகியோ சரித்திரத்தில் வரும் சித்திரப்பாவையோ அல்ல. அசல், அப்பட்டமான தற்காலச் சமூக வாழ்க்கையில் காணப்படும் ஒரு மங்கைப் பருவ மடைந்த பெண்தான் அவள். இன்று எத்தனையோ வீடுகளில் இருக்கும் ருக்மிணிகளில் ஒருத்திதான் அவள்.

ஆனால் எல்லா ருக்மிணிகளும் ஒரே மாதிரியா இருக்கிறார்கள்? ஒவ்வொருத்தி ஒவ்வொரு விதம்; இந்த ருக்மிணி ஒரு விதம். இவளை அழகு அலங்கரித்தது. யௌவனம் இன்பமூட்டியது. அறிவு சங்கடப்படுத்தியது. ஆனால் குதூகலம் தலைதெறிக்கச் செய்தது.

இல்லாவிட்டால் அதிகாலையில் வீட்டில் பெற்றோர் எழுந்திருப்பதற்கு முன்பே எழுந்து, எதோ 'அளிந்துபோவது போல'க் குடத்தைத் தூக்கி இடுப்பின்மேல் போட்டுக் கொண்டு சாரதாவின் வீட்டுக்குக் குதித்தோடுவாளா அவள்? அக்கிரகார வாசலில் சாணி தெளித்துக்கொண் டிருந்த வேலைக்காரிகள்கூட, "இதேதடி, ஒரு நாளும் இல்லாத திரு நாள்!" என்று மோவாய்க் கட்டைகளில் தங்கள் கைகளை வைத்தபடி விழித்துப் பார்த்துக்கொள்வார்களா?

சாரதா வீட்டு வேலைக்காரி, ருக்கு இடித்துக்கொண்டு உள்ளே ஓடின ஓட்டத்தில் சாணிச் சட்டியைக்கூடக் கைதவறி விட்டுவிட்டாள். ஆனால் அது சுக்குநூறாக உடையாதிருந்ததே, அதுதான் ஆச்சரியத்திலும் ஆச்சரியம்! சாரதா காற்றுக்காக வெளி முற்றத்தில் ஒரு பாயைப் போட்டுக்கொண்டு படுத்திருந்தாள். நல்ல தூக்கம். ருக்கு இடுப்பிலிருந்த குடத்தை அவள் தலைமாட்டில் வைத்துவிட்டு, "சாரதா, சாரதா!" என்று கூடக் கூப்பிடாமல் அவள் தோள்களைப் பிடித்து, "எழுந்திரடீ, எழுந்திரடீ!" என்று குலுக்கினாள், வேகத்துடன். தூக்க மயக்கத்திலேயே ஒரு ஹுங்காரம் போட்டு, கைகளைத் தலைப் பக்கமாக உயர்த்திச் சோம்பல் முறித்துக்கொண்டே தரையில் போட்டாள் சாரதா. தலைமாட்டிலிருந்த குடம் கைபட்டு 'லொட்'டென்று தலையில் இடித்தது. "சனியன், தலையிலே ஏண்டீ இடிக்கிறாய்!" என்று சொல்லிக்கொண்டே கண்விழித்தாள் சாரதா.

"ஏண்டீ. காலையில் எழுந்திருக்கும்போதே சனியன் என்கிறாயே என்னை" என்றாள் ருக்கு.

"ஆமாம்; எழுந்திருப்பதற்கு முன்னாலேயே தலையில் இடிக்கிறாயே நீ. அதுமட்டும் சரியா!" என்று நிஷ்டூரமாய்ப் பேசிக்கொண்டே படுக்கையை விட்டு எழுந்தாள் சாரதா.

"அவ்லே நினைத்துக்கொண்டு உரலே இடிக்கிற மாதிரி இருக்கிறதடி உன் சால்ஜாப்புப் பேச்சு. இப்படிப் பொறு மைப்பட்டால் உடம்புக்காகாது. தெரியுமா?"

"சரி. மறுபடியும் ஆரம்பித்து விட்டாயா? ருக்கு, என்னிடம் நீ இப்படியெல்லாம் பேசுவதானால், அப்புறம் 'டூ' விட்டுவிடுவேன்."

"ஆஹா! பேஷாய் விட்டுவிடேன்!"

"ஆமாம், உனக்கென்னடீயம்மா! உங்கள் அகத்துக் காரர் வரப்போகிறார். நீ ஊருக்குப் போகப் போகிறாய். இனி மேல் என்னைப்பற்றி என்ன? 'டூ' விடத்தான் செய்வாய்."

"பார்த்தாயா? பார்த்தாயா? அந்தப் பொறாமைதானே உனக்கு? அதற்காகத்தான். . . ."

சாரதா ருக்குவின் வாயை மூடினாள். "அப்படி யெல்லாம் பேச மாட்டாயே?"

சாரதாவின் கையைத் தன் கையால் விலக்கப் பார்த் தாள் ருக்கு. முடியவில்லை. பிறகு, 'இல்லை' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள். சாரதாவும் கையை எடுத்துக்கொண்டாள்.

"சாரதா, பேச்செல்லாம் இருக்கட்டும். சீக்கிரம் புறப் படு. குடம் எங்கே?" என்றாள் ருக்கு.

"ஏன்? என்ன அப்படித் தலைபோகிற காரியம்? பொழுதே இன்னும் சரியாக விடிந்தபாடில்லை. இதற்குள் குளத்துக்குப் போக என்ன அவசரம் வந்துவிட்டது?"

"இல்லை. இன்றைக்கு 'ஆட்டிக் கூட்டிக்' கொண்டு போக முடியாது. இன்னும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வண்டி வந்துவிடும். அதற்குள் போய் வந்துவிட வேண்டும்."

"என்னடீ ருக்கு, நீ சொல்வதே புரியவில்லையே!" என்று வேண்டுமென்றே கேட்டாள் சாரதா.

"ஆமாம். புரியுமா? புரியாதுதான். நீ வந்தால் வா. இல்லாவிட்டால் நான் போகிறேன்; சே, ஒரு மனுஷிக்கு அவசரம் தெரியவேண்டாமா?" என்று சலித்துக்கொண்டே குடத்தையும் தூக்கிக்கொண்டு எழுந்தாள் ருக்கு.

"ஆமாண்டீ ஆமாம்! உனக்கு அகத்துக்காரர் வருகிறார் என்றால், எனக்கு எதற்காக உன் அவசரம் எல்லாம் தெரிய வேண்டும்? பேஷாய்ப் போய்க்கொள்ளடீ யம்மா. பேஷாய்ப் போய்க்கொள். இந்தக் கோபம் எப்பொழுதும் இருக்கவேண்டும்!"

"நீ மாத்திரம் திரும்பத் திரும்ப இப்படிப் பேசலாம். நான் சொல்ல வந்தால் மட்டும் வாயை அழுந்த மூடுவாய். இது பொறுமையல்ல என்றால் பின்னே என்ன?"

"அடீ மௌட்டீகம்! பொறுமைக்கும் பரிகாசத்துக்கும் வித்தியாசம் தெரியாமல் இப்படி ஒரு பொம்மனாட்டி லோகத்திலே. . !"

"போதுமடீ வியாக்கியானம்! ஏதோ குளத்துக்கு வருவாயென்று கூப்பிட வந்தால், நல்ல நாளும் போதுமாகச் சனியன் என்கிறது, மௌட்டீகம் என்கிறது . . சாரதா, இனிமேல் நான் உன் ஜோலிக்கு வந்தேனானால் ஏன் என்று கேள்!" என்று சொல்லிக்கொண்டே அடியெடுத்து வைத்தாள் ருக்கு.

சாரதா எழுந்தாள். ருக்குவின் பதற்றம் அவளுக்கு அநேகமாகப் புரிந்துவிட்டது. இல்லாவிட்டால், 'நல்ல நாளும் போதுமாக' என்று ஏன் கூறுகிறாள்?

"ருக்கு, உன் அகத்துக்காரர் இன்றைக்கே வருவதாக மறுபடியும் கடிதம் வந்ததா? சொல்லவேயில்லையே நீ?"

"ஆமாம், என்னமாய்ச் சொல்லுவது? நேற்றுத்தான் இன்னொரு கடிதம் வந்தது. நேற்று முழுவதும் ஒழியவில்லை, உன்னைப் பார்க்க. இப்போது வந்துதான் வசவு வாங்கிக் கொண்டாயிற்று" என்று சொல்லிவிட்டுச் சற்று வேகமாய் நடந்து வாசலுக்கே போய்விட்டாள் ருக்கு.

சாரதா பிரமித்துப் போய் நின்றுவிட்டாள்: "ருக்கு, கொஞ்சம் இரு; நானும் இதோ வந்துவிட்டேன்" என்று சொல்லவேண்டும்போல் தோன்றிற்று அவளுக்கு. ஆனால் அவளுக்கு வாய் எழும்பவில்லை. ருக்குவின் திடீர்க் கோபத்தைக் கண்டு பிரமிப்புற்ற சாரதாவுக்கு நாக்கே மேல்வாயில் போய் ஒட்டிக்கொண்டதுபோல் இருந்தது.

ருக்கு வாசலைத் தாண்டி வெகு வேகமாகப் போய்விட்டாள். சாரதா மெல்லப் பாயைச் சுருட்டிவிட்டுத் தாழ்வாரத்தில் போட்டிருந்த ஒரு பெஞ்சின்மேல் உட்கார்ந்தாள். 'சீ' என்ன இருந்தாலும் அப்படிச் சொல்லியிருக்கக்கூடாது. ஆம், நல்ல நாளும் போதுமாகச் "சனியன்! மௌட்டீகம்" என்றெல்லாம் சொல்லலாமா? தப்புத்தான். ஆனால் தெரிந்தா சொன்னேன்? வேண்டுமென்று சொன்னேன்? ருக்குவுக்கும் இத்தனை கோபம் கூடாது. ஆனால்.. ஆனால், இப்போது...உடனே போய் அவளைச் சமாதானம் செய்ய வேண்டுமே! நல்ல நாளும் போதுமாக என் வாயிலிருந்து ஏன் அந்த வார்த்தைகள் வரவேண்டும்? ருக்குதான் எழுந்ததும் எழுந்திராததுமாக ஏன் இங்கே ஓடி வரவேண்டும்!' என்று எண்ணினாள் சாரதா. அவளுக்கு இந்த எண்ணத்தோடு எண்ணமாக வெள்ளிக்கிழமை அஸ்தமனத்தில் கோவிலில் நிகழ்ந்த சம்பவமும் நினைவுக்கு வந்தது. ருக்கு வணங்கியவுடன் சந்நியாசியின் கண்களில் கண்ணீர் வந்ததும் அவர் பெருமூச்செறிந்ததும் அவள் மனக்கண்முன் தோன்றின. சாரதா யோசனைக்கடலில் மூழ்கினாள். அந்தச் சந்தர்ப்பத்தில், ருக்குவைப் பின்பற்றிச் சென்று, அவளைச் சமாதானம் செய்யவேண்டும் என்கிற எண்ணமே உண்டாகவில்லை அவளுக்கு.

ருக்கு குளத்தங்கரைக்கு வந்தாள். சாரதாவின்மீது கோபித்துக்கொண்டதுபோல் பாவனை செய்தாளே தவிர, அவளுக்கு அவள்மீது துளிகூடக் கோபமில்லை. அவள் உடலில் ஒவ்வொரு நரம்பும் தெறித்து விடுவதுபோல் துடித்துக்கொண் டிருந்தது. மின்சாரம் போன்றதொரு உணர்ச்சி அவள் தேக முழுவதும் பரவியிருந்தது. அவள் உள்ளத்தில் பாய்ந்திருந்த உணர்ச்சி சந்தோஷத்தினால் ஏற்பட்டதா லஜ்ஜையினால் ஏற்பட்டதா பெருமையினால் ஏற்பட்டதா எதிர்கால வாழ்வின் இன்ப நினைவுகளால் ஏற்பட்டதா என்று பகுத்தறிந்து சொல்ல யாராலுமே முடியாது. அது எதனால் உண்டானதாயிருந்தாலும் சரி; அதைப்பற்றி ஒரே ஒரு வார்த்தை மட்டும் சொல்ல வேண்டும். அந்த உணர்ச்சி, அளவுக்கு

மீறி அவளை ஆட்கொண்டுவிட்டது. உணர்ச்சி வெள்ளத்தில் அகப்பட்ட ஒரு சிறு துரும்புபோல் ஆனாள் அவள். அவளால் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அந்தச் சந்தர்ப்பத்தில் இன்னதுதான் செய்யலாம், செய்யவேண்டும் என்கிற அறிவுத் தெளிவு அவளுக்கு இல்லாமற் போயிற்று.

இப்படிக் கூட ஒரு பெண் உண்டா என்று நினைக்கலாம். ஆனால் வாழ்க்கை என்னும் நூலில் ஒரு புத்தம் புதிய அத்தியாயத்தை அறிந்துகொள்ள இருக்கும், அறிந்துகொள்ளத் துடிக்கும், ஒரு பெண்மணியின் மன ஆழத்தில் யார் புகுந்து பார்க்க முடியும்? அவளே தன் நிலையை ஆலோசித்துப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது, ஒவ்வொரு ஸ்திரீயும், அவளவள் குண விசேஷப்படி, சற்றேறக்குறைய ஒரு ருக்குவாகவே விளங்குவாள் என்பது திண்ணம். பிரகிருதியின் இந்த விசித்திரமான உண்மையை எந்த ஸ்திரீயும் மறுக்க முடியாது. அப்படி மறுத்தாலும் அல்லது மறுக்க முயன்றாலும் அதை அவள் தவறாகக் கருத முடியாது. காலம் செய்யும் தவறு அது. காலம் உணர்ச்சிகளை மறைக்கிறது; மறக்கும்படி செய்கிறது. எனினும் இந்த மறைவும் மறதியும் உண்மையை அழித்துவிடுமா என்ன? ஐம்பது வயசு ஸ்திரீ மறைப்பதையோ மறப்பதையோ மறக்க முயலுவதையோ தான், பதினாறு வயசுப் பருவ மங்கை உணர்ச்சித் தேனில் ஊறவைத்துச் சுவைக்கிறாள். இதுதான் உண்மை. இந்த உண்மையைத்தான் ருக்கு இப்போது உணர்ந்து வருகிறாள். அதன் கூத்துத்தான் இத்தனையும்.

இந்தக் கூத்தை ஆடிக்கொண்டு குளத்தங்கரை வந்தவள் குடத்தினிடம் கோபமடைகிறாள். அவள் குதூகலத்துக்குக் குறுக்கே நிற்கும் எந்த வஸ்துவும் இப்போது அவளுக்குச் சினமூட்டுகிறது. இந்த நிலையைக் குருட்டு ஆனந்தம் என்பதா அல்லது குருட்டுக்கோபம் என்பதா? எப்படி வேண்டுமாயினும் வைத்துக்கொள்ளலாம். அதைப் பற்றி அவளுக்குக் கவலையில்லை.

அவள் குடத்தினிடம் பேசிவிட்டு அதைக் கையிலெடுத்து 'வறுக்கு வறுக்' கென்று தேய்த்தாள். குளத்திலிருந்த மண்ணைக் கை நிறைய அள்ளிக் குடத்தின்மேல் அடித்தாள். கோபம் தீரத் தேய்த்தாள் அதை. அவள் செய்கையைக் கண்டு பயந்தது போல வெளுத்துப் போயிற்று குடம். பிறகு அதைத் தண்ணீரில் வீசியெறிந்தாள். காலைக் காற்றினால் அலையடித்துக்கொண் டிருந்த தண்ணீரில் குடம் மிதந்து சென்றது. குடம் சென்ற திக்கில் பின்தொடர்ந்தாள் ருக்கு. ஒரே தாவில் அதைக் கைப்பற்றினாள். "அட, இத்தனை ரோஷமா உனக்கு? ஓடுகிறாயே?" என்றாள். அதை நன்றாகக் கழுவி ஜலம் மொண்டுகொண்டு கரைக்கு வந்து, கரையில் ஒரு கல்லில் முட்டி வைத்துவிட்டுத் திரும்பவும் தண்ணீரில் இறங்கினாள்; ஸ்நானம் செய்தாள்.

ருக்கு ஸ்நானம் செய்து கரையேறும்போது வான வீதியில் சூரியன் ஒரு மார்பு உயரத்துக்கு மேல் வந்துவிட்டான். வெயில் சுள்ளென்று அடித்தது. ருக்கு, ஈரப் புடைவையைப் பிழிந்து சரிப்படுத்திக்கொண்டாள். குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டாள். படித்துறைமேல் ஏறிக் குளத்தங்கரையை அடைந்தாள். அவளுக்கு இரு புறங்களிலும் இரண்டு பிரம்மாண்டமான அரச மரங்கள் நின்றன. அந்த அரச மரங்களுக்கு அப்பால் சூரிய தேவன் பவனி வந்துகொண் டிருந்தான். எங்கிருந்தோ ஆந்தை மறுபடியும் பயங்கரமாக அலறியது. படியேறி வந்த அவளது பாதங்கள் தரையில் ஸ்தம்பித்து விட்டன. ஏன்? எதிரில் அவர் நின்றார்!

அவரது வலது கை உயர்ந்து நின்றது, ஒரு வாளாயுதத்தைப்போல். "நில்" என்று உத்தரவிடுவதுபோல் இருந்தது அந்தக் கை நின்ற நிலை. ருக்கு நடுங்கிப் போனாள். சிரசாக்கினையை எதிர்நோக்கி நிற்கும் குற்றவாளியைப்போல் குலைநடுக்கம் கொண்டாள் ருக்கு. ரத்னக் கற்கள் பதித்த ராக்கொடிபோல் மின்னிய அவளது முகம் சட்டென்று ரத்னங்கள் உதிர்ந்து போய் வெறும் உம்மிசம் மாத்திரம் தெரியும் பில்லையைப்போல் மாறியது. மின்சார வேகம் கொண்

டிருந்த அவளது ஒவ்வோர் அவயமும் வெறும் கல்செதுக்கம் போல அசைவற்றுப் போயின. உயிரற்று நிற்கும் உருவச் சிலைபோல் இருந்த ருக்குவை எதிரில் நின்றவர் ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தார். "ஹூம்!" என்று ஒரு பெருமூச்சு அவர் இருதயத்தினின்றும் எழும்பியது.

அந்தப் பெருமூச்சு ருக்குவைத் திடுக்கிடச் செய்தது. அவளையும் அறியாமல் அவள் தலை நிமிர்ந்தது. அவள் கண்கள் எதிரில் நிற்பவரை நோக்கின. அவள் பிரமித்தே போனாள். வெள்ளிக்கிழமையன்று கோவிலில் கண்ட அதே சந்நியாசி!

எதற்காக ருக்குவின் எதிரே வந்து தோன்றினார்? திடீரென்று எங்கிருந்து முளைத்தார்?

# 5

## நாக சர்ப்பம்

**கோ**விலில் கண்ட சந்நியாசி குளக்கரையில் வந்து குறுக்கிட்டது, ருக்குவுக்கு மனத்தில் கொஞ்சம் பயத்தை உண்டாக்கியது. வயோதிகர்தாம்! ஆயினும் புருஷர். பெண்மையின் கிலேசமும் கூச்சமும் அவளது பயத்தைவிட அதிகமாக இருந்தன. அவரைத் தாண்டி ஒரே ஓட்டமாக ஓடிவிட்டால் கூடப் பாதகம் இல்லைபோல் இருந்தது. ஆனல் தரையில் பதிந்த பாதங்களுக்கு நடக்கத் தெரிந்தால்தானே? இடுப்பை இறுக்கிக்கொண்டு ஜலம் நிறைந்த குடம் வேறு. பிரதி தினமும் அலட்சியமாகத் தூக்கிச் சென்ற அதே குடம் இப்போது இரும்புக் குண்டுபோல் கனத்தது. 'வழி விடுங்கள்' என்ருவது கடுமையாகச் சொல்லவேண்டுமென்று எண்ணம் தோன்றியது. அதற்காகக் குனிந்த தலையை மறுபடியும் நிமிர்த்திக்கொண்டாள், சிரமத்துடன். ஆனல் வாய் வந்தால்தானே? உலர்ந்த மொட்டைக் கசக்கினல் இதழ் விரியுமே, அந்த மாதிரி அவள் மனத்திலிருந்த எண்ணம் அவளது புதைந்த உதடுகளைப் பிரித்துத் திறக்கச் செய்தது.

அதே சமயத்தில், "குழந்தை!" என்று எதிரில் நின்ற சந்நியாசியின் வாயிலிருந்து வார்த்தை கிளம்பியது. உடனே ருக்குவின் கண்கள் அவர் முகத்தை நோக்கின. அவர் கண்களில் கண்ணீர் துளும்புவதைக் கண்டாள் ருக்கு. அவள் உள்ளத்தில் இன்னவென்று விவரிக்க முடியாத ஒரு குழப்பமும் வேதனையும் உண்டாயின.

இதற்குள் 'ஹ¬ம்!" என்று மீண்டும் ஒரு பெருமூச்சு.

"குழந்தை!!"

ருக்குவுக்கு 'ஏன்?' என்று கேட்க வேண்டும்போல் இருந்தது. ஆனால்...

"குழந்தை! ஹூம்!!"

ருக்கு கொஞ்சம் சமாளித்துக்கொண்டாள். சுற்று முற்றும் பார்த்தாள். தன்னையும் எதிரே சந்நியாசியையும் தவிரக் கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் யாரையும் காண வில்லை. ஓர் அந்நிய புருஷன் எதிரே தன்னந்தனியாக நிற்கும் அவளது நிலைமை அவளுக்கே திகிலாய்த்தான் இருந்தது. சந்நியாசி ஏதோ சொல்ல முயலுவதும், ஆனால் சொல்ல முடியாமல் நிறுத்திக்கொள்ளுவதும் பெருமூச் செறிவதும் கண்ணீர் விடுவதும் அவளுக்குப் புரிந்துகொள்ள முடியாத புதிர்களாக இருந்தன. எனினும் அவரது தயக்கம் அவளுக்குக் கொஞ்சம் தைரியம் அளித்தது. "வழி விடுங்கள்" என்றாள் வெடுக்கென்று.

ஆனால் வயோதிகர் வழி விடவில்லை. "குழந்தை! வழியை நான் மறைக்கவில்லை. ஒரு நாக சர்ப்பம் மறிக்கிறது" என்று சொல்லிச் சூள் கொட்டினார்.

"நாக சர்ப்பமா? எங்கே?" உரக்கக் கூவிவிட்டாள் ருக்கு. அவளையும் அறியாமல் அவள் இடுப்பிலிருந்து குடம் அலறி யடித்துக்கொண்டு கீழே விழுந்து உருண்டது. அதில் இருந்த நீர் பிரவாகமாகப் பெருகியது. அந்த நீர், ருக்குவின் காலில் பட்டு, காலைச் சுற்றித் தரையில் பாய்ந்தது. தண்ணீர் காலைச் சூழ்ந்துகொண்டது, ருக்குவுக்குப் பாம்பு காலைச் சுற்றிக்கொண்டது போன்ற உணர்ச்சியை உண்டாக்கியதோ என்னவோ? 'ஐயோ! பாம்பு...காலை...சுற்றி' என்று உளறிக்கொண்டே கால்களை உதறிக்கொண்டு எழும்பிச் சற்றுத் தூரத்தில் விழுந்தாள் அவள். சந்நியாசி சட்டென்று ஒதுங்கிக்கொண்டார்.

"குழந்தை! எழுந்திரு; பாம்பு உன் காலைச் சுற்றிக் கொள்ளவில்லை. உன் குடத்து ஜலந்தான் காலில் பட்டது. ஆனால்......"

ருக்குவுக்குத் தேகம் முழுவதும் வெடவெட வென்று குலைத்தது. தலை ஒரு கரகம் சுற்றுவது போலச் சுழன்றது.

இரு கைகளாலும் தலையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு மெள்ள எழுந்து உட்கார்ந்துவிட்டாள்.

"எழுந்திரு குழந்தை, பயப்படாதே!" என்றார் முதியவர்.

ஆயினும் ருக்குவுக்குப் பயம் விடவில்லை. மெல்ல எழுந்து நின்றாள். "சுவாமி!" என்றாள்.

"குழந்தை!"

"அந்த நாக சர்ப்பம் எங்கே? போய்விட்டதா?"

"குழந்தை, தைரியமாக இரு. அதோ உன் கழுத்திலே..."

"கழுத்திலேயா?" ருக்குவுக்கு உடம்பு சிலிர்த்தது. அவளையும் அறியாமல் அவள் கண்கள் கழுத்தைப் பார்த்தன. அங்கே நாகமும் இல்லை; சர்ப்பமும் இல்லை. பயத்தினால் அவள் கைகூடக் கழுத்தைத் தொட்டுப் பார்த்துக்கொண்டது. ருக்குவுக்குச் சந்நியாசியின் வார்த்தைகள் நயவஞ்சகமானவைபோல் தோன்றின. "சுவாமி, போதும் இந்தப் பூச்சாண்டி யெல்லாம். வழி விடும்" என்றாள் கோபத்துடன்.

"பூச்சாண்டியல்ல குழந்தை! வாழ்வின் வழியே கடினமானது. அந்தக் கடுமையான பாதையில் கறுவிக்கொண்டே நாக சர்ப்பம் படமெடுத்து நிற்கிறது. நான் என்ன செய்வேன்! உன் விதி அவ்வளவுதான்!" என்று சொல்லி நிறுத்தினார் சந்நியாசி.

ருக்குவுக்கு இது ஏதோ புதிர் போடுவதுபோல் இருந்தது. சந்நியாசியின் உள்ளத்தில் ஒரு பயங்கரமான மர்மம் மறைந்து கிடக்கிறது என்று அவள் மனக்குறளி கூறியது. "சுவாமி, இந்தப் புதிர்..." என்னும்போதே அவள் பார்வை கண்ணீர்த் திரையால் மங்கியது.

"புதிரல்ல குழந்தை! உன் கழுத்தை அணைத்து நிற்கும் நாகம் உன் கண்ணுக்குத் தெரியாது. அதன் இடத்தை ஆக்கிரமிக்க வரும் யாருக்கும் அது லேசில் இடம் கொடாது. குழந்தை, இது உண்மை. உனக்குத் தெரியாத உண்மை இது. வெறும் புதிரல்ல. இதை நீ அறிய வேண்டும்."

ருக்குவின் மனக்கடலைச் சந்நியாசியின் சொற்கள் மந்தர மலைபோலக் கடைந்தன. அந்தக் கடலிலிருந்து காளகூட விஷம்போலக் கிளம்பியது, ஒரு பயங்கரமான உண்மை. அந்த உண்மை அவள் உள்ளக் கடலையே உறிஞ்சி உலரவைத்து வெடித்துப் போகும்படி செய்யக்கூடிய உஷ்ண முடையதா யிருந்தது. அவள் நா வறண்டது, கண்கள் இடுங்கின. தோளும் காலும் துவண்டன. அவள் சரீரமே காற்றில் அடித்துக்கொண்டுபோய் உயரக் கிளம்பி எங்கோ மிதந்து செல்வது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று அவளுக்கு.

சந்நியாசி அவள் நிலையை உணர்ந்தார். அவர் கண்களில் தேக்கமெடுத்திருந்த கண்ணீரை இமையசைவால் உகுத்துப் பெருமூச்சு விட்டார். "குழந்தை, கலங்காதே!" என்கிற ஆசுவாச வார்த்தைகள் அவர் வாயினின்றும் எழுந்தன.

ருக்குவின் கண்களில் ஜலம் வரவில்லை. ஆனால் பரிதாபமக இருந்தது அவள் வறண்ட பார்வை. அந்தப் பார்வையிலே, எதிரில் நிற்கும் சந்நியாசி தேசாந்திரியாகத் திரியும் சாதாரணச் சந்நியாசிகளில் ஒருவரைப் போலத் தோற்றம் அளிக்கவில்லை அவளுக்கு. காலத்தின் மூல புருஷன் கண்ணெதிரே நிற்பதுபோல் இருந்தார் அவர். விதி என்னும் வெட்டரிவாளைக் கரத்தில் தாங்கிக்கொண்டு வாழ்க்கை என்னும் தோட்டத்தை ஒழுங்காக வெட்டி அழகு படுத்தி வரும்போது, இடையே ஒரு முள் செடி படர்ந்து தோட்டத்துச் செடிகளையே அழித்துவிட முயல்வதுபோல் இருந்தும், அதை வெட்டியெறிய மனமில்லாமல் நிற்பவர்போல் இருந்தது அவர் தோற்றம் அவளுக்கு.

"சுவாமி!" என்று அபய ஓலம் இட்டாள்.

"குழந்தை! தைரியமும் மன உறுதியுமேதான் உன்னைக் காப்பாற்ற வேண்டும். உன் கழுத்தைச் சுற்றியிருக்கும் சர்ப்பம், மாங்கல்யத்துடன் சிக்கிக்கொண் டிருக்கிறது. அதனுல் தான் அதற்கு அத்தனை சீற்றம். அது மெல்லச் சிக்கலிலிருந்து விடுபட்டு விலகிப் போகும். ஆனுல் அது வரையில் . . ."

"அது வரையில் என்ன சுவாமி!"

"அந்த மாங்கல்யத்துக்கு உடையவன் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இந்த நாக தோஷம் தீரும்வரையில் உனக்கு மன உறுதி வேண்டும்!"

பெண்மைக்கே எளிதில் புரியும்படியான உண்மை! அதி பயங்கரமான உண்மை! வாழ்வின் பாதையை நிர்மூலமாக்க வல்ல ஈவிரக்கமற்ற உண்மை அது! அந்த உண்மையை உணர்ந்த அவள் நெஞ்சு பூகம்பத்தால் நடுங்கிச் சிதைவுறும் அன்னை பூமி போல அல்லலுற்றது.

"அதெப்படி முடியும் சுவாமி? அவர் இன்னும் சற்று நேரத்தில் வரப்போகிருரே!"

அப்போதிருந்த அவள் நிலை பெண்மையின் கூச்சத்துக்கோ இந்தச் செய்தியை அவரிடம் சொல்லலாமா கூடாதா என்கிற ஆராய்ச்சி அறிவிற்கோ இடம் தரவில்லை.

"ஆம், வரப் போகிருன். அதை அறிந்துதான் சொன்னேன். உன் மன உறுதிதான் அவனைக் காப்பாற்ற வேண்டும். வாழ்வு நாளைக்கே வரும். ஆனல் மாங்கல்யத்தைக் காப்பாற்றிக்கொள். அதுதான் ஸ்திரீகளுக்குப் பிரதானம். தீர்க்க சுமங்கிலியாயிரு குழந்தை! ஒரு மண்டல காலம் வைராக்கியத்தோடு இரு. அதோ இருக்கிறதே. அந்த நாகபீடம், ஒரு மண்டல காலத்தில் உன் கழுத்தைச் சுற்றியுள்ள நாகம் அதில் ஐக்கியமாகிவிடும். அதற்காகத் தினமும் இந்த வேளையில் அந்த நாகபீடத்தை வலம் வந்து வணங்கு. உன் விதி நல்லதாயிருக்கட்டும் குழந்தை. நான் வருகிறேன்!" என்று பரம சாந்தத்துடன் உபதேசம் செய்துவிட்டுச் சரேலென்று கிளம்பினுர் சந்நியாசி.

கல்லால் அடித்த சிலைபோல ஒன்றுமே தோன்ருமல் பிரமித்து நின்றுவிட்டாள் ருக்கு. சந்நியாசி சற்றுத் தூரம் சென்று திரும்பி, "குழந்தை, இதனல் சில கஷ்டங்கள் நேரலாம்; ஆயினும் மனம் தளராதே. விதியின் இந்தப் பயங்கரமான உண்மை உன் மட்டில் இருக்கட்டும். பிறருக்குச் சொல்லாதே. இது முக்கியம், உன் நன்மைக்காகவே சொல்கிறேன்" என்று கூறிவிட்டு நடந்தார்.

சந்நியாசி போகும் திக்கில் பேந்தப் பேந்த விழித்த படியே பித்துக்கொள்ளிபோல் நின்ருள் ருக்கு. அவள் எண்ணக் கடலில் எத்தனை அலைகள் எழும்பி மடிந்தனவோ யாருக்குத் தெரியும்? தரையில் உருண்டுகிடந்த குடத்தின் மேல் ஒரு காக்கை வந்து உட்கார்ந்ததால் ஏற்பட்ட 'டொண்' என்ற சப்தமே தான் நிற்கும் இடத்தைப் பற்றிய நினைவை அவளுக்கு உண்டாக்கியது. குனிந்து பார்த்தாள். குடத்தைக் கையில் எடுத்தாள். அதில் கீழே கொட்டிப் போனது போக, பாதிக்குக் கீழே கொஞ்சம் ஜலம் இருந்தது. அனல் அதில் எவ்வளவு ஜலம் இருக்கிறது? அதன் மேலெல்லாம் மண் படிந்து போயிருக்கிறதே என்றெல்லாம் அவளுக்குத் தெரிந்ததாகவே தோன்றவில்லை. குடத்தை இடுப்பின் மேல் வைத்துக்கொண்டு ஏதோ ஒரு விசையால் முடுக்கப்பட்ட பொம்மைபோல நடக்கக் காலெடுத்து வைத்தாள். நாலடி நடக்கவும் நடந்தாள். ஆனல் அவள் நடந்த திசையில் என்ன இருந்தது? படித்துறை! மீண்டும் அந்தப் பழைய படித்துறை தான். அதிகாலையில் வந்து இறங்கித் தண்ணீரில் கால் வைத்துச் சுழியுண்டாக்கி, அடுத்த சில விநாடிகளில் தன் தலைச் சுழியையே அறிந்துகொள்ள அழைத்த அதே படித்துறைதான்.

அந்தத் துறை வழியே இறங்கி மறுபடியும் தண்ணீர் காலில் படும் வரையில் நடந்துவிட்டாள். ஜலம் காலில் பட்டதுதான் தாமதம். அந்த ஆந்தையின் அலறல் சப்தம்! ருக்குவின் கண்கள் அகலத் திறந்தன. அவள் மூளை வட்டத்தைச் சுற்றிச் சந்நியாசியின் வார்த்தைகள் மின்னல் வேகத்துடன் 'படீர், படீர்' என்று அறைந்துகொண் டிருப்பதை உணர்ந்தாள். அவளால் தாள முடியவில்லை. அவள் மனத்துக்குள்ளேயே ஒரு பிரலாபம்! 'இன்னும் கொஞ்ச நேரத்தில் அவர் வரப்போகிருர். வாழ்வு ஓர் இன்பத்தோணி; அதில் ஏறி உல்லாசமாகப் பிரயாணம் செய்யலாம் என்று எண்ணி வருகிருர் அவர்; நிரபராதி பாவம்! இன்பத்தோணி என்று அவர் கருதிவரும் வாழ்வு கழுமரமாக மாறிக் கழுத்தை நெரிக்க இருக்கிறது. தோணி என்று எண்ணிக்

கழு மரத்தில் ஏறுவதா? அதுவும் ஒரு நிரபராதி?'' இப்படி ஒரு கற்பனை தோன்றியது அவள் உள்ளத்தில். 'ஊஹூம். கூடாது. அவரைக் காப்பாற்ற வேண்டும். சாவித்திரி பிறந்த பாரத நாட்டில் ஸ்திரீகள் சாதிக்கக் கூடாத காரியமும் உண்டா?'' என்கிற தைரியம் உண்டாயிற்று அவளுக்கு.

அடுத்த கணமே, இதெல்லாம் ஏதாவதொரு சூழ்ச்சி யாக இருக்குமா? அப்படித்தான் சூழ்ச்சியாக இருந்தாலும் தன் வாழ்வையே கெடுக்கச் சூழ்ச்சி செய்யக்கூடிய விரோதி கள் யாரும் இல்லையே என்று தோன்றிற்று அவளுக்கு. இந்தச் சந்நியாசியின் வார்த்தைகளுக்கெல்லாம் மதிப்புக் கொடுப்பதா? வெறும் புரட்டு, மூட நம்பிக்கை என்னும் எண்ணம் உண்டாயிற்று. ஆனல் மறு விநாடியே, ''தபஸ்வி களைப் பழிக்கக்கூடாது. அது பாவம். அவர்களுக்குரிய மரி யாதையைச் செலுத்துவது தவறல்ல'' என்று கோவிலிலிருந்து திரும்பும்போது சாரதா சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. அந்த நினைவு அவளை மெய்சிலிர்க்கச் செய்தது.

அன்றியும் அவள் புருஷன் இன்று வரப்போகிருன். அவள் வாழ்வில் புதுமணம் கமழப் போகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு தபோதனர் திடீரென்று குறுக்கிட்டு ஒரு விஷப்பரீக்ஷையை ஏன் ஏற்படுத்தவேண்டும்? அவருக்கு இதில் என்ன கர்மசிரத்தை? ஒரு பொய்யைச் சொல்லி ஒரு பெண்ணின் வாழ்வைக் குலைக்க வேண்டுமென்பது என்ன அவருக்கு? அவள் தலை விதிக்கும் இந்தச் சந்நியாசிக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கிறதா?

ருக்குவின் மனத்தில் ஆயிரம் சிந்தனைகள்! 'வாழ்வு நாளைக்கே வரும்; ஆனல் மாங்கல்யத்தைக் காப்பாற்றிக் கொள். அதுதான் ஸ்திரீகளுக்குப் பிரதானம்' என்று சந்நியாசி கூறிய வார்த்தைகள் அவள் இதயத்தில் வேரூன்றி விட்டன. அந்த வார்த்தைகள் அவள் செவிகளில் இன்னும் ஒலித்துக்கொண்டே இருக்கின்றன. 'ஆம், வாழ்வு முக் கியமேதான். அதன் ஜீவநாடியல்லவா மாங்கல்யம்? அதைக் காப்பாற்றிக் கொண்டால்தானே வாழ்வெல்லாம்? ஆனல் ஒருவேளை இந்தச் சந்தர்ப்பத்தில் மாங்கல்யத்தைக் காப்பாற்றிக்கொள்ளப் போய் வாழ்வுக்கே பங்கம் ஏற்படு

மானல்? ஆம், அப்படியானல்கூடச் சரிதான். எப்படியாவது, எங்கேயாவது, அவர் நன்ருயிருந்தால் போதும். வாழ்வா பிரதானம்? இந்த வாழ்வு போனலும் அதன் ஒளியாக விளங்கும் இந்த மாங்கல்யம் என்றைக்கும் கழுத்தில் பிரகாசித்துக்கொண் டிருந்தால் போதும்' என்று எண்ணினுள் அவள். இந்த எண்ணம் அவள் மனத்துக்கு ஒரு தைரியத்தை அளித்தது. அவள் கண்கள் அகஸ்மாத்தாகப் படித்துறையின் வடபாரிசத்தில் அரசமரத்தின் கீழிருந்த நாக பீடத்தை நோக்கின. அபயப்பிரதானம் அளிக்க அழைப்பது போலக் காற்றில் அரசமரத்தின் கிளைகள் அசைந்தாடுவதைக் கண்டாள் அவள். 'நாகபீடத்தை வலம் வந்து வணங்கு' என்று முதியவர் கூறியது ஞாபகத்துக்கு வந்தது.

குடத்தில் ஜலங்கூட நிரப்பிக் கொள்ளவில்லை. அப்படியே திரும்பிப் படித்துறையேறி அரசமரத்தண்டை வந்தாள். அரசமரத்தடியில் இருந்த நாகபீடத்தின் எதிரே இடையில் இருந்த குடத்தை இறக்கினுள். தரையில் விழுந்து சேவித்தாள். எழுந்து அரசமரத்தை வலம் வந்து வணங்கினுள். குடத்தை எடுத்துக்கொண்டு வீட்டை நோக்கி அவள் கால்கள் தாமாகவே நடக்கலாயின.

குடத்தில் ஜலம் நிறைய இல்லை. அரைக்குடங்கூட இல்லை. எனவே அவள் நடக்கும்போது ஜலம் துளும்பித் துளும்பி அவள் ஈரப்புடைவையை நனைத்துத் தரையிலும் சிதறிக்கொண் டிருந்ததை அவள் உணரவில்லை. அவள் மனம் ஏதேதோ எண்ணியபடி எங்கெல்லாமோ சஞ்சரித்துக் கொண் டிருந்தது. அந்த நிலையில் அவள் எதிரில் வந்து அவள் தோளைப் பிடித்து நிறுத்தினுள் சாரதா. "என்னடீ ருக்கு, ஏதோ பிரமாதமாக யோசனை செய்துகொண்டே வருகிருய்? அங்கிருந்து அடித்துக்கொண்டே வருகிறேனே, 'நில்லடி, நில்லடி' என்று. காதில் விழுந்தால்தானே!" என்ருள் சாரதா.

ருக்கு பதில் ஒன்றும் சொல்லாமல் நின்ருள்.

"ஏண்டீ, பேசமாட்டாயோ? நிஜமாகவே 'டு' விட்டு விட்டாய்போல் இருக்கிறதே? அடேயப்பா! இத்தனை

கோபமா? தூக்கக் கலக்கத்தில் ஏதோ உளறிவிட்டால் அதற்காகவா இத்தனை கோபம்? சொல்லடி ருக்கு?'' என்று ஒரு குழந்தை கெஞ்சுவது போலக் குழையக் குழையப் பேசினுள் சாரதா.

''சாரதா, உன்மேல் எனக்கென்ன கோபம்? என் பவிஷுக்குக் கோபம் வேறு?'' என்று சொல்லும்போதே ருக்குவுக்கு அழுகை பீரிட்டுக்கொண்டு வந்தது. 'கோ'வென்று கதறிவிட்டாள்.

சாரதா பயந்து போனுள். சற்று முன் துள்ளிக் குதித்துக் கொண்டு வந்து, கோபித்துக்கொண்டுபோன அதே ருக்குவா அவள்? இப்படி ஏன் குலுங்கக் குலுங்க அழவேண்டும்? அவளுக்கு என்ன நேர்ந்துவிட்டது? சாரதாவுக்கு ஒன்றும் புரியவில்லை.

''ருக்கு, உனக்கு என்னடீ குறைச்சல்? இன்னும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் உன் அகத்துக்காரர் வரப்போகிருர். 'ஜம்'மென்று இருக்கவேண்டியவள் நீ. இப்படி அசடு போல அழுவதா இந்தச் சமயத்தில்? ஒருவேளை நான் உன்னைச் 'சனியன்' என்று சொல்லிவிட்டேன் என்று அழுகிருயா? ஏதோ தூக்கக்கலவரத்தில் சொல்லிவிட்டேனடி. ருக்கு, என்னை மன்னித்துவிடு; இப்படி ஈரப் புடைவையும் தானுமாக நீ அழுவதைப் பார்க்க முடியவில்லையடி'' என்று வருத்தம் நிறைந்த குரலில் கூறினுள் சாரதா.

''சாரதா, நீ சனியன் என்றதால் எனக்கு வருத்தமே இல்லை. வாஸ்தவத்தில் நான் சனியன்தான். சனியனுக வந்து......'' சட்டென்று அவள் வார்த்தையை நிறுத்திக் கொண்டாள். முதியவர் போகும்போது கூறிய வார்த்தைகளே அவளை அதற்குமேல் சொல்லமுடியாமல் தடை விதித்தன. 'விதியின் இந்தப் பயங்கரமான உண்மை உன் மட்டில் இருக்கட்டும். பிறருக்குச் சொல்லாதே' என்னும் அந்த வார்த்தைகள் பிறந்த திக்கில் திரும்பினுள். வெகு தூரத்தில் முதியவர் நடந்து செல்வது தெரிந்தது.

ருக்கு திரும்பிப் பார்த்த திக்கில் சாரதாவும் பார்த்தாள். அவள் கண்ணுக்கும் வெகு தூரத்தில் யாரோ போய்க்கொண்

டிருந்தது தெரிந்தது. ஆனல் யார் என்று ஆள் கண்டு பிடிக்க முடியாத தூரமாகையால், கோவிலில் கண்ட சந்நியாசியே அவர் என்று அவள் அறிந்துகொள்ளவில்லை. அதைப் பற்றி அவள் சிரத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை. ருக்கு பேச்சினிடையே நிறுத்தியதையும் அவள் பொருட்படுத்தவில்லை. ஆனல் ருக்கு இப்படிப் பேசியது அவளுக்குப் பிடிக்கவில்லையோ என்னவோ? "போதும், நீ இப்படியெல்லாம் பேசுவது எனக்குப் பிடிக்கவில்லை!" என்று கொஞ்சம் கண்டிப்பதுபோலக் கூறினுள் அவள்.

"சாரதா, இன்றைக்கு உனக்கு என்னைக் கண்டால் பிடிக்கவில்லை. நாளைக்கு யாருக்குமே என்னைக் கண்டால் பிடிக்காது. என் தலைவிதி!" என்று விம்மல்களுக்கு இடையே சொன்னுள் ருக்கு.

அவளுக்கு வருத்தத்தைத் தரும்படியான சம்பவம் ஏதோ ஏற்பட்டிருக்கிறது என்று உணர்ந்துகொண்டாள் சாரதா. குளத்துக்கு வருமுன் குதூகலமாக இருந்தவள்தானே? திடீரென்று அப்படி என்ன நேரிட்டுவிட்டது? அதுதான் அவளுக்குப் புரியவில்லை.

"ருக்கு, என்னடீ சமாசாரம்? ஏதாவது ஆபத்து......"

"ஆமாம், ஆபத்து வந்து என்னை அடித்துக்கொண்டு போய்விட்டதோ? அப்படிப் போய்விட்டால் கூடத் தேவலையே. ஆனல்......"

"ருக்கு!"

"சாரதா!"

"உன் பேச்சுப் புரியவில்லையே!"

"சாரதா, தயவு செய்து என்னை ஒன்றும் கேளாதே. உனக்கு கோடி புண்ணியம் உண்டு. எனக்கு இப்போது என்னவோ பண்ணுகிறதடி; நான் போகிறேன்" என்று அடியெடுத்து வைத்தாள்.

அவள் இடுப்பில் இருந்த குடத்தின் ஜலம் துளும்பி எதிரில் நின்ற சாரதாவின் கைமேல் தெறித்தது.

சாரதா அப்போதுதான் குடத்தைப் பார்த்தாள். "இதென்னடீ, அரைக்குக்கூட இல்லையே ஜலம். குடத்தில்

மண் வேறு ஒட்டிக்கொண் டிருக்கிறது! வருகிற வழியில் தடுக்கி விழுந்து விட்டாயா என்ன? உடம்பில் எங்கேயாவது அடி கிடி பட்டதா?"

ருக்குவுக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. அதன்படி செய்தால்தான் மேலே பேச்சுக்கு இடம் கொடாமல் இருக்க முடியும் என்று கருதினாள். எனவே, "ஆமாம், படித்துறை ஏறும்போது தடுக்கி விழுந்து விட்டேன்" என்று ஒரு பொய்யைச் சொன்னாள்.

"அடி பட்டதா?"

"அப்படி ஒன்றும் இல்லை."

"அப்போது ஜலம்?"

"இல்லாவிட்டால் போகிறது. எனக்கு வெடவெட வென்று வருகிறது. வீட்டுக்குப் போய்விடலாமென்று பார்க்கிறேன்" என்று சொல்லும்போது அவள் முகத்தையே உற்றுப் பார்த்தாள் சாரதா. உண்மையை மறைத்துப் பேசுவதை அவள் முகம் பளிச்சென்று எடுத்துக் காட்டிவிட்டது. ஏதோ விபரீதமான சம்பவம் ஒன்றினால்தான் ருக்கு இப்படி மனம் குழம்பியிருக்கிறாள் என்று கண்டுகொண்டாள். இருப்பினும் மேற்கொண்டு விஷயத்தைச் சொல்லும்படி அவளைச் சாரதா வற்புறுத்தவில்லை. "ஆனால் சரி, ஜாக்கிரதையாகப் போ. நானும் இதோ போனேன் வந்தேன் என்று வந்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு நகர்ந்தாள்.

ருக்கு எதிர்ப்புறமாக நடக்கலானாள். வீடு அருகில் தான் இருக்கிறது. சுமார் அரைப் பர்லாங்குக்கு மேல் இராது. ஆனால் அதுவே ஆறு மைல்கள்போல் வளர்ந்தது அவளுக்கு. அடியெடுத்து வைக்கும்போது ஆயிரம் முள் தைப்பதுபோல் இருந்தது. ஆனால் பாதையில் மருந்துக்குக் கூட ஒரு முள் இல்லை. மேலே வானம் முழுவதும் அவள் தலைமேல்தான் சுமையாக இருப்பது போலத் தலை கனத்தது. இடுப்பில் குடம் ஒன்று; குடமா அது? ஒரு பூதமாக அல்லவோ இடுப்பில் ஏறிக்கொண் டிருக்கிறது? ஈரப் புடைவை! இரும்புக் கம்பியாலா நெய்திருக்கிறது அதை? இத்தனை ஹிம்ஸைகளுக்கும் இடையே, எத்தனை சிந்தனை!

எவ்வளவு வேதனை! ருக்கு நடக்கவா நடந்தாள்? ஏதோ நத்தை ஊர்வதுபோல ஊர்ந்து எப்படியோ அக்கிரகாரத்துக் கோடியை அடைந்தாள்.

அக்கிரகாரத்தின் எதிர்க் கோடியில் 'ஜல் ஜல்' என்று சலங்கை ஓசை கேட்டது. ஓர் இரட்டை மாட்டு வண்டி, மாடுகளின் சலங்கைச் சப்தத்துடன் சக்கரங்களின் 'கடகட' சப்தமும் சேர்ந்து ஒலிக்க, வந்துகொண் டிருந்தது. ருக்கு அதைப் பார்த்தாள்; அவள் கால்கள் வெட வெடவென்று நடுங்கின. ஆயினும் சமாளித்துக்கொண்டாள். அவள் கண்கள் அவள் விருப்பத்தையும் மீறி வண்டிக்குள் இருப்பவர் யார் என்று ஆராய்வதுபோல ஊடுருவிப் பார்த்தன. ஆனால் எதிரே ஒரு திரை போட்டது போன்ற உணர்ச்சி. கண்ணுக்கு ஒன்றுமே தெரியவில்லை. அவள் கால்கள் மட்டும் தள்ளாடிக் கொண்டே தாமாக நடந்து சென்றன. எதிரே வண்டியும் நெருங்கி வருகிறது. ருக்குவும் அதை நோக்கியபடிதான் நடக்கிறாள். அக்கிரகார வாசல்களில் பெண்களும் ஆண்களும் குழந்தைகளும் பார்த்தபடியே நிற்கிறார்கள்.

சில குறும்புக்காரச் சிறுவர்களும் சிறுமிகளும் பெரியவர்களுங்கூட, "ஐயையே! ஆம்படையானும் பெண்டாட்டியும் எதிரும் புதிருமாக வரும் அழகைப் பாரு!" என்று கைகொட்டிச் சிரிக்கிறார்கள்.

அது வண்டியில் இருக்கும் மாப்பிள்ளைக்கும் காதில் விழுகிறது. அவன் கூடச் சற்று வெட்கம் அடைந்தவன்போல, தன் பார்வையை ருக்கு வரும் திக்கிலிருந்து சற்றைக்கு ஒருதரம் திருப்பி வேறுபக்கமாகச் செலுத்துகிறான். மறுபடியும் அவளைப் பார்க்கிறான்!

ஆனால் ருக்குவுக்கு ஊராரின் பரிகாசப் பேச்சுக் காதில் விழுந்ததா? அவள் கண்கள்தாம் வேறுபக்கமாகத் திரும்பினவா? அல்லது அவள் தலைதான் கொஞ்சம் குனிந்ததா? நடைதான் தடைப்பட்டு நின்றதா? ஒன்றும் இல்லை. பைத்தியக்காரிபோல் நடந்து வந்தாள். வீட்டு வாசற்படி ஏறினாள். வண்டியும் வாசலில் வந்து நின்றது.

6

## மாப்பிள்ளை வந்தார்!

ரங்கநாதன் வண்டியை விட்டு இறங்கினன். வண்டிக் காரத் துரையப்பன் வண்டியில் இருந்த பெட்டி, படுக்கை, ரெயில் கூஜா, 'தெர்மாஸ் பிளாஸ்க்', 'ஹாண்ட் பாக்' முதலிய சாமான்களை ஒரேயடியாகத் தூக்கிக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்தான். ரங்கநாதன் அவனைப் பின் தொடர்ந்தான்.

துரையப்பன் சாமான்களைக் கூடத்தில் வைத்து விட்டுத் திரும்பினன். ரங்கநாதன் கூடத்தில் போய் நின்றுகொண்டு சில விநாடிகாலம் சுற்றுமுற்றும் பார்த்தான். வீட்டில் யாரை யுமே காணேம். சற்றுமுன் ஈரப்புடைவையுடன் உள்ளே நுழைந்த ருக்கு கூட எங்கே போய் ஒளிந்துகொண்டாளோ! அவள் நடந்து சென்ற தாழ்வாரத்தில் அவளது இடுப்பில் இருந்த குடத்தினின்று துளும்பிய தண்ணீர் மட்டும் திட்டுத் திட்டாகத் தரையை ஈரமாக்கி யிருந்தது.

ரங்கநாதன் பின்னும் சில விநாடி காலம் சட்டையைக் கூடக் கழற்ருமல் கூடத்திலேயே நின்ருன். யாராவது ஏனென்று கேட்டால்தானே! அவனுக்கே என்னவோபோல் இருந்தது. கல்யாணமானபின் இப்போதுதான் முதல் முதலாக அவன் மாமனர் வீட்டுக்கு வருகிருன். அதுவும் வேதவரத்துக்கு அவன் வருவது இதுவே முதல் தடவை யாகும். 'எப்போது வந்தாய்?' என்று கேட்கக்கூட ஓர் ஈ காக்காயைக் காணவில்லை அந்த வீட்டில். துரையப்பனவது உள்ளே இருப்பவர்களை, இருக்கக் கூடியவர்களைக் குரல் கொடுத்துக் கூப்பிட்டு மாப்பிள்ளை வந்திருப்பதைத் தெரிவிக்க லாகாதா? சாமான்களைக் கொண்டுவந்து கூடத்தில் வைத்து விட்டு அவன் 'மிலிடரித்தன' மாகக் கப்சிப்பென்று வெளியே

போய்விட்டான். 'ஏதடா மாப்பிள்ளை ஒருவன் வருகிறனே, அதுவும் முதல் முதலாக நம் வீட்டைத் தேடி' என்று இந்த மாமனர் தேவராஜ ஐயங்கார்தாம் வாசலில் நின்று வழிபார்த்துக்கொண் டிருந்தாரா? அந்த மனுஷனை அந்தத் திக்கிலேயே காணவில்லை. உம்; மாப்பிள்ளையின் வண்டி என்ன, மணிக் கணக்குப்படியா வருகிறது, ரெயில் ஸ்டேஷனிலிருந்து? சற்று ஏறும், தாழும். அதெல்லாங்கூட ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை ரங்கநாதனுக்கு. ஆனல் வண்டி வரும் போது எதிரே பார்த்துக்கொண்டேதானே வந்தாள் ருக்கு? அவளுக்குக் கூடவா தெரியாமல் போய்விட்டது விதரணை? அவளுக்கு, நேரில் வந்து அவனை விசாரிப்பதென்ருல் வெட்கமாகத்தான் இருக்கும். அதற்காக உள்ளே போய்த் தன் தாயிடமாவது, "அவர் வந்திருக்கிருர்" என்று ஒரு வார்த்தை சொல்லக்கூடாதா என்ன? வாய் முத்தா உதிர்ந்து போய் விடும்?

அக்கிரகாரம் முழுவதும் தேவராஜ ஐயங்கார் மாப்பிள்ளை ஊருக்கு வந்தது தெரிந்து போய்விட்டது. ஆனல் தேவராஜ ஐயங்காருக்குத் தெரிந்ததா, அவர் சகதர்மிணி செங்கமலம் மாளுக்குத் தெரிந்ததா என்றுதான் கேள்வி. ஒருகால் இது தன் மாமனர் வீடுதானு என்றுகூட ரங்கநாதனுக்குச் சந்தேகமாயிருந்தது.

ரங்கநாதன் எண்ணமிட்டுக்கொண்டே கூடத்தில் நின்று சலித்து, ஒன்றும் தோன்ருமல் ஊஞ்சலில் உட்கார்ந்தான். அந்த ஊஞ்சல்கூட அவனுக்கென்று இன்று சதி பண்ண வேண்டுமா? சாதாரணமாக அதில் யார் உட்கார்ந்தாலும் கிரீச், கிரீச் என்று அது பாட ஆரம்பித்து விடும். ஆனல் ரங்கநாதன் உட்கார்ந்ததும் ஊஞ்சல் ஆடிற்றேயொழியப் பாடவேயில்லை. இதற்கு ஊஞ்சல்மேல் பழி சொல்லக் கூடாது. செங்கமலத்தின்மீதுதான் குற்றம். 'நாளைக்கு மாப்பிள்ளை வரப்போருர். சித்தே ஏந்தினுப் போல உட்காருவார். உடனே இது ராகம் பாட ஆரம்பிச்சுடும்' என்று சொல்லிக்கொண்டே அவள் ஊஞ்சல், 'நாகவாச'த்துக்கு எண்ணெய் போட்டுவிட்டாள். அதன் பலன் இப்போது

அதற்குக்கூட மாப்பிள்ளேயைப் பார்த்ததும் வெட்கம் வந்து விட்டது. அது பாடமாட்டேன் என்று விட்டது. மாப்பிள்ளே யும் மௌனமாகவே அதை ஆட்டிக்கொண்டு உட்கார்ந் திருந்தார்.

இப்படிச் சில விநாடிகள் கழிந்தன. பிறகுதான் கொல்லேப் புறத்திலிருந்து கழுநீர்த் தோண்டியும் கையுமாகத் தாழ்வாரத்துக்கு வந்தாள் செங்கமலம். அவள் தலேமயிர் பறந்துகொண் டிருந்தது. 'கால் புடைவை'யை இழுத்து வரிந்து கட்டியிருந்தாள். மேலாடை முறுக்கிக்கொண்டு கிடந்தது. நெற்றியில் இருந்த குங்குமப் பொட்டைக் கரைத்துக்கொண்டு வியர்வை மூக்கின்மேல் வழிந்து வந்து மூக்கின் நுனியில் ஒரு சொட்டு ரத்தம் மாதிரி ஊசலாடிக் கொண் டிருந்தது. இத்துடன் கையில் கழுநீர்த் தோண் டியைப் பிடித்திருந்தாள். இந்தக் கோலத்துடன் பறக்கப் பறக்க நடந்து அவள் தாழ்வாரத்தின் வழியே வந்து, வாசலுக்கும் போய்விட்டாள். கூடத்து ஊஞ்சலில் ரங்க நாதன் உட்கார்ந்திருந்ததை அவள் கவனிக்கவில்லே.

அவள் கவனம் முழுவதும் வாசல் பக்கமேதான் இருந்தது. வாசலில் வண்டி வருகிறதா என்று அடிக்கு ஒரு தரம் வாசலுக்குச் சென்று திரும்பி அவள் பாதங்கள்கூடத் தேய்ந்து போயிருக்கும். விடிய ஒரு ஜாமத்துக்கு முன்னரே எழுந்திருந்து வெந்நீர்கூட வைக்காமல் 'சட்டுப்புட்' டென்று ஒரு 'முழுக்குப்' போட்டு விட்டு, செங்கமலம் மாப்பிள்ளேக் காக டிபனும் காபியும் பக்ஷணமும் பணியாரமும் விருந்துச் சாப்பாடும் தயாரிப்பதில் ஈடுபட்டுப் போனுள். அவளுடன் கூடவே எழுந்த ருக்குவோ, அவள் ஆயிரம் சொல்லியும் கேளாமல் விடிய விடியக் குளத்துக்குப் போய்விட்டாள். அது முதல் உள்ளுக்கும் வாசலுக்குமாகச் செங்கமலம் எத்தனே தடவைதான் நடந்திருப்பாள்? ஆனுல் கடைசியில் அவள் கழுநீர்த் தோண்டியைத் தூக்கிக்கொண்டு கொல்லேப் புறத் திற்குப் போய் அங்குள்ள தொட்டியில் அதைக் கொட்டுகிற சமயத்தில்தான் வாசலில் வண்டி வந்திருக்கிறது. அப்போது மைசூர்ப்பாகுக்கு வைத்த நெய் போதுமா போதாதா என்கிற

ஆராய்ச்சியில் அவள் மனம் இறங்கியிருக்கவேதான் வாசலில் வண்டி வந்து நின்ற சப்தங்கூட அவளுக்குக் கேட்கவில்லை.

தொட்டியில் கழுநீரைக் கொட்டி விட்டுத் திரும்பும்போது தான் மறுபடியும் அவளுக்கு வாசலுக்குப் போய்ப் பார்க்க வேண்டுமென்கிற எண்ணம் ஏற்பட்டது. உடனே இப்படி யப்படிக் கூடத் திரும்பிப் பாராமல், காலியான கழுநீர்த் தோண்டியும் கையுமாக வாசல் பக்கம் போய்விட்டாள்.

எதிர் மனையில் இருந்த ஒரு வேப்பமரத்தடியில், வண்டி மாடுகளைக் கட்டி வைக்கோல் போட்டுவிட்டு, துரையப்பன் வண்டியைக் 'காடிகானு'வில் தள்ள ஏர்க்காலைப் பிடித்துத் தூக்கிக்கொண் டிருந்தான். அப்போதுதான் செங்கமலம் வண்டியைப் பார்த்தாள். "ஏண்டா, தொரையப்பா, இப்பத் தான் வரையா? மாப்பிள்ளை ஐயா வரல்லே?" என்று கேட்டாள், கொஞ்சம் சம்சயம் தோன்றும் குரலில்.

"வந்திருக்காரே அம்மா! உள்ளே பார்க்கலே? பொட்டி, படுக்கையெல்லாம் கூடக் கூடத்திலே கொண்டு போய் வச்சேனே!" என்று சொல்லிவிட்டு ஏர்க்காலைத் தோள்மேல் தூக்கி வைத்துக்கொண்டு வண்டியைப் பின் புறமாகத் தள்ளிச் சென்றான் துரையப்பன்.

"வண்டியைக் காடிகானுவிலே விட்டு விட்டுக் கொல் லைப் பக்கமா வா" என்று மெல்லிய குரலில் கூறி, செங்கமலம் உள்ளே திரும்பும்போது அவளுக்கு என்றும் இல்லாத கூச்சம் திடீரென்று வந்துவிட்டது. 'என் புத்தியைச் செருப்பா லடிக்க, இந்த வேஷத்தோடே ஒத்தி வாசலுக்கு வருவேனா?' என்று மனசுக்குள்ளேயே நினைத்துக்கொண்டு, ஒரு கையால் கால் புடைவையை இழுத்துவிட்டு, பறக்கும் தலையையும் மேலாகத் தடவி, முன்றானையை எடுத்து முகத்தை ஒத்தியபடி கொஞ்சம் முகம் தெரிந்ததும் தெரியாததுமாக மறைத்துக் கொண்டு, மேலாக்கைச் சரிப்படுத்திய வண்ணம் செங்கமலம் நாணிக்கோணி நாகரிக நடைபோட்டுத் தாழ்வாரம் தாண் டிக் கூடத்தைப் பார்த்தும் பாராதவள்போல அபிநயம் செய்துகொண்டு உள்ளே போய்விட்டாள்.





ரங்கநாதன் ஊஞ்சலை விட்டு எழுந்திருக்கவேயில்லை. மாமியார் கோலத்தைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனுனே என்னவோ! ஆனுல் அவனுக்கு ஒன்று மட்டும் நன்ருகத் தெரிந்துவிட்டது. 'மாமியார் ரொம்ப'பிஸி'யாக இருக்கிருள்.'

அதற்குள் அவளே வந்துவிட்டாள். உள்ளே நுழைந்ததும் கதவுக்கு அருகிலேயே கைத் தோண்டியை வைத்து விட்டு, செங்கமலம் தன்னை மாப்பிள்ளை முன் ஆஜராவதற்குத் தகுதியுடையவளாகச் செய்துகொண்டாள். அதி துரிதமாக ஒரு சின்னச் சவுக்கம், ஒரு கண்ணுடி, சீப்பு, குங்குமப்பரணி இவைகளெல்லாம் அவளுக்குக் கனவேகத்துடன் ஒத்தாசை புரிந்து அவளைக் கூடத்துப் பக்கம் அனுப்பி வைத்தன. செங்கமலம் குனிந்த தலை நிமிராமல் கூடத்துக்கு வந்து, ஊஞ்சலுக்கு எதிராக இருந்த உக்கிராண அறைக்குள் நுழைந்து, கதவை ஒருக்களித்துக்கொண்டு அதன் பின்னுல் நின்ருள். அவள் முகம் மட்டும் கதவுக்கு வெளியில் கொஞ்சம் தெரிந்தது. "சௌக்கியமா? அத்தை சௌக்கியமா யிருக்காரா? கொஞ்ச நாளுக்கு முந்தி உடம்பு ஒரு மாதிரியா இருக்குன்னு கடுதாசி வந்தது மொதல்கொண்டு ஒரே அலைச்சலாயிருந்தது. ரெண்டு கடுதாசிகூடப் போட்டதாகச் சொன்னுர். உடனே பதில் வராமெ போகவே திகிலாயிருந்தது. ரொம்ப இளைச்சுப்போயிருக்கே. உடம்பை ஜாக்கிரதையாக் கவனிச்சுண்டாத்தானே..."

மாமூலான குசலப்பிரச்னம். அது முடியும் வரையில் மாமியாருக்கும் சரி, மாப்பிள்ளைக்கும் சரி தர்ம சங்கடமாயிருந்தது. ஒருவாருக அந்த அத்தியாயம் முடிந்தது.

அந்த அத்தியாயம் இருவருக்குமே புதிசு. எனவே மிகவும் பிரயாசையாக இருந்தது. செங்கமலம் சுபாவத்திலேயே மிகவும் கூச்சமுடையவள். ருக்கு பிறந்து இரண்டு வயசு ஆகும் வரையில் அவள் கணவன் எதிரே நின்று பேசியதில்லை. அப்போது அவள் மாமியார் இருந்தாள். சற்றுக் கண்டிப்பான மாமியார். எனவே நேருக்கு நேர் நின்று புருஷனுடன் பேசிப் பழக அவளுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. மாமியார் காலத்துக்குப் பின் அவளுக்கு

வேறு வழியில்லை. தேவராஜ ஐயங்காருக்கும் நிமிஷத்துக்கு ஓர் 'அடி' போட்டு அழைக்கத் தைரியம் வந்துவிட்டது. எனவே செங்கமலம் அவருடன் எதிர்நின்று பேசித்தான் ஆக வேண்டும் என்கிற நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆயினும் நாளதுவரையில் அவள் 'மரியாதைப்பட்ட' புருஷர்கள் முன்னிலையில் நின்று பேசினவள் அல்ல.

ரங்கநாதனுக்கும் மாமியார் வந்து குசலம் விசாரித்தது என்னவோபோல் இருந்தது. இருந்தாலும் ஆண் பிள்ளை அல்லவா? சமாளித்துக்கொண்டு, அவள் கேள்விக்கு மட்டும் ஒவ்வொரு வார்த்தை பதில் சொல்லி முடித்தான். கடைசி யில் அவனுக்கு மாமனாரைப் பற்றி ஒரு வார்த்தையாவது விசாரிக்க வேண்டுமென்று தோன்றிற்று. அவர் ஊரில் இருக்கிறாரா இல்லையா என்றாவது கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினான். முதலில் எந்த விதமாகக் கேட்பது, அவரை என்னவென்று அழைப்பது என்பதுபற்றிக் கொஞ்சம் தடுமாற்றம் ஏற்பட்டது அவனுக்கு. ஆனால் ஒரு வழியாக, "அவர் எங்கே?" என்றான்.

"வந்துவிடுவார். திடுதிப்புன்னு ஒரு காரியம் வந்து விட்டது இன்னிக்கி. எழுந்ததும் எழுந்திருக்காததுமாப் போயிருக்கார். வருகிற சமயந்தான். கொஞ்சம் காபி..." என்று வார்த்தையை முடிக்காமல் உள்ளே போனாள் செங்கமலம்.

ரங்கநாதன் சட்டையைக் கழற்றி ஊஞ்சலிலேயே ஒரு பக்கமாகப் போட்டான். எழுந்து சோம்பல் முறித்துக் கொண்டே வாசலுக்குப் போய் இப்புறமும் அப்புறமும் திரும்பித் திரும்பிப் பார்த்தான். வாசலிலிருந்து திரும்பும் போது ரேழியில் மாடிப்படிப் புறம் அவன் கால்கள் இழுத்தன. படியேறிச் சென்றான்.

செங்கமலம் கூடத்திலிருந்து உள்ளே போகக் கிளம் பியவள் ஏதோ நினைத்துக்கொண்டவள்போல் கொல்லைப் புறம் சென்றாள். அங்கே அவள் வருகையை எதிர்பார்த் தவன் போலத் துரையப்பன் நின்றிருந்தான். அவள் வந்ததும் வராததுமாக, "வரச்சொன்னீங்களே அம்மா?" என்றான்.

"ஆமாண்டா, ஐயா தையூரான் பின்னாலே போயிருக்காரு. மதகடிக் களத்தண்டைதான் இருப்பாரு. போய்க் கையோடே அழைச்சுண்டு வா; மாப்பிள்ளை வந்துட்டாருன்னு சொல்லு, அவரண்டை. சீக்கிரமாப் போ" என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டு உள்ளே வந்தாள் செங்கமலம்.

'ஆயிரந் தரம் சொன்னேன். கேட்டால்தானே? இப்படிக்கூட ஒரு மனுஷர் இருப்பாரோ, துளிகூட அக்கறையில்லாமே! வராத மாப்பிள்ளை வரார். சமயம் பார்த்து, இவருக்கு என்னதான் வேலை வச்சிருக்கோ தெரியவில்லையே! திண்ணை மேலே உட்கார்ந்தேயிருந்தவர் அந்தத் தையூரான் பின்னாலே 'ஜிவ்' வுன்னு கிளம்பிப் போயிட்டா என்ன அர்த்தம்? உள்ளே வந்து, "இன்ன காரியமாப் போறேன்; இப்பவருவேன்"னு ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போனால்தான் என்ன? உம். என் விதி! சிரிப்பாணிப்பட ஜன்மம் எடுத்தாச்சு. கசந்துண்டு என்ன பலன்?' என்று மனசுக்குள்ளேயே அங்கலாய்த்துக்கொண்டு சமையல் அறையில் கால் வைத்த செங்கமலம் ஒரு விநாடி திடுக்கிட்டு நின்று போனாள்.

அங்கே அவள் கண்ட காட்சி அவளைப் பதைபதைக்கச் செய்தது. அறையின் ஓரத்தில் சுவருடன் ஒட்டினாப்போல் இருந்த ஒரு மேடையின் கீழே ஈரப்புடைவையுடன் ருக்கு பேச்சு மூச்சில்லாமல் விழுந்து கிடந்தாள்.

வேறொரு சமயமாயிருந்தால், இக் காட்சியைக் கண்டதும் செங்கமலம் வீரிட்டுக் கத்தி விடுவாள். ஆனால், கூடத்தில் இப்போதுதான் மாப்பிள்ளை வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார். எப்படிக் கத்த முடியும் அவளால்?

ஒரே ஓட்டமாக ஓடி ருக்குவைத் தூக்கி தன் மடியில் வைத்துக்கொண்டாள் செங்கமலம். அவள் முகத்தில் தண்ணீரை வாரி அடித்தாள். முன்றானையால் துடைத்து விசிறினாள். மிருதுவான குரலில், "ருக்கு, என்னடீ தங்கம் உனக்கு?" என்கிற உருக்கம் ததும்பும் சொற்கள் பிறந்தன.

ருக்கு பதில் பேசவில்லை. கண்களை மட்டும் மெல்லத் திறந்தாள். கிணற்றின் அதப் பாதாளத்தில் ஜலம் இருந்

தால், அதன் ஒளி தெரியுமே, அவ்வளவு மங்கலாக இருந்தது அவள் கண்ணொளி. முதல் நாள் வரையில் செந்தாமரை மலர்ந்திருப்பதுபோலத் தோன்றிய அவளது முகம், அப்போது சவம் போல வெளுத்திருப்பதைக் கண்டு கதிகலங்கிப் போனாள் செங்கமலம். மாப்பிள்ளைக்குக் காபி கொண்டு போய்க் கொடுக்கவேண்டும் என்கிற நினைவுகூட மறந்து போயிற்று அவளுக்கு.

"ருக்கு, என்னடீ உடம்புக்கு? ஈரப்புடைவையும் தானுமா இப்படி விழுந்து கிடக்கிறதைப் பார்த்து, என் வயிறு பத்தி எரியறதே" என்றாள் அடக்கமான குரலில்.

"அம்மா!"

அதற்குமேல் பேச முடியவில்லை ருக்குவால். தாயைக் கண்டதும் அவள் இருதயத்தில் தேங்கிக்கிடந்த சோகம் முழுவதும் அணையை உடைத்துக்கொண்டு பாயும் ஆற்று வெள்ளம் போல வெளிப்பட்டது. விக்கி விக்கி அழுதாள். யானை கதறுவது போலக் கதறி விட்டால் கூடச் சற்றே ஆறுதல் ஏற்படும். ஆனால், 'அவர் வந்து விட்டார்' இந்த வீட்டுக்குள்ளேயே அவர் இருக்கிறார்' என்கிற ஞாபகம் மட்டும் அவளுக்கு இருந்தது. எனவே நெஞ்சு குமுறிக் குமுறி அழுதாள், தொனியை அடக்கிக்கொண்டே.

இப்படி ருக்கு அழுததைச் செங்கமலம் ஒரு நாளும் பார்த்ததில்லை. அவளுக்கு என்ன என்னவோ தோன்றியது. 'நல்ல நாளும் போதுமாக ஏன் இப்படி இந்தப் பெண் நெஞ்சு குமுறி அழவேண்டும்? அதுவும் அவர் வந்ததும் வராததுமாக இவளுக்கு என்ன துன்பம் ஏற்பட்டு விட்டது?' என்றெல்லாம் எண்ணியது செங்கமலத்தின் மனம். ஆனால், "என்னடீ கண்ணு, சமாசாரம்?" என்றுதான் கேட்டாள்.

"ஒன்றும் இல்லையம்மா...எனக்கு...என்னவோ பண்ணு கிறது......" என்று பேசி முடிப்பதற்குள் போதுமென்றாகி விட்டது ருக்குவுக்கு.

செங்கமலத்துக்கு ஒன்றுமே புரியவில்லை. குளத்துக்குப் புறப்படுவதற்கு முன் ருக்குவிடம் காணப்பட்ட குதூகலத்துக்கும், திடீரென்று இப்போது உண்டாயிருக்கும் இந்த மாறு

தலுக்கும் அர்த்தம் என்ன? அதை அறியத் துடித்தது அந்த அன்னையின் உள்ளம். ஆனால் ருக்கு அழுவதைப் பார்த்தால் அவளை எவ்வாறு கேட்பது என்றே தோன்றிற்று. இருந்தாலும், "என்னடி பண்ணுகிறது உனக்கு? இத்தனை காலம் பற விடிந்ததும் விடியாததுமாகக் குளத்துக்கு என்னத்துக்குப் போகணும்! வேண்டாம் வேண்டாம்னு கிளிப்பிள்ளைக்குச் சொல்ற மாதிரி சொன்னேனே; கேக்கப் படாதா? வழியிலே எதையாவது கண்டு பயந்தாயா?" என்று பிரிவுடன் கேட்டாள்.

ருக்குவுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. சந்நியாசியின் சந்திப்பைப் பற்றித் தாயிடம் சொல்ல வேண்டுமென்று துடித்தது அவள் மனம். ஆனால் அவர் வார்த்தைகள் அவள் நெஞ்சில் பசுமரத்தாணிபோல் பதிந்திருந்தன. தன் விதியின் ரகசியத்தைத் தாயிடம் கூடச் சொல்லுவது உசிதமல்ல என்று மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். ஆகவே, "போகிறபோது ஒன்றும் இல்லை. வரும்போது தடுக்கி விழுந்துவிட்டேன். அப்பவே என்னவோ போல் இருந்தது. அவசர அவசரமாக நடந்து வந்தேன். உள்ளே வந்ததும் கால் இரண்டும் துணியாய்ப் போச்சு. நிற்க முடியவில்லை. கண்ணை இருட்டிக்கொண்டு வந்தது. அவ்வளவுதான் தெரியும்" என்று மெதுவாகத் திணறித் திணறிப் பேசி முடித்தாள் ருக்கு.

செங்கமலத்தின் மனம் அலை பாயலாயிற்று. மாப்பிள்ளை வந்து சேர்ந்த சமயத்தில் பெண்ணுக்கு எதிர்பாராத ஆபத்து ஏற்படுவதா? இது நல்லதல்லவே என்று ஏங்கியது அவள் மனம். இரண்டு நாட்களுக்குமுன் வெள்ளிக்கிழமை சாயந்தரம் பெருமாள் மேடைக்குமுன் படர்ந்தெரியும் தீப ஒளியில் ருக்கு வணங்கி நின்ற காட்சியும், அப்போது அவள் மனத்தில் உண்டான எண்ணங்களும் நினைவுக்கு வந்தன.

'சீ, இதெல்லாம் என்ன?' என்று சலித்துக்கொண்டாள். உடனேயே, 'உம். அல்ப விஷயங்கள். இதிலெல்லாம் என்ன வந்துவிட்டது?' என்று தன்னைத் தானே தேற்றிக்கொண்டாலும், அவள் இருதயத்தில் முள் தைத்தது

போல் இருந்த ஓர் உணர்ச்சியை மட்டும் உதறியெறிய அவளால் இயலவில்லை.

சிறிது நேரம் மௌனமாக ஏதோ எண்ணமிட்டுவிட்டுச் செங்கமலம், "ருக்கு, மனசைத் தைரியப்படுத்திக்கோ; இப்படிக் கோழையா யிருக்கிறவ குளம் உண்டா, குட்டை யுண்டான்னு இருட்டுப் பிரியறத்துக்கு முன்னே போகக் கூடாது. மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேயின்னு சொல்லுவாளே, அந்த மாதிரி இருக்கு இது. கிடக்கட்டும் போ. விட்டுத்தள்ளு இந்தப் பயத்தையெல்லாம். நாளைக்கே தன்னந்தனியாப் போய்க் குடித்தனம் பண்ண ணுமே. இப்படி 'லொட்'டுங்கிறத்துக்கெல்லாம் பயந்தா, ஆகுமா? போய் ஈரப் புடைவையை விழுத்துட்டு, நல்ல புடைவையாய்ப் பார்த்து உடுத்திக்கோ. உன் கிரகப்பிரவேசத் துக்கு வாங்கினமே, அந்த ஆகாச நீலப் புடைவையை உடுத்திக்கோ. அது ரொம்ப நன்னுயிருக்கும். அவர் பாவம், அப்பவே வந்து ஊஞ்சலிலே உக்காந்திருக்கார். காபிகூடக் குடுக்கல்லே. குளத்துக்குப் போகாமே யிருந்தா, இத்தனை நாழி ஒரு தம்ளர் காபி கொண்டுபோய்க் குடுத்திருக்கலாமோ, இல்லையோ?" என்று சொல்லிவிட்டு எழுந்து போய்க் காபியைக் கலந்து எடுத்துக்கொண்டு கூடத்துப் பக்கம் போனுள். ஆனுல் கூடத்தில் மாப்பிள்ளையைக் காணவில்லை. அவர் தரித்திருந்த கோட் மாத்திரம் ஊஞ்சலில் இருந்தது.

# 7

## மாடி அறையில்

மாடியில் ஒரே ஓர் அறை. ஒரு ஹால் என்றுகூட அதைச் சொல்லலாம். அவ்வளவு விசாலமாயிருந்தது அந்த அறை. அந்த அறையை அடுத்தாற்போல ஒரு வராந்தா. அறைக்குப் பின்னுல் ஒரு சின்ன வெளி மெத்தை. இவ்வளவு தான் இடம். ரங்கநாதன் மாடிப்படியேறிச் சென்றதும் வராந்தாவைத் தாண்டி ஹாலுக்குள் நுழைந்தான். நாலு புறமும் இருந்த ஜன்னல்களின் வழியாகக் காற்றும் வெளிச்ச மும் நிறைய உள்ளே புகுந்து வெளியே சென்று கொண்டிருந்தன.

ஹாலின் மத்தியில் ஒரு சிறு வட்ட மேஜை போடப் பட்டிருந்தது. அந்த மேஜைமேல் பின்னல் போட்ட ஒரு சவுக்கம் விரிக்கப்பட்டு, மேஜையைச் சுற்றி அது தொங்கிக் கொண்டிருந்தது. மத்தியில் ஒரு பித்தளைக் கலசத்தில் சில காகிதப் பூக்கள் செருகப்பட் டிருந்தன. ஹாலின் ஒரு கோடியில் ஒரு மேஜை. அதற்கு எதிராக ஒரு நாற்காலி. எதிர்ப்பக்கத்தில் கண்ணுடியுடன் கூடிய ஒரு தேக்குமரப் பீரோ. அந்தப் பீரோவுக்கு அப்பால் நாலடி தூரத்தில் ஓர் ஒற்றைக் கட்டில். அதன்மீது ஒரு சாதாரணமான பஞ்சு மெத்தை, இரண்டு மூன்று தலையணைகள். கட்டிலுக்கடியில் இரண்டு டிரங்குப் பெட்டிகள். இவைகளே அந்த ஹாலை அலங்கரித்தன.

ஹாலில் அதிகமாக வேறு எந்தச் சாமான்களும் இல்லை. கீழே வீடு முழுவதும் படிந்திருந்த கிராமக் களைக்கு நேர் மாருக, இந்த மாடியறையில் பட்டணத்துக் களை சொட்டிக் கொண்டிருந்தது.

கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்தபடியே வீட்டைச் சுற்றிச் சுற்றி மேலும் கீழுமாய்ப் பார்த்த ரங்கநாதனுக்கு, மாடியைப் பார்த்தபோது ஆச்சரியம் உண்டாயிற்று. அது 'மாப்பிள்ளை அறை' என்று அவன் முன்னிலையில் தன்னைத் தானே விளம்பரப்படுத்திக் கொள்வதுபோலத் தோன்றிற்று அவனுக்கு. அந்த அறையில் இருப்பது, அந்த வீட்டில் தன்னுடைய அபூர்வமான ஒரு ஸ்தானத்தைப் பகிரங்கப் படுத்திக்கொள்வதாகும் என்று நினைத்தான் அவன். வீட்டின் மற்றப் பாகங்களில் காணப்படாத ஒரு புதுமையும் உன்னதமும் அந்த மாடி அறையில் காணப்பட்டன என்று குருடன் கூடச் சொல்லிவிடுவான். அதே மாதிரி, வீட்டில் வசிக்கும் மற்றவர்களிடம் காண முடியாத ஏதோ ஒன்று அதை அந்தஸ்து, மரியாதை, கௌரவம், பிகு, நடிப்பு, ஜபர்தஸ்து, ஏன், ஒருவித அசட்டுத்தனம், எப்படி வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளலாம்—தன்னிடம் இருப்பதாகவும் அதைக் காட்டிக்கொடுக்க வென்றே அந்த அறை ஒதுக்கப்பட்டிருப்பது போலவும் எண்ணினான் அவன்.

இந்த எண்ணம் அவனை ஒரு கணங்கூட அங்கே தாமதிக்க விடவில்லை. அறையை விட்டு வராந்தாவுக்கு வந்தான். மாடியை விட்டுக் கீழே இறங்கிப் போய்விடலாம் என்று நினைத்தான். ஆனால் கீழே போய்த்தான் தன்னந் தனியாக என்ன செய்வது, எங்கே உட்காருவது, எங்கே நிற்பது என்று தெரியவில்லை அவனுக்கு. முற்றும் புதிய அநுபவம் ஒன்று ஏற்பட்டிருக்கும் அத்தருணத்தில், அந்த இடமேதான் சற்று நிம்மதி அளிக்கக் கூடியது என்று தோன்றுவதும் சகஜந்தானே?

ரங்கநாதன் சிறிது நேரம் வராந்தாவில் குறுக்கும் நெடுக்குமாக உலாவி விட்டு, ஹாலுக்குள் போய்ச் சாய்வு நாற்காலியை இழுத்து ஹால் நடுவில் இருந்த வட்ட மேஜைக்கு எதிராகப் போட்டுக்கொண்டு 'உஸ்' என்று சலிப்புடன் உட்கார்ந்தான்.

கீழேயிருந்து 'கிணிக் கிணிக்' என்று மெட்டிகள் சப்தம் செய்துகொண்டே மாடிப் படிகளில் ஏறி அணுகி வருவது கேட்டது.

ரங்கநாதனுடைய சலிப்படைந்த மனத்திற்கு அந்த மெட்டிகளின் சப்தம் கொஞ்சம் உத்ஸாகத்தை அளித்தது. சாய்வு நாற்காலியில் அமர்ந்ததுமே அவன் இருதய வீணையின் நரம்புகள் மீட்டப்படுவதை உணர்ந்தான். கொஞ்சம் கொஞ்சமாகச் சுருதி கூட்டிக்கொண்டு அந்த இருதய வீணையிலிருந்து நாதம் பிறந்தது. பழைய ஞாபகங்கள்—இன்ப, துன்ப நினைவுகள்—எல்லாம் அந்த வீணையிலிருந்து இசைகளாகப் பொழிந்தன. அந்தக் கீதங்களுக்குத் தாளம் கட்டுவதுபோல மெட்டிகளின் ஓசை ஒத்துழைத்தது. ரங்கநாதன் இந்த நினைவுக் கீதத்தில் மெய்ம்மறக்கலானான்.

சென்னை முத்தியாலுப்பேட்டைத் தம்புசெட்டித் தெருவிலிருக்கும் ஒரு வீடு அந்தக் கீதத்தில் உருவாகி வந்து அவன் அகக் கண்முன் நின்றது. அங்கேதான் அவன் போன வருஷம் வரையில் வசித்து வந்தான். அந்த வீட்டில் அவன் வசித்திராவிட்டால் இன்று ருக்கு அவனுக்கு மனைவியாக வாய்த்திருக்க முடியுமா? அந்த வீட்டுக்கார அம்மாள் முல்லா சாயபு தெருவில் இருக்கும் தன் தூரபந்து ஒருவர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போய்விட்டு வந்து, அவன் அத்தையிடம் ருக்குவைப்பற்றிப் பிரஸ்தாபம் செய்ததால்தானே ருக்கு அவனுக்குச் சொந்தமானாள்.

அந்தக் கதைதான் அவன் இருதய வீணையிலிருந்து கீதங்களாகப் பொழிந்து அவனை மயக்கியது.

'அத்தை, வெற்றிலை போட்டுக்கொண்டு முழுங்கினால் நெஞ்சிலே தெரியும், அத்தனை சேப்பு. பொண் ராஜாத்தியாட்டமா இருக்கா. போய்த்தான் பாருங்களேன். பொண்ணுக்கு அம்மா இருக்காளே தங்கம்னு தங்கந்தான். மட்டும் மரியாதையும் அடக்கமும் ஒடுக்கமும்! அந்த மாதிரி இடம் கிடைக்கணும் நமக்கு. நான் போய் ஒரு நாள்தானே அங்கே இருந்தேன்? அத்தனை பேர்தான் வந்திருந்தாளே. இவாளைப் போல வேறே யாரையுமே எனக்குப் பிடிக்கல்லே. நாளை வரைக்கும் இந்த ஊரிலே இருக்கப் போறதாச் சொன்னா. அவசியம் நாளைக் காலம்பறவே இங்கே வந்துட்டுப் போகணும்னு சொல்லிவிட்டு வந்திருக்கேன். பொண்ணைப்

பார்க்கிறபோதே உங்க ரங்கநாதன் ஞாபகந்தான் முதலிலே வந்தது எனக்கு. பொண்ணைப் பெத்தவளும் கல்யாணம் பண்ணிவிடணும்னு விசாரப்படறதாத் தெரிஞ்சுது. இப்படின்னு ஒரு வார்த்தையும் போட்டுவச்சேன். நீங்க வேணும் பாருங்களேன். நாளைக்குக் கட்டாயம் இங்கே வந்துட்டுத் தான் போவா' என்று வீட்டுக்கார அம்மாள் தன் அத்தையிடம் சொன்ன வார்த்தைகளை அவன், வாசல் பக்கத்து அறையில் புத்தகமும் கையுமாக உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்தான்.

அடுத்த நாள் காலை அவர்கள் அந்த வீட்டைத் தேடி வந்தபோது அவனுக்கே என்னவோபோல் இருந்தது.

வீட்டுக்காரி அவர்களை விசாரித்தாள். தன் அத்தையை அறிமுகம் செய்து வைத்தாள். அறையில் இருந்தபடியே ரங்கநாதன் அவர்கள் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்தான். அப்போது அத்தை வந்து, "அவா உன்னைப் பார்க்க வந்திருக்கா. சித்தே இப்படிக் கூடத்துக்கு வரையா?" என்றாள்.

கூடத்துக்கு வந்து நின்றதும் எதிரே அவர்களைக் காணவில்லை; "இப்படிக் கூச்சப்பட்டால் எப்படி? இப்ப நன்னாப் பார்த்து இஷ்டத்தோடே கல்யாணம் பண்ணிண்டாத்தானே பின்னாடிக்கு நல்லது?" என்றது வீட்டுக்காரியின் குரல். உடனே 'விசுக்'கென்று ஒரு தும்மல்.

"என் தும்மல் எப்பவுமே நல்ல தும்மல்" என்று ஒரு சமாதானம் சொல்லிவிட்டு, "இங்கே வா அம்மா, இப்படி வந்து அந்தக் கம்பத்தண்டை நின்னுக்கோ. ரெண்டு பேரும் ஒத்தரை ஒத்தர் நன்னாப் பார்த்துக்கணும்" என்றாள்.

கூடத்துக்கு எதிர்ப் பக்கத்து அறை வாசற்படிக்கு அப்பால் இருந்தே, செங்கமலம் தன்னை உற்றுப்பார்ப்பதை ரங்கநாதன் கண்டுகொண்டான். நேர் எதிராக வீட்டுக்காரி கொண்டுவந்து நிறுத்திய பெண்ணை ஏறெடுத்துப் பார்க்க அவனுக்குக் கூச்சமாயிருந்தது. வீட்டுக்காரி ஒரு தரம், அத்தை ஒரு தரம் சொன்ன பிறகு, மிகுந்த கூச்சத்துடன் பார்த்தான்.

பவுன் நிறச் சிற்றுடை உடுத்திருந்தாள் அவள். அதே நிற 'ஜாக்கெட்.' பளபளவென்று 'புதுக்கருக்கு' அழியாமல் பிரகாசித்த அந்தச் சேலே, ரவிக்கைகளுக்கு மேலாக அவளது அழகிய முகம் அக்கினியிலிருந்து சந்திரன் உதய மானுல் எப்படியிருக்குமோ அப்படியிருந்தது. அவள் கண்களே அவன் ஒரே விநாடிதான் பார்த்தான். உடனே அவன் கால்கள் அவனேயும் அறியாமல் அவனே அங்கிருந்து உள்ளே தள்ளிக்கொண்டு போய்விட்டன.

அவன் மனம் அப்போதே நிச்சயம் செய்துகொண்டு விட்டது: 'வீட்டுக்காரி சொன்னது வாஸ்தவம்; "பொண் ராஜாத்தியாட்டமா இருக்கா!" தவறில்லே.'

அத்தைக்கு மாத்திரம் தன் மருமானுக்குக் கல்யாணம் பண்ணும்போது கையில் ஆயிர ரூபாயாவது வரதக்ஷிணே வாங்கவேண்டுமென்று எண்ணம். ரங்கநாதன் அப்போது பி., ஏ. பரீக்ஷைக்குப் படித்துக்கொண் டிருந்தான். அத்தை யின் எண்ணத்துக்குக் குறுக்காக அவன் ஒரு நாளும் நடந்ததில்லே. நடந்திருந்தால் அவன் பி., ஏ. வரையில் படித்திருக்க முடியுமா என்பதே சந்தேகம்.

அத்தை அவனே அடிநாளிலிருந்து வளர்த்து வந்திருக் கிருள். அவனுக்கு மூன்று வயசாயிருக்கையில் அவன் தாய், தந்தை இருவரும் காலராக்கண்டு ஒரேவாரத்துக்குள் மாண்டு போனுர்கள். அதுமுதல் இதுவரையில் அத்தைதான் அவனே வளர்த்து ஒரு மனிதன் ஆக்கி யிருக்கிருள். எனவே அவள் அபிப்பிராயத்துக்கு மாருக எதையும் செய்ய ரங்கநாதன் விரும்பவில்லே.

அத்தைக்கும் அவனேத் தவிர வேறே வாரிசு இல்லே. அவள் தம்பி அந்தக் 'கைக்கடனே' அவளிடம் விட்டுச் சென்றபோது ஒரு செல்லாக் காசைக்கூட வைத்துச் செல்ல வில்லே. இருந்தால்தானே! அத்தைக்கு மாத்திரம் சுமார் இரண்டாயிர ரூபாய்க்கு 'நகை நட்டுக்'கள் இருந்தன. அந்த நகை நட்டுக்கள்தாம் அவள் ஆஸ்தியாக விளங்கின. அவள் புருஷன் அவளுக்கு இருபத்தைந்து வயசா யிருக்கும்போதே திடீரென்று மாரடைப்பால் மாண்டார். அதுமுதல் அவள்

தன் தம்பி, தம்பி மனைவி இருவரோடும் வசித்து வந்தாள். பிறகுதான் ரங்கநாதனே பிறந்தான்.

ரங்கநாதன் பெற்ருேர் கஷ்டதசையில் இருக்கும்போதே, காலரா வந்து அவர்கள் கஷ்டம் 'விடிந்து' போயிற்று. அது முதல் அவனை எடுத்து வளர்க்கும் பொறுப்பு, அவள் தலைமேல் விழுந்தது. அந்தப் பொறுப்பையும் அவள் சரிவரவே நிர்வகித்து வந்தாள் என்று சொல்லத் தேவையில்லை. ஏனெனில் அவளிடமிருந்த இரண்டாயிர ரூபாய் நகை நட்டுக்களில் ரங்கநாதன் பி., ஏ. படிப்பு முடிந்தபோது ஒன்றுகூட மிச்சப்படவில்லை என்று கூறினல் போதாதா?

இந்த நிலையில் அவள் சொன்னபடி ரங்கநாதன் கேட்கத்தானே வேண்டும்? ஆனல் கல்யாண விஷயமாகப் பேசவந்த தேவராஜ ஐயங்காரோ காலணுக்கூட வரதக்ஷிணை கொடுக்க முடியாதென்று நிர்த்தாக்ஷிண்யமாகக் கூறிவிட்டார். இது அத்தைக்குத் துளிகூடப் பிடிக்கவில்லை.

கல்யாணப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைக்கும்படியான நிலைமைகூட வந்துவிட்டது. ஆனல் வீட்டுக்கார அம்மாள் தான் புண்ணியம் கட்டிக்கொண்டாள். 'என்ன அத்தை, இப்படி முரண்டு பிடிக்கறேக? இப்ப ஆயிர ரூபாய் கொடுத்து விட்டாப் போதுமா? பொண் ஒரே பொண். எட்டு ஏகரா பூமி இருக்கு கிராமத்திலே. ஓடியாடிச் சம்பாதிச்சுட்டு, அப்பாடான்னு போய்த் தலைசாய்ச்சுக்கிண்டு படுக்க ஒரு வீடு இருக்கு. அதெல்லாம் இந்தப் பொண்ணுக்கு இல்லாமே வேறு யாருக்குக் கொடுக்கப் போரு? இன்னிக்கி ஓர் ஆயிரம் நொள்ளைக் காசைக் கொடுத்துவிட்டா என்ன புரண்டுவிடும்? பொண்ணுக்கு அம்மாவோ தங்கமான மனுஷி. அதுவுமில்லாமே உங்க மருமானுக்குத் திக்குத் திசை யாரு, நாளைக்கே நீங்க கண்ணை மூடிண்டா? இதெல்லாம் யோசிக்க வேண்டாமா?' என்று என்னவெல்லாமோ பேசி அத்தையின் மனத்தைத் திருப்பினள். பிறகுதான் அரை மனத்துடனுவது அத்தை ஒப்புக்கொண்டாள்.

ரங்கநாதனுக்கு, அத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமே என்று மனம் 'திக் திக்' கென்று அடித்துக்கொண்டது.

அதற்காக அத்தைக்குத் தெரியாமல் அவன் இன்னொரு காரியம்கூடச் செய்துவிட்டான்.

தேவராஜ ஐயங்காரும் அவனும் மாத்திரம் அந்த சமயத்தில் பேசிக்கொண் டிருந்தார்கள். இருவரும் இங்கிலீஷிலேயே பேசினுர்க ளாகையால் அத்தைக்கு அவர்கள் பேசிக் கொண்டது என்னவென்று தெரியாது.

தேவராஜ ஐயங்கார் ஒரு விநோதமான மனுஷ்யர் என்று அப்போதே தோன்றிற்று ரங்கநாதனுக்கு. கல்யாண விஷயமாக அவர் லோகோத்தரமாகக் 'கண்டிஷன்'களும் சம்பிர தாயங்களும் மாமூல்களும் பேசவில்லை. சார்க்கார் உத்தி யோகத்தில் தமக்குள்ள வெறுப்பை அவர் அவனிடம் வெளுத்துக்கட்டித் தீர்த்தார். அன்றியும் வார்த்தையோடு வார்த்தையாக,'நீங்கள் சர்க்கார்உத்தியோகத்துக்குப்போகிற தில்லை என்று உறுதி தந்தால்தான்,எனக்குத் திருப்தியாயிருக் கும்' என்றுகூடச் சொல்லிவிட்டார்! சுத்த வெகுளி என்று நினைத்தான் ரங்கநாதன். அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே, 'ஹும், அதற்கென்ன?' என்று பதில் சொன்னுன். ஆனுல் அந்தப் பேச்சு அத்துடன் சரி.

அதைப்பற்றி ரங்கநாதன் அத்தையுடன் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. சொல்லியிருந்தால்அந்தக்கல்யாணமே நடந்திராதென்பது நிச்சயம்.

கல்யாணத்தின்போது சீர், வண்மை, வரிசை இவைகள் கூடச் சரியாகச் செய்யவில்லை யென்பது அத்தையின் குறை. ஏன்? செங்கமலத்துக்குக்கூடக் கடன் பட்டோ, உடன் பட்டோ, தன் ஒரு குழந்தைக்கு நன்ருகச் செய்யவேண்டும் என்றுதான் எண்ணம். தேவராஜ ஐயங்காரிடம் 'முட்டிக்' கொண்டதாகரங்கநாதன் காதில் விழும்படியாக அத்தையிடம் அவள் குறைப்பட்டுக்கொள்ளத்தான் செய்தாள். ஆனுல் தேவராஜ ஐயங்காரா இந்தச் சம்பிரதாயங்களுக் கெல்லாம் இணங்கக் கூடியவர்? ஏதாவது பரிகாசமாகவே பேசிக் கொண்டு காரியத்தை நடத்திவிட்டுப் போய்விட்டார். அந்தச்

சமயத்தில் அத்தைக்கு ஆத்திரம் ஆத்திரமாகத்தான் வந்தது. வீட்டுக்கார அம்மாள் சமாதானப்படுத்திக் காரியத்தைத் தலை யில் போட்டுக்கொண்டு செய்து முடித்திராவிட்டால், அரை குறையாகக்கூடக் கலைந்திருக்கும் கல்யாணம்.

சீர் வரிசைகளைப்பற்றி அத்தை கோபமடைந்ததுகூடப் பிரமாதமாயில்லை, ரங்கநாதனுக்கு. ஆனால் அவன் இடையில் மஞ்சள் வேஷ்டியும் தோளில் மூட்டையும் கையில் விசிறியும் குடையும், காலில் 'ஸ்லிப்பரு'மாகக் காசி யாத்திரை கிளம்பிக் கொண்டிருந்த சமயம். ஆம். கல்யாணத்தில் 'பரதேசிக் கோலம்' என்கின்ற கட்டம் அது. அவனை வழிமடக்கி மாமனார்க்காரர், 'காசியாத்திரை போகவேண்டாம். என் பெண்ணைக் கன்னிகாதானம் செய்துகொடுக்கிறேன்' என்று நமஸ்காரம் செய்து அழைத்து வரவேண்டுமென்பது சம்பிர தாயம்.

தேவராஜ ஐயங்கார், கையில் மஞ்சள்பூசிய தேங்காய்கள், வெற்றிலை, புஷ்பம் இவற்றுடன் பரதேசிக் கோலம் போன ரங்கநாதன் எதிரே சென்று வணங்கி மாமூலான வாக்கியங் களைச் சொல்லி அழைத்தார். அத்துடன் பேசாமல் இருக்கக் கூடாதா அவர்? 'மாப்பிள்ளைக்கு இந்தப் பரதேசிக்கோலம் ரொம்பப் பொருத்தமாயிருக்கே!' என்று சொல்லிச் சிரித்து விட்டார் வேடிக்கையாக.

கல்யாணத்துக்கு எத்தனையோ புது மனுஷ்யர்கள் வரு கிறார்கள். எல்லோருக்குமே தேவராஜ ஐயங்காருடைய கள்ளம் கபடமற்ற கேலிப் பேச்சுப் பிடிக்கிறதா? யாரோ போய் அத்தையிடம் இதை ஒன்றுக்குப் பத்தாகச் சொல்லி விட்டார்களோ என்னவோ? அத்தைக்கு ரௌத்திராகார மான கோபம் வந்துவிட்டது. 'பரதேசின்னு தெரிஞ்சுண்டு தானே பொண்ணைக் கொடுக்க முன்வந்தா? இதை நாலு பேர் முன்னாடி சொல்லிக் காட்டணுமா? ஓர் ஆயிரம் நொள்ளைக் காசுக்கு அஸ்தமிச்சுப் போச்சு. பிசுநாரித்தனம்! வாயைப் பாரு வாயை! இன்னிக்குக் கல்யாணப் பந்தலி லேயே இப்ப இளக்காரம் பண்ணறவா, நாளைக்கு இன்னும் என்ன என்னதான் சொல்லமாட்டா? வேண்டாமே இவர் பொண்? பி., ஏ. படிச்ச புள்ளைக்குப் பொண்ணு அகப்படாமெ

போறது? பரதேசிக்கோலம் பொருந்தியிருக்காம்! ஏசிக் காட்டின நாக்கை இழுத்து வச்சு அறுக்க வேண்டாமா?' என்று கூச்சல் போட்டாள் அத்தை.

வீட்டுக்கார அம்மாள் அவளை அடக்க முடியாமல் அடக்கி வைத்தாள். செங்கமலம் வந்து அழமாட்டாத குறையாக மன்றாடினாள்; காலில் விழாத குறைதான். அவ்வளவு கெஞ்சினாள். இந்தக் கூத்தெல்லாம் தேவராஜ ஐயங்காரின் காதில் கூடத்தான் விழுந்தது. ஆனால், 'ச்சூ, பொம்மனாட்டிகளே இப்படித்தான். ஒன்றுக்கொன்று குளறுபடியாக அர்த்தம் பண்ணிக்கொண்டால் யார் என்ன பண்ண முடியும்?' என்று சொல்லிச் சிரித்துவிட்டு, மேலே ஆகவேண்டிய காரியத்தைக் கவனிக்கப் போய்விட்டார். எப்படியோ, செங்கமலத்தின் விசாரம் நீங்கும்படி ருக்குவுக்கு, மூனு முடியும் கழுத்திலே விழுந்து, முப்பது இலையும் குப்பையிலே விழுந்து, கல்யாணமும் ஒருவாறு ஆயிற்று.

கல்யாணம் சென்னப்பட்டணத்திலேயே ஒரு சத்திரத்தில் ஆடம்பரமின்றி, அத்தை இன்னமும் சொல்லிக்கொண்டிருப்பதுபோல, 'ஆச்சோ போச்சோன்னு' நடந்துவிட்டது. மறுநாளே மூட்டை முடிச்சுகளுடன் கிளம்பித் தேவராஜ ஐயங்கார், ருக்கு, செங்கமலம் எல்லோரும் ஊர்போய்ச் சேர்ந்தனர். ரங்கநாதன் அப்போது அவர்களுடன் வேதவரம் போகவில்லை. ஏனெனில் அடுத்த வாரத்தில் அவனுக்குப் பி., ஏ. பரீக்ஷை ஆரம்பமாக இருந்தது.

பரீக்ஷையும் முடிந்தது. மாமனாரிடமிருந்து ஊருக்கு வரும்படி ஒரு மாமூல் கடிதமும் வந்தது. ஆனால் ரங்கநாதனுக்குச் சென்னையில் வேறு முக்கியமான வேலை இருந்தது. பரீக்ஷையுடன் அத்தையின் பணத்தில் கடைசித் தம்பிடியும் செலவழிந்து போயிற்று. அடுத்த நாள் முதல் இருவரும் ஜீவிக்கவேண்டுமானால், அவன் உடனே ஒரு வேலை பார்த்துக் கொள்ள வேண்டும் என்கிற நிலைமை ஏற்பட்டது. ரங்கநாதன் வேதவரம் போகவில்லை; வேலைக்காக அலைந்தான்.

வேலையும் அதிருஷ்டவசமாகச் சீக்கிரத்திலேயே கிடைத்தது. சர்க்கார் வேலையல்ல. ஒரு பெரிய 'எண்ணெய்க்

கம்பெனி' வேலை. சர்க்கார் வேலையன்றாயினும், சர்க்கார் வேலைக்குள்ள நிர்ப்பந்தங்களும், சிவப்பு நாடா தர்பாரும், அந்தச் சீமைக் கம்பெனி வேலையிலும் இருந்தது. இதெல்லாம் தேவராஜ ஐயங்காருக்கும் தெரிந்ததுதான். வேலை கூட வேண்டாம். மாப்பிள்ளை தம்முடன் வந்து ஊரிலேயே இருந்துகொண்டு, தம்முடைய எட்டு ஏகரா பூமியைப் பார்த்துக்கொண்டு, ஏதோ சுற்றுப்புறம் இருக்கும் ஊர்களில் 'ஏரிக்கரை கண்ட்ராக்ட்', 'மதகுரிப்பேர் கண்ட்ராக்ட்'' 'ரோட் கண்ட்ராக்ட்' இப்படி ஏதாவது எடுத்துக்கொண்டு தொழில் நடத்தி வந்தால்கூடப் போதுமென்று நினைத்தார் அவர். அதைப்பற்றிச் சில சமயம் ரங்கநாதனுக்கு எழுதவும் எழுதினார். ஆனால் தன் அத்தையை விட்டுவிட்டு மாமனார் வீட்டில் போய்க் குந்திக்கொள்ள ரங்கநாதன் விரும்பவில்லை. அத்தையைக் கூட்டிக்கொண்டே போய்விடலாம் என்றாலோ, தேவராஜ ஐயங்கார் போன்ற ஒரு மனுஷ்யர் இருக்கும் இடத்தில் அத்தையைப்போன்ற ஒரு மனுஷியையும் வைத்துக் கொண்டு இடிபடுவதென்பது அவனுக்குச் சரியாகத் தோன்றவில்லை.

அன்றியும், பி.,ஏ. பரீக்ஷை கொடுத்துவிட்டுத் தன் மருமான் வேதவரத்துக் குப்பைக்காட்டிலே போய் வசிப்பதாவது? அதற்கு இசைவாளா அத்தை? மாட்டவே மாட்டாள் என்பதும் ரங்கநாதனுக்குத் தெரிந்த விஷயந்தான். எனவே 'எண்ணெய்க் கம்பெனி' வேலையை ஒப்புக்கொண்டு ரங்கநாதன் வேலையில் போய்ச் சேர்ந்தான். சில மாதங்களில் அவனை மதராஸை விட்டு, கம்பெனித்துரை மைசூரில் இருக்கும் ஒரு கிளை ஆபீசுக்கு மாற்றிவிட்டார்.

அப்போது சென்னையை விட்டு அத்தையுடன் போனவன் தான். இப்போதுதான் திரும்பி வந்து, வேதவரம் கிராமத்துக்கும் வந்திருக்கிறான். கல்யாணத்திற்குப் பிறகு ருக்குவை அவன் இதுவரையில் பார்க்கவே இல்லையென்றுகூடச் சொல்லலாம்.

வண்டியில் வரும்போது, ஈரப்புடைவையுடன் எதிரில் ருக்கு, குடத்தைத் தாங்கி வருவதைக் கண்டான் ரங்கநாதன்.

தூரத்தில் அவள் வரும்போது அவள் ருக்குதானு என்றே தெரிந்துகொள்ள முடியவில்லை, அவனுல். கொஞ்சம் கிட்ட வந்துகொண் டிருந்தபோது அவள்தான் ருக்கு என்பது தெரிந்துவிட்டது அவனுக்கு. அவள் சாயலினின்றும் நடையி லிருந்தும் அவளைக் கண்டுபிடித்தான் என்று சொல்ல முடியாது. தெருவாசலில் வீட்டுக்கு வீடு நின்றிருந்தவர்கள் பேசிய பரிகாச வார்த்தைகளினின்றுதான் எதிரே வருகிறவள் ருக்குவைத் தவிர வேறு யாரும் அல்லவென்று நிச்சயித்துக் கொண்டான்.

அவளை நன்ருகப் பார்க்கக்கூடிய தூரத்தில், அவளை உற்றுப்பார்க்க அவனுல் முடியவில்லை. ஊராரின் பரிகாசப் பேச்சுக்கள் அவன் கண்களை வேறு புறம் திருப்பின. ஒரு சமயம் அப்படிப் பார்த்தபோதும், அவளது கருவிழிகள்—கல்யாணத்துக்குமுன் முதல் முதலாக அவளைக் கண்டபோது அவளிடம் இருந்த அதே கருவிழிகள்—எங்கே போய்விட்டன? என்று ஒரு கேள்வி அவன் உள்ளத்தில் எழுந்தது.

அதற்குப் பதிலும் அவன் உள்ளமே உரைத்துக் கொண்டது: ‘நீ சரியாகப் பார்க்கவில்லை; கூச்சம் உன் பார்வையில் குறுக்கிட்டது. அந்தக் கண்கள் அங்கேயே, அதே இடத்திலேயே இருக்கின்றன’ என்று.

அந்தக் கண்களை மறுபடியும் பார்க்கப் போகிருேம், அந்தக் கருவிழிகளின் சொந்தக்காரியைக் காணப் போகிருேம் என்கிற உணர்ச்சி கீதத்தைத்தான், மாடிப் படிகளில் ஒலி செய்து வரும் மெட்டிகள், அவன் இருதய வீணையிலிருந்து எழுப்பி, அந்த இசையுடன் லயிக்கச் செய்தன. இருதய வீணையின் இசையும் மெட்டிகளின் லயமும் நினைவுக் கீதங்களாகப் பரிணமித்து அவனை மயக்கின.

அந்த மயக்கம் தெளியும் தருணம் வந்தது. அந்த மெட்டிகளின் ஓசை நின்றது. அவள் காபியும் கையுமாக எதிரே நின்ருள்.

ரங்கநாதன் உடல் புளகாங்கிதம் அடைந்தது. எதிரே நின்ற ருக்குவை ஒருமுறை ஆர்வம் நிறைந்த கண்களால் பார்த்தான். அவனையும் அறியாமல் அவனுக்கே மிகவும் கூச்சமாயிருந்தது. “ருக்கு!” என்று மனத்துக்குள்ளேயே

ஓர் இனிய குரல் ஆசையுடன் வரவேற்றது அவளை. ஆனல் அந்தக் குரல் வெளிக்கிளம்பி ருக்குவின் செவிகளில் விழும்படி யான சுருதியை எட்டவில்லை.

ருக்கு, காபித் தம்ளரும் கையுமாக அவன் எதிரே வந்து விட்டபின், சட்டென்று ஓர் அடி பின்வாங்கிக்கொண்டாள். அவள் முகம் குபீரென்று வியர்த்தது. அவள் கவலை தோய்ந்த கண்கள், இமை யோரத்தில் ஜொலித்த வியர்வை முத்துக் களுடன் கூடிப் பார்ப்பதற்கு லாவண்யமாக இருந்தன.

ரங்கநாதன் கூச்சத்தைச் சமாளித்துக்கொண்டு அவளை மறுபடியும் பார்த்தான். அவளது சுந்தர வடிவம் அவனுக்கு எல்லையற்ற ஆனந்தத்தையும் பெருமையையும் அளித்தது. அவள் தரித்திருந்த ஆகாச நீலப் புடைவையும் ரத்தச்சிவப்பு ரவிக்கையும், அஸ்தமன சமயத்தில் சோர்ந்த உள்ளத்திலே இன்பக் கனவுகளை யெழுப்பும் செக்கர் வானத்தையும், அதை யொட்டி அகண்டாகாரமாக வியாபித்திருக்கும் பரிசுத்தமான நீல வானத்தையும் நினைப்பூட்டின. ஆனல் அவளது கரு விழிகள் அப்படிக் கலங்கியிருப்பானேன்? பத்துநாள் இடை விடாமல் ஜுரம் அடித்தால் எப்படிக் கண் இடுங்கிக் கலங்கி யிருக்குமோ அப்படி இருக்கிறதே அவள் பார்வை! 'அவள் உடம்புக்கு என்னவோ?' என்றுகூட நினைத்தான்.

"ருக்கு!" என்று அடுத்த விநாடியே அவன் பரிவுடன் அழைத்தான், கூச்சத்தை விட்டு.

ருக்குவுக்கு மயிர்க் கூச்சல் எடுத்தது. அவனை ஒருமுறை பார்த்தாள். அடுத்த விநாடியே அவள் கைகளில் தாங்கி யிருந்த காபித் தம்ளர், ரங்கநாதனுக்கு எதிரிலிருந்த வட்ட மேஜைக்கு வந்து சேர்ந்தது. ருக்கு உடனே கதவின் பக்கம் கண்களைத் திருப்பினுள். ரங்கநாதன் அவள் பேச வெட்கப் படுகிருள் என்று நினைத்தான். 'சகஜந்தானே?' என்று அவன் மனம் சமாதானப்படுத்திக்கொண்டது.

"ருக்கு, பேசமாட்டாய்போல் இருக்கிறதே; உடம்புக்கு என்ன? ஒருமாதிரியாய் இருக்கிருயே" என்றபோது ரங்கநாதனுக்குக் குளிர் விட்டுப்போயிற்று. புருஷன் அல்லவா?

அவன் கேட்ட கேள்விக்கு ருக்கு பதில் சொல்லவில்லை. தரையை நோக்கிக் கொண்டிருந்த அவள் கண்கள், ஜன்னல் பக்கமாகத் திரும்பின. மறுபடியும் அவன் முகத்தை ஒருதரம் பார்த்துவிட்டுக் கீழே தரையை நோக்கின. 'காபி ஆறிப் போகிறது!' என்கிற வார்த்தைகள் அவள் வாயிலிருந்து வந்ததே பிரம்மப் பிரயத்தனம் ஆகிவிட்டது.

தேன் போன்ற வார்த்தை. ஒரே ஒரு வாக்கியந்தான், ஒரு சொட்டுத் தேன்போல; ஒரு சொட்டாயிருந்தாலும் தேன் தேன்தானே? அதன் ருசி எங்கே போய்விடும்? ரங்கநாதன் இன்பக் கேணியில் திளைத்துப்போனான்.

"ருக்கு, காபி இருக்கட்டும். உன் உடம்புக்கு என்ன?"

"ஒன்றும் இல்லை. காபி ஆறிப்போனால் நன்றாயிராது."

"உன் இஷ்டப்படி, இதோ சாப்பிட்டு விடுகிறேன்." ரங்கநாதன் 'மளுக் மளுக்'கென்று காபியைக் குடித்து விட்டுத் தம்ளரை மேஜைமேல் வைத்தான்.

"இப்போ சொல்லு. நிஜமாய் ஒன்றும் இல்லை?"

இல்லையென்று ருக்கு தலையை அசைத்தாள். அவள் கை, காபித் தம்ளரை எடுத்துக்கொண்டது. அடுத்த க்ஷணமே அந்த அறையை விட்டுப் போகக் கிளம்பினாள்.

"ருக்கு, என்ன அவசரம்?" என்று சொல்லிக் கொண்டே எழுந்தான் ரங்கநாதன்.

ருக்கு அதற்குள் கதவைத் தாண்டி வராந்தாவுக்குப் போய்விட்டாள். ரங்கநாதன் கதவண்டை வந்து இரு கைகளையும் விரித்து இருபக்கத்திலும் உள்ள கதவுகளைப் பிடித்துக்கொண்டு நின்றான். வராந்தாவின் கோடியில் மாடிப் படிகளில் ருக்கு இறங்கிக்கொண் டிருந்தாள்.

ரங்கநாதன் முகத்தில் ஒரு சின்ன ஏமாற்றம். இதழ்க் கடையிலே ஒரு வறட்டுப் புன்னகை. 'என்ன வெட்கமோ! விழுங்கிவிடவா போகிறேன்?' என்று மனத்துக்குள்ளேயே ஒரு கேள்வி. இருதயத்திலிருந்து ஒரு பெருமூச்சு.

இதற்கிடையே மாடிப் படிகளில் 'கிணிக் கிணிக்' என்று ஒலித்துச் சென்ற ஓசையும் ஓய்ந்தது.

8

# பெண் மனம்

"ஏண்டீ!" என்று உரக்கக் கூவி அழைத்த வண்ணம் வந்து சேர்ந்தார் தேவராஜ ஐயங்கார். செங்கமலம் அடுப்பங் கரையில் இருந்தாள். அவர் குரலைக் கேட்டதும் அவளுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம்போல் இருந்தது அவளுக்கு. 'மாடியிலே மாப்பிள்ளை வந்து உட்கார்ந்திருக்கிறார். என்ன வேண்டி யிருக்கு இந்தப் பிராமணனுக்கு, ஏண்டியும் தோண்டியும்? வாசலிலே இருந்துகொண்டே என்ன கத்தலோ? உள்ளே வந்து ஆகக்கூடாதோ அந்தக் காரியம்?' என்று முணு முணுத்தாள், அவள் தனக்குத்தானே.

ஆனால் அவருக்கென்ன? "ஏண்டி, எங்கே இருக் கிறாய்? இங்கே வா இப்படி" என்றார் கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டே.

தாம்பாளத்தில் காய்ச்சிக் கொட்டியிருந்த மைசூர்ப்பாகு இறுகிக்கொண் டிருந்தது சமையலறையில். அதை ஒரு பேனாக் கத்தியால் அறுத்து, வில்லை போட்டுக்கொண் டிருந் தாள் செங்கமலம். தேவராஜ ஐயங்கார் கூப்பாடு போடவே அவளுக்குப் பொறுக்க முடியவில்லை. அப்படியே கத்தியும் கையுமாக எழுந்து சரசரவென்று கூடத்துக்கு வந்தாள்.

அவளைப் பார்த்தவுடன் தேவராஜ ஐயங்காருக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்துவிட்டது. "ஹே, சாமுண்டீசுவரி! மஹாமாயி! பரதேவதே! அடியேன் தங்களுக்கு எந்தவிதமான குற்றமும் செய்ததாக என் புத்திக்குத் தெரியவில்லையே! ஏன் இத்தனை கோபம், இவ்வேழை மீது? தலைவிரிகோலமாக நெற்றியிலிருந்து ரத்தம் சிதற, கத்தியேந்திய கையுடன் என் எதிரே பிரசன்னமானது கண்டு நடுங்குகிறேன்! தாயே,

என்ன அபசாரம் நேர்ந்துவிட்டது ?'' என்று வந்த சிரிப்பையெல்லாம் அடக்கிக்கொண்டு அதி விநயத்துடன் பயபக்தியோடு பேசுவதுபோல வெகு நன்ருக நடித்தார் தேவராஜ ஐயங்கார்.

அந்த நடிப்பாவது அடக்கமான குரலில் இருந்ததா? இல்லே. ஒரு நாடக மேடையில் நடிகன், ஜனங்கள் யாவருக்கும் கேட்க வேண்டுமே என்று எவ்வளவு உரக்கப் பேசுவாஞே அந்த மாதிரி இருந்தது அவர் குரல். கொல்லேப்புறத்தில் இருக்கும் கிணற்றங்கரையில் காப்பிப் பாத்திரங்களேக் கழுவிக்கொண் டிருந்த ருக்குவுக்கும், மாடி அறையில் வாசற்படியைப் பிடித்துக்கொண்டு நின்றிருந்த ரங்கநாதனுக்குங்கூட நன்ருகக் கேட்டது என்ருல், எவ்வளவு கணீரென்று அவர் பேசி நடித்திருக்க வேண்டும்!

ருக்குவுக்கு, வெளியில் போயிருந்த தகப்பனர் வந்துவிட்டார் என்று தெரிந்துவிட்டது. அதற்குமேல் அவர் பேசிய வார்த்தைகளேக் கவனியாதபடி அவள் உள்ளத்தில் வேறு பல சிந்தனேகள் தோன்றி மறைந்துகொண் டிருந்தன. ரங்கநாதனும் தன் மாமனர் வந்துவிட்டதை அறிந்தான். எனவே அவன் சிந்தனேயும் கலேந்தது. அவர் பேசும் வார்த்தைகள் அவன் காதில் விழலாயின. வராந்தாவில் வந்து உலாவத் தொடங்கினுன். கீழே நடைபெறும் சம்பாஷணே அவன் காதில் விழுந்ததும் விழாததுமாக இருந்தது. முக்கியமாக, தேவராஜ ஐயங்கார் பேச்சுக்கள் அவனுக்கு நன்ருகக் கேட்டன. ஆனுல் செங்கமலத்தின் பேச்சுக் கேட்கவில்லே.

அவர் வாயில் ஒரு துணிப்பந்தை அடைத்துவிடலாம்போல இருந்தது செங்கமலத்துக்கு. "போருமே! மாப்பிள்ளே வந்து மாடியிலே உக்காந்திருக்கார். இப்படியெல்லாம் கூச்சல் போடுங்கோ நீங்க. அவர் என்ன நினேச்சுக்குவார்?'' என்று குரல் அதிகமாக வெளியில் கேளாதபடி கண்டிக்கும் தோரணேயில் பேசினுள் செங்கமலம்.

"ஆமாம். அவர் நினேத்துக்கொள்ளுகிறதாவது? உன் சுயரூபத்தை அவர் இன்னும் பார்க்கவில்லேபோல் இருக்கிறது.

பார்த்திருந்தால் இத்தனே நாழி மாடியில் உட்கார்ந்திருக்கக் கூட மாட்டார். வந்த வழியே கம்பி நீட்டிவிட்டிருப்பார்...'' என்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே செங்கமலம் முகத்தைச் சுளித்துக்கொண்டு, ''ராம, ராமா! எந்தக் கோவிலிலே போய் முட்டிக்கறது? வேளே, சமயம் ஒண்ணும் கிடையாது. என்ன பரிகாசமோ?'' என்று முணுமுணுத்தபடி 'ஜிவ்'வென்று திரும்பிப் போய்விட்டாள்.

ஆனல் தேவராஜ ஐயங்கார் அவ்வளவு லேசில் விட்டு விடுகிருரா? அவள் பின்னலேயே சென்ருர், சமைய லறைக்குள். ''ஏண்டி, அது இருக்கட்டும். கொல்லேப் புறத்திலே போய்ப் பார்த்தாயா?'' என்று ஒரு புதிர் போட்டார்.

''ஆமாம். இப்ப ரொம்ப முக்கியம். கொல்லேப்புறத்திலே என்ன புதையலேக் கொண்டுவந்து வச்சிருக்கேள்? மாடியிலே மாப்பிள்ளே வந்திருக்காரே. அவரைப் போய் எப்ப வந்தே, என்ன, ஏதுன்னு ஒரு வார்த்தை விசாரிக்க வேண்டாம்! கொல்லேப்புறத்திலே, கோழி வந்திருக்கு; கழனிக்காட்டிலே காக்காய் வந்திருக்குன்னு வாய்க்கு வந்ததை யெல்லாம் பேசிண் டிருங்கோ'' என்று பின்னும் சற்றுக் கண்டிப்புடன் பேசிஞள் செங்கமலம்.

''இல்லேடி, ரொம்பக் கோபித்துக்கொள்ளுகிருயே. மாடியிலே மாப்பிள்ளே வந்திருக்கிருர். நான் அவரைப் போய்ப் பார்க்கவில்லேயென்று உனக்குப் பிரமாதமாகக் கோபம் வருகிறதே; கொல்லேப்புறத்திலே மாடு வந்திருக் கிறது. அதைப் போய் நீ பார்க்கவேண்டாமா என்றுதான் சொன்னேன்.''

''தெரியுமே எனக்கு; இப்படி ஏதாவது நீங்கள் பண்ணி வைக்கப் போறேகன்னு நானும் பயந்துண்டுதான் இருந் தேன். அதேமாதிரி பண்ணி வச்சேகளாக்கும், காலம்பற எழுந்ததும். மாப்பிள்ளே ஒத்தர் வர இருக்கிறபோது, வீட்டிலேகூட இருக்காமே, அந்தத் தையூரான் பின்னலே என்ன வேலே இருக்கப்போறதுன்னு நானுந்தான் நாலு நாழியா யோசனே பண்ணிப் பார்த்தேன். இப்பன்னு தெரியறது? ஆமாம் இப்ப மாட்டுக்கு என்ன அவசரம் வந்து

விட்டது? அந்த ரூபாயை எடுத்து மாட்டுக்குக் கொடுத் துட்டகளா என்ன? இப்படி ஒண்ணு கிடக்க ஒண்ணு பண்ணி வைக்கிறகளே! மாப்பிள்ளை வந்திருக்காரே, நாளைக்கே ஒரு நல்ல நாளாகப் பார்த்து நாளைக் குறைக்காமே ஏதாவது செய்யணுமே. இருக்கிற பணத்தை எடுத்து மாடு வாங்கி வச்சா——"

"சரிதாண்டி பெரிய லெக்சர் பண்ண வந்துவிட்டாய். குத்தகைக்காரன் இந்த வருஷம் மண்ணை வெட்டி அடித்து விட்டான். அக்கம் பக்கம் எல்லாம் சிரிப்பாய்ச் சிரிக்கிறார் கள். பத்து வண்டி நெல் 'ஜாம் ஜாம்' என்று வரவேண்டிய நிலத்திலே, மூணு வண்டி பெயரவில்லை. ஊர் முழுவதும், 'குத்தகைக்காரன் என்னை ஏமாற்றி வாயிலே போட்டுக் கொண்டு விட்டான்' என்று புகார் சொல்லுகிறார்கள். அடுத்த பஸலிக்காவது சொந்தப் பயிர் வைத்தால்தான் நாலு நெல் வரும்; ஊரிலே மானத்தோடும் பிழைக்கலாம்—"

"இந்தச் சமயத்திலேதான் உங்களுக்குத் திடீர்னு ஞானோதயம் உண்டாச்சுப்போல் இருக்கு ஆமாம். மாப்பிள்ளை வந்து பொண்ணைக் கூட்டிக் கொண்டு போக ணும்னு சொல்றபோது, மாட்டை வாங்கிக் கொல்லையிலே கட்டிவிட்டா, பணத்துக்கு எங்கே போறது?"

"ஆமாண்டீ, பணத்தை மாப்பிள்ளைக்காகக் கொடுத் தால் என்ன, மாட்டுக்காகக் கொடுத்தால் என்ன? லோகத் திலே, மாட்டுக் கிழமும் மாப்பிள்ளைக் கிழமும் கிடையாது தெரியுமா? மாடு ரெண்டும் 'இளசு'. நாலுபல் ஒன்று, ஆறு பல் ஒன்று; ஜாதித் தெற்கத்திக் கட்டைகள். வேலையிலே பழக்கிவிட்டால் ராஜாதான். நாளைக்கே போட்ட பணத்தை எடுத்துவிடும். கிழமாய்ப் போனாலும் வேலைக்குச் சளைக்காது. பணம் வந்ததும், இன்றைக்குச் செய்வதை நாளைக்குச் செய் தால் போச்சு. திரும்பத் திரும்ப வேறே யாருக்குச் செய்து விடப் போகிறோம்? போய்த்தான் பாரேன் கொல்லையிலே" என்று சொல்லிக்கொண்டே சமையலறையை விட்டு வெளியேறி மாடிக்குப் போனார் தேவராஜ ஐயங்கார்.

'இந்த மாதிரியான சமயத்திலே இப்படியெல்லாம் காரியத்தைப் பண்ணி வச்சா ஊர் சிரிக்காதா? அதைச்

சொன்ன அவரைப் பார்த்து நான் சிரிக்கிறேன்னு ஏதாவது சொல்லி வைப்பர். என்ன பண்ணித் தொலைக்கிறது; என் தலைவிதி!' என்று மனத்துக்குள்ளேயே அங்கலாய்த்துக் கொண்டு இரண்டு சொட்டுக் கண்ணீரையும் விட்டுப் புடைவைத் தலைப்பில் ஒரு நுனியை நனைத்துக்கொண்டு தன் காரியத்தைக் கவனிக்கலானாள் செங்கமலம்.

ருக்கு, கிணற்றங்கரையிலிருந்து காப்பிப் பாத்திரங்களுடன் திரும்பினாள். வண்டிக்காரத் துரையப்பனும் தையூரானும் இரண்டு புது மாடுகளை ஓட்டிக்கொண்டு வந்து கொல்லையிலிருந்த தொழுவத்தில் கட்டியதை அவள் கண்கள் கவனித்தன; ஆனால் மனம் கவனிக்கவில்லை. சமையலறைக்கு முன் அறையிலிருந்த ஒரு மேடையின்மேல் பாத்திரங்களை வைத்துவிட்டு ருக்கு, கூடத்துக்குப் போய் ஊஞ்சலில் உட்கார்ந்தாள்.

ஊஞ்சலில் ரங்கநாதன் கோட் இருந்தது. அதை எடுத்தாள். அவள் கைகள் நடுங்கின. கண்களில் கண்ணீர் நிரம்பிற்று. மனத்துக்குள்ளேயே, 'இந்தக் கோட்டைக் கூடத் தீண்டக் கூடாதா?' என்று ஒரு கேள்வி எழுந்தது. சட்டென்று அதை ஊஞ்சலிலேயே வைத்தாள். ஊஞ்சலை விட்டு இறங்கினாள். கூடத்து அறைக்குள் போனாள். சுவரிலிருந்த கோட் ஸ்டாண்டு ஒன்று அவள் கண்ணில் பட்டது. உடனே திரும்பிக் கூடத்துக்கு வந்து ஊஞ்சலிலிருந்த கோட்டை எடுத்துக்கொண்டுபோய் அந்த ஸ்டாண்டில் தொங்கவிட்டாள். அப்போது அவள் முகம் நிமிர்ந்தது. கோட் ஸ்டாண்டுக்கு மேலே ஒரு முழம் உயரத்தில் சுவர் மத்தியிலிருந்த ஒரு படத்தைக் கண்டாள் அவள். அந்தப் படத்தைப் பிரதிதினமும் எத்தனையோ தடவை பார்த்திருக்கிறாள் அவள். ஆனால் இப்போது அதில் என்ன விசேஷம் தெரிகிறது? அப்படி வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டே நின்றுவிட்டாளே!

படத்தில் ஒரு பர்ணசாலையின் காட்சி. பர்ணசாலையின் வாயிலில் நிற்கிறாள் சீதா பிராட்டி. அவள் பக்கத்தில் அன்பே உருவாக நிற்கிறார் ஸ்ரீ ராமபிரான். சற்றுத் தூரத்தில் இளைய பெருமாள். சீதையின் கையும் கண்ணும் திரும்பி நிற்கும்

திக்கில் இருக்கிறது அந்த மாயமான். ஆம். மாரீசன்தான். அதைப் பிடித்துத் தரவேண்டுமென்று கேட்கிறுள் பிராட்டி, தன் பெருமானை. இந்தக் காட்சியைக் கண்டுதான் நின்று போனுள் ருக்கு.

அவள் விழிகள் படத்தில், முக்கியமாக மான் நிற்கும் இடத்தைத்தான் கவனித்தன. சற்று நேரம் மானையே பார்த்தவண்ணம் இருந்தாள். பிறகு அவள் பார்வை சீதையும் ராமரும் இருந்த பக்கம் திரும்பின. உடனே அவளுக்கு என்ன தோன்றியதோ! சரேலென்று அந்த இடத்தை விட்டுக் கூடத்துக்கு வந்தாள். ஊஞ்சலில் குப்புறப் படுத்தாள். அவள் இருதயம் விம்மி விம்மித் தவித்தது ஊஞ்சலுக்குத் தெரியும்; வேறு யாருக்குத் தெரியும்? நாட்டைத் துறந்து, நாயகனைப் பின்பற்றிக் காட்டுக்கு வந்துகூட ஜானகியின் கர்மம் தொலைந்ததா? அவளுடைய மெல்லிய பாதங்களின் கீழே ரத்ன கம்பளம் விரித்திருக்க வேண்டும். ஆனல் காட்டு முள்ளும் கற்களுமல்லவோ இருந்தன! செம்பஞ்சுக் குழம்பு பூசி அழகு படுத்த வேண்டிய பாதங்கள், செம்புழுதி பூசியிருந்தன! அரச வாழ்வு இல்லாவிடினும், அரணியத்தில் பர்ணசாலையிலேனும் பதியுடன் கூடி வாழும் பெருவாழ்வே போதுமென்று நினைத்தாள் அந்தப் பிராட்டி. ஆனல் அந்த மாயமான் வந்து சேர்ந்ததே அவள் வாழ்வைக் கெடுக்க! இந்த எண்ணமேதான் உண்டாயிற்று ருக்குவுக்கு. மானைக் கண்டு மயங்கித் தன் பூமானை அனுப்பினுள் சீதை. மறுபடியும் அவரைக் காண்பதற்குமுன், அவரிடம் திரும்பச் சேருவதற்குமுன் எத்தனை துன்பங்கள்? இதையெல்லாம் எண்ண எண்ண ருக்குவின் மனம் புழுவாய்த் துடித்தது.

அந்தத் தேவியின் முன்னம் மாய மானுக மாரீசன் தோன்றி அவளை நாயகனிடமிருந்து பிரித்ததுபோல, தன் முன்னர் ஒரு சந்நியாசி தோன்றவேண்டுமா என்று நினைத்தாள் ருக்கு. சீதையாவது ஸ்ரீ ராமபிரானுடன் காட்டிலோ மேட்டிலோ இல்லற வாழ்வைக் கண்டாள். ஆனல் ருக்குவுக்குத் தன் ராமனைச் சரியாய்க்கூடத் தெரியாதே! புருஷனை அறிந்துகொள்வதற்குள் பிரிவா? இது தாங்கவே முடியவில்லை ருக்குவுக்கு.

சீ! அந்த மாரீசன் சூழ்ச்சியைப்போல இதுவும் ஒரு சூழ்ச்சியாயிருக்குமோ என்று எண்ணியது அவள் அபலை நெஞ்சம்; ஆனால் இப்படிச் சூழ்ச்சி செய்ய, முகமறியாத சந்நியாசி ஒருவருக்கு என்ன வஞ்சம் அவள்மீது? இருப்பினும், 'தெருத் திரியும் சந்நியாசி ஒருவர் சொன்னதை வைத்துக்கொண்டு இப்படி மனத்தைப் புண்படுத்திக் கொள்வதா?' என்றொரு கேள்வி. சாதாரண காலமாயிருந்தால் இந்த மாதிரியான பூச்சாண்டிகளையெல்லாம் கண்டு துளிகூடக் கலங்கமாட்டாள் ருக்கு. வேறு யாராவது அவளிடம் வந்து தனக்கு இத்தகைய சம்பவம் ஒன்று ஏற்பட்டது என்று சொன்னாலும் கெக்கலி கொட்டி நகைப்பாள் அவள். ஆனால், வாழ்வின் மொட்டு மலரும் தருணத்தில், அது மலரவே வழியின்றி மொட்டாகவே கருகிவிழச் செய்ய ஒரு சந்நியாசி வந்து தோன்ற வேண்டுமா? 'ச்சூ, இதிலெல்லாம் என்ன இருக்கிறது? இந்தப் பேச்சை நம்பித் தானாகவே துக்கத்தைத் தேடிக்கொள்வதா?' என்று தேறுதலடைய முடியவில்லையே அவளால். எத்தனையோ தடவை முயன்றுதான் பார்த்தாள். இன்னமும் முயன்று கொண்டுதான் இருக்கிறாள். ஆனால் அவள் மன உறுதி, தைரியம், துணிகரம் இவற்றுக்கெல்லாம் மேலாக எழுந்து நிற்கிறதே அவள் பெண்மை! அந்தப் பெண்மைதான் அவளைச் சித்திரவதை செய்கிறது. 'சந்நியாசியின் எச்சரிக்கையை மீறித் துணிச்சலாக இருந்துவிடுகிறேம். நாளைக்கே ஏதாவது ஆபத்து வந்தால் அவருக்கு?...' அடிக்கடி இந்த எண்ணமேதான் அவள் மனத்தில் தோன்றி அவளை நடுங்கச் செய்கிறது. இந்த எண்ணம் உண்டாகும் போதெல்லாம், கூடவே, 'வாழ்வு நாளைக்கே வரும். மாங்கல்யத்தைக் காப்பாற்றிக்கொள். அதுதான் ஸ்திரீகளுக்குப் பிரதானம்' என்று சந்நியாசி கூறிய பொன்மொழிகள் அவளுக்கு ஞாபகம் வருகின்றன. அவள் என்ன செய்வாள்? சந்நியாசியின் கட்டளையை மீற முடியுமா அவளால்? எட்டு வகுப்புப் படித்திருக்கிறாள். மனத்தில் தைரியமும், விஷயங்களை ஓரளவுக்கு ஆராய்ந்தறியும் திறமையும் மூட நம்பிக்கைகள், சம்பிரதாயங்கள் இவற்றையெல்லாம் உடைத்

தெறியக்கூடிய வாத சாதகமும் இருக்கின்றன அவளுக்கு. இருந்தாலும் பெண்! பெண்மையின் இளகிய நெஞ்சம் படைத்தவள்தானே அவள்! அந்தப் பெண்மையுள்ளத்திலே அவளது கல்வி, அறிவு, ஆலோசனைத் திறமை, வாதவன்மை, மன உறுதி எல்லாம் மெழுகில் பதிய வைத்த ரத்தினங்கள் போலத்தான் இருந்தன. மெழுகின் பக்கத்தில் கொஞ்சம் அனலைக் காட்டினால் போதும். அந்த ரத்தினக் கற்கள் 'பொலபொல' வென்று உதிர வேண்டியதுதானே! அதே மாதிரிதான் ருக்குவுக்குப் பயன்பட்டன அவள் கல்வி, அறிவு, உறுதி எல்லாம் அந்தச் சமயத்தில்.

ஊஞ்சலில் குப்புறப் படுத்தபடி ருக்கு ஆயிரம் யோசனை செய்து தவித்தாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி ஊஞ்சலை நனைத்ததுகூட அவளுக்குத் தெரியாது. அந்தப் படம் வேறு அவள் துயரத்தைக் கிளறி விட்டது. சற்றுமுன் தன் தாயின் நிர்ப்பந்தத்தின் பேரில் தான் அந்த ஆகாச நீலப் புடைவையைக் கட்டிக்கொண்டு உடல் நடுங்க, உள்ளம் பதைக்க, காப்பியும் கையுமாக ரங்கநாதனிடம் சென்றாள். அங்கே ஒரு விநாடிகூட அவளால் நிற்க முடியவில்லை. அவன் முகத்தையும் பார்க்க அவளுக்குத் தைரியம் வரவில்லை. ஏதோ அவன் ஒன்று கேட்க, இவள் ஒன்று பதில் சொன்னாள்; இறங்கி வந்தாள். அவ்வளவுதான்! அதெல்லாம் ஒரு யந்திரம், விசையால் இயங்குவது போல நடந்த காரியம்.

(சந்நியாசி எதிர்ப்படுமுன், 'அவர் வரப்போகிறார்!' என்கிற இன்ப நினைவின் குளிர்ந்த ஊற்றுப் பெருக்கிலே ஊறி மயங்கி இன்னதென்று உணராது, தலைகால் தெரியாமல் கூத்தடித்த ருக்குவுக்கு, சந்நியாசியைச் சந்தித்தபின், 'அவர் வந்துவிட்டார்!' என்கிற பயங்கரமான உண்மை தீக்குளித்தது போன்ற தகிப்பை உண்டாக்கிவிட்டது.) அவள் உடலின் உஷ்ணம் பட்டு ஊஞ்சலும் கொதித்தது. அவள் உள்ளக் கொதிப்பையும் உடல் கொதிப்பையும் அந்த ஊஞ்சல்தான் ஏற்றுக்கொண்டது அப்போது. ஆனால் 'அழாதே' என்று

வது ஆறுதல் மொழி சொல்லத் தெரிந்ததா அந்த ஊமை ஊஞ்சலுக்கு ?

அந்த ஊமை ஊஞ்சலுக்குத்தான் தெரியவில்லை. அப்போதுதானே மாடியிலிருந்து இறங்கி மாப்பிள்ளையுடன் வருகிறுர், தேவராஜ ஐயங்கார். அவராவது ருக்குவைப் பார்த்து, 'ஏண்டி யம்மா அழுகிருய் ?' என்று ஒரு வார்த்தை சொன்னுரா? உம். அவருக்கென்ன தெரியும், ருக்குவின் மன வேதனை யெல்லாம்! அவர் உண்டு, அவர் மாடு உண்டு; இப்போதுகூட, அவர் மாப்பிள்ளையும் உண்டு என்று வருகிறுர் பாவம்!

மாடிப் படியிறங்கித் தாழ்வாரத்தில் நடந்துகொண்டே, "ரொம்ப நல்ல மாடு, மாப்பிள்ளை. அப்படிக் கொல்லைப் புறத்தில் போய்த்தான் பாருங்களேன். இன்னும் ஒரு மாசம் போனுல் இந்த விலைக்குக் கிடைக்காது" என்று சொல்லி வந்தவர், கூடத்து ஊஞ்சலில் குப்புறப் படுத்திருந்த ருக்குவைப் பார்த்து, "அம்மாடி, மாப்பிள்ளை குளிக்க வந்திருக்கிறுர் பாரு; போய்க் கொஞ்சம் வெந்நீர் விளாவி வை" என்று கூறினுர்.

இந்தக் குரல் ருக்குவின் சிந்தனையைக் கலைத்தது. சட்டென்று எழுந்தாள். அப்போது கூடத்தைத் தாண்டிச் சென்றுவிட்டார், தேவராஜ ஐயங்கார். அவர் அவளைக் கவனிக்கவில்லை. பின்னுல் வந்த ரங்கநாதன்தான் அவளைக் கவனித்தான். அவன் முகத்தில் பூத்திருந்த புன்னகை சட்டென்று மறைந்தது. அவள் முகமும் கன்னங்களும் வீங்கியிருப்பதுபோல் தோன்றின. நெருப்புக் குழம்பை ஊற்றினுல் எப்படி இருக்குமோ அப்படி இருந்தன அவள் கண்கள் இரண்டும். அவள் கேசம் கலைந்திருந்தது. சற்று முன் அவள் நெற்றியை அழகு படுத்திக்கொண்டிருந்த குங்குமப் பொட்டு, இப்போது வியர்வை வெள்ளத்தில் தத்தளிப்பதைக் கண்டான். அவன் உள்ளம் பதை பதைத்தது. அப்படியே நின்றுவிட்டான் ஒரு விநாடி.

'ருக்கு!' என்று கூப்பிட நினைத்தானே என்னவோ? அதற்குள் அவள் கூடத்தை விட்டு உள்ளே போய்விட்டாள். ரங்கநாதன் ஊஞ்சலிடம் போனுன். சங்கிலியைப் பிடித்த,

வண்ணம் எதிரே அவள் நுழைந்த அறைப்பக்கமாகப் பார்த் தான். ஒரு மூலையில் நின்றுகொண்டு அவள் தன் முகத்தைத் துடைத்துக்கொண் டிருந்தாள். அவன் உதடுகள் பிதுங்கி மடிந்தன ஒரு தரம். அவன் கண்கள் ஊஞ்சலைப் பார்த்தன. அவள் கண்ணீரால் நனைந்து ஈரமாயிருந்த இடம் அவன் கண்களில் பட்டது 'ஏன் அழுகிருள் ருக்கு?' என்று அவன் மனத்துக்குள்ளேயே ஒரு கேள்வி உண்டாயிற்று. பதில் தெரியவில்லை. 'யாராவது ஏதாவது சொன்னுர்களா? நான் தான் பேசத் தெரியாமல் அவள் மனம் புண்படும்படி ஏதாவது சொல்லிவிட்டேனு? அப்படி ஒன்றும் சொல்லவில்லையே?' என்று நினைத்தான் அவன்.

தேவராஜ ஐயங்கார் கூடத்தைவிட்டுக் கொல்லைப் புறத் துக்குப் போய்விட்டார். செங்கமலத்துக்கோ சமைய லறையை விட்டு நகரமுடியாது. கூடத்தில் ரங்கநாதனைத் தவிர யாருமே இல்லை. அவன் சுற்று முற்றும் பார்த்தான். ருக்குவிடம் பேசவேண்டும்போல் இருந்தது அவனுக்கு. அவள் வருத்தத்துக்கு என்ன காரணம் என்று அறிய விரும் பினுன். கூடத்தை விட்டு அவளிருந்த அறைக்குள் போனுன்.

"ருக்கு!" என்ருன்.

முகத்தைத் துடைத்துக்கொண்டு ருக்கு சட்டென்று திரும்பினுள். அவள் கண்கள் அவனை நோக்கின.

"ஏன் அழுகிருய்? யார் என்ன சொன்னுர்கள் உன்னை?"

ருக்குவுக்குப் பதில் பேசத் துணிவில்லை. அங்கிருந்து போய்விட முயன்ருள்.

"ருக்கு, என்னிடம் சொல்ல இஷ்டமில்லையா? ஓஹோ? உன் அப்பா சொன்னுரே, அந்த மாடுகளைப் பற்றி. அது வாங்கினது உன் அம்மாவுக்குப் பிடிக்கவில்லையென்று ஏதேதோ சொல்லிக்கொண் டிருந்தார். அதை அப்போது நான் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. இப்போதல்லவா தெரிகிறது? அந்த விஷயம் உனக்கும் பிடிக்கவில்லைபோல் இருக்கிறது. அதனுல்தான் அழுகிருயா? அந்தப் பணத் தைக்கொண்டு ஒரு நகையோ புடைவையோ வாங்கிக்கொள் ளலாமே என்று வருத்தம்போல் இருக்கிறது.. அட அசடே! இந்தச் சீர், வரிசை, நகை நட்டு எல்லாம் உன் அப்பா

செய்யாமற் போனுல் என்ன? உன் மதிப்புக் குறைந்து போகுமா எனக்கு? நான் இதனுல் ஏதாவது சொல்லப் போகி றேனே என்று அச்சமா? அதை நினைத்துக்கொண்டு அழுகி ருயா என்ன? உன் அப்பா இப்போது ஒன்றுமே செய்யாமற் போனுல்கூட, உன்னை இங்கே விட்டுவிட்டுப் போகப் போகிற தில்லை. தெரிந்ததா? அசடு!'' என்று மளமளவென்று உணர்ச்சி ததும்பும் குரலில் பேசினுன் ரங்கநாதன்.

தேவராஜ ஐயங்கார் அவனைப் பார்த்து க்ஷேமம் விசாரிக் கப் போனபோது, அவன் க்ஷேமத்தை விசாரிப்பதை விட்டு, தாம் மாடு வாங்கின விஷயத்தையும் அது தமது மனைவிக்குப் பிடிக்கவில்லை என்பதையும், ஸ்திரீகளுக்கு நகை, புடைவை இவற்றில் இருக்கும் ஆசை வேறு எதிலும் இல்லை என்பதை யும்—இப்படித் தம் போக்காகப் பல விஷயங்களை அவனிடம் சொல்லித் தீர்த்து அவன் காதைத் துளைத்துவிட்டார். ரங்க நாதனுக்கே அவர் பேச்சு ரஸிக்கவில்லை. எனவே அவனு கவே, 'குளிக்கவேண்டும்; ரெயிலில் வந்தது; உடம்பு கசகச வென்று இருக்கிறது' என்று சொல்லி அவர் பேச்சுக்குத் தடை விதித்த பிறகுதான், அவர் அவனைக் கூட்டிக்கொண்டு வந்தார். கீழே வந்ததும் ருக்கு அழுதுகொண் டிருப் பதைப் பார்த்த ரங்கநாதனுக்கு, ஒருகால் அவள் தகப்பனுர் அவளுக்கு நகை, புடைவை வாங்காமல் மாடு வாங்கினதுதான் வருத்தம் அளித்திருக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று.

"உன் அப்பா இப்போது ஒன்றுமே செய்யாமற் போனுல் கூட உன்னை விட்டுவிட்டுப் போகப் போகிறதில்லை. தெரிந்ததா?'' என்று அவன் உறுதியுடன் கூறிய வார்த்தை கள் அவள் நெஞ்சில் நடுக்கத்தை உண்டாக்கின. 'அவரு டன் இப்போது எப்படிப் போவது? ஒரு மண்டல காலம்— அந்த நாகதோஷம் தீரும்வரையில் போகக்கூடாதே' என்று கூறியது அவள் மனம். ஆனுல் அவள் வாய், 'நாழி யாச்சு, வெந்நீர் விளாவுகிறேன். குளிக்கலாம்' என்றது. அடுத்த விநாடியே ருக்கு அந்த இடத்தை விட்டுப் புறப்பட் டாள். அவளோடு ஸ்நான அறைக்குச் சென்றுன் ரங்க நாதன்.

## 9

### சாரதா

சாரதாவுக்குப் பொழுதே போகவில்லை. ருக்குவைப் பார்த்து மூன்று நாட்களுக்கு மேல் ஆகிவிட்டன. ருக்கு கூட இல்லாவிட்டால் வேதவரம்போன்ற கிராமத்திலே ஒரு நிமிஷம் தங்கமுடியுமா அவளால்? சொந்த ஊர்தான் அது. இருந் தாலும் மூன்றும் வகுப்பு முதல் 'மெட்றிகுலேஷன்' வரையில் பட்டணத்திலேயே படிப்பின் நிமித்தம் வசித்து வந்த சாரதா வுக்கு வேதவரத்தில் அவ்வளவு சுலபமாகப் பொழுது போகிறதா? படித்த பெண் என்பதற்காக அவளுக்குத் துளி கூடக் கர்வமோ போலி மினுக்குகளோ நாகரிக 'நடல'ங்களோ ஒன்றும் கிடையாது. குடத்தைத் தூக்கிக் கொண்டு குளத்துக்குப் போய்த் தண்ணீர் கொண்டுவந்தால் இடுப்புச் சுளுக்கிக்கொள்ளுமே என்றோ, அல்லது 'அதெல் லாம் யார் செய்கிற வேலை? நான்ஸென்ஸ்!' என்றோ அவள் ஒருபோதும் நினைத்ததில்லை. பள்ளிக்கூடத்தில் படிக்கும் போது ஒரு வித அலங்காரமும் பட்டிக்காட்டில் வசிக்கும் போது வேறு வகை அலங்காரமும் செய்துகொள்ளக்கூடிய பச்சோந்திக் குணமும் அவளுக்கு இல்லை. நாகரிகம் எது, அநாகரிகம் எது, லக்ஷணம் எது, அவலக்ஷணம் எது, அலங்காரம் எது, விகாரம் எது என்பன போன்ற பிரச்னை களில் அவளுக்குச் சில தீர்மானமான அபிப்பிராயங்கள் உண்டு. அதன்படி அவள் நடந்துகொள்வாளே யொழிய வெறும் வெளியலங்காரங்களிலும் படாடோபமான 'பாஷன்'களிலும் அவள், தன் மனத்தைச் செலுத்தவே மாட்டாள். இதனால் உடலழகு செய்துகொள்ளுவதில் அவளுக்கு வெறுப்பு என்று சொல்லிவிட முடியாது. அப்படி

யொன்றும் விகாரமாகத் தென்பட மாட்டாள் அவள். ருக்குவைப்போல, நல்ல அழகியல்ல வாயினும், உள்ளத்தின் அழகைக் கொண்டு உடலழகைப் பிரகாசிக்கச் செய்தாள் அவள்.

ருக்குவையும் சாரதாவையும் ஒன்ருகப் பார்க்கிறவர்கள், ருக்குவின் சௌந்தரியத்தைக் கண்டு மயங்கிலுைம் சாரதாவின் வாக்குச் சாதுர்யத்தைக் கண்டு பிரமித்தே போவார்கள்.

ருக்குவின் கணவன் ஊருக்கு வந்தது முதல் சாரதாவுக்கு அவள் வீட்டுக்குப் போகச் சௌகரியப்படவில்லை. ஆனுல் இப்போது ருக்குவைப் போய்ப் பார்த்தே தீரவேண்டும் என்கிற நிலைமை ஏற்பட்டுவிட்டது. பட்டணத்திலிருந்த பள்ளித்தோழி ஒருத்தி சாரதாவுக்கு ஒரு கடிதம் எழுதி விட்டாள். எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷை தேறிவிட்ட தென்றும், மேலே காலேஜ் படிப்பு வேண்டுமானுல் உடனே நேரில் வந்து சேர்ந்தால் நல்லதென்றும், காலேஜ்களில் 'அட்மிஷனு'க்காக 'ரஷ்' அதிகமாக இருக்கிறதென்றும் எழுதியிருந்தாள், அந்தச் சிநேகிதி. சாரதா அடுத்த நாளே சென்னைக்குப் புறப்பட எண்ணினுள்.

கடிதம் வந்த தினத்தன்று சாயந்தரம் சாரதா ருக்குவின் வீட்டுக்குப் போனுள்.

தாழ்வாரத்தில், சுவரில் மாட்டியிருந்த ஒரு நிலைக் கண்ணுடிக்கு எதிராக நின்றுகொண்டு ருக்கு, குங்குமம் இட்டுக்கொண் டிருந்தாள். "ருக்கு!" என்று அழைத்துக் கொண்டே சென்ருள் சாரதா.

குங்குமத்தை இட்டுக்கொண்டு திரும்பினுள் ருக்கு. ருக்குவைக் கண்டாள் சாரதா, சற்றுத் தூரத்திலிருந்தே. அப்படியே ஒரே ஓட்டமாக ஓடி அவளைத் தழுவிக்கொண் டாள். "ருக்கு, உன்னைப் பார்க்கும்போது, எனக்கே ஒரு லாகிரி உண்டாகிறதடி! அப்படியே கடித்து விழுங்கிவிடலாம் போல் இருக்கிருயே!" என்று அடக்கமான குரலில் தன் மனத்தில் தோன்றியதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை சாரதாவுக்கு.

"சாரதா!"

"ஏன்!"

"நிஜமாகவா?"

"என்ன நிஜமாகவா?"

"நிஜமாகவா நான் அத்தனை அழகாய் இருக்கிறேன்?"

"பொய்யா சொல்லப் போகிறேன்? எனக்கே இப்படி இருக்கிறதே...அடடே! என்ன முட்டாள் நான்! இந்த மூன்று நாளாக உன்னைப் பார்க்காமலே இருந்து விட்டேனே...!"

ருக்குவின் கண்களில் ஜலம் துளும்பிற்று. அதைக் கண்டாள் சாரதா.

"ருக்கு, ஏண்டி அழுகிறாய்? நான் வரவில்லையே என்றா?"

"சாரதா, இந்த அழகு எதற்கடி எனக்கு? இது இல்லாமல் இருக்கக்கூடாதா?"

"ருக்கு, இது என்ன பேச்சு? அதுவும் இந்தச் சமயத்தில்..."

"ஆம். இந்தச் சமயத்தில் இந்த அழகு எனக்குச் சத்துருவாய் இருக்கிறதடி" என்று சொல்லும்போதே ருக்கு விம்மி விம்மி அழுதுவிட்டாள்.

சாரதாவுக்கு ஒன்றும் புரியவில்லை. என்ன பதில் சொல்வதென்றே தெரியாமல் தடுமாறினாள். அவள் புருஷன் வருவதற்குமுன், குளத்தங்கரையிலிருந்து திரும்பும்போது ருக்குவின் மனநிலை சரியாயில்லை என்பதை உணர்ந்திருந்தாள் அவள். ஆயினும் புருஷன் வந்த பின்னரும் ருக்கு சஞ்சலத்துடனேயே இருப்பாள் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. எனவே, தனக்கு எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷை தேறினது, மேலே படிக்க யோசித்திருப்பது, மறு நாள் பட்டணம் புறப்படுவது முதலிய விஷயங்களை உடனே ருக்குவுக்குச் சொல்ல முடியவில்லை அவளால். அன்றியும் அழகே அவளுக்குச் சத்துருவாக இருக்கிறதென்று அவள் மனம் முறிந்து கூறுவானேன்? சாரதாவுக்கு என்ன நினைப்பதென்றே தெரியவில்லை.

இதற்குள் ருக்குவே பேசினுள்: "சாரதா, கொஞ்ச நேரம் பூந்தோட்டத்துக்காகப் போய்வரலாம், வருகிருயா?" என்ருள். சாரதாவும் ஆமோதித்தாள். இருவரும் புறப் பட்டார்கள்.

கோவிலுக்குப் பின்னுல் இருந்தது அந்தப் பூந்தோட்டம். கொல்லேப்புறத்து வழியாகப் போனுல் சமீபமாகையால், இரு வரும் அந்த வழியாகவே சென்றனர். அப்போது மாலை நேரம். மஞ்சள் வெயிலின் சோர்விலே தென்றலின் குளுமை கலந்து கொண்டிருந்தது. மத்தியான்ன வெயிலில் கொதித்துப் போயிருந்த பூமியின் உஷ்ணத்தை ஆற்றியது அந்தத் தென்றல் காற்று. பூமியின் கொதிப்பினுல் துவண்டு கிடந்த பூஞ்செடிகள் தென்றல் தம்மைத் தழுவியதும் உத்ஸாகம் கொண்டு நடனமாடின. 'சலசல' வென்று ஆரவாரம் செய்து, உடல் பூரித்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தன. அந்த ஆனந்த பாஷ்பமேதான், புதுமலர்களாகத் தரையில் உதிர்ந்தது. மலர்கள் தரையில் உதிர்வதைக் கண்டு சகியாத வைபோலச் செடிக்குச் செடி, மலருக்கு மலர் தாவிப் பறந்து வண்டுகள் சோககீதம் பாடின. இந்த வண்டுகளில்தான் எத்தனே வர்ணங்கள்! பச்சை, நீலம், மஞ்சள், சிவப்பு, ஊதா, பச்சையும் நீலமும் கலந்த மயில் கழுத்து நிற வண்டுகள், மஞ்சளில் கறுப்புப் புள்ளி சிவப்புப் புள்ளிகள் போட்ட கலப்பு நிற வண்டுகள், சிவப்பிலே கறுப்புக் கோடு போட்ட சிங்கார வண்டுகள்; இன்னும் எத்தனேயோ வர்ணச் சேர்க்கைகளும் வர்ணக் குழப்பங்களும் வாய்ந்த மேனியுடைய வண்டினங் கள் அட்டா! அவை செடிக்கும் மலருக்கும் கிளேக்கும் இலேக்கு மாகப் பறந்து பறந்து சென்று ரீங்காரம் செய்யும் அழகுதான் என்ன! மாலே வெயிலில் மங்கையர்கள் விதவிதமான வர்ணச் சேலேகள் கட்டி வந்து படபடப்புடன் மலர் கொய்வதுபோல் இருந்தது அந்த வண்டினங்களின் செயல்.

அவற்றின் சேஷ்டைகளேக் கண்ட வெட்கந்தானே என்னவோ, ஊர்ப் பெண்களில் சிலர் பூந்தோட்டத்துக்கு அப்பால் ஓடிக்கொண்டிருந்த ஒரு சிறு வாய்க்காலின் கரை மீது உட்கார்ந்துவிட்டார்கள். அந்தப் பெண்கள் இருந்த இடத்தைத் தூரத்திலிருந்தே கண்ட ருக்குவும் சாரதாவும்

வேறு புறமாகத் திரும்பிப் பூந்தோட்டத்தின் மற்றொரு மூலைக்குப் போய் அங்கிருந்த ஒரு மர நிழலில் உட்கார்ந் தார்கள்.

சற்று நேரம் இருவரும் வாயைத் திறந்து பேசவே இல்லை. ருக்கு, சாரதாவை நேருக்கு நேராகப் பார்க்க விரும்பாதவள்போல முகத்தைத் திருப்பிக்கொண்டு பார்வையை எங்கோ செலுத்தியவண்ணம் இருந்தாள். ஆனால் சாரதாவோ அவளையே விடாமல் உற்று நோக்கினாள் நெடு நேரம். தங்கப்பதுமையைச் சிங்காரித்து வைத்தாற் போலவே தோன்றினாள் ருக்கு, சாரதாவின் கண்களுக்கு. ஆனால் பதுமைக்கும் ருக்குவுக்கும் ஒரேஒரு வித்தியாசந்தான். பதுமையின் முகத்தில் எவ்விதமான உணர்ச்சியையும் காண முடியாது. அப்படித் தென்பட்டாலும் ஒரே வித உணர்ச்சி தான் தென்படும். ஆனால் ருக்குவின் முகத்திலோ அவளது மன உணர்ச்சிகள் பல தோன்றி மறைந்துகொண் டிருப் பதைச் சாரதா எளிதில் கண்டறிந்தாள்.

எப்போதும் புன்முறுவல் ததும்பிக்கொண்டிருந்த அவளது முகமண்டலத்தின்மீது சோகத்திரை படர்ந்திருப் பானேன்? இல்லாவிடில் பூந்தோட்டத்துக்கு வந்து வெகு நேரம் ஆன பின்னும் ஏன் இந்த எல்லையற்ற மௌனம்?

"ருக்கு!" என்றாள் சாரதா கடைசியாக.

ருக்கு சட்டென்று திரும்பிப் பார்த்தாள்.

"நீ திடுக்கிடும்படியான சமாசாரம் ஒன்று சொல்லப் போகிறேன்."

ருக்குவின் முகத்தில் ஆச்சரியமோ வேறு உணர்ச்சியோ தோன்றவில்லை. ஆனால், "அப்படித் திடுக்கிட்டுப் போய் ஒன்றும் உயிர் போய்விடாது; சமாசாரத்தைச் சொல்" என்றாள் அவள்.

ஏன் இந்த வெறுப்பு அவளுக்கு? சாரதாவுக்குப் புரிய வில்லை. அவளைக் கேட்கவேண்டும் என்றிருந்தது. இருந்தாலும் அவள் இருந்த நிலையில் ஏதாவது கேட்டால் மறுபடியும் அதிகமாக அழுவாளோ என்கிற பயம். எனவே வேறொன்றும் கேட்காமல், "நாளைக்கு நான் பட்டணம் பாகப்போகிறேன்" என்றாள்.

"இவ்வளவுதானே ?"

இந்தப் பதிலைக் கேட்டுச் சாரதாவே திடுக்கிட்டுப் போனாள். அதற்குமேல் அவளால் சமாளித்துக்கொள்ள முடியவில்லை. "ருக்கு, என்னடீ இப்படிப் பேசுகிறாய்? நான் ஏதாவது கேலியாகப் பேசினாலே, உனக்கு ரோஷம் பொத்துக்கொண்டு வருமே. நீயா இப்படிப் பேசுகிறாய்? அடி, ருக்கு, உன்னைப் பார்த்துச் சொல்லிவிட்டுப் போகலாம் என்று வந்தேன். எனக்குப் பரீக்ஷை தேறிவிட்டது. மேல் படிப்புக்காக நாளைக்கே கிளம்பப் போகிறேன்" என்று விஷயத்தைச் சொன்னாள் சாரதா.

ருக்கு மௌனமாகக் கேட்டாள் அவள் கூறியதையெல்லாம். பிறகு சிறிது நேரம் ஒன்றும் சொல்லாமல் இருந்துவிட்டு, "உம், அவ்வளவுதான் எனக்குப் பிராப்தம். இந்தச் சந்தர்ப்பத்தில் நீ கூட என்னை விட்டுப் போய்விடுகிறாய்" என்றாள் பெருமூச்சுடன்.

மாலை வெயிலில் அவள் கண்கள் நீர் கொண்டு ஜொலிப்பதைக் கண்டாள் சாரதா. அவளை அப்படியே அணைத்துத் தன் மடியில் சாய்த்துக்கொண்டாள், "ருக்கு, உன் மனத்தை அறிய முடியாமல் தவிக்கிறேனடி!" என்று துடிதுடிப்புடன் பேசினாள்.

"சாரதா, என் மனத்தை யாருமே அறிய வேண்டாம், என் பிராணன் இப்படியே போய்விடக் கூடாதா?"

"அசடுமாதிரி பேசாதே; நாளைக்கே உன் புருஷனுடன் கூடி எவ்வளவோ சுகமாக வாழப்போகிறாய்!"

"வாழப்போகிறேன். ஆம், வாழத்தானே போகிறேன்! சாரதா, அந்தப் பேச்சே வேண்டாமடி. என் மனசை என்னவோ பண்ணுகிறது..." அடக்கி வைத்திருந்த துயரமெல்லாம் அலைமோதிக்கொண்டு கிளம்பியது ருக்குவுக்கு. தன் மடியில் அவள் தலை துள்ளித் துள்ளித் துடிப்பதை உணர்ந்தாள் சாரதா.

ருக்குவின் தலைமயிரைத் தடவிக் கோதிய வண்ணம் சாரதா அவள் துயரத்தை ஆற்ற முயன்றுகொண்டே, "ருக்கு, உன் புருஷன் வரப்போகிறார் என்று நீ அடைந்த

குதூகலத்துக்கும் இந்தத் துக்கத்துக்கும் சம்பந்தமே இல்லாமல் இருக்கிறதே!'' என்று தன்னையும் மீறிக் கேட்டு விட்டடாள்.

"சாரதா, என்னை ஒன்றும் கேட்காதே; உனக்குப் புண்ணியம் உண்டு. என் சந்தோஷத்திலே மண் விழுந்து விட்டது. நான் பாவி! கொடுத்து வைக்காத பாவி!'' என்று விம்மி விம்மிக் கூறி முடித்துவிட்டு ருக்கு சரேலென்று எழுந்து கண்களைத் துடைத்துக்கொண்டு, அந்த இடத்தை விட்டுக் கிளம்பி மள மளவென்று நடந்தாள்.

சாராதாவும் எழுந்தாள். பித்துக்குளி மாதிரி நடந்து போகும் ருக்குவைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது அவளுக்கு. அவள் பின்னாலேயே சென்றாள்.

ருக்கு மறுபடியும் பூந்தோட்டத்துக்கு அப்பால் இருந்த வாய்க்காலண்டை போனாள். ஊர்ப் பெண்கள் உட்கார்ந்து பேசிக்கொண் டிருக்கும் இடத்துக்குக் கொஞ்ச தூரத்தில் போய்க் கரைமீது அமர்ந்து கீழே இருந்த கூழாங்கற்களை அர்த்தம் இல்லாமல் பொறுக்கிக் குவிக்கலானாள். சாரதாவும் அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்துகொண்டாள். வாய்க்கால் மணலில் கூழாங்கற்களைச் சுழித்துக்கொண்டு விரையும் தண்ணீர் மங்கலான சூரிய வெளிச்சத்தில் வெள்ளியை உருக்கி வார்த்ததுபோல் இருந்தது. ருக்கு கூழாங்கற்களைப் பொறுக்குவதிலேயே ஈடுபட்டிருந்தாள். சாரதா வாய்க்கால் நீரைப் பார்த்தபடியே ஏதோ எண்ணம் இட்டுக்கொண் டிருந்தாள்.

அப்போது வந்து சேர்ந்தனர் ஊர்ப்பெண்கள், கூட்டமாக. தூரத்திலிருந்தே ருக்குவும் சாரதாவும் வந்து உட்கார்ந்ததைப் பார்த்துவிட்டு, தம்மிடத்தை விட்டு எழுந்து வந்தார்கள்.

"என்னடி ருக்கு, வர வரக் கண்ணிலேயே காண்கிற தில்லையே!'' என்றாள் ஒருத்தி.

"ஏண்டி! அவள் அகமுடையான் வந்திருக்கிறார் அவர் கண்ணை விட்டு மறைந்தால்தானே, அவள் உன் கண்ணிலே படுவதற்கு?'' என்று ருக்குவின் சார்பில் பதிலளிப்பதுபோல் கிண்டலாகப் பேசினாள் மற்றொருத்தி.

"ஏண்டி, உன்னை அழைத்துக்கொண்டு போக வந்தி ருக்கிறுராமே, எப்போ ஊருக்குப் போகிறுய்?" என்றுள் வேருெருத்தி.

"தெரியாது!" என்றுள் ருக்கு.

"என்னடி அதிசயம் இது? தெரியாதாமே."

"நம்மிடமெல்லாம் சொல்லக்கூடாது என்ற எண்ணமாய் இருக்கும்!"

"சொல்லாவிட்டால் போகட்டுமே! நாளைக்குத் தெரி யாமல் போகிறதா என்ன?"

"இதோ பாருங்கள்! ருக்குவுக்கு உடம்பு சரியாயில்லை. அவளை உபத்திரவம் செய்யவேண்டாம். உங்களை ரொம்பக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று மிகவும் தாழ்மையான குரலில் சாரதா பதில் சொன்னுள்.

"அடியம்மா, அவளுக்காக இவள் வக்காலத்து வாங்கிக் கொண்டு பேச வந்துட்டாளே; பாரு! நாளைக்கே அவள் அகமுடையானுடன் போகப்போகிறுள். இவள் பட்டணம் போகப் போகிறுள். ஊரை விட்டுப் போகிற இவர்களுடன் என்ன பேச்சு வேண்டியிருக்கு நமக்கு? ஏதோ பேச வந்தால், மூஞ்சியைக் கொடுத்துப் பேசினுத்தானே! வாங்க ளடி போகலாம்" என்று நிஷ்டுரப்பட்டுக்கொண்டே ஒருத்தி மற்றவர்களைப் பிடித்து இழுத்துவிட்டு அந்த இடத்தைவிட்டு நகர்ந்தாள். மற்றப் பெண்களும் அவளைப் பின்பற்றினுர்கள்.

ருக்குவுக்கு அதற்குமேல் அங்கே தங்க முடியவில்லையோ என்னவோ? "சாரதா, நாம்கூடப் போகலாமே!" என்றுள்.

சாரதாவும் எழுந்தாள். இருவரும் மௌனமாகவே வேறு புறமாக நடந்து செல்லலாயினர்.

## 10

# செங்கமலத்தின் ஆசை

செங்கமலத்தின் ஆசைக்குப் பங்கம் ஏற்பட்டு விட்டது. தேவராஜ ஐயங்கார் ருக்குவின் ருதுசாந்திமுகூர்த்தத்துக்காக வைத்திருந்த பணத்தில் பெரும் பகுதியை எடுத்து மாடு வாங்குவதில் செலவழித்து விட்டார். எஞ்சியுள்ள பணத்தைக் கொண்டு அந்தச் சடங்கை ஆடம்பரமாகச் செய்ய முடியாது. இருந்தாலும், 'ஏதோ முன்னே போட்டுப் பின்னே புரட்டிச் சமாளித்துக்கொள்ளலாம். நாளைக்கு இந்த நாள் வருமா?' என்று எண்ணினாள் செங்கலம்.

தேவராஜ ஐயங்காருக்கோ இதிலெல்லாம் அநாவசியமாகப் பணம் செலவழிக்க விருப்பமில்லை. அன்றியும் இந்தக் கல்யாணம் பிள்ளைவீட்டார் செய்யவேண்டியது. நாம் ஏன் இங்கே செலவழித்துச் செய்யவேண்டும் என்று எண்ணினாரோ என்னவோ? அப்படி அவர் நினைக்கக்கூடிய மனுஷ்யர் அல்லவாயினும் ஊர் வாய் அப்படித்தானே பேசும்? அதையெல்லாம் அவர் பொருட்படுத்தவும் மாட்டார். ஆனால் அவர் கொள்கையும் அவரது மாப்பிள்ளை கொள்கையும் சற்று ஏறக்குறைய ஒரே மாதிரியாக இருந்தன. இது அவருக்குப் பரம திருப்தி.

ரங்கநாதன், 'ஊரைக் கூட்டிச் செக்கைத் தள்ளி இந்தச் சடங்கெல்லாம் செய்வது அநாவசியம்' என்றும் அதற்குத் தான் ஒப்பவே முடியாதென்றும் கூறிவிட்டான். ஒரு நல்ல நாள் பார்த்து ருக்குவைத் தன்னுடன் அனுப்பிவிடவேண்டும் என்றுதான் விரும்பினான் அவன். இதற்குத் தேவராஜ ஐயங்காரின் சம்மதம் எளிதில் கிடைத்துவிட்டது. ஆனால் செங்கமலத்துக்கு ஒரே பெண்! அத்தனை 'அற்ப சொற்பமாக' விஷ

யத்தை முடித்துவிட அவள் சம்மதிப்பாளா? அன்றியும், "இப்படிக்கூட உண்டா லோகத்திலே? வேறொண்ணும் செய்யா விட்டாலும், நாலு சுமங்கலிகளுக்கு வெற்றிலே பாக்குக் கொடுத்து ஒரு நல்ல நாள் பண்ணிவிட்டால் போறது" என்று ஊர்ப்பெண்டுகள் சிலர் அவளுக்கு ஓதிவைத்தார்கள். இதை அரை மனத்துடன் செங்கமலம் ஏற்றுக்கொண்டாள். கடைசியில் செங்கமலத்தின் அபிப்பிராயத்துக்கும் கொஞ்சம் மதிப்புக் கொடுக்க வேண்டாமா? தேவராஜ ஐயங்கார், 'சரி' என்றார். அடுத்த வெள்ளிக்கிழமையே நல்ல நாளாகவும் அமைந்தது. ரங்கநாதனுக்கு அதற்குப் பின் ஆறு நாட்கள் தான் லீவு இருந்தது. இரண்டு நாள் முன்னதாகவே அவன் ருக்குவை அழைத்துக்கொண்டு வேதவரத்தை விட்டுப் புறப்பட நினைத்தான்.

இதற்கு இடையேதான் சாரதாவும் மேல் படிப்புக்காகச் சென்னைக்குப் போய்ச் சேர்ந்தாள்.

நாள் நெருங்க நெருங்க, ருக்குவின் மனவேதனை அதிகரித்து வந்தது. எவ்வளவுக்கு எவ்வளவு,'புருஷனைக் காணப் போகிறோம், புது வாழ்வை அடையப் போகிறோம்' என்று ஆனந்த வெள்ளத்தில் நீந்திப் பரவசம் அடைந்தாளோ, அவ்வளவுக்கு அவ்வளவு துன்ப சாகரத்தில் தோய்ந்து கரையேறத் தெரியாமல் தவிக்கும்படி ஆகிவிட்டது அவளுக்கு. அவள் மனத்தில் இப்போது ஒரே எண்ணமே குடிகொண்டிருந்தது. எப்படியாவது சந்நியாசியின் கட்டளைக்குப் பழுது ஏற்படாமல் நடந்துகொள்ள வேண்டும் என்பதுதான் அந்த எண்ணம். அப்படி நடந்துகொண்டு ஜயித்து விட்டால் பிறகு, 'வாழ்வு நாளைக்கே வரும்' என்று கருதினாள் அவள். ஆயினும் பெண்தானே! அதிலும் பருவ காலத்தின் பூரிப்பு, பொங்கிக்கொண்டிருக்கும் அவள் உள்ளத்தில் இந்தக் கடுமையான சோதனை சற்று ஆயாசம் அளிக்கத்தான் அளித்தது.

ஒரு சமயம் இல்லாவிட்டால், ஒரு சமயம் அவளையும் அறியாமல் அவள் மனம், 'அவரைப் பார்க்க வேண்டும்' என்று நினைக்கும். அவள் கால்கள் மாடிப்படியை நோக்கித் தள்ளும். ஆனால் அடுத்த க்ஷணமே அவள் தன்னைக் கட்டுப்

படுத்திக் கொள்வாள். 'இந்தச் சின்னச் சின்ன ஆசையெல்லாம் விபரீதத்தில் முடியுமானுல்...' என்று தன்னைத் தானே பயமுறுத்தித் தடுத்துக்கொள்வாள். ஆனுல் தவிர்க்க முடியாத ஆசையல்லவா அது? எவ்வளவுதான் தடுத்துக் கொண்டாலும் கேட்கிறதா? அவளாகப் போய்ப் பார்க்க வேண்டாம் என்று அடக்கிக்கொண்ட போதிலும், அவனே எப்போதாவது கீழே இறங்கி வரும்போது அவள் கண்கள் ஒருதரம் அவளையும் மீறி அவனைப் பார்த்துவிடுகின்றனவே! அப்போது ஏற்படும் உள்ளக் கிளர்ச்சியை என்ன சொல்வது? அந்தக் கிளர்ச்சி தரும் ஆனந்தத்தை அளவிட முடியுமா? அதுதான் துக்கத்தில் கொண்டுபோய் விடுகிறது அவளை; 'இப்போதே இப்படி இருக்கிறதே.........' என்று அவள் மனம் எண்ணும்போது அவள் சரீரம் சிலிர்ப்படையும், பயத்தாலும் நடுக்கத்தாலும்!–சந்தோஷத்தால் அல்ல.

வேதவரத்துக்கு வந்து மூன்று நாட்களுக்கு மேலாகியும் ருக்குவுக்குத் தன்னிடமிருந்த கூச்சம் தெளியவில்லை என்றே நினைத்தான் ரங்கநாதன். அவனுக அவளைப் பார்க்கவோ பேசவோ முயன்ருலும் அவள் எப்படியாவது அவனிடமிருந்து தப்பியோடி ஒளிந்துகொள்கிருள்! இதை அவன் வெட்கம் என்று எண்ணுமல் வேறு என்ன என்று நினைப்பது?

நல்ல நல்ல புடைவைகள்தான் உடுத்துக்கொண்டிருக்கிருள். ஆனுல் கண்ணெதிரே கணநேரமாவது நின்ருல் தானே! என்ன வெட்கம் வந்துவிட்டதோ? படித்திருந்தால் மட்டும் என்ன? பட்டிக்காடு பட்டிக்காடுதான் என்று சலித்துக் கொண்டான் அவன். ஆனுல் ருக்குவின் அலங்காரங்களெல்லாம் அவள் தாயார் செங்கமலத்தின் உத்தரவின் பேரில் செய்துகொள்ளப்பட்டவை என்பது அவனுக்கு எப்படித் தெரியும்? அதிலெல்லாம் ருக்குவுக்கு விருப்பமே இல்லை, அவள் மனம் இருந்த நிலையில். அதெல்லாம் தெரியுமா அவனுக்கு?

ருக்குவை அழைத்துப் போவதற்காக வேதவரம் வந்து, ருக்குவின் தரிசனம் கிடைப்பதே அபூர்வமாக இருக்குமானுல் ரங்கநாதனுக்குப் பொழுது எப்படிக் கழியும்? அதுவும்

அந்தக் கிராமத்திலே பொழுது போக்குக்கு என்ன இருக் கிறது? எத்தனை நேரம் மாடி அறையிலும் வராந்தாவிலும் தரை தேய நடப்பது, நிற்பது, உட்காருவது, படிப்பது, யோசிப்பது, படுப்பது? ரங்கநாதனுக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது. 'ருக்கு சகஜமாய்ப் பழகுவாள், சில நாட்கள் ஊரில் அவளுடன் இருந்துவிட்டு அவளையும் கூட்டிக்கொண்டு போகலாம்' என்று எண்ணி வந்தான் அவன். அதனால்தான் ஒரு 'மாமூல் சடங்கு' கூடாது என்றான், ஆரம்பத்திலேயே. ஆனால் ருக்குவை நேருக்கு நேர் காணவேண்டுமானால் அந்த 'மாமூல்' நடந்தாகவேண் டும் என்கிற நிலைமை ஏற்பட்டுவிட்டது. எனவே அவன் நாளை எண்ணிக்கொண் டிருந்தான் என்றே சொல்லலாம்.

கடைசியாக அந்த நாளும் வந்து சேர்ந்தது.

## 11

## குளக்கரையில்

அன்று சோதனை தினம். வெள்ளிக்கிழமை; அதிகாலை. வானத்தில் விடிவெள்ளி சுடர்விட் டெரிந்தது. கருக்கிருட்டில் குளித்தெழுந்த பூமிதேவியை வைகறை வெளிச்சம் துடைத்துப் பிரகாசப்படுத்திக்கொண் டிருந்தது. காலை இளந் தென்றல் சாளரத்தின் வழியாகப் பிரவேசித்து ரங்கநாதன் முகத்தில் 'ஜிலுஜிலு'வென்று வீசிற்று. இரவு முற்றும் அவனுக்குச் சரியான தூக்கமே இல்லை. அப்படிக் கொஞ்சம் தூங்கினாலும் எண்ணிறந்த கனவுகள் அவன் தூக்கத்தைக் கலைத்தன. ஒரு சின்னத் தூக்கம். அதிலே ஒரு கனவு; அடுத்தாற்போல் விழிப்பு; விழிப்பிலே ஒரு சிந்தனை; ருக்குவைப்பற்றி ஒரு ரமணீயமான இன்ப நினைவு, மறுபடியும் தூக்கம்; தூக்கத்திலே ஓர் ஆசைக் கனவு, மீண்டும் விழிப்பு; சிந்தனை! இப்படியே மாறி மாறி, சிந்தனையும் கனவும் அவன் தூக்கத்தைக் கலைத்த வண்ணம் இருந்தன. அவன் விழித்துக் கொண் டிருக்கும்போது அவன் சிந்தனையில் ஊறும் சிருங்காரக் கற்பனைகள், கருத்துக்கள், எல்லாம் நித்திரையிலே பதின்மடங்கு அதிகமான சக்தியுடன் சொப்பனச் சித்திரங்களாக ரூபம் எடுத்து அவன் இருதயத்தைக் கவர்ந்தன; தூக்கத்தையும் கலைத்தன. கடைசியாகக் காலையின் வருகையை உணர்ந்தான் ரங்கநாதன். படுக்கையை விட்டு எழுந்தான். சோம்பல் முறித்துக் கொண்டே வராந்தாவுக்கு வந்து வாசல் பக்கம் பார்த்தான்.

வீதியில் யாரும் இல்லை. இன்னும் யாரும் எழுந்திருக்க வில்லையோ என்னவோ? ஆனால் அந்தக் கோடியில் மாத்திரம் ஒரு பெண்ணுருவம் வீதியைக் கடந்து

செல்வது தெரிகிறது. ரங்கநாதன் பார்த்தான். அவன் மனத்தில் ‘திக்’ கென்றது. ‘ஆம், அவள்தான்! எங்கே போகிருள்? இன்னும் இருட்டே பிரியவில்லே. இந்த நேரத்தில் அவளுக்கு வீதியைக் கடந்து போகும்படி என்ன வேலே இருக்கிறது? தனியாகப் போகிருளே?’

‘ஆம்! தனியாகத்தான் போகிருள்! குளத்தங்கரையை நோக்கிக் குடுகுடுவென்று விரைந்து போகிருள்! எதிரே வந்த துரையப்பன்கூடப் பிரமித்துப் போனுன் என்ருல்?’

“அம்மா, என்னம்மா, இத்தனே காலேயிலே குளத்துக்குப் புறப்பட்டுட்டிங்க? இன்னும் சரியா விடியவே இல்லேயே!” என்கிருன் ஆச்சரியத்தால்.

ஆனுல் அவன் கேள்விக்குப் பதில் அளித்தாளா?

“ஏண்டா துரையப்பா! இந்தப் புதுமாடு இரண்டுமா இப்ப வாங்கினது?” என்று கேட்கிருள் ருக்கு.

“ஆமாம்மா! வாங்கி நாலஞ்சு நாளாச்சே! இன்னுமா பாக்கல்லே நீங்க? நம்ப வீட்டுக் கொல்லேயிலேதானே கட்டியிருக்கு! இப்ப ஏரிலே கட்டிப் பாக்கலாம்னு ஓட்டிக் கிட்டுப் போறேன்.”

“துரையப்பா, இந்த வெள்ளே மாடு எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. கண் மைக்கண். ரொம்ப அழகாயிருக்கடா பார்ப்பதற்கு” என்று சொல்லிப் புது மாடுகளில் ஒன்ருகிய வெள்ளே மாட்டின் கழுத்தைத் தடவிக் கொடுத்துவிட்டு ருக்கு கிளம்பினுள். அப்போது ஓர் ஆந்தை கிளேகூட்டும் சப்தம் கேட்டது. உடனே அந்த வெள்ளே மாடு எதைக் கண்டோ மருண்டதுபோல, ‘மா—ஆ—ஆ!’ என்று கத்திற்று.

ருக்கு திடுக்கிட்டுப் போனுள். ஆந்தையின் அலறல் வந்த திக்கில் திரும்பினுள். அந்தத் திக்கில்தான் இருந்தன குளத்தங்கரையும் அரச மரங்களும் நாக பீடமும். அவள் மனசுக்குள் என்னவோ பண்ணிற்று. அவள்

பார்வை அடுத்த விநாடியே அந்த வெள்ளை மாட்டின் பக்கம் திரும்பியது! அந்த மாட்டின் அழகான மைக்கண்கள் கலங்கியிருப்பன போன்ற தோற்றம். ஏன் என்று ஒரு கேள்வி! ஆனால் பதில் தெரியவில்லை.

ருக்கு அந்த இடத்தைவிட்டு நகர்ந்தாள். துரையப்பன் மாடுகளை ஓட்டிக்கொண்டு பனஞ்சோலைப் பக்கமாக நடக்கலானன். ருக்கு மாத்திரம் அடிக்கடி திரும்பித் திரும்பி அந்த வெள்ளைமாட்டைப் பார்த்தபடியே குளத்தங்கரையை அடைந்தாள். வெகு தூரத்தில் வந்துகொண்டிருந்த ரங்கநாதனுடைய கண்கள் இதையெல்லாம் பார்த்துக்கொண்டுதான் இருந்தன.

ருக்கு, குளத்தில் இறங்கிக் கைகால்களை அலம்பிக் கொண்டாள்; கண்களைத் துடைத்துக்கொண்டாள். படியேறி அரசமரத்தண்டை வந்தாள். நாகபீடத்தின் சமீபத்தில் அவள் வரும்போது பூமியைச் சூழ்ந்திருந்த அந்தகாரத்தின் கடைசித் திரையும் விலகியது. நாகபீடத்தின் எதிராகத் தரையில் விழுந்து சேவித்து விட்டு எழுந்தாள். அரசமரத்தைச் சுற்றிப் பிரதக்ஷிணம் வரத் தொடங்கினள். ஒன்று, இரண்டு, மூன்று, நாலு.. எட்டு...பதினேழு...இருபத்துநாலு...! கணக்கே இல்லையா என்ன? ருக்குவின் கால்கள் அதிவேகமாக அந்த அரசமரத்தையும் அதன் அடியில் பிரதிஷ்டை செய்திருந்த நாகபீடத்தையும் சுற்றிச் சுற்றி வருகின்றன.

தூரத்திலிருந்தே இதையெல்லாம் நோக்கிய வண்ணம் நடந்துவந்த ரங்கநாதனுக்கு, ருக்குவின் செய்கை மிகவும் ஆச்சரியத்தை அளித்தது. எதற்காக அவள் அப்படிச் செய்கிருள் ?

ரங்கநாதன் குளக்கரையை அடைந்தான். அவள் அவன் வந்ததைக்கூடக் கவனிக்கவில்லை. அவள் கண்ணும் மனமும் அவள் செய்யும் ஒரே காரியத்திலேயே ஈடுபட்டிருந்தன. பைத்தியக்காரிபோல் ருக்கு அப்படி மரத்தைச் சுற்றிச் சுற்றி வருவானேன்?

ருக்குவின் பிரதக்ஷிணத்துக்கும் முடிவு வந்தது. அவள் நாகபீடத்தின் எதிரே கண்களை மூடிய வண்ணம் கைகூப்பி

நிற்கிருள். அவள் இருதயத்தின் பிரார்த்தனைகள் பிரதிபலிப்பதுபோல் முகத்தில் பல மாறுதல்கள் தென்படுகின்றன. ரங்கநாதன் அவள் பின்னுல் சென்று சற்றுத் தூரத்தில் நின்றுகொண்டான்.

சில நிமிஷகாலம் கண்மூடி நின்று அஞ்சலி செய்துவிட்டு ருக்கு மறுபடியும் நாகபீடத்தை வணங்கினுள். அவள் வணங்கி எழுந்தபோது மேலே 'கடகட' வென்று ஒரு பயங்கரமான ஓசை கேட்டது. அதுவரையில் மூடியிருந்த அவள் கண்கள் திறந்தன. எதிரே நாக பீடத்தின் மீது சற்று முன் வீசிய கிரணம் எங்கே? திடீரென்று நாகச் சிலைமீது நிழல்படிந்து நிற்பானேன்? ருக்கு சட்டென்று பின்பக்கம் திரும்பினுள், சூரியனைப் பார்க்க. ஆனுல் அங்கே சூரியன் இல்லை. ரங்கநாதன்தான் நின்ருன்,

ருக்கு ஆச்சரியத்தால் ஸ்தம்பித்துப் போனுள்; அந்த வேளையில் அவனை அங்கே அவள் எதிர்பார்க்கவே இல்லை. அவளது பிரமித்த பார்வையைக் கண்டு அவனே தடுமாறிப் போனுன் ஒரு விநாடி. ஆனுல் சட்டென்று சமாளித்துக் கொண்டு ஏதோ கேட்க வாயெடுத்தான். மறுபடியும் 'கட கட' வென்ற அந்தப் பயங்கரமான சப்தம்!

இருவரும் ஒருமுகமாக, வானத்தைப் பார்த்தனர். வானம் இருட்டிக்கொண்டு வந்தது. சற்று முன்புதான் கீழ்க்கோடியில் உதயமான சூரியன் இடியோசையைக் கேட்டுப் பயந்துவிட்டானே என்னவோ? அவன் சாயைகூடத் தெரியவில்லை வானத்தில்! அவன் வந்துகொண்டிருந்த வானவீதியை ஒரு கருமேகம் ஆக்கிரமித்திருந்தது. கீழ்த்திசை முற்றும் இருட்டிக் கொண்டது. அந்தத் திசையின் இருட்டிலே பளிச்சென்று ஒரு மின்னல் வெட்டி மடிந்தது. ராத்திரி காலமானுல் அந்த மின்னலின் ஒளியே பிரமாதமாக இருக்கும். அதன் நெளிவும் வேகமும் கண்களையும் மனத்தையும் ஒரு குலுக்குக் குலுக்கி விடும். ஆனுல் காலை நேரத்து மின்னல்; பிணம் சிரிப்பது போல் இருந்தது, அதன் பயங்கரமான பிரகாசம். அந்த மின்னல் ஒளியைக் கண்டு நடுங்கினுள் ருக்கு. அவள் நடுக்கம் தீருமுன்னரே வானத்திலிருந்து அந்தப் பிணச்

சிரிப்பின் ஓசை 'கடகட' வென்று கேட்டது. மற்றுமோர் இடி. மின்னலும் இடியும் கீழ்வானத்தின் இருட்டைத் திரட்டிக்கொண்டு வான மத்தியில் பாய்ந்தன! கனவேகத் துடன் மேல்வானத்துக்கும் போய்விட்டன. சிறிது நேரத் துக்கு முன் துறவியின் மனம்போல நிர்மலமாகத் தோன்றிய ஆகாயத்திலே, திடீரென்று மேகங்களின் வெறியாட்டம் ஆரம்பமாகிவிட்டது. அவை சீறின; குமுறின; படார் படாரென்று உலகமே நடுங்கும்படி மோதி இடித்தன. வான வீதியில் சப்த மேகங்களும் சண்டையிட்டு நின்றன. அவற் றின் தேகங்கள் அந்த யுத்தத்தில் கிழிபட்டு, ரத்தம் சிந்தத் தொடங்கியது. பூமியில் அந்த மேகங்களின் ரத்தமே மழை யாகத் தூற ஆரம்பித்தது. இப்போது ரங்கநாதனுக்கு வேறொன்றும் பேசத் தெரியவில்லை. என்னவோ கேட்க வேண்டும் என்று நினைத்தான்; கேட்கவில்லை. ஆனால், "ருக்கு, மழை வரும்போல் இருக்கிறதே! வீட்டுக்குக் கிளம்ப லாமா?" என்றான்.

ருக்கு பதில் சொல்லவில்லை. அவள் மழையைக்கூடப் பொருட்படுத்தியதாகத் தோன்றவில்லை. அவன் ஏன் அங்கே வந்தான் என்கிற எண்ணத்திலேயே நின்று போனாள்.

அவர்களது கேள்வி பதில்களுக்காக என்று தாமஸிக்கப் போகிறதா என்ன வானக் களத்திலே மழை? மேகங்களின் யுத்த முழக்கம் அதி பயங்கரமாகவே ஒலித்தது. சப்த மேகங்களும் ஒன்றன் மேலொன்று மோதித் துவம்ஸம் செய்யத் தொடங்கின. அவற்றின் தேகங்கள் படார் படாரென்று மோதிக்கொள்வதால் ஆயிரம் சுக்கல்களாக வெடிப்புண்டன. அந்த வெடிப்புக்களினின்றும் ரத்தம் வெள்ளமாகப் பெருக்கெடுத்தது. சிறு தூறலாகப் பூமியின் மேல் விழ ஆரம்பித்த மழை, தாரை தாரையாகப் பொழிய ஆரம்பித்தது.

ருக்கு சட்டென்று நாகபீடத்தின் அருகே ஓடி மரத் தடியில் ஒதுங்கிக்கொண்டாள். ரங்கநாதனும் அவள் பக்கத்தில் வந்து நின்றுகொண்டான்.

சற்று நேரம் மௌனம். மழை இரைச்சலில் ரங்கநாதன், 'ருக்கு!' என்று ஒரு முறை அழைத்தது அவள் காதில் விழவில்லை. அவள் முகம் வேறு புறமாகத் திரும்பியிருந்தது. அந்த ஏகாந்தமான இடத்திலே, நல்ல மழையில் இருவரும் சந்தித்தது, இருவருக்குமே லஜ்ஜையை உண்டாக்கி இருக்க வேண்டும். இல்லாவிடில் ஒருதரம் அவளைப் பெயரிட்டு அழைத்த ரங்கநாதன் மறுபடியும் நீண்ட நேரம் மௌனமாக இருப்பானேன்?

மழையோ சீக்கிரம் விடும்போல் இல்லை. மேகங்களின் பேயாட்டத்தில் வானமே இடிந்து விழும்போல் இருந்தது. மரங்களின் மீதிருந்தும் கீழே சொட்டுச் சொட்டென்று நீர் சிந்தத் தொடங்கிற்று. அரசமரத் தடியில் ஒதுங்கியிருந்த ருக்கு, ரங்கநாதன் இருவர் மேலும் ஜலம் சுரீல் சுரீலென்று சொட்ட ஆரம்பித்தது. சிறிது நேரத்துக்குள் இருவர் ஆடைகளும் நனைந்தே போயின.

ருக்குவுக்கு அப்போதிருந்த நிலையில் குளிர் எடுத்தது. அவள் தேகம் அடிக்கடி சிலிர்த்ததைக் கண்ணுற்றான் ரங்கநாதன். தான் நனைந்ததுகூடத் தெரியவில்லை அவனுக்கு. "ருக்கு இப்படி நனைந்தால் உடம்புக்கு ஆகாதே!" என்றான் கொஞ்சம் கெட்டியான குரலில்.

ருக்கு சட்டென்று திரும்பினாள். அவன் முகத்தைப் பார்த்தாள். அவள் கண்களில் ஒரு சோகம் கலந்த பிரகாசம்! அவள் இதழ்கள் மலர்ந்தன. ஒரு சிறு புன்சிரிப்பு! "நீங்கள் மாத்திரம்?" என்று வெடுக்கென்ற கேள்வியொன்று பிறந்தது, அவள் வாயினின்று.

ரங்கநாதன் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினான், அவள் முகமலர்ச்சியைக் கண்டு. "நானா? எனக்கென்ன, புருஷன்? மழையில் நனையலாம், வெயிலில் காயலாம். எனக்கு அதெல்லாம் ஒன்றும் பண்ணாது. ஆனால் நீ...பூப் போன்றவள். உன் சரீரம் மிருதுவானது!..."

ருக்குவுக்குக் கொஞ்சம்கூடப் பழக்கமில்லாத பேச்சு; கேட்டிராத பாஷை! அவன் கண்ணிலிருந்து ஒளிவடிவமாக வீசி அவள் தேகம் முழுவதையும் மின்னலைப்போல் தாக்கிய,

சொல்லத் தெரியாத சொற்கள், பேசமுடியாத பேச்சு, நாவின் சக்திக்கு மீறிய நெஞ்சகத்தின் உணர்ச்சி நிறைந்த பாஷை, அவளுக்கு ஒருவிதமான போதையளிப்பதுபோல் இருந்தது. ஆனல் அந்தப் போதையே அவளுக்குப் பயத்தையும் உண்டாக்கியது. அவள் கண்கள் எதிரே இருந்த நாகபீடத்தை நோக்கின; சில நாட்களுக்குமுன் சந்நியாசியைச் சந்தித்த அதே இடம்! இன்று அந்தச் சோதனை நாளிலே, அதே இடத்தில் அவர்கள் இருவரும் கூடி நிற்கின்றனர். இந்த மழை எதற்காக வந்தது? இருவரையும் அந்த மரத்தடியில் சந்திக்கும்படி செய்யவா? ருக்கு என்ன என்னவோ நினைத்தாள்!

அவள் எண்ணங்களுக்குத் தடை விதிப்பதுபோல, ரங்கநாதன் அவள் கரத்தைப் பிடித்தான். ருக்குவுக்கு மயிர்க் கூச்சல் எடுத்தது. அந்த இழவெடுத்த ஆந்தை 'களகளக்' கென்று உச்சஸ்தாயியில் ஒரு சொல் கூறியது! ருக்குவின் இருதயம் நடுங்கிற்று. சட்டென்று கையை இழுத்துக் கொண்டாள், அவன் பிடியினின்றும். எதிரே இருந்த நாக பீடத்தின் மீது அவள் பார்வை விழுந்தது. அந்த நாக பீடத்தில் இருந்த சர்ப்பத்தின் சிலை அவள் கண்களுக்கு ஒரு வெறும் உயிரற்ற கற்சிலையாகத் தோன்றவில்லை, அந்தச் சந்தர்ப்பத்தில். படமெடுத்துக்கொண்டு ஒரு வடசர்ப்பமே சீறியெழுவது போல் தோன்றியது அவளுக்கு. "ஐயையோ... பாம்பு...ஓடுங்கள்...!" என்று ஏதேதோ குழறிக்கொண்டே துள்ளிக்குதித்தாள் ருக்கு.

ரங்கநாதன் பயந்து போனுன். சட்டென்று அவள் பக்கத்தில் போய் நின்றுகொண்டான். "ருக்கு...ருக்கு!" என்று தவித்தான். அவளைப் பிடித்துக்கொள்ளாவிட்டால் கீழே விழுந்துவிடுவாளோ என்று எண்ணும்படி இருந்தது அவள் நிலை. அவளைத் தாங்கிக்கொள்ள முயன்ருன். அவன் கைகள் மறுபடியும் அவள்மேல் பட்டன. மேகமண்டலத்திலே ஒரு கோரச் சிரிப்பு! ஒரு பிரம்மாண்டமான இடிமுழக்கம்! ருக்குவின் மூளையே கலங்கிவிடும்போல் இருந்தது. அவள் சரேலென்று ஓடிச் சிறிது தூரத்தில் நின்றுகொண்டாள்.

மழை இரைச்சலும் திடீரென்று நின்றது. வானம் வெளுத்தது. இடிக்குப் பின் மழை குறைந்து சிறு தூறலாக மாறியது. ருக்குவின் கால்கள் அந்த இடத்தைவிட்டுப் போகத் துடித்தன.

"மழை நின்றுவிட்டதே!" என்ருள் அவள்.

"ஆம். சீக்கிரமாக வீட்டுக்குப் போய்விடு; மறுபடியும் ஒரு 'பாறல்' வருவதற்குள்."

ருக்குவுக்கு அவனை அந்த இடத்திலே விட்டுப் போக இஷ்டமில்லை. அந்த நாகபீடத்தைத் திரும்பிப் பார்த்தாள். வெறும் கற்சிலைதான் இருந்தது. இருந்தாலும் பயமாயிருந்தது அவளுக்கு. "நீங்கள்?" என்ருள்.

இருவரும் அரசமரத்தடியை விட்டுக் கிளம்பினர். வானம் சற்று வெளுத்தாற்போல் இருந்தாலும் மழை பிசுபிசு வென்று தூறிக்கொண்டுதான் இருந்தது.

தெருக்கோடி வரையிலும் இருவரும் மௌனமாகவே சென்றனர்; பிரிந்தனர்!

ருக்கு வீட்டுக்குள் நுழைந்த சில நிமிஷங்களுக்கெல்லாம் ரங்கநாதனும் போய்ச் சேர்ந்தான். இன்னொரு 'பாறல்' மழையும் வந்து சேர்ந்தது!

12

## இயற்கையும் எதிர்ப்பும்

காலையில் பிடித்த மழை இரவு வந்தபின்பும் விடவில்லை. மழையுடன் காற்றும் கலந்து அடித்தது. செங்கமலத்துக்கு அழமாட்டாத துக்கம். ஏதோ ஊரைக்கூட்டி அமர்க்களமாகச் செய்யாமற் போனாலும் அக்கிரகாரத்தில் இருக்கும் சுமங்கலிகளை மட்டுமாவது அழைத்து வெற்றிலை பாக்குக் கொடுத்துச் சுபமாகக் காரியத்தைச் செய்யலாம் என்று நினைத்தாள் அவள். சாயங்காலம் கொஞ்சம் மழை விட்டாற் போல் இருந்தபோது, போய் அவர்களை அழைத்துவிட்டும் வந்தாள்.

இரவு 9-மணிக்கு நல்ல வேளை. அந்த நல்ல வேளைக்குச் சற்று முன்னரே நல்ல மழையும் வந்துவிட்டது. அக்கிரகாரத்துப் பெண்கள் எல்லோரும் எப்படி வர முடியும்? மழை என்றால் சாதாரணமான மழையா? காற்றும் மழையும் ஊரையே ஹதாஹதம் செய்துவிடும்போல் இருக்கிறதே! ஓரடி எடுத்து வைத்தால் ஆளை ஒன்பது அடிக்குத் தள்ளிக் கொண்டு போகிறது காற்று. அத்துடன் பயங்கரமான மின்னலும் இடியும்! வீட்டை விட்டுக் கிளம்பவே பயந்தனர் ஊர்ப்பெண்கள். எப்படியோ சமாளித்துக்கொண்டு நாலைந்து ஸ்திரீகள் மாத்திரம் செங்கமலத்தின் அழைப்பைக் கௌரவிக்க வந்து சேர்ந்தார்கள்.

"ஏன் மாமி! ஒத்தைக்கொரு பொண்ணு, ஆயிரம் கஷ்டத்துக்கு மத்தியிலே ஒரு காரியம்னு செய்யறேம். மனுஷ்யாதான் சதிபண்ணுவா, சகஜம். ஆனா தெய்வங் கூடவா இப்படிச் சதி பண்ணணும்? நேத்திக்கி வரைக்கும்

இல்லாத மழை, இப்ப என் காரியத்துக்குன்னு வரணும்? பெய்யத்தான் பெய்யறதே! இப்படி மானமே இடிஞ்சு தலையிலே விழற மாதிரியா பெய்யணும்?'' என்று கண்களில் ஜலம் துளும்பப் பேசுகிறாள் செங்கமலம்.

பாவம்! இந்த மழை பண்ணும் சதியையே பெரிதாக நினைத்துவிட்டாள் அவள்! அவளுக்குத் தெய்வம் செய்ய இருக்கும் சதி எப்படித் தெரியும்?

''செங்கமலம்! அதுக்கு என்ன பண்ணறது? உன் பொண் பிடி பிடியா அரிசியை அள்ளித் தின்னுளோ என்னவோ? இப்ப ஒரு நல்ல நாள் என்று வெச்சுக்கிற போது மழை கொட்டு கொட்டுன்னு கொட்டறது'' என்று பதில் சொன்னாள் அந்த மாமி.

ஆனால் இந்த இடியும் மழையும், அவர்கள் செய்ய இருந்த காரியத்துக்கு அப்படி ஒன்றும் தடையாக இல்லை. ஏறத்தாழ நல்ல வேளையிலேயே ஒரு 'லக்ஷ்மீ கல்யாணம்' பாடி, அந்த நாலைந்து சுமங்கலிகளும் செங்கமலமுமாகச் சேர்ந்து, ரங்கநாதனையும் ருக்குவையும், மாடி அறையில் கொண்டுபோய் விட்டு விட்டு வந்து சேர்ந்தனர்.

மாடி அறையில் நுழையும்போதே ஊதுவத்திப் புகையின் சுகந்தம் கம்மென்று சூழ்ந்துகொண்டது அவர்களை. அறை மத்தியில் உத்தரத்திலிருந்து தொங்கிய ஒரு 'பெட்ரோமாக்ஸ்' விளக்கு, அறை முழுவதையும் பிரகாசப்படுத்திக்கொண் டிருந்தது. ஜன்னல் பக்கமாக ஒரு சுவர் ஓரத்தில் இரண்டு கட்டில்கள் புஷ்ப ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கின. எதிர்ச்சுவரை யொட்டி ஒரு கண்ணாடி பீரோ, அந்தக் கட்டில்களின் அலங்காரத்தைப் பிரதிபலித்துக் கொண்டு நின்றது. அறை மத்தியில் 'பெட்ரோமாக்ஸ்' விளக்குக்குக் கீழே ஒரு வட்ட மேஜையும் இரண்டு நாற்காலி களும் இருந்தன. வட்ட மேஜைமீது ஒரு வர்ணச் சவுக்கம் விரித்திருந்தது. ஒரு பழத்தட்டும் ஒரு பலகாரத்தட்டும் ஒரு கூஜாவில் பாலும் அந்த மேஜைமேல் இருந்தன. சுவரில் சில புதிய படங்கள் மாட்டப்பட்டிருந்தன, அறையை அழகு படுத்த வேண்டும் என்னும் எண்ணத்துடன்.

சாயந்தரம் வரையில் வசித்து வந்த பழக்கமான அந்த அறையின் புதுமையைக் கண்டு ரங்கநாதனே பிரமித்துப் போனான். ஆயினும் அந்த அறையில் எந்த எந்த இடத்தில் என்ன என்ன புதுமை காணப்படுகிறது என்பதையா அவன் ஆராயப்போகிறான்? அவன் மனத்துக்கும் கண்ணுக்கும் புதுமையாகத் தோன்றிய ஒரே பொருளின்மீது தான் அவன் நாட்டம் முற்றும் இருந்தது. அந்தப் பொருளின் இணையற்ற அழகைக் கடைக்கண்ணால் மட்டுமே சற்று நேரமாகக் கண்டு ஆனந்தித்த ரங்கநாதன் அறை மத்தியில் இருந்த நாற்காலியொன்றில் போய் உட்கார்ந்து கொண்டான்.

அவன் இருதயத்தைக் கவர்ந்த அந்தச் சௌந்தரிய தேவதை கதவோரத்திலேயே நின்றுகொண் டிருந்தாள். அந்த அறையின் சூழ்நிலையும் ஏகாந்தமும் அவனுக்கு ஒருவித லாகிரியை உண்டாக்கின. அதே சமயத்தில், அதே அறையில் சில நாட்களுக்குமுன் அவன் அங்கே வந்ததும், காபியும் கையுமாக ருக்கு வந்து நின்றதும், அவன் பேச ஆரம்பித்தவுடனே பதில்கூடச் சரியாகச் சொல்லாமல் அவள் ஓடிவிட்டதும் ஞாபகத்துக்கு வந்தன அவனுக்கு அப்போது மிகுந்த லஜ்ஜையை அபிநயித்து வெகு சுலபமாகத் தன்னிட மிருந்து தப்பிச் சென்ற ருக்கு இப்போது எப்படித் தப்பப் போகிறாள்? தப்பிச் செல்லத்தான் விரும்புவாளா என்று நினைத்தான் அவன்.

இந்த எண்ணம் அவனுக்கே சிரிப்பை உண்டாக்கி விட்டது. 'கலீரெ'ன்று சிரித்தான்.

அதுவரையில் குனிந்த தலை நிமிராமல் கதவோரத் திலேயே நின்றிருந்த ருக்குவை ஓர் அலட்டு அலட்டி விட்டது அந்தச் சிரிப்பு. அவள் அவனைப்பார்த்தாள். அவனும் அவளைப் பார்த்தான்.

"ருக்கு!" என்றான்.

ருக்கு பதில் பேசவில்லை.

"அன்றைத்தினம் காபி கொடுத்துவிட்டு உடனே 'டிமிக்கி' கொடுத்தாயே. இப்போது அப்படித் தப்பிப்போக

முடியுமா?'' என்று கேட்டுவிட்டான் சட்டென்று. உடனே அவன் முகத்திலே அசடு வழிந்தது. பேசத் தெரியாமல் பேசி விட்டோமோ என்று நினைப்பவன்போல் இருந்தது அவன் முகத் தோற்றம். ஏனெனில் இந்தப் பேச்சை ருக்கு கொஞ்சமும் ரஸிக்கவில்லைபோல் இருந்தது.

சிறிது நேரம் இருவரிடையேயும் மௌனம் நிலவியது. ரங்கநாதன் முகத்தில் ஒருவிதப் பரபரப்பும் வேகமும் காணப் பட்டன. அவன் கண்கள் கள்ளுண்டவன் கண்கள்போல் இருந்தன. ஆனால் ருக்குவின் முகத்தில் ஆரம்பத்தில் தோன்றிய பரபரப்புக்கூட மறைந்துவிட்டது இப்போது. அவள் கண்களில் சாந்தமும் அமைதியும் நிரம்பியிருந்தன. அவள் உதடுகள் அழுத்தமாக மூடியிருந்ததைப் பார்த்த போது அவள் மனம் அந்தச் சோதனையில் எப்படியும் வெற்றி பெற்றே தீருவது என்கிற உறுதியை யடைந்துவிட்டது என்றே சொல்லத் தோன்றும். அந்த நெஞ்சழுத்தத்தைத் தான் குறிப்பாக விளக்கின அவளது செவ்விதழ்கள்.

ஆனால் ரங்கநாதன் அவள் மனத்தின் உணர்ச்சிகளையும் அதன் தீர்மானத்தையும் அறிந்தானா என்ன? அல்லது இயற்கைதான் தனது தோல்வியை எளிதில் ஏற்றுக்கொண்டு விடுகிறதா?

இயற்கையின் வசப்பட்டு எழுந்தான் ரங்கநாதன். அதை எதிர்க்கத் துணிந்துள்ள ருக்குவை நாடிச் சென்றான். "ருக்கு!'' என்று அவள் கைகளைப் பற்றினான்.

ருக்கு சட்டென்று தன் கைகளை ரங்கநாதன் பிடியி னின்றும் விடுவித்துக்கொண்டாள். அவனது கரங்களின் ஸ்பரிசம் அவள் தேகத்தை ஆயிரம் கோணல்களாக நெளி யும்படி செய்தது. அந்த நளின சிங்காரத்தைக் கண்டு ரங்கநாதன் கண்கள் சொக்கிப்போயின. "ருக்கு!'' என்கிற ஒரே வார்த்தை, ஒரே அழைப்பு, அவன் இருதயத்தினின்று உணர்ச்சி வேகத்துடன் வெளிவந்தது.

ருக்கு அவனைப் பார்த்தாள். அவன் கண்களில் தோன்றிப் புருஷத்துவத்தின் வெறிமிகுந்த வேட்கைத்தீ அவள் இரு தயத்தையே உருக்கிவிடும்போல் இருந்தது. அவன் யார்?

அவளுக்கு அந்நியனு என்ன? சொந்தக் கணவன். அவளிடத்தில் எல்லா உரிமைகளும் உடையவன்! ஏன்? அவள் உடல், பொருள், ஆவி எல்லாம் அவனுக்கு உரியவைதாமே! உரிமை என்கிற அர்த்தம் பகிரங்கமாகத் தெரியும்படி செய்யவன்றே சற்றுமுன் செங்கமலம் ஊர்ப் பெண்டுகளுடன் வந்து அவளை அவனிடம் ஒப்படைத்துச் சென்றிருக்கிருள்? அந்த ஏகபோக உரிமையை அவன் அநுபவிக்க வேண்டுமென்று துடிக்கும் துடிப்பு அவன் கண்களில் தெரிந்தது. அவன் கைகள் அவள் கைகளைப் பிடித்த பிடியில் அறிந்து கொண்டாள் அவள். அதைத் தடுக்க அவளுக்குச் சக்தி ஏது? அவன் சொத்தை அவன் அநுபவிக்கக் கருதுகிருன்! அதைத் தடுக்க அவள் யார்? தடுத்தால்தான் விட்டுவிடப் போகிருனு?

இதெல்லாம் வாதபூர்வமான உண்மைகள். வெறும் வறட்டு வாதங்கள் என்றுகூடச் சொல்லலாம். ஆனுல் ருக்குவின் நிலைமைதானே இப்போது முக்கியமானது? அதைத்தானே கவனிக்கவேண்டும்? ரங்கநாதனுடைய வேட்கைத் தீயில் அவள் இருதயம் கொஞ்சம் இளகித்தான் போயிற்று. அவளது அமைதி நிரம்பிய கண்களில் சலனம் ஏற்பட்டது; சஞ்சலமும் தென்பட்டது. "ருக்கு, உன்னைப் பார்க்க நான் எப்படித் துடித்தேன் தெரியுமா?" என்று காதல் வசப்பட்டுச் சந்தர்ப்பமும் வாய்த்தபோது அதனுல் அறிவு மங்கிப் போய்ப் பேசும் ஆடவர்களின் பிரத்தியேகமான பேச்சுக்களையே பேசினுன் அவன்.

இதனுல் அவன் முயற்சியிலும் உணர்ச்சியிலும் ஒரு படி முன்னேற்றம்; அதே சமயத்தில் அவள் இருதய நெகிழ்ச்சியிலும் கொஞ்சம் அதிகச் சூடு உறைத்தது. ஆனுல் இதை அவள் விரும்பினுளா! இல்லை! இயற்கையாகப் பொங்கிக் கொண்டு எழும் ஆசை அலைகளுக்கு அவள் அணைபோட முயன்ருள். அந்த ஆசை அலைகள் அவள் மனத்தை ஆக்கிரமித்துக்கொண்டு, அவள் அறிவை மூடித் திரையிட்டு மேலே தலை தூக்கப் பார்க்கின்றன! பூர்ணிமைச் சந்திரனைக்

கண்டு சமுத்திர அலைகள் கொந்தளித்தெழுந்து கடலில் ஆர்ப்பாட்டம் செய்வதுபோல், அவளது நெஞ்சக்கடலில் எழும் ஆசை அலைகள், அவளது கண்களில் காணப்படும் ஆர்வத்தைக் கண்டு சீறி எழுந்தன. அவள் அந்த அலைகளை அழித்துவிடப் பார்த்தாள்.

அவன் மறுபடியும் அவளை அணுகினான். "ருக்கு!" என்று சற்று உறுதியாகவே அவள் கைகளைப் பற்றினான். அவள் மறுபடியும் கையை விடுவித்துக்கொள்ள முயன்றாள். ஆனால் அவன் பிடி அழுத்தமாக இருந்தது. அவளால் முடியவில்லை. அன்றியும் அவள் மனத்துக்குள் ஏதோ ஒன்று; "வேண்டாம்; சும்மா இரு" என்று சொல்வது போன்ற உணர்ச்சி.

ருக்குவின் கண்கள் கீழே தரையை நோக்கின. ஆனால் தரையையே பார்த்துக்கொண்டிருந்தனவா? அவற்றின் பார்வை எதிரே நின்ற ரங்கநாதனுடைய பாதங்களின்மீது விழுந்தன. 'அந்தப் பாதங்களின் வலிவுதான் என்ன? அவர் நெஞ்சின் உறுதியைப் பிரதிபலிப்பவை போலல்லவா அவர் பாதங்கள் தரையில் உறுதியுடன் நிற்கின்றன! அவ்வளவு உறுதியுடன் என்னால் நிற்க முடியுமா? முடியவில்லையே!' என்று எண்ணினாளோ என்னவோ?

அவள் சரீரம் நிற்க முடியாமல் ஆடுவதை உணர்ந்தான் ரங்கநாதன். அவள் கால்கள் தத்தளிப்பது போலத் தோன்றின அவனுக்கு. அவன் ஒரு கை கொடுத்தான். அவள் இடை அவன் கையணைப்பில் கொஞ்சம் இறுகி நெளிந்தது. ருக்குவின் உருகிய நெஞ்சில் இன்பம் ஊற்றெடுத்தது. 'இந்த இன்பத்தை வேண்டாம் என்கிறாயே! மன்மதன் போல் இருக்கிறான் மணாளன்' என்று அவளது சஞ்சல புத்தி கூறியது அவளுக்கு.

'ஆம். மன்மதன்போல்தான் இருக்கிறான். யார் இல்லை என்றது? ஆனால் இந்த மன்மதன், உன் கண்ணிலே இன்றைக்கு மன்மதனாகத் தோன்றுகிறவன், நாளைக்கு மன்மதன் அடைந்த கதியை அடைவா

னால்.........?'' என்று உடனடியாகவே அவளது அறிவு பதிலளித்தது.

இந்தப் பதில் அவள் மனத்தில் பயத்தை உண்டாக்கிற்று. சரேலென்று அணைப்பினின்றும் திமிறிக்கொண்டாள். சற்று எட்டப்போய் நின்றுகொண்டு, மிகவும் பீதியை அடைந்தவள் போன்ற முகத் தோற்றத்துடன் தன் கழுத்தைப் பார்த்துக்கொண்டாள். 'பெட்ரோமாக்ஸ்' விளக்கின் பிரகாசத்தில் அவள் கழுத்திலிருந்த ஆபரணங்களுக்கிடையே அடக்கமான அழகுடன், அவள் வாழ்வின் ஜீவநாடியாகத் துலங்கும் மாங்கல்யச் சரட்டைக் கண்ணுற்ருள் அவள். அந்த மாங்கல்யத்தில்தான் அவள் கண்ணுக்குத் தெரியாமல் சிக்கிக்கொண் டிருக்கிறது ஒரு கருநாகம் என்று சந்நியாசி சொன்ன வார்த்தைகளை மறக்க முடியுமா அவளால்? அதுவும் இந்தச் சந்தர்ப்பத்தில்? அந்த நாகத்தின் கோபத்துக்கு அவன்—அவள் வாழ்க்கைத் துணைவன்!—பாத்திரமாகாமல் இருக்கவேண்டுமே! இந்தக் கவலைதான் அவளுக்குச் சதா சர்வகாலமும், இப்போதும்கூட அவள் சஞ்சல புத்தி அவளை மெய்ம்மறக்கச் செய்யும்போதெல்லாம் இந்தக் கவலை அவளுக்கு அறிவை அளித்து வந்தது என்றுகூடச் சொல்லலாம். அவள் ஆசையை அடக்க முடியாமல் அடக்கிக்கொள்ளவும், அவள் நெஞ்சில் ஆழ்ந்து போயிருக்கும் இந்தக் கவலையின் மூலம் பிறந்துள்ள மனவுறுதிதான் அவளுக்கு உதவி செய்தது.

அவள் திமிறிக்கொண்டதை வெட்கம் என்று எண்ணிக்கொண்டான் ரங்கநாதன். இயல்புதானே! "ருக்கு, என்ன வெட்கம் போ. சுத்தக் கர்னடகமா யிருக்கிருயே! இப்படி ஏகாந்தமான சமயத்திலேகூட என்ன வெட்கம் வேண்டியிருக்கிறது? இப்படி வா பார்க்கலாம்!'' என்று சொல்லிக்கொண்டே ரங்கநாதன் கட்டிலின்மீது போய் உட்கார்ந்துகொண்டான்.

அவள் வந்தால்தானே?

தூரத்தில் நின்றுகொண் டிருக்கும்போதே, அவள் கண்ணெளி அவளையும் மீறி அவன்மீது விழுந்தது. 'பெட்ரோ

மாக்ஸ்' வெளிச்சத்தில் அவனது பூரித்து நிற்கும் தோள்களின் வடிவத்தைக் கண்டு மயங்கினுள். அவள். 'இந்தத் தோள்கள் உன்னைத் தாங்கிக்கொள்ளத்தானே துடிக்கின்றன! போயேன்! போயேன்' என்றது அவளது சஞ்சல புத்தி.

'போகாதே! அவசரப்பட்டுப் போகாதே. உன்னைத் தாங்கிக்கொள்வதால் அந்தத் தோள்களுக்கே ஹானி ஏற்படுமானல்...அந்தத் தோள்களை நீ மறுபடியும் காண முடியுமா? யோசித்துப்பார்!' என்றது அவள் அறிவு.

ருக்கு அருகில் வராமல் தூரத்திலேயே தயங்கி நிற்பதைக் கண்டு ரங்கநாதன் கட்டிலிலிருந்து இறங்கி அவளிடம் வந்தான். "என்மேல் கோபமா உனக்கு?" என்று சொல்லிக்கொண்டே அவள் மோவாய்க்கட்டையைப் பற்றி அவள் முகத்தைத் தன் முகத்துக்கு எதிராகத் தூக்கினுன்.

அவள் கண்களிலும் ஆர்வம் துடித்தது. இடையே திகிலும் கிலேசமும் மருட்சியும் படர்ந்து மறைந்துகொண்டிருந்தன. இதனுல் அவள் கண்களில் அடிக்கடி சலனம் தோன்றிக் கண்களே கலங்கியிருந்தன. இந்தக் கலக்கத்தைத்தான் கண்டான் ரங்கநாதன். ஆனுல், "என்மேல் கோபமா?" என்று அவன் கேட்டதற்குப் பதிலாக அவள் இதழ்களில் ஒரு சிறு புன்னகை தோன்றி உடனே மறைந்தது. அடுத்த கணமே அவள் கண்களில் ஜலம் வந்துவிட்டது. அதை மறைத்துக்கொள்ள அவள் சட்டென்று தலை குனிந்துகொண்டாள். ஆனுல் அவன் கைமாத்திரம் இன்னும் அவள் மோவாய்க்கட்டையைப் பற்றியபடியே இருந்தது. அவள் கண்களில் துளித்த கண்ணீர் இரண்டு துளிகளாக அவன் கை மேல் விழுந்தது.

ரங்கநாதன் திடுக்கிட்டான்: "ருக்கு, ஏன் அழுகிருய்?" என்ருன்.

"ஒன்றுமில்லை" என்று கொஞ்சம் சிரித்த முகத்துடனே பதில் சொன்னுள் ருக்கு.

"ஆனுல்...உன்...கண்களிலிருந்து...ஜலம்..."

"இல்லை. இந்த விளக்கு...கண்ணைக் கூசுகிறது..."

"ஓஹோ!" அப்படியா?...சரி, இதோ அணைத்துவிடுகிறேன்."

அடுத்த விநாடியே 'பெட்ரோமாக்ஸ்' விளக்கு அணைந்தது. இத்தகைய சந்தர்ப்பங்களில் பெண்மைக்கே பிரத்தியேகமாகத் தோன்றக்கூடிய பதில் ஒன்றைச் சொல்லித் தப்பித்துக்கொண்டாள் ருக்கு. ஆனால் அந்தப் பதிலை வேறு விதமாக அர்த்தம் செய்துகொண்டான் ரங்கநாதன். விளக்கு வெளிச்சம் அதிகமாயிருப்பதால் ருக்குவின் கூச்சமும் அதிகமாயிருக்கிறது என்று நினைத்தான் அவன். இருப்பினும் 'பெட்ரோமாக்ஸ்' விளக்கு அணைந்தது ருக்குவுக்கு ஒருவிதத்தில் சௌகரியமாகவே இருந்தது. அதன் ஜாஜ்வல்யமான வெளிச்சத்திலே தேஜோ மயமாகப் பிரகாசித்து அவள் மனத்தில் மோகத்தை விசிறிக் கிளப்பிக்கொண் டிருந்த ரங்கநாதனுடைய சரீரம், இப்போது சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு சிறு கோழி முட்டை விளக்கின் மங்கிய ஒளியிலே அத்தனை போதை உண்டாக்காது என்று கருதினாள் அவள். அந்த வெளிச்சமேதான் தன்னையும் அறியாமல் அவனை அடிக்கடி பார்க்கும்படி செய்ததோ என்றுகூட எண்ணம் அவளுக்கு. ஆனால் இருதயத்தின் உணர்ச்சிக்குக் கண் ஒரு வெறும் கருவிதானே என்பது அவளுக்குத் தெரியாமலா போய்விட்டது? அந்த உணர்ச்சிக்கே பிரத்தியேகமாகக் கண்கள் இருக்கின்றனவே! அக் கண்களுக்கு இருட்டில்தானே பார்வை அதிகத் தெளிவாக இருக்கிறது? இதை அறிந்தும் அறியாமற் போனாள் ருக்கு. ஆனால் நல்லவேளை! அறையில் மங்கலான வெளிச்சமாவது இருக்கிறதே!

ருக்கு ஜன்னல் பக்கமாகப் போனாள். என்ன நினைத்துக் கொண்டாளோ என்னவோ? மூடியிருந்த ஜன்னல் கதவுகளைத் திறந்தாள். 'பெட்ரோமாக்ஸ்' விளக்கை அணைக்கச் சென்ற ரங்கநாதன் திரும்பி அவளிடம் வந்தபோது, அவள் செய்கை அவனுக்கே ஆச்சரியத்தை அளித்தது.

"ருக்கு, ஜன்னலை ஏன் திறக்கிறாய்?"

"காற்றே வரவில்லை."

அதிசயமான பதில் ; அதுவும் இந்தச் சமயத்தில்! ரங்க நாதன் அப்படியே நின்றுபோஞன். ஜன்னலுக் கெதிரில் வெளிப்புறமாகப் பார்த்துக்கொண்டு நின்ற ருக்குவின் பின்ன ழகை அவன் கண்கள் அவனையும் அறியாமல் நுகர்ந்தன. ஜன்னலைத் திறந்தவுடன் 'ஜோ' வென்று கேட்ட மழை இரைச்சலைக்கூட அவன் உணரவில்லை. ஆனல் திடீரென்று ஒரு மின்னல் வெட்டி, மழைத்தாரைகளை வெள்ளிக் கம்பிகள் போலப் பிரகாசிக்கச் செய்ததைக் கண்ட பின்தான் அவன் வெளியே மழை பெய்துகொண் டிருந்ததை உணர்ந்தான். அந்த மின்னலொளியில் பட்டுப்போல் மின்னிய அவள் தேகத்தையும் பாம்புபோல் தொங்கிய அவள் தலைப் பின்ன லையும் கண்டான் ரங்கநாதன். அவன் உள்ளத்தில் வெறி மிஞ் சியது. அப்படியே நடந்து சென்று அவள் தலையைக் கோதித் தடவிஞன். பின்னலைப் பிடித்துக்கொண்டே, அவள் தலையைத் தன் தோளில் சாய்த்துக்கொண்டான். அப்போது வானத் தில் ஒரு மின்னல் பாய்ந்தோடியது. அந்த மின்னலொளியில் ஜன்னலுக்கப்பால் இருளில் மூழ்கிக்கிடந்த மரங்களும் அக்கிரகாரத்து வீடுகளும் மழையினுல் கழுவப் பெற்றுப் பள பளவென்று தெரிந்தன. காற்றுடன்கூட மழைச் சாரலும் ஜன்னல் வழியாக உட்புகுந்தது. அவளைத் தன்மேல் சாய்த் துக்கொண்ட வண்ணமே, "இப்போது வருகிறதா காற்று?" என்று கேட்டான் ரங்கநாதன் குறும்புத்தனமாக. அவன் மூச்சின் உஷ்ணம் அவள் முகத்தில் பட்டது. அவள் சிலிர்ப்படைந்தாள். "போதும், விடுங்கள்!" என்று சொல்லிக் கொண்டே அவனிடமிருந்து பிரிந்து சென்று கட்டில் சட்டத் தைப் பிடித்துக்கொண்டு நின்ருள்.

அவன் கட்டிலில் போய் உட்கார்ந்துகொண்டான். "ருக்கு, நீ படித்த பெண், விஷயம் தெரிந்தவள். கேவலம் பட்டிக்காடு மாதிரி நடந்துகொள்வது எனக்குக் கொஞ்சங் கூடப் பிடிக்கவில்லை. ஏன் இப்படிப் பயப்படுகிருய்? உன்னைக் கடித்தா விழுங்கிவிடப் போகிறேன்? இப்படி ரொம்பப் பிகு பண்ணிக்கொள்ளுகிருயே!" என்று சொல்லிவிட்டு எழுந்து

அவள் கையைப் பிடித்துக்கொண்டு, "அசடு, வா இப்படி!" என்றான்.

"ஜன்னலைத் திறந்தவுடனே வெளியுலகத்தைக் காற்றும் மழையும் சேர்ந்து நிலை தெரியாமல் அடித்துக்கொண் டிருப்பதைக் கண்ட ருக்குவுக்கு, அவள் மனவுலகத்தைத் தடுமாறச் செய்யும் சூறாவளியைப் பற்றிய உணர்ச்சி அதிகரித்தது. அப்போது வானவீதியில் பாய்ந்தோடிய மின்னலைப் போல அவள் மனத்திலும் மின்னல்போன்ற ஓர் அறிவுத் தெளிவு பளிச்சிட்டது. 'அவன் விருப்பத்துக்கு இப்போது இணங்கினால், அவன் உயிருக்கே ஆபத்து ஏற்படும்' என்று கூறியது அவள் அறிவு.

எனவே, அவன் அழைத்த அழைப்புக்கு அவள் பதிலளிக்கவில்லை. கற்சிலைபோலக் கட்டிலைப் பிடித்தபடியே அசையாமல் நின்றாள் அவள். அவள் கையைப் பிடித்தபடியே, "ருக்கு, ருக்கு!" என்று மறுபடியும் அழைத்தான்.

அவள் கையை உதறிக்கொண்டாள். "தயவு செய்து என்னை விட்டு விடுங்கள்" என்றாள்.

"பேஷ்! ரொம்பப் புத்திசாலித் தனமான பேச்சு! எங்கே கற்றுக்கொண்டாய் இப்படிப் பேச?"

"என் தலைவிதி. கற்றுக்கொள்ளும்படி இருக்கிறது!" என்று சொல்லும்போதே அவளுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது.

"ருக்கு, இந்தச் சமயத்தில் நீ இப்படி அழுவது கொஞ்சம்கூட நன்றாயில்லை."

"நன்றாய்த்தான் இல்லை, ஆனால்?... ஆனால்..."

பளிச்சென்று மின்னிய ஒரு மின்னல் பேரிடியாக வெடித்தது.

"அந்த இடி என் தலைமேல் விழக்கூடாதா? அதற்குக் கூட என் மேல் இரக்கமில்லையே!" என்று அவள் மனத்துக்குள்ளேயேதான் பேசிக்கொண்டாள். ஆனால் எப்படியோ அது அவன் காதிலும் விழ வேண்டுமா?

"ருக்கு, உன் பேச்சு எனக்குப் புரியவில்லை" என்றான்.

"புரிய வேண்டாம். தயவு செய்து என்னை ஒன்றும் கேளாதீர்கள்."

ரங்கநாதனுக்குக் கொஞ்சம் சலிப்பு உண்டாயிற்று; கூடச் கொஞ்சம் கோபமும் வந்தது.

உதட்டைக் கடித்துக்கொண்டே, "விசித்திரமா யிருக்கிறது உன் சாகஸம். ஆனால் உன்னை ஒன்றும் கேட்க வில்லை. இப்படி வா சொல்லுகிறேன்."

"வேண்டாம். என்னை விட்டு விடுங்கள்."

"உனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது? கரும்பைக் கையில் வைத்துக்கொண்டிருப்பதை அறிந்தும் கடித்துத் தின்னாதே என்கிறாயே!"

"கரும்பா? கரும்பா? கரும்பு இல்லையே இது? கரும்பு போலத் தோன்றும் விஷம்! விஷம்! இந்த விஷத்தைத் தொட வேண்டாம். இதைப் புசிக்க வேண்டாம் இதனால்..."

கடகடவென்று வானம் உருண்டது. சந்நியாசியின் சொற்களை மறந்துவிட்டாளா என்ன அவள்? 'விதியின் இந்தப் பயங்கரமான உண்மை உன் மட்டில் இருக்கட்டும். பிறருக்குச் சொல்லாதே' என்ற வார்த்தைகள் வானத்தில் உருண்ட இடிகளில் ஒலி செய்வதுபோல் இருந்தன, அவளுக்கு.

"விஷம்! எது விஷம்? யார் விஷம்? நீயா? உன்னை நான் தொடக்கூடாதா?" என்று சொல்லிக்கொண்டே எழுந்தான் ரங்கநாதன்.

"ஆம், நான்தான். விஷம் நான்தான்! அருகில் வர வேண்டாம்."

"அடடே! இந்த விஷத்திற்கு ஆளையே பஸ்மீகரப் படுத்திவிடும் சக்திகூட உண்டா?"

இந்தக் கிண்டல் பிடித்த கேள்வி ருக்குவின் நெஞ்சில் நடுக்கத்தை உண்டாக்கிற்று; "ஆம்" என்று பதில் சொல்லி விட்டால் சந்நியாசியின் ரகசியத்தை வெளியிட்டு விட்ட தாகும். எனவே, எனக்கு அதெல்லாம் தெரியாது. தயவுசெய்து என்னை ஒன்றும் கேட்க வேண்டாம். என்னை மன்னியுங்கள்" என்று அழுதுகொண்டே பதில் சொன்னாள் ருக்கு.

"உன்னை மன்னிப்பதா? நீ அப்படி என்ன தப்புச் செய்து விட்டாய்? அசட்டுத்தனமான வெட்கம் அளவு மீறிப் போய் விட்டது உனக்கு. பைத்தியம்! நான் யார்? உனக்கு அந்நியனா? என் சொத்தல்லவா நீ? உன்னிடம் எனக்கு இந்த உரிமையில்லையா?"

"ஆம். உங்கள் சொத்துத்தான் உங்களுக்கு; உரிமையுந் தான் இருக்கிறது. ஆனால்...ஆனால்...."

"ஏன் மென்று விழுங்குகிறாய்? தைரியமாகச் சொல். அந்த ஆனாலுக்கு அர்த்தமென்ன?"

"அந்த உரிமையை நீங்கள் கொண்டாட, 'என் இஷ்டம்' என்று ஒன்று இருக்கிறதே. அது இடம் கொடுக்க வேண்டாமா?"

ரங்கநாதன் இந்தப் பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்டான். அவன் உடல் மறுபடியும் கட்டிலின் மேல் உட்கார்ந்துவிட்டது. "உன் இஷ்டம்! உன் இஷ்டம்! ஏன்? உனக்கு இஷ்டமில்லையா?"

"இல்லை!"

வெடுக்கென்ற பதில்! வேறு வழியின்றித் துணிந்து மனத்தைப் பலப்படுத்திக் கொண்டு சொன்ன வார்த்தை! இந்த வார்த்தை ரங்கநாதன் கண்களை அகல விரியும்படி செய்துவிட்டது.

அவன் பிரமிப்பு நீங்கவே வெகு நேரம் பிடித்தது. ஜன்னலுக்கப்பால் வான வெளியிலே மேகங்களின் கோர நர்த்தனம் நிகழ்ந்துகொண்டே இருந்தது. சற்று நேரம் முன்னிருந்ததைவிட, அதிகமாக மழை பொழிந்தது. அந்த மழையினால் உண்டான சப்தத்துக்கும் மேலாக, காற்றின் ஓசை உலகத்தையே நடுங்க வைத்தது. மழையின் ஆர்ப்பாட்டமும் காற்றின் கோஷமும் இடிகளின் உறுமல்களும் மின்னல்களின் பாய்ச்சலும் பிரகிருதிதேவியின் அமைதியை அடியோடு குலைத்துவிட்டன. அந்தக் காற்று மழையில் பல ஓலைக் குடிசைகள் உட்கார்ந்துவிட்டன. பல மண் சுவர்கள் இடிந்து விழுந்தன. பல மரக்கிளைகள் முறிந்தன. அந்த மாடி அறையின் திறந்த ஜன்னல்கள்கூடப் படார் படாரென்று

மூடித் திறந்து தவியாய்த் தவித்தன. அறை நடுவில் தொங்கிய அணைந்த 'பெட்ரோமாக்ஸ்' விளக்கு அந்தரத்தினின்று ஊசலாடியது. ஒரு சமயம் அது அறுந்து கீழே விழுந்து ஆயிரம் சுக்கலாய்ப் போகுமோ என்றுகூடத் தோன்றியது. சுவரில் மாட்டியிருந்த கோழிமுட்டை விளக்கின் ஒளி, காற்றில் அலைபட்டுத் துடி துடித்தது. அடுத்த விநாடி அது அணைந்து போகுமோ? ஆனால் அதோ போகிறாள் ருக்கு ஜன்னலண்டை. மழைச்சாரல் அடித்து, அவள் தளர்ந்த கால்களுக்குத் தரை வழுக்குகிறது. முகத்தில் சுள்ளென்று அடிக்கிறது மழை. இருந்தபோதிலும் சமாளித்துக்கொண்டு அவள் ஜன்னல் கதவுகளை மூடித் தாழிட்டு விடுகிறாள். வெளியுலகத்திலே மழையும் காற்றும் ஆடும் வெறிக்கூத்தின் ஓசை கொஞ்சம் தணிந்தாற்போல் கேட்கிறது; உள்ளே ரங்கநாதன் உள்ளத்தில் கொண்ட ஆவல், ருக்குவின், 'இல்லை' என்ற ஒரு வார்த்தையின் மூலம் தற்காலிகமாகவாவது தணிந்தது போல.

ஜன்னல் கதவுகளை மூடிவிட்டு ருக்கு திரும்பியபோது தான் ரங்கநாதன் பிரமிப்பு நீங்கி அவளைப் பார்த்தான். அவள் இருதயத்தினின்றும் ஒரு நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது. "ருக்கு!" என்றான் கொஞ்சம் சிரிப்பை வருவித்துக் கொண்டு.

ருக்கு அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"பலே கெட்டிக்காரி! இதைத்தான் கவிகள் ஊடல் என்று சொல்வார்கள். ஒரே வார்த்தையில் என் உயிரையே கொன்றுவிட்டாயே! இந்த ஜன்னல் கதவை மட்டும் நீ மூடாமலிருந்தால், நீ சற்று முன் சொன்ன பதிலுக்கு.." என்று சொல்லிக்கொண்டே எழுந்துபோய் ருக்குவின் கன்னத்தைக் கிள்ளி, ஒரே தூக்காக அவளை இரு கைகளாலும் தூக்கிக்கொண்டு வந்து கட்டிலில் கிடத்திவிட்டு, அவள் பக்கத்தில் உட்கார்ந்தான் ரங்கநாதன்.

ருக்கு இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை அவள் மழைச் சாரலுக்காகவும் கதவுகள் காற்றில் அடிபடுகின்றனவே என்பதற்காகவும் கதவுகளைச் சாத்தினாளேயன்றி, அதிலிருந்து ரங்கநாதன் விபரீதமாக அர்த்தம் பண்ணிக்கொள்வான்

என்று கருதவே யில்லை. ஆனால் அது அவன்மேல் தவறு? அவன் அப்படி எண்ணியதும் நியாயந்தானே அந்தச் சமயத்தில்?

ஆனால் எதிர்பாராத காரியம் அது. அத்தனை துரிதத்தில் நடந்தேறியது. அதனால் சற்றே அயர்ந்து போனாள் ருக்கு. அவள் கட்டிலை விட்டுத் துள்ளி எழுந்திருக்க முடியாமல் போயிற்று அந்த அதிர்ச்சியினால். ரங்கநாதன் அவள் முகத்தை நாடிக் குனிந்தான்.

ருக்குவின் நெஞ்சு 'பக் பக்' என்று வெகு வேகமாக அடித்துக்கொண்டது. ஒரு விநாடி! ஒரே விநாடிதான்! அவள் மூச்சு அடைத்தே போய்விடும்போல் இருந்தது. அவன் முகம் அவள் முகத்துக்கு மேலே நெருங்கிவிட்டது. அடுத்த விநாடி அவனது கட்டுக்கடங்காத காதலின் சின்னமாக அவள் அதரங்களில் அவன் முத்திரை விழுந்திருக்கும். அவனது உதடுகளின் உஷ்ண ஸ்பரிசம் அவள் அதரங்களைக் கனிய வைத்திருக்கும். அவள் தன்னை மறந்து, உலகத்தையே மறந்து, தன் தலைவிதியைக்கூட மறந்து, அவன் வசப்பட்டுப் போயிருப்பாள்!

ஆனால்?—

அவன் துடிக்கும் உதடுகள் அவள் இதழ்களை நெருங்கிய தருணத்திலே, அவன் தலைக்குமேலே எதிர்ச் சுவரில் மாட்டியிருந்த ஒரு படத்தின்மீது எதிர்பாராத விதமாக அவள் பார்வை விழுந்தது. படத்தில் கண்ணனின் காளிங்கமர்த்தனக் காட்சி! காளிங்கனின் நாக்குகளைக் கையால் பற்றி இழுத்து, அவன் கொட்டத்தை யடக்கி, அவன் படத்தின் மீது நின்று கண்ணன் நர்த்தனம் செய்யும் காட்சி! வெற்றிக் களிப்புடன் ஆனந்த நடனம் புரியும் கண்ண பெருமான் அவள் தோல்வியைக் கண்டு ஏசி நகை புரிவதுபோல் இருந்தது அக்காட்சி, அவளுக்கு!

சரேலென்று அவன் அணைப்பினின்றும் திமிறிக்கொண்டு எழுந்தாள் ருக்கு. ரங்கநாதனே திடுக்கிட்டுப் போனான். எனினும் கைக்கு எட்டிய கனி; கட்டிலை விட்டு நழுவிவிடும்

போல் இருக்கிறது. அத்தனை எளிதில் விட்டுவிட மனம் வருமா அவனுக்கு?

"ருக்கு, சும்மா இரு!" என்றான் அவளை விடமனமின்றி.

"முடியாது!"

"முடியாதா?"

"ஊஹூம்!"

"ருக்கு!"

"என்னை விடுங்கள்! விட்டு விடுங்கள்!"

"விட்டு விடுவதா? முடியவே முடியாது! ருக்கு! ருக்கு!! இதோ பார்! இதோ பார் என்னை!!!"

"மாட்டேன், விடுங்கள்!"

"ருக்கு!"

ருக்கு கட்டிலைவிட்டு அறை நடுவிலிருந்த வட்ட மேஜையண்டை வந்துவிட்டாள். அங்கிருந்து கட்டிலை ஒரு முறை பார்த்தாள். ரங்கநாதன் தலையணைமீது ஒரு கையை வைத்துத் தலையைத் தாங்கிய வண்ணம் சாய்ந்த நிலையில் படுத்திருந்தான். அவள் பார்வை அந்தக் கண்ணன் படத்தின்மேல் பாய்ந்து மீண்டும் கட்டிலின்மீது விழுந்தது. புஷ்பச்சரங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்த அந்தக் கட்டில் ஒரு சேஷசயனம் போல் இருந்தது அவள் கண்களுக்கு. அந்தக் கட்டிலில் ரங்கநாதன் படுத்திருந்த காட்சி, பாற்கடலில் பெருமான் சேஷசயனத்தில் பள்ளிகொண்டிருந்த காட்சி போலத் தோன்றியது அவளுக்கு. அவள் மெய் சிலிர்த்தது. அவளையும் அறியாமல் அவள் கரங்கள் குவிந்தன.

அவள் கைகூப்பி வணங்குவதைக் கண்டான் ரங்கநாதன். அவனுடைய கோபத் தீ கொழுந்து விட்டெரிந்தது. உதடுகளை மிகுந்த வெறுப்புடன் கடித்துக்கொண்டே, "போதும்! பாசாங்குக்காரி! உன் மாய்மாலமெல்லாம் இங்கே வேண்டாம்!" என்றான்.

அவன் கடுகடுப்புடன் கூறிய வார்த்தைகள் அவள் காதில் விழாதபடி ஓர் ஓசை உண்டாயிற்று! அண்ட பகிரண்டங்களும் நடுநடுங்கும்படி வானத்திலிருந்து ஒருபேரிடி விழுந்தது. காற்றின் சீற்றம் மேற் கூரையின் வழியே, 'உஷ் உஷ்' என்று

வீரிட்டது. வானவீதியில் துள்ளியோடிய மின்னல் வெளிச்சம் கதவிடுக்குகளின் வழியாக அறைக்குள் துடித்து மறைந்தது.

ஆத்திரத்துடன் எழுந்தான் ரங்கநாதன். தடதட வென்று நடந்து ருக்குவின் அருகில் வந்தான். அவனது புருஷத்துவத்தின் மிதமிஞ்சிய வெறியும், அவள் இடங் கொடாமல் திமிறிக்கொண்டுபோன ஆத்திரமும் சேர்ந்து, அவனை ஒரு மிருகம் ஆக்கிவிட்டன. அவனது மூளைவானில் அறிவு அஸ்தமனம் ஆகிவிட்டது! அவனது பலங்கொண்ட கைகள் அவளை இறுகப் பிடித்துத் தழுவிக்கொண்டன. அவன் மிருக பலத்தினிடையே தப்ப வழியறியாது தவித்தாள் அவள். முகத்தைப் பலவந்தமாகத் தன் முகத்துடன் சேர்த்தான் அவன். அதே சமயத்தில் மேற் கூரையிலே ஓடுகளின் வழியாக ஆயிரம் சர்ப்பங்கள் சீறி எழுவதுபோலச் சூறைக் காற்றின் கோஷம்! அதே விநாடியில் கீழே கொல்லைப்புறத்திலே 'மா. . . .ஆ....ஆ......!' என்று மரணத்தின் கடைசிக் கூக்குரல்! 'பார்!' என்று இடியின் பங்கரமான சிரிப்பு!

ருக்குவின் செவிகளில் 'மா....ஆ...ஆ......!' என்று வீரிட்டெழுந்த அந்தப் பயங்கரமான குரல் கர்ண கடூரமாக விழுந்தது. தன் பலத்தை யெல்லாம் திரட்டிக்கொண்டு திமிறி அவன் பிடியினின்றும் விடுவித்துக்கொண்டாள். அடுத்த விநாடியே மாடி அறையின் கதவைத் திறந்தாள் மளமளவென்று இறங்கிக் கீழே ஓடினாள்.

ஊரையே நிர்த்தூளிப் படுத்துவது போன்ற காற்றும் மழையும் வராந்தாவை வதைத்துக்கொண் டிருந்தன! ரங்கநாதன் உள்ளத்தையே நிர்த்தூளிப் படுத்திய காற்று மழை ஓய்ந்தது! அவன் பைத்தியம் பிடித்தவன்போல் வராந்தாவைப் பார்த்தபடி நின்று போனான்!

## 13

## ஈசுவர சங்கல்பம்

கூடத்து மூலையில் ஒரு ஹரிக்கேன் விளக்கு, சின்ன தாக்கப்பட்டு வைத்திருந்தது. அவசர அவசரமாக ருக்கு அதை எடுத்துக்கொண்டு கொல்லைப்பக்கமாக ஓடினாள். தாழிடப்பட்டிருந்த கதவுகளை யெல்லாம் திறந்துகொண்டு அவள் பதைக்கப் பதைக்க கொல்லைப்புறம் இருக்கும் கொட்டில்லண்டை போனாள். ஹரிக்கேன் விளக்கைப் பெரி தாக்கினாள்! அந்த விளக்கின் வெளிச்சத்திலே கொட்டிலில் மாடுகள் கட்டியிருந்த பக்கத்தைப் பார்த்தாள். அங்கே கண்ட பயங்கரமான காட்சி அவள் கையிலிருந்த ஹரிக் கேன் விளக்கையே கைநழுவச் செய்துவிட்டது.

கொட்டிலின் வெளி முற்றம் முற்றும் ஒரு சிறு ஏரிபோல் தண்ணீர் நிரம்பியிருந்தது. அந்த நீர், முற்றத்தை நிறைத் துத் தாழ்வாரத்திலும் தவழ்ந்துகொண் டிருந்தது. ஜலம் துளும்பிக்கொண் டிருந்ததாழ்வாரத்தில்தான் மாடுகள் கட்டப் பட்டிருந்தன. அந்த மாடுகளில் ஒன்று தாழ்வாரத்தில் குப்புற விழுந்து போய், அதன் கால்களும் கழுத்தும் கோணல் மாணலாக இழுத்துக்கொண் டிருந்தன. அந்த மாட்டுக்கு ஏதோ ஒரு வலி கண்டிருப்பதுபோன்ற தோற்றம். அதன் வாயிலிருந்து நுரை தள்ளிக்கொண் டிருந்தது. கண்களில் பீளை கட்டி விழிக்கடையில் ஜலம் முத்துப்போல் திரண்டிருப் பதைப் பார்த்தால், அந்த மாடு படும் அவஸ்தை நன்றாகப் புலப்படும். அம் மாட்டின் பின்னால் மேற் கூரை சரிந்து போய், ஓடுகள் தாழ்வாரத்தில் விழுந்து சுக்கு நூறாக உடைந்து குவியலாய்க் கிடந்தன. கூரை விழுந்து போன தால் மழை ஜலம் தடையின்றிப் பொழிந்து, அந்த மாட்டைச்

சுற்றிப் பிரவாகமாக ஓடியது. வைக்கோலும் சாணமும் குப்பையும் கூளமும், மழை ஜலத்தில் ஊறிக் குழம்பி, அந்தப் பிரதேசம் முற்றும் சகிக்க முடியாத நாற்றமெடுத்தது. விழுந்து கிடந்த மாட்டுக்கும் நோயின் கொடுமையால் 'அழுக்கு' ஏற்பட்டு அதன் அழகான வெள்ளைச் சரீரம் கூடப் பாசி பிடித்ததுபோல விகாரமாகத் தோன்றியது.

ருக்குவின் பார்வை அந்த மாட்டின்மேல்தான் பட்டது. அன்று காலையில், தான் முதல் முதலாகக் கண்டு அழகாக இருக்கிறதென்று நினைத்த அதே மைக்கண் மாடுதான். அதன் மைக்கண்களில் அழகு அழிந்து, விகாரம் தென்படு வதைக் கண்டாள் அவள். அந்தக் கண்களில் காலையில் தோன்றிய கம்பீரத்தைக் காணவில்லை. மரண வேதனையின் பயங்கரமான விழிப்புத்தான் இருந்தது. ருக்கு பதறிப் போனாள். விளக்கைத் தூக்கிக்கொண்டு ஒரே ஓட்டமாகத் திரும்பிக் கூடத்துக்கு வந்து அவள் தகப்பனாரை எழுப்பினாள். அவள் கூக்குரல் கேட்டுச் செங்கமலமும் விழித்துக்கொண் டாள். ருக்கு ஒரே வார்த்தைதான் பேசினாள். "அப்பா, புது மாட்டுக்கு வலி! சீக்கிரம் வாருங்கள்."

தேவராஜ ஐயங்கார் விஷயம் புரியாமல் ருக்குவின் பின்னால் ஓடினார். செங்கமலம் பகல் முற்றும் உழைத்து அலுத்துப்போய் நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். ருக்கு வின் குரல் அவளுக்குக் கனவில் கேட்பதுபோலவே இருந் தது. ஆனால் கண் விழித்துக்கொண்டபின் ருக்கு நிஜ மாகவே எதிரில் நிற்பதைக் கண்டு அவள் திடுக்கிட்டுப் போனாள். 'இப்படிக்கூட ஒரு பொண் உண்டா? ஆத்துக் காரர் ஒத்தர் மாடியிலே வந்திருக்கார்; இன்னிக்குத்தான் ஒரு நல்ல நாள் என்று பண்ணி வச்சோம். அச்சானியம் போல் பாதி ராத்திரியிலே கதவைத் திறந்துண்டு வந்தி ருக்கே!' என்று நினைத்துக்கொண்டே அவளும் எழுந்து அவர்களைப் பின்பற்றிக் கொல்லைப்புறம் சென்றாள்.

அவர்கள் கொல்லைப்புறத்தை அடைந்தபோது அந்த மாட்டின் வலிப்பெல்லாம் அநேகமாக நின்றுபோய்விட்டது. சற்றைக்கொருதரந்தான் அதன் கழுத்தும் கால்களும் வலித்

துக்கொண்டன. ஆனல் அதன் கண்கள் நிலைகுத்திப்போய் நின்றன. அதன் வயிறு உப்பிப்போய், ஒரு சிறிய குன்று போல ஆகிவிட்டது. அது, தன் கழுத்தையும் நீட்டிவிட்டது. அதன் முகமும் தரையோடு தரையாகச் சாய்ந்து நிலைத்தது. நெஞ்சும் விலாவும் மெதுவாக விம்மித் தணிவதைக் கவனித்தால்தான் இன்னும் உயிர் இருக்கிறது என்று தெரியும். ஆனல் மழையோ கொட்டு கொட்டென்று கொட்டுகிறது. முற்றத்துச் சாக்கடையில் குப்பையும் கூளமும் அடைத்துக் கொண்டு ஜலம் தேங்கிவிட்டதால், முற்றம் நிரம்பித் தாழ்வாரமும் இன்னும் சிறிது நேரத்துக்குள்ளாகத் தண்ணீரில் மூழ்கிப் போகும்போல் இருந்தது. சாகக் கிடக்கும் மாட்டை அதன் ஜோடியாக இருந்த மற்றொரு மாடு கண்கலங்கிப் பார்க்கும் காட்சி பரிதாபமாக இருந்தது.

தேவராஜ ஐயங்கார் ஒன்றும் தோன்றாமல் நின்று போனர். செத்துக்கொண் டிருந்த அந்தப் புதிய வெள்ளை மாட்டின்மீதுதான் அவர் கவனம் முற்றும் இருந்தது.

"அப்பா! துரையப்பனையாவது கூப்பிடலாமா?"

"இந்த மழையிலேயா? அவன் வீட்டுக்கு எப்படிப் போவது? அவன் வந்துதான் என்ன பண்ணப்போகிறுன்? இன்னும் சில நிமிஷங்கூடத் தாங்காதுபோல் இருக்கிறதே!"

ஆம்! தாங்காதுபோல்தான் இருக்கிறது. ஏன்? இதோ விலாவில் தென்பட்ட விம்மல் எழுச்சிகூட அடங்கிவிட்டது. நெஞ்சுதான் நிதானமாக விம்மித் தணிகிறது. இப்போது மாட்டின் மூச்சு ஓட்டம் எல்லாம் நெஞ்சுக்கும் மூக்குக்கும் இடையேதான். அது மாத்திரம் எத்தனை நேரம்? அதோ அந்தியகாலமும் வந்துவிட்டது. 'ஜோ' வென்று கேட்கும் மழை யிரைச்சலுக்கிடையே மகா கோரமான மின்னல் ஒன்று வெட்டிச் சென்றது. அந்த மின்னல் வெளிச்சத்தில் கொட்டில் முற்றத்தில் தேங்கிய தண்ணீரில் நெஞ்சையே கலங்க வைக்கும் பல பயங்கர ரூபங்கள் தென்பட்டன. 'டமடமா!' வென்று பிரம்மாண்டமான சப்தத்துடன் வானம் உடைந்து மழைமேகங்களை எல்லாம் அப்படியே கக்க வைத்துவிட்டது. அன்று முற்றுமே பெய்திராத 'பேரா

மழை' பெய்தது! ஆனால் சிறிது நேரந்தான்! திடீரென்று மழை நின்றது! காற்று, சீறிப் பாய்ந்து கருக்கிருட்டில் திசை தெரியாமல் அலைந்தது. ஆனால் அந்தக் கருக்கிருட்டிலும் வழி தெரிந்து வந்து சேர்ந்தான் காலன். கொட்டிலில் மரணத்துடன் போராடிக்கொண் டிருந்த மாட்டின் போராட்டத்துக்கும் முடிவு வந்தது. அதன் நெஞ்சுக்கும் மூக்குக்கும் இடையே நூலிழைபோல் ஓடிக்கொண் டிருந்த கடைசி மூச்சும் பிரிந்தது. காலன் வந்தவழியே திரும்பினான். காலையில் ஆரம்பித்த மழையும் ஓய்ந்தது!

மாட்டின் மரணக் காட்சியைப் பார்த்த வண்ணம் பிரமிப்படைந்தவள்போல் நின்றிருந்தாள் ருக்கு.

தேவராஜ ஐயங்காரின் 'ஹூம்!' என்ற பெருமூச்சுத்தான் அவளுக்குத் தன்னுணர்வை உண்டாக்கிற்று. அவர் பக்கம் திரும்பிப் பார்த்தாள். "ஹூம்! ஐந்து நாளைக்கு முன் கட்டிய ஆகாசக் கோட்டை! இதோ தரையோடு தரையாகி விட்டது!" என்று அவர் என்றைக்குமே இல்லாத சோகக் குரலில் பேசிய பேச்சைக் கேட்டு ருக்குவுக்கே அழுகை வந்துவிட்டது. அதோடு சற்றுமுன் ஏற்பட்ட அநுபவங்களின் ஞாபகமும் சேர்ந்தது. அவள் துக்கத்தை அடக்க முடியாமல் கேவிக் கேவி அழுதுவிட்டாள்.

"ஆமாம். நல்ல நாளும் போதுமா நன்னாத்தாண்டியிருக்கு, நீ இப்படி அழறது? இப்ப என்ன குடி முழுகிப் போச்சுன்னு அலையக் குலைய மாடியை விட்டு இறங்கி வந்தே? இங்கே இருக்கப்பட்டவா பாத்துக்கமாட்டாளா என்ன? அந்தப் பிள்ளையாண்டான்தான் என்ன நெனச்சுக்க மாட்டார்! அப்படித்தான் ஓடி வந்தையே! இப்ப என்ன ஆச்சு! —நூர்த்தம்பது ரூபா நஷ்டம்! பணத்துக்குப் பணமும் போச்சு; மாட்டுக்கு மாடும் போச்சு. இவர் பண்ணற காரியம் எல்லாம் இப்படித்தானே! முந்நூறு ரூபா போட்டு இப்ப மாடு வாங்காதபோனா என்ன? இரண்டு நல்ல புடைவை, நகை நட்டு ஏதாவது நாளைக் குறைக்காமே பண்ணியிருக்கலாமா? உம்! யாரைச் சொல்றது? எல்லாம் நான் வந்த வழி!" என்று புலம்பினாள் செங்கமலம்.

"செங்கமலம்! என்ன அசட்டுத்தனமான பேச்சு. நாமாகச் செய்கிற காரியமா இதெல்லாம்? ஈசுவர சங்கல்பம். இந்தப் பணம் நமக்கு வந்த வேளை அப்படி! அது இப்படி விரயமானதுகூட ஏதோ நல்லதென்றுதான் நினைக்கவேண்டும். இந்தப் பணம் நல்ல காரியத்துக்குத் தகுதியற்றதாயிருக்கலாம். அதனால்தான் இப்படி விரயமாச்சு. அந்த மட்டும் இதைக்கொண்டு குழந்தைக்கு ஏதாவது செய்திருந்தால், அதனால் என்ன என்ன ஆபத்து நேருமோ?" என்று வைராக்கியத்துடன் பேசினார் தேவராஜ ஐயங்கார்.

அவரா இப்படிப் பேசுகிறார் என்று செங்கமலமே திகைத்துப் போனாள். ஒரு நாளும் இப்பேர்ப்பட்ட வேதாந்த பரமான பேச்சுக்களை அவர் வாயிலிருந்து அவள் கேட்டதே இல்லை. இத்தகைய சந்தர்ப்பங்களில்கூடப் பரிகாசமாகப் பேசி, அவள் மனத்தைப் புண்படுத்திவிட்டுத் தம் போக்காக இருந்துவிடும் தேவராஜ ஐயங்காரே மனமுருகி இப்படிப் பேசியது, செங்கமலத்துக்குப் பெருத்த ஆறுதலை அளித்தது.

"உம்! அவ்வளவுதான் பிராப்தம். யார் யார் எவ்வளவு கொடுத்து வச்சாளோ அவ்வளவுதானே கிடைக்கும்?" என்று சலித்துக்கொண்டே அவள், "மழை கொஞ்சம் நின்னிருக்காப்போலே யிருக்கே. இந்த ஹரிக்கேன் லேட்டை எடுத்துண்டு போய்த்தொரையப்பனையாவது கூட்டிண்டு வாங்கோ. மாடு எப்ப வாங்கப் போறுன்னு எரவாணத்திலே யமன் காத்துண் டிருந்தான். எரவாணமே இடிந்து விழுந்து செத்தது அது!" என்று சொல்லிவிட்டுத் திரும்பினாள் செங்கமலம்.

ருக்குவும் தேவராஜ ஐயங்காரும் அவளைப் பின்பற்றி உள்ளே சென்றனர். தேவராஜ ஐயங்கார் விளக்கை எடுத்துக்கொண்டு வாசலுக்கு வந்தார். வாசற்கதவு திறந்திருந்தது. யார் திறந்தது. என்றெல்லாம் சிந்திக்க அவர் மனம் செல்லவில்லை அத்தருணத்தில். விளக்கும் கையுமாக வீதிக்கு வந்து துரையப்பனை அழைக்க நடையைக் கட்டினார்.

செங்கமலம் கூடத்துக்கு வந்து ஒரு தூணில் சாய்ந்தபடி உட்கார்ந்தாள். ருக்கு ஊஞ்சலில் போய்க் குப்புறப் படுத்துக்

கொண்டாள். சற்றுமுன் கொல்லைப்புறத்திலே அவளுடைய பெற்றோர்கள் பேசினதில் சில வார்த்தைகள் அவள் மனத்தில் அநேகவிதமான அர்த்தங்களை உண்டுபண்ணிக் கலக்க லாயின. 'யார் யார் எவ்வளவு கொடுத்து வச்சாளோ அவ் வளவுதான் கிடைக்கும்!'—தாயின் வார்த்தை. அர்த்த புஷ்டி நிறைந்த வார்த்தை அது. 'நான் கொடுத்து வைத்தது இவ்வ ளவுதானா?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள் ருக்கு. 'அவர் என்ன நினைப்பார்? இப்படி மாடியைவிட்டு ஓடிவந்து விட்டேனே?' என்று அடுத்த கேள்வி. ஆனால் உடனே ஒரு பதில். தன் தந்தையின் வார்த்தைகளில் இருக்க வேண்டுமா இந்தக் கேள்விக்குப் பதில்? 'ஈசுவர சங்கல்பம்!'

'ஆம் ஈசுவர சங்கல்பம்தான். இல்லாவிட்டால் அந்தச் சந்நியாசி சரியான சமயத்தில் ஏன் குறுக்கிட வேண்டும்? இப்படி நிபந்தனை எல்லாம் போடவேண்டும்? அவர் கட்ட ளையை மட்டும் நான் மீறியிருந்தால் என்ன ஆகும்?'

சற்று நிதானமான யோசனை. 'இதற்குள்ளாக அந்தப் புதுமாடு ஏன் திடீரென்று சாகவேண்டும்? கூரை இடிந்து அதன்மேலே விழவேண்டுமா? ஏன்? ஏன் இதெல்லாம்?... அந்தப் பணம்! அப்பா எனக்கும் அவருக்குமாகச் செய்ய வென்று கொண்டு வந்த அந்தப் பணம், ஏன் இப்படி வீணாக வேண்டும்?......ஆமாம்! அப்பாவேதான் சொன்னாரே: "இந்தப் பணம் நல்ல காரியத்துக்குத் தகுதியில்லாததா யிருக்கலாம். அதனால்தான் இப்படி விரயமாச்சு. அந்த மட்டும் இதைக் கொண்டு குழந்தைக்கு எதாவது செய்திருந் தால், அதனால் என்ன ஆபத்து நேருமோ?" என்று. வாஸ்த வம்! இந்தப் பணத்தைப் போட்டு வாங்கின மாடுகளில் ஒன்று இதோ பிணமாகி விட்டது. இதை எங்களுக்காகச் செலவழித்திருந்தால்?—எங்களில் ஒருவருக்கு இந்தக் கதி...' என்று கதிகலங்கத் தக்க எண்ணம் ஒன்று!

ருக்குவின் தேகம் நடுங்கியது. துக்கம் அவள் நெஞ்சைப் பிளந்துகொண்டு வந்தது. தன்னையும் மீறிக் 'கோ' வென்று கதறினாள்.

'இந்த நாள் பார்த்தா கப்பல்போலே யிருந்த புதுமாடு சாகவேண்டும்? அன்னிக்கே மாப்பிள்ளை எழுதின கடுதாசி,

பெருமாள் விளக்கிலே கருகி மூளியாப் போனதும் அந்த விளக்குப் படர்ந்தெரியறபோது, இந்தப் பொண் சேவிச்சதும் மனசை என்னமோ பண்ணித்து. இப்ப மாடு ஒண்ணு சாக ணுமா? இதெல்லாம் எதுக்கோ? உம். இதோடயாவது பிடிச்ச பீடை பரிகாரமாகட்டுமே!' என்று ஏதேதோ எண்ண மிட்ட வண்ணம் தூணோடு தூணாகத் தூங்கி வழிந்துகொண் டிருந்த செங்கமலத்துக்கு ருக்குவின் அழுகைச் சப்தம் திகிலை உண்டாக்கிற்று. சட்டென்று எழுந்து போய் ஊஞ்லில் ருக்கு வின் பக்கத்தில் அமர்ந்து, அவள் முதுகைத் தடவியபடியே, "ருக்கு, என்னடீ இது? ஏன் இப்படி அழறே? இன்னிக்கி இப்படியெல்லாம் அழப் படாதுடீயம்மா! புத்தி தெரிஞ்ச பொண். இதெல்லாம் தெரிய வேண்டாமா? என்னமோ அவ்வளவுதான் பிராப்தம். மாடு போச்சுன்னு இப்படியா அழறது. உங்க அப்பா சொல்றுப்பலே, இது ஏதோ பீடா பரிகாரம்னுதான் நெனச்சுக்கணும். அசடு, அழாதே! இப்படி நடு ராத்திரியிலே கீழே யிறங்கி வரலாமா? அவர் தான் என்ன நெனச்சுக்குவார்?" என்றுள் செங்கமலம்.

ருக்கு பதிலே சொல்லவில்லை. அவள் அழுகையைக் கொஞ்சம் அடக்கிக்கொண்டாள். 'அவர் என்ன நினைத்துக் கொள்வார்? என்ன வேண்டுமானுலும் நினைத்துக்கொள்ளட் டும். நான் இறங்கி வராமல் இருந்தால் என்ன நேர்ந்திருக் கும்? அவர் ஆசை பூர்த்தியாகி யிருக்கும். ஆனுல்—ஆனுல்? அதனுல் ஆபத்து வந்திருக்கும். சந்நியாசியின் வார்த்தை பொய்யாகுமா? "ஒரு மண்டல காலம் தாம்பத்திய உறவு கூடாது. அதற்கு உன் மன உறுதி வேண்டும்" என்றுரே நான் மன உறுதியை இழந்திருந்தால், என் தோஷம் அவரைக் கொன்றிருக்கும். நல்ல வேளை! அவர் கையி லிருந்து நான் தப்பினேன். அவர் உயிரும் மிஞ்சியது. இல்லா விட்டால் அந்தச் சமயத்தில்—அவருக்கு ஆபத்துச் சம்பவிக்க விருந்த அதே சமயத்தில்—அவர் உயிர் என் மன உறுதி யினுலும் சந்நியாசியின் ஆக்ஞையினுலும் என் மாங்கல்ய பலத்தினுலும் பகவான் கருணையினுலும் மீட்கப்பட்ட அதே சமயத்தில்—உயிருக்கு உயிர் கொடுப்பதுபோல, அந்தப்

புதுமாடு இறந்து போயிற்றே; காலையில்தான் அந்த மாட்டைக் கண்டேன். அதன் மைக்கண்ணும் கம்பீரமான வெள்ளை நிறமும் என் மனத்தையே கவர்ந்துவிட்டன. அதைப் பரிவு டன் தடவிய போதே அந்த ஆந்தை ஒரு சொல் சொல்லியது. என் கைதான் என்ன, எமன் கையோ! கண்தான் என்ன கண்ணோ! மறுநாள் விடிவதற்குள் மாண்டு போச்சே அந்த மாடு! அதற்குத்தான் அத்தனை கவர்ச்சி ஏற்பட்டதோ அந்த மாட்டினிடத்தில் எனக்கு? விதியின் விளையாட்டு! விதியின் விசித்திரமான விளையாட்டு!! விதியின் பயங்கரமான உண்மையை விளக்கும் அதிசயமான விளையாட்டு இது!!! இந்த விளையாட்டின் முடிவுதான் என்ன?'' என்றெல்லாம் அவள் மனம் மறுபடியும் சிந்தனை செய்யத் தொடங்கிற்று.

ஆனால் அவள் எண்ணங்களை யெல்லாம் அறிந்தாளா என்ன செங்கமலம்? "ருக்கு, போதும். மூஞ்சியை நன்னு அலம்பித் துடைச்சுண்டு மாடிக்குப் போ. இதெல்லாம் சுத்தமா நன்னுயில்லே'' என்றாள்.

"அம்மா, என்னை ஒன்றும் தொந்தரவு பண்ணாதே; என் மனசு சரியாகவே யில்லை.''

"மனசுமாச்சு, மண்ணுமாச்சு. உன் மனசையெல்லாம் அவர் அறிந்து நடந்துக்கணும் இப்பவே. போடி போ!''

இந்தத் தர்மசங்கடத்துக்கு என்ன செய்வாள் ருக்கு? மறுபடியும் மாடிக்குப் போவதா? அல்லது உண்மையைத் தாய்க்குச் சொல்வதா? அந்த உண்மை ரகசியமாக வல்லவோ இருக்கவேண்டும்? அதை எப்படிச் சொல்வது அவளிடம்? மாடிக்குப் போகாமல் இருப்பதற்கு வேறு என்னதான் காரணம் சொன்னாலும் செங்கமலத்துக்கு நம்பிக்கை பிறக் காது. அன்றியும் அவளுக்கு அப்போது மனம் ஒரே குழப்ப மாக இருந்தது. என்ன செய்வதென்ற தோன்றவில்லை.

செங்கமலம் கண்டிப்புடன் மீண்டும் ஒரு தடவை, 'ரொம்ப அழகாயிருக்கு, உன் காரியமெல்லாம்! எழுந்தி ருந்து போடீ!'' என்று அதட்டியது போலக் கூறின சொற்க ளைக் கேட்டு, ருக்கு மனமின்றியே ஊஞ்சலை விட்டு எழுந்தாள். தட்டுத்தடுமாறி மாடிப்படி ஏறினாள். வராந்தாவைக் கடந்து மாடியறையில் நுழைந்தாள்.

அறை வெறிச்சென் றிருந்தது. ரங்கநாதனைக் காண வில்லை!

வராந்தாவுக்கப்பால் வானம் இப்போது நன்ருக வெளுத் துப் போயிருந்தது. அங்கே இப்போது மேகங்கள் இல்லை; மழையில்லை; மின்னல் இல்லை; இடியில்லை. காற்றுக்கூட நின்று போயிற்று. ஆனல் அத்தனையும் ருக்குவிடம் போய்ச் சூழ்ந்துகொண்டனவே! அவள் மூளையில் மின்னல் வெட்டி யது. இருதயத்தில் இடி யிடித்தது. கண்களில் மழை பொழிந்தது; கால்களில் காற்றடித்தது; சிந்தனை மேகங்கள் குமுறி அவளைச் சித்திரவதை செய்தன.

'அவர் எங்கே! எங்கே? எங்கே?'

எங்கேயோ! யாருக்குத் தெரியும்? யாரைக் கேட்க முடியும் அவள்? நிற்க முடியவில்லை அவளால். அதோ தொபீரென்று சாய்கிருள் பாவம்!

## 14

### பிரயாணி

நிர்மானுஷ்யமான காடுகள், வெறிச்சென்ற வயல் வெளிகள், 'அம்போ'வென்று தோன்றும் பொட்டல்கள், கண்ணுக்கெட்டிய தூரம் வெறும் கட்டாந்தரை—இம்மாதிரியான பிரதேசங்களுக்கு மத்தியில், 'கொக்கரக்கோ!' வென்று கூரைமேல் ஒற்றைக் கோழி கூவிக்கொண்டு நிற்பதுபோல இருக்கும் கணக்கற்ற சின்ன ரெயில் ஸ்டேஷன்களில் அதுவும் ஒன்று. இப்படிப்பட்ட ரெயில் ஸ்டேஷன்கள் தென்னிந்திய ரெயில்வேயில் ஏராளமாகக் கிடக்கின்றன. அந்தச் சின்ன ரெயில் ஸ்டேஷன்களில் ஒரு நாளைக்கு ஒரு தடவை அல்லது இரண்டு தடவைக்குமேல் எந்த ரெயிலும் நிற்காது. மெயில், எக்ஸ்பிரஸ் போன்ற பெரிய ரக வண்டிகள் அந்த ரெயில்வே ஸ்டேஷன்கள் இருப்பதைக்கூட மறந்து, அங்கே வரும்போதுதான் முன்னைவிட அதி வேகமாக ஓடி அவற்றைக் கடந்து செல்லும். ஒருகால் அப்படிப்பட்ட சின்ன ஸ்டேஷன்கள் கூடத் தாம் போகும் பாதையில் இருப்பதை அறிந்துகொள்வது, தங்கள் கௌரவத்துக்குக் குறைவு என்று அந்த வண்டிகள் கருதுகின்றன போலும்.

பகல் வேளையிலேயே இந்த ரெயில் ஸ்டேஷன்கள் தூங்கி வழிந்துகொண்டிருக்கும். ஸ்டேஷன் மாஸ்டர் பெரும்பாலும் ஸ்டேஷனில் இருக்கமாட்டார். ஸ்டேஷனுக்கு அடுத்தாற்போல் அவருக்கும் அவரது குடும்பத்துக்குமென்று கட்டியிருக்கும் ஜெயிலில்—ஆம் ஜெயில் போலத்தான் இருக்கும் அந்தக் 'குவார்ட்டர்ஸ்' — தம் மனைவி மக்களுடன் 'வாழ்ந்து' கொண்டிருப்பார். ஸ்டேஷன் 'கூலி'தான் ஸ்டேஷன் பெஞ்சு ஒன்றில் உட்கார்ந்தபடியே இருபத்துநாலு மணி நேரமும் உறங்கிக்கொண்டிருப்பான்.

வண்டி வரும் சமயத்தில்தான் ஸ்டேஷன் மாஸ்டர் ஆஜராவார். அதற்குக் கொஞ்சம் முன்னுடிதான் 'புக்கிங் கிளார்க்கு'ம் வந்து 'கௌன்டரி'ல் உட்காருவார். அந்தப் புக்கிங் கிளார்க்குக்கு ஒரு தினத்தில் சுமார் இரண்டு மணி நேரங்கூட வேலை இருக்குமோ இராதோ? ஒரோர் தினம் இரண்டு மூன்று டிக்கட்டுகள் விற்பார் அவர். சில தினங்க ளில் ஒரு டிக்கட் விற்பனையாவதே அபூர்வமாக இருக்கும். டிக்கட் வாங்க வருகிறவரிடமிருந்து ஒரு முழு ரூபாயாக அவர் கையில் வாங்கிப் பல நாள் ஆகியிருக்கும். ஒரு முழு ரூபாய்க்கு அவர் சில்லறை கொடுத்தும் அநேக நாள் ஆகியிருக்கும். பகல் வேளையில் எங்கே வெயில் காய்ந்தாலும் காயாவிட்டாலும், இந்தமாதிரி சின்ன ரெயில்வே ஸ்டேஷன்களில் நெருப்பைப் போட்டுப் பொசுக்கும். மழைக் கால மானுலோ கேட்க வேண்டிய தில்லை. மழை முற்றும் அங்கேதான். பகலில் 'அவந்தரை' யாகக் கிடக்கும் அந்த ஸ்டேஷன்களில், இரவில் பேய்கள்கூடச் சஞ்சரிக்கப் பயப்படும். ஆனுல் ஸ்டேஷன் மாஸ்டர், புக்கிங் கிளார்க், போர்ட்டர், இத்தியா திகள் நடமாடுகிருர்களே என்று கேட்கலாம். அதெல்லாம் பழக்கம் அவர்களுக்கு!

இந்தமாதிரி ஸ்டேஷன்களில் ஒன்றிலே, அன்றிரவு கொட்டாத மழையும் கொட்டிக்கொண் டிருந்தது. ஸ்டே ஷன் பிளாட்பாரத்திலிருந்த ஒரே 'லாந்தல்' விளக்குக்கூட மழைச்சாரலில் அணைந்து போயிற்றோ என்னவோ! அல்லது ரெயில் வருவதற்குச் சற்று முன்புதானே இந்த லாந்தலைக் கொளுத்துவது சம்பிரதாயம்! எனவே அதை ஸ்டேஷன் போர்ட்டர் இன்னும் கொளுத்தியிருக்க மாட்டான். இது ரெயில்வேச் சிக்கன முறையைச் சேர்ந்த விஷயம். நிற்க.

ஸ்டேஷன் அறையில் மாத்திரம் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அந்த அறைக்கு அடுத்தாற்போல் இருந்த சிறு ஹாலில் ஒரு லாந்தல், 'மினுக்மினுக்' கென்று காற்றில் அலைபட்ட வண்ணம் எரிந்துகொண் டிருந்தது. அந்தச் சிறு ஹால்தான் ரெயிலுக்காகக் காத்திருக்கும் பிரயாணிகள் தங்குமிடம். ஆனுல் அங்கே அந்தக் கருக்கிருட்டிலும்

காற்று மழையிலும் எந்தப் பிரயாணி வரப்போகிருன்? நல்ல நாளிலேயே நாயகம்? இப்போது கேட்கவேண்டுமா? எனினும் அங்கே யாருமே இல்லாமற் போகவில்லை. லாந்தல் வெளிச்சம் படாத ஓர் இருட்டு மூலையில் ஒரு பிச்சைக்காரன் மழை, காற்று எதையும் லக்ஷ்யம் பண்ணுமல் நிம்மதியாகத் தூங்கிக்கொண் டிருந்தான். ஹாலில் போட்டிருந்த ஒரே பெஞ்சியில் சொறிபிடித்த நாய் ஒன்று மழையில் அகப்பட்டு நனைந்துபோய்த் தேகம் வெடவெடவென்று குலைத்தபடி நின்றுகொண் டிருந்தது.

நடு ராத்திரிக்கு மேலே வெகு நேரம் ஆகியிருக்கும். மழையும் காற்றும் நின்றபாடில்லை. ஆயினும் இந்த நேரத்தில்கூட ஸ்டேஷன் அறையில் ஸ்டேஷன் மாஸ்டர் ஓர் ஈசிசேரில் சாய்ந்தபடி தூங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தால் ஏதோ ஒரு வண்டி வரவிருக்கிறது என்று தெரியும். கௌன்டருக் கருகில் ஒரு ஹரிக்கேன் விளக்கை எதிரே வைத்துக்கொண்டு அந்த விளக்குக்கும் தனக்குமாகத் தூது சென்று திரும்பிக்கொண் டிருக்கும் கொசுக்களுடன் விளையாடிக்கொண் டிருக்கும் புக்கிங் கிளார்க்கைப் பார்க்கும்போது அவர் தலைவிதியைக் கண்டு இரங்கவே தோன்றும். ஆனல் அந்த மனுஷ்யருடன் ஒரு வார்த்தை பேசத்தான் யாராவது வந்திருக்கிருர்களா? காணேம்! போர்ட்டர் அறை வாசற்படியில் முடங்கியபடி ஏதோ முணுமுணுத்துக்கொண் டிருக்கிருன். வேறென்ன செய்வது அவன்?

இந்தக் கருக்கிருட்டிலே தேகம் முற்றும் வெடவெடவென்று குலைக்க, வேஷ்டி சட்டையெல்லாம் ஒரே தெப்பமாக நனைந்துபோய், தலை தெறிக்க ஓடி வந்த ஒரு பிரயாணி, ஸ்டேஷன் ஹாலில் நுழைந்து டிக்கட் கௌன்டர்ப் பக்கம் போனுன், அவனை வெறித்துப் பார்த்துக்கொண்டே நின்ற நாய் வள்ளென்று குரைக்க வாய் திறந்தது. ஆனல் அவன் நிலைமையை உணர்ந்துதானே என்னவோ, அவனும் தன்னைப்போல் சொட்டச் சொட்ட நனைந்துபோய்க் குளிர் பிடித்து ஓடிவந்திருக்கிறவன் என்பதை அறிந்து அநுதாபம் கொண்டதுபோல, திறந்த வாயைக்கூட ஒரு கொட்டாவியுடன் மூடிக்கொண்டது நாய்.

பிரயாணி, நாயையோ வேறெதையுமோ கவனிக்கவில்லை. நேராக டிக்கட் கௌன்டரண்டை போனுன். புக்கிங் கிளார்க்கை நோக்கி, "ஏன் ஸார், ஏதாவது வண்டி இப்போது வரப்போகிறதா?" என்று கேட்டான்.

இந்தக் குரலைக் கேட்டுப் புக்கிங் கிளார்க் சட்டென்று திரும்பிப் பிரயாணியைப் பார்த்தார். "ஏன்? எங்கே போக வேண்டும்?"

"எங்கேயா? எங்கேயாவது...உம். எங்கே போகிற வண்டி வரப்போகிறது?"

புக்கிங் கிளார்க்குக்கு இந்தப் பேச்சு விநோதமாக இருந்தது. எதிரேயிருந்த ஹரிக்கேன் விளக்கைப் பிரயாணியின் முகத்துக்கெதிராகத் திருப்பிப் பிடித்துக்கொண்டு கௌன்டரின் கண்ணுடி வழியாக அவனைப் பார்த்தார். தலைக் கிராப் கலைந்துபோய், அதிலிருந்து சொட்டிக்கொண்டிருந்த மழைத் தண்ணீரைக்கூடத் துடைத்துக்கொள்ளாமல், கண்கள் நெருப்பு உருண்டைகள்போல் ஜ்வலிக்க, விறைத்த பார்வையுடன் எதிரே நிற்கும் பிரயாணியின் தோற்றம், மனிதன் தானு என்றே சம்சயிக்கும்படி தோன்றியது அவருக்கு. அந்தக் கருக்கிருட்டில், கொட்டுகிற மழையில் சாதாரணமாக எந்தப் பிரயாணியும் வந்ததில்லை, அந்த ஸ்டேஷனுக்கு. எனவே கிளார்க் ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்துக்கொண்டே, "நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே போக வேண்டும்?" என்று கேட்டார்.

"எமலோகத்திலிருந்து வருகிறேன். அதை விட்டுப் போகவேண்டும். எங்கேயோ? எங்கேயாவது!"

இந்த வார்த்தைகளில் தொனித்த வெறுப்பையும் கோபத்தையும் நெஞ்சுத் துடிப்பையும் நொடிப்பொழுதில் உணர்ந்துகொண்டார் புக்கிங் கிளார்க். அதற்கு மேல் அந்தப் பிரயாணியிடம் வேறொன்றும் பேசாமல், "சென்னைக்குப் போகிற வண்டி இன்னும் கால்மணி நேரத்தில் வரும்" என்றுர்.

"இந்தாரும், ஒரு டிக்கட்" என்று பிரயாணி ஒரு பத்து ரூபாய் நோட்டைக் கௌன்டரில் வைத்தார்.

"சில்லறையாக இல்லையா?"

"உம்," பத்து ரூபாய் நோட்டை எடுத்துக்கொண்டு பிரயாணி மணிபர்ஸிலிருந்து சில ரூபாய்களையும் கொஞ்சம் சில்லறையையும் எடுத்து வைத்தான்.

பணத்தை எண்ணிப் பார்த்துவிட்டுப் புக்கிங் கிளார்க் ஒரு டிக்கட்டை எடுத்து அவன் முன் நீட்டினர்.

அடுத்த விநாடி பிரயாணி டிக்கட்டுடன் திரும்பி, ஹாலில் போட்டிருந்த பெஞ்சியில் போய் உட்கார்ந்து கொண்டான். பெஞ்சியின்மேல் சற்றுத் தூரத்தில் நின்றிருந்த நாய் இப்போது லொள்ளென்று ஒரு தரம் குரைத்தது. பிரயாணி இந்தக் குரைப்புச் சப்தம் கேட்டபின்தான் நாயைத் திரும்பிப் பார்த்தான். அது குரைத்துவிட்டுப் பெஞ்சியை விட்டுக் குதித்து ஓடி ஒரு மூலையில் பதுங்கிக்கொண்டது. 'சீ! நாயே, நீகூட என்னைப் பார்த்துக் குரைத்துவிட்டு ஓடுகிருய்? உன் பக்கத்தில் நான் உட்காருவது உனக்குக்கூடப் பிடிக்கவில்லை! ஹ்ூம்!' என்று மனத்துக்குள்ளேயே எண்ணிப் பெருமூச்செறிந்தான் அந்தப் பிரயாணி.

ஆனல் அவன் பெருமூச்சு விட்டுக்கொண்டும் எண்ணமிட்டுக்கொண்டும் அங்கே அதிக நேரம் உட்கார்ந்திருக்கவில்லை. போர்ட்டர் 'டண் டண்' என்று மணியடிக்கும் ஓசை அவன் செவிகளில் விழுந்தது. சட்டென்று எழுந்தான். தலைக் கிராப்பைக் கையாலேயே தட்டிக்கொண்டான். ஆடைகளை அப்படியே பிழிந்துகொண்டான். குறுக்கும் நெடுக்குமாக அந்த ஹாலில் ஏழெட்டுத் தடவை நடந்தான். அதற்குள் வண்டியும் வந்துவிட்டது. இப்போது பிளாட்பாரத்திலிருந்த லாந்தல் எரிந்துகொண் டிருந்தது.

பிரயாணி மளமளவென்று நடந்து சென்று ஒரு வண்டிக் கதவைத் திறந்துகொண்டு ஏறினன். உடனே ஒரு ஸ்திரீயின் 'வீலெ'ன்ற, கூக்குரல்! அடுத்த விநாடியே கார்டு வந்தார். "ஸார், இது யார் இந்தப் பைத்தியக்காரன்? லேடீஸ் கம்பார்ட்மென்டிலே ஏறுகிருனே!"

கார்டு சட்டென்று அந்தப் பிரயாணியின் கையைப் பிடித்து இழுத்துப் பிளாட்பாரத்தில் இறக்கினர். "என்ன ஐயா, லேடீஸ் கம்பார்ட்மென்டிலே ஏறுகிறீர்? கண் தெரிய

வில்லை ?'' என்று இறைந்தபடி அவர் அவனை வேறு வண்டியில் போய் ஏறும்படி கூறிச் சென்றார்.

பிரயாணி நிமிர்ந்தான். சற்று முன் தன்னைப் பார்த்து வீரிட்ட ஸ்திரீயை ஒரு முறை பார்த்தான். அந்தப் பார்வையில்தான் எத்தனை வெறுப்பும் கோபமும்! 'பைத்தியக்காரன்தான்!......ஹ ஹ ஹ......!' என்று முணுமுணுத்துக் கொண்டே கடகடவென்று சிரித்தான். என்ன கோரமான சிரிப்பு அது! ஆம், மகா கோரமானதுதான்! இல்லாவிட்டால் அந்த ஸ்திரீ பயந்துபோய்ப் பட்டென்று ஜன்னல் கதவை மூடிக்கொள்வாளா?

பிரயாணி பிளாட்பாரத்தின்மீது சிறிது தூரம் நடந்து சென்றான். ஒரு வண்டிக் கதவைத் திறந்தான். ஏறி உள்ளே போய் ஒரு பெஞ்சியில் உட்கார்ந்துகொண்டான். அடுத்த க்ஷணமே ரெயில் ஊதிக்கொண்டு கிளம்பியது.

இருட்டைக் கிழித்துக்கொண்டு ரெயில் வெகு வேகமாக ஓடியது. அதன் ஓட்டத்துக்கும் மேலாக, பிரயாணியின் இருதயத்தைக் கிழித்துக்கொண்டு எண்ணங்கள் சங்கிலி கோத்தாற்போல ஒன்றன்பின் ஒன்றாக உருவெடுத்து ஓடின.

அந்தப் பிரயாணி யார் என்று சொல்லவேண்டியதில்லை. அவன் எண்ணங்கள் எல்லாம் ருக்குவைப் பற்றியவைதாம் என்று ஒரு வார்த்தை கூறினால் போதும். அவனைத் தெரிந்து கொண்டு விடலாம்.

ருக்கு, அவன் பிடியினின்று திமிறிக்கொண்டு மாடிப்படி இறங்கிப் போனதுமே அவனது இன்ப உலகம் பூகம்பத்தால் பிளந்து சிதைவுற்றதுபோல் ஆயிற்று. ஒரு விநாடி வராந்தாவை வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றான். ஆனால் அடுத்த விநாடி அந்த அறையில் நிற்க அவனால் முடியவில்லை. மிருகவெறி கொண்டிருந்த அவன் நெஞ்சை மிருகத்தனம் பரிபூரணமாக ஆட்கொண்டு விட்டது. மடமட வென்று படியிறங்கினான். வாசற் கதவைத் திறந்தான். ஜோவென்று கொட்டுகிற மழைகூட அவன் கொதிக்கும் மனத்தைத் தடை செய்யச் சக்தியற்றதா யிருந்தது. அந்த அடைமழையில் கலந்து மறைந்துபோனான் அவன்.

பிறகுதான் அவனை ரெயில் ஸ்டேஷனில் பார்த்தோம். இப்போது ரெயில் வண்டியில் உட்கார்ந்து சென்னையை நோக்கிப் போய்க்கொண் டிருக்கிருன் அவன். எதிரே யிருக்கும் பெஞ்சியில் படுத்து நிம்மதியாக மூட்டைப்பூச்சிக் கடியையும் உணராது தூங்கும் பிரயாணியை ஒருமுறை பார்க்கத்தான் செய்தன, அவன் கண்கள். அந்தக் தூக்கம் தனக்கு வரக்கூடாதா என்று ஒரு நினைப்பு. ஆனல் அந்தத் தூக்கத்தின் எல்லை மீண்டும் விழிப்பாகவல்லவோ இருக்கிறது. 'சீ! அப்படிப்பட்ட தூக்கம் வேண்டாமே! ஒரே நீண்ட தூக்கம், உலகத்தையே விட்டுப் பிரிந்து செல்லும் தூக்கம் வந்துவிடக் கூடாதா? அது துன்பத்தை அழித்துவிடும். கோபத்தைக் கொன்றுவிடும். வெறுப்பை ஒழித்துவிடும். அவமானத்தையும் அகற்றிவிடுமே!' என்றெல்லாம் தோன் றின அவனுக்கு. ஆனல் எதிரே படுத்திருக்கும் பிரயாணி அநுபவிக்கும் சின்னத் தூக்கமே வரவில்லையே அவனுக்கு! அந்தப் பெரிய தூக்கம் எப்படி வரப்போகிறது என்று கூடவே ஒரு ஏமாற்றம்!

ஆனல் ஏன் இந்த ஏமாற்றம்? ஓர் ஏமாற்றத்திலிருந்து உண்டான மற்ருேர் ஏமாற்றமா? அந்த ஏமாற்றத்துக்காவது அர்த்தம் உண்டு. இந்த ஏமாற்றத்துக்கு அர்த்தம் ஏது? அவன் மனநிலைதான் இதற்குப் பதில் கூறவேண்டும். அவன் மனம் இருந்த இருப்பிலே எத்தகைய எண்ணந்தான் அதற் குத் தோன்றக்கூடாது. சாவு, வாழ்வு, சுகம், துக்கம் எல்லா வற்றையும் ஒரே மாதிரியாகக் கருதும்படியான நிலைமை யல்லவோ அது? அந்நிலைமையில் ஒரு சமயம் உலகத்தின்மீதே வெறுப்பு உண்டாகும். மற்ருெரு சமயம் உலகத்தின்மீது கோபம் கொந்தளித்து எழும்பும். வேருெரு சமயம் தன்மீதே வெறுப்பு ஏற்படும். பிறிதொரு சமயம் அந்த வெறுப்பே ஆத்திரமாக மூளும். ஒரு சமயம் தன் செய்கை தவறென்று தோன்றும். வேருெரு சமயம் ருக்குவின் செய்கைக்குப் பிரதியாகத் தனது இந்தச் செய்கை நியாயமானதாகவே புலப்படும். சுருங்கச் சொன்னல் அவன் மனம் புயலில் சிக்குண்ட படகைப்போல் தத்தளித்துக்கொண் டிருந்தது.

அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் சிந்தனைகளுக்கோ செய்கைக ளுக்கோ நியாய அநியாயம் எல்லாம் கண்டுபிடிக்க முயலு வது வியர்த்தமேதான். அதைவிட அவனைப் பின்பற்றிச் சென்று அவனுடன் நாமும் லயித்துவிட்டால்தான், அவனைப் புரிந்துகொள்ள முடியும்.

கொஞ்சம் தள்ளி, வேறொரு பெஞ்சியில் ஓர் இளம் தம்ப திகள் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்கள் பக்கம் எதிர்பாராத விதமாகப் பார்வை செல்லுகிறது அவனுக்கு. 'சீ என்ன கண்வெட்டு, என்ன சிரிப்பு, கொம்மாளம்! எத்தனை பேச்சு; இது ரெயிலா? படுக்கையறையா? வெட்கம் கெட்ட ஜன்மம்......ஆனால்......ஆனால்......எது வெட்கம் கெட்ட ஜன்மம்? யார் வெட்கம் கெட்ட ஜன்மம்? அவளா?—இல்லை. அவள் எப்படி ஆவாள்? அவள் உலகம் அது; அவள் நந்த வனம். அதில் அவள் உலாவுவதைக் கண்டிக்க எனக்கென்ன உரிமை? அவளைப்பற்றிச் சிந்தனை செய்ய நான் யார்? என் ஜன்மத்தையல்லவா சொல்லவேண்டும்—என் ருக்கு..சீ! என் ருக்கு..என் ருக்கு .என் ருக்குவா அவள்? என் ருக்குவா யிருந்தால்..இந்த ரெயிலில் இப்போது எனக்கு என்ன வேலை?''

ரங்கநாதனுக்கு ரெயிலில் அப்போது வேலை யிருந்ததோ இல்லையோ, ரெயிலுக்கு மாத்திரம் ரங்கநாதனிடத்தில் வேலை யிருந்தது. அவனிடம் வாங்கின பணத்துக்கு அவனைக் கொண்டுபோய்ச் சென்னையில் தள்ளியாக வேண்டும். அந்த வேலையைப் பூர்த்தி செய்ய, அது விரைந்துகொண்டிருந் தது.

ரங்கநாதன் எண்ணமிட்டுக்கொண்டே இருக்கும்போது 'கலகல' வென்று சிரிப்புச் சப்தம் அவன் செவியில் விழுந்து அவன் எண்ணத்துக்குத் தடை போட்டது. சிரிப்பு வந்த திக்கில் திரும்பிப் பார்த்தான் அவன். அவர்கள்தாம்! அந்த இளம் தம்பதிகள் இருவருமேதாம்! வெற்றிலையைக் கிழித் துப் புருஷனுக்குக் கொடுத்துத் தானும் போட்டுக்கொண்ட படியே அவள் 'இடி இடி'யென்று சிரித்தாள். அவனும் அவளுடன் சேர்ந்து சிரித்தான். ரங்கநாதன் அவர்களைப்

பார்த்த பார்வை எப்படி யிருந்ததோ! அந்தப் பெண் பின்னும் அதிகமாகச் சிரிக்கத் தொடங்கினுள். சிரித்துச் சிரித்து அவள் வயிற்றுவலி தாங்க முடியாமல, 'அப்பாடா!' என்றுகொண்டே தன் புருஷன் மடியில் சாய்ந்தாள். அவனுந்தான் சிரித்தான். ஆனுல் அவள் தன் மடியில் விழுந்தவுடனே அவன் சிரிப்பதை நிறுத்திக்கொண்டு, "போதும் அசடு, ஆயிரம் பேர் ஆயிரம் தினுசாயிருப்பார் கள். அதையெல்லாம் கேலிபண்ணிச் சிரித்து இப்படி வயிற் றுவலி உண்டாக்கிக்கொள்வதா?" என்று செல்லமாகக் கண்டிப்பதுபோல் சொல்லி அவள் முதுகில் ஒரு 'ஸொட்டு' வைத்தான்.

வண்டி முற்றும் உறங்கிக்கொண் டிருந்தது; அந்தத் தம்பதிகள், ரங்கநாதன் நீங்கலாக. ரங்கநாதன் சுற்று முற்றும் பார்த்தான். அவனுக்குச் 'சிவுக்'கென்றது. தன் னைப் பார்த்துத்தான் அவர்கள் நகைக்கின்றனர் என்பதை அறிந்தான். தன்னையே ஒரு முறை பார்த்துக்கொண்டான். மழையில் நனைந்திருந்த சட்டை ஒரு பக்கம் கிழிந்து தொங் கிக்கொண் டிருந்தது. ஸ்டேஷன் பெஞ்சியில் உட்கார்ந்து எழுந்தபோது ஓர் ஆணியில் மாட்டிக்கொண்டு அது கிழிந் ததை அவன் அப்போது கவனித்தானு? அல்லது இப்போது தான் கிழிந்த விதம் எப்படியென்று தெரிந்ததா அவனுக்கு? அந்தப் பெஞ்சியில் ஏற்கனவே சேறும் நீரும் ஊறியிருந்தது கூடத் தெரியவில்லை அவனுக்கு, அந்தச் சமயத்தில். இப்போதுதான் வேஷ்டி, சட்டை யெல்லாம் சேறு பூசப்பட்டு மகா விகாரமாகத் தோன்றியதைக் கண்டான். அவன் கை அவன் தலையைத் தானுகவே தடவிக்கொண்டபோதுதான் கிராப் 'ஆள் உயரம்' தூக்கிக்கொண்டு கலைந்து போயிருந் ததை அறிந்தான் அவன்.

எதிரே இருந்த தம்பதிகள் தன்னைக் கண்டு சிரித்ததற்கு இப்போது காரணம் தெரிந்துவிட்டது அவனுக்கு. அக்கினிப் பிழம்புகள்போல ஒளி வீசிக்கொண் டிருந்த அவன் கண்கள் அகலத் திறந்தன. அவர்கள் சிரித்த சத்தத்துக்கு மேலாக

அவனும் சிரித்தான்! அதைக் கண்டு அவர்களே நடுங்கிப் போயினர்.

அதற்குள் ஒரு ஸ்டேஷன் வந்துவிட்டது. ரெயில் நின்றது. ரங்கநாதன் ரெயிலே விட்டு இறங்கினன். வேருெரு வண்டியில் போய் ஏறிக்கொண்டு கதவை மூடிவிட்டுக் கதவடியிலேயே உட்கார்ந்தான். ஏனெனில் உள்ளே போய் ஒரு பெஞ்சியில் உட்கார்ந்துகொண்டு, எதிரே இருக்கும் பிரயாணிகளேப் பார்க்க அவன் விரும்பவில்லை. கண்களே மூடி மூடித் திறந்தான். தூங்கினல் நல்லதுதான். ஆனல் தூக்கம் வந்தால்தானே!

எத்தனேயோ ஸ்டேஷன்களில் ரெயில் நின்றது. ரங்கநாதனேத் தாண்டிக்கொண்டு சென்று, கதவைத் திறந்து விட்டு எத்தனேயோ பேர் இறங்கினர்கள். எத்தனேயோ பேர் அந்த ஸ்டேஷன்களிலிருந்து வண்டிக்குள் ஏறியும் உள்ளே சென்றனர். ஆனல் அவன் மட்டும் கதவடியிலேயே முடங்கிக்கொண் டிருந்தான்.

ரெயிலும் எழும்பூரை அடைந்தது.

## 15

### நாச்சியாரம்மாள்

"ஏன் அத்தை, நாட்டுப்பெண் வரப்போருளாமே, எப்ப வரப் போரு?"

"ஆமாம். நாட்டுப்பெண் வந்து நாசமாப்போஞ! எனக்கு ஏதடியம்மா நாட்டுப்பெண்ணும் கீட்டுப்பெண்ணும். ஹூம்! அவ்வளவு பெருமையும் பிரதானமும் இருந்தூட்டா நான் இப்படியா இருப்பேன்?" என்று ஒரு பெருமூச்சுடன் பதில் சொன்னுள் அத்தை.

"ஏன் அத்தை. அப்படிச் சொல்றேக! நாட்டுப்பெண் உங்க நாட்டுப்பெண்ணுயிருந்தா என்ன, உங்க தமையன் நாட்டுப்பெண்ணு யிருந்தா என்ன? பாத்து அநுபவிக்க இப்ப உங்க அண்ணுவும் மன்னியுமா இருக்கா? பாவனை யெல்லாம் உங்களதுதானே; அதான் கேட்டேன். உங்க மருமான் ஆம்படையானை நாட்டுப்பொண்ணுன்னு சொல் லாமே, வேறே என்ன சொல்றது? மருமானே பிள்ளைக்குப் பிள்ளையா யிருக்கான்" என்று வியாக்யானம் பண்ணிப் பேசினுள் கேள்வி கேட்டவள்.

"ராஜலக்ஷ்மீ, பாக்கிறவாள் இப்படித்தான் சொல்லுவா. அவாளைச் சொல்லிக் குத்தமென்ன? மருமான் பிள்ளைக்குப் பிள்ளையா இல்லையோ பின்னே! நமக்கு வேணு 'அக்யானம்' கேக்க மாட்டேங்கறது. ஊருக்குப் பொறப்படறபோதே, போனதும் ஒரு கடுதாசி போடுன்னு ஆயிரம் தடவை சொன் னேன். போய்ச் சேர்ந்து ஒரு முக்காலணுக் கடுதாசி போட்டாத்தான் என்ன கை தேஞ்சா போயிடும்? நாம்ப வேணு விசாரப்படலாம், என்னமோ ஏதோன்னு. அங்கே போஞ இங்கத்திய நெனவு ஏன் வரப்போறது? பொண்டாட் டியாத்தே பெரியாத்தேன்னு உட்கார்ந்துட்டான்."

"ஏன் அத்தை அப்படிச் சொல்றேக? தங்கமான பிள்ளை, பாவம்! அவனு அப்படியெல்லாம் இருப்பான்? ஒருவேளை அங்கே, போன இடத்திலே என்ன அசௌகரியமோ என்னமோ? இல்லாவிட்டால் கடுதாசிகூடப் போடாமல் இருப்பானு?" என்று சமாதானம் சொல்வதுபோல் பேசினுள் ராஜலக்ஷ்மி.

"ஹூம்! உனக்கென்னடி தெரியும் ராஜலக்ஷ்மி! தங்கமாகத்தான் இருந்தான் அவன் அதெல்லாம் போன வருஷத்தோடே போச்சு. அந்தப் பொண்ணை எப்பப் பார்த்துக் கல்யாணம் பண்ணிண்டுதான் ஆவேன்னு பிடிவாதம் பிடிச்சானே, அன்னிக்கே அவன் மனசு மாறிப்போச்சு. அதுவரைக்கும் சாப்பாட்டிலேதான் சரி, மத்த விஷயம் எதிலேயுந்தான் சரி; இது இப்படி, இது அப்படின்னு ஒரு வார்த்தை சொல்லணுமே ஊஹூம். இப்ப ஒரு வருஷ காலமாகத்தான் கொழம்பிலே உப்பு ஜாஸ்தி, புளி குறைவு எல்லாம் தெரிய ஆரம்பிச்சுது. எங்கே காபி சாப்பிட்டாலும், என் கையாலே போட்ட காபிக்கு மிஞ்சித்தான்னு சொல்லிண்டிருந்தவனுக்கு வரவர நான் போடற காபிகூடப் பிடிக்காமே போச்சு."

"ஒருவேளை நீங்க நாட்டுப்பெண்ணைச் சீக்கிரமா அழைச்சுண்டு வரல்லேன்னு இப்படியெல்லாம் சொல்றதா நினைச்சுண்டகளாக்கும்!" என்றுள் ராஜலக்ஷ்மி.

"நெனச்சுக்கறதாவது? அதாண்டி ராஜலக்ஷ்மி சமாசாரம். அந்தப் பூலோக ரம்பையைப் பார்த்து மோகிச்சுப் போய்க் கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டானே இல்லையோ, நான் வேண்டாம்னு சொல்லியும் கேளாமே? அவள் வந்து இங்கே இருக்கிறது எனக்கு இஷ்டமில்லேன்னு எண்ணிக்கொண்டானே என்னமோ? இல்லாதபோனு ஏன் இது தப்பு, அது தப்புன்னு எதுக்கெடுத்தாலும் தப்புக் கண்டுபிடிக்கணும்?"

"அத்தை, இதென்ன கூத்து? நீங்க வேண்டாம் என்கிறபோதா அந்தப் பெண்ணை அவன் கல்யாணம் பண்ணிண்டான்? ஏன்?"

"ஏண்டி! நீதான் சொல்லேன். இந்தக் காலத்தில் பி. ஏ., படிச்ச பிள்ளைக்கு ஆயிரம் ரூபாகூட வரதக்ஷிணை வாங்காமே யார் கல்யாணம் பண்ணுவா?"

"பொண்ணைப் பெத்தவா வரதக்ஷிணை கொடுக்க மாட்டேன்னுட்டாளா?"

அத்தையால் தாங்க முடியவில்லை. கல்யாணம் நடந்த விஷயத்தை ஆதியோடந்தமாக ராஜலக்ஷ்மியிடம் சொல்லி முடித்தாள். மைசூரில் ரங்கநாதன் தன் அத்தையுடன் வசித்துவந்த ஒரு வீட்டில்தான் மேற்கண்ட சம்பாஷணை நடந்தேறியது. ராஜலக்ஷ்மி அடுத்த வீட்டுக்காரி. அடிக்கடி அத்தையிடம் வந்து பேசிவிட்டுப் போவாள். ரங்கநாதன் தன் மனைவியை அழைத்து வர ஊருக்குப் போயிருக்கிறான் என்பதைக் கேள்விப்பட்டு அதை விசாரித்தபோதுதான், அத்தை தன் ஆத்திரத்தையெல்லாம் அவள்முன் கொட்டி விட்டாள்.

ரங்கநாதன் கல்யாணத்திலிருந்தே, தேவராஜ ஐயங்கார் சம்பந்தம் அத்தைக்குப் பிடிக்கவில்லை என்பது தெரிந்த விஷயந்தானே! அதற்குப் பிறகு அவள் மனம் அடியோடு மாறிவிட்டது. அதற்குமுன் அவன் எந்த விஷயத்தில் அவள் மீது தப்புக் கண்டுபிடித்தாலும் சுவாதீனத்தோடுதான் செய்கிறான் என்றே நினைத்து வந்தாள். அதுவே இப்போது விபரீதமாகப் பட்டுவிட்டது அவளுக்கு. கல்யாணத்துக்குப் பிறகும் ரங்கநாதன் தன் அத்தையிடம் வெகு சகஜமாகவே பழகிவந்தான். சகஜமாகவேதான் பேசிவந்தான். ஆனால் அவள் அடிக்கடி அவன் பேச்சுக்களுக்கு விபரீத வியாக்யானங்கள் செய்துகொள்கிறாள் என்பது அவனுக்கே தெரியாமல் போயிற்று.

"என்ன அத்தை, இன்றைக்குக் காபி நன்றாகவே இல்லையே!" என்று சொன்னால் உடனே அவள், "ஆமாண்டாப்பா, நாளைக்கே உன் பொண்டாட்டி வந்து நன்னாப் போட்டுக் கு[illegible]ப்பா" என்று சொல்லிவிட்டுப் போவதை, அவன் வெறும் பரிகாசப் பேச்சு என்றே கருதினான்.

ஆனால் உண்மை இதுதான். கல்யாணத்துக்குப் பிறகும் அத்தையிடத்தில் ரங்கநாதன் பழைய ரங்கநாதனாகவே

இருந்தான். ஆனல் அத்தைதான் இப்போது அவனுக்கும் தெரியாமல் புது அத்தையாக மாறிவிட்டாள். காரணம் அந்தக் கல்யாணமேதான். திக்குத் திசையில்லாத தன் மருமானுக்காக அவள் தன் ஆஸ்தியாக இருந்த இரண்டாயிரம் ரூபாய் நகைகளையும் விற்றுப் படிப்புச் சொல்லி வைத்தாள். அவனுக்கு வண்மையும் வரிசையும், பணமும் பாக்கியமுமாகப் பெண்டாட்டி வந்து கண் குளிரப் பார்க்க வேண்டும், நாலு பேருக்குப் பெருமையாகச் சொல்லிக் கொள்ளவேண்டும் என்று ஆசைப்பட்டாள் அவள். நியாயந் தானே! ஆனல் அவள் ஆசை நிறைவேறவில்லை. ரங்கநாதன் ருக்குவின் அழகில் மயங்கி, பணம் வராவிட்டாலும் பாதகமில்லை என்று பிடிவாதமாக அவளையே கல்யாணம் செய்துகொண்டுவிட்டான். அவன் பிடிவாதம் பிடிக்காவிட்டால், அந்த வீட்டுக்காரப் பிராம்மணிக்குத்தான் என்ன கர்ம சிரத்தை, இந்தக் கல்யாணத்தை முடித்து வைப்பதில்? அன்றியும் சம்பந்தி தேவராஜ ஐயங்காராவது மட்டு மரியாதை தெரிந்த மனுஷ்யராய் இருக்கிருரா? அதுவும் இல்லை. இல்லாவிட்டால், அந்தப் பெண்ணை அழைத்துவர இரண்டு வாரம் லீவு வாங்கிக்கொண்டாவது ரங்கநாதனே போகவேண்டுமா என்ன? ஒரு கடிதாசி எழுதிப்போட்டால் சம்பந்திப் பிராம்மணன் பெண்ணைக் கொண்டுவந்து விட வேண்டியதுதானே! இதைக்கூட அத்தை ஜாடைமாடையாய்ச் சொல்லிப் பார்த்தாள். ஆனல் ரங்கநாதன் இதற்குச் சம்மதிக்கவில்லை. அவன் தன் மாமனர் சுபாவத்தை நன்ருக அறிந்துகொண் டிருந்தான். அவரும் தன் அத்தையும் மறுபடி சந்திக்காமல் இருந்தால்கூட நல்லது என்றே எண்ணினன் அவன். அதனல்தான் அவன் லீவு வாங்கிக்கொண்டு வேதவரம் போனன். அவனுடைய இந்த எண்ணம் அத்தைக்குத் தெரியாதா என்ன?

இதெல்லாம் அத்தைக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. எனவே அடுத்த வீட்டு ராஜலக்ஷ்மி கேட்ட கேள்விக்குப் பதிலாகப் பழைய கதையை யெல்லாம் திரும்பப் படித்துத் தீர்த்தாள்.

ராஜலக்ஷ்மி கதையை முற்றும் கேட்டாள். கடைசியில், "என்னமோ. அப்படி யப்படித்தான் இருக்கும், அத்தை. காரியம் நடந்துவிட்டது. இனிமேல் எல்லாவற்றையும் சரிச் சுண்டு போனுத்தான் நன்னுயிருக்கும்" என்று லோகா பிராமமாக அபிப்பிராயம் சொன்னுள் அவள், வேறென்றும் சொல்லத் தெரியாமல்.

"ஏண்டி ராஜலக்ஷ்மி, கதை பூராவையும் கேட்டுவிட்டு நீ கூட இப்படிச் சொல்றயே! இப்ப நானு சரிச்சுண்டு போக மாட்டேங்கறேன் ? அப்படி ஏதாவது சொல்றதானு, அப்பவே அந்தக் கல்யாணம் முடிஞ்ச கையோடே, காசியோ ராமேசு வரமோ போயிருக்க மாட்டேனு நான் ? அப்படி எங்கேயாவது போய்த் தொலைஞ்சாலும் போற வழிக்காவது புண்ணியம் உண்டு. உம், ஒட்டவச்சா மாத்திரம் ஒட்டிக்குமா என்ன இந்த உறவெல்லாம் ? அததுக்கா இருக்கணும். நம்ம அக்யா னந்தான் விடறதில்லே. இப்பக்கூடச் சொல்றேன். அவன் தன் பெண்டாட்டியை அழைச்சு வச்சுண்டு ஜாம் ஜாம்னு இருக்கட்டும். நானு வேண்டாங்கிறேன் ? அப்படி நான் இங்கே இருக்கறது இடைஞ்சலா இருந்தா, இதோ தயார், நான் யாத்திரை போக. பட்டணத்திலே எனக்குத் தெரிஞ்சவா சில பேர் காசிக்குப் போகப்போறதாத் தெரியறது. கூட நானும் வரேன்னு வேண்டாம்னு சொல்லப் போருளா என்ன?" என்ருள் அத்தை.

"ஏன் அத்தை, இப்படியெல்லாம் சொல்றேக ? நாளைக்கே நாட்டுப்பெண் வந்து உங்களை உக்காரவச்சு எப்படியோ செய்யப் போரு. நானுந்தான் பார்க்கப் போறேன்! இப்ப ஏதுக்காகக் கன்னு பின்னுன்னு பேசறக ?"

"ரராஜலக்ஷ்மி, நான் சொன்னு அப்படித்தாண்டி இருக்கும் உனக்கு. அந்தச் சம்பந்திப் பிராம்மணன் குணம் தெரிஞ்சுதான் சொல்றேன்னு வச்சுக்கோ. இங்கே யிருந்து ரெண்டுவாரம் லீவு வாங்கிண்டு இவன் ஓடு ஓடுன்னு ஓடினுனே யொழிய, அங்கே இவனைச் சட்டை பண்றவா யாருடீ இருக்கா ? இவனுந்தான் என்ன ?

கொஞ்சத்துக்குக் கொஞ்சம் கௌரவத்தைக் காப்பாத்திக்க வேண்டாமா? என்ன அதிசயமான பெண்டாட்டி!''

"என்னமோ, நீங்க சொல்றதைச் சொல்லிண்டே இருங்கோ. மருமானும், மருமா ளும்படையாளும் ஜம்முன்னு டாங்காவிலே வந்து வாசப்படியிலே இறங்கப் போரு. அப்புறந்தானே உங்க பேச்சு எப்படி இருக்கப் போறதுன்னு தெரியணும்?'' என்று சிரித்துக்கொண்டே சொன்னுள் ராஜலக்ஷ்மி.

"ஆமாண்டி! நீ ஒத்தி, என் வயத்தெரிச்சலைக் கொட்டிக்க. இன்னம் சித்தே சீக்கிரமாப் பெண்டாட்டி யையும் கூட்டிண்டு வரமாட்டானே பின்னே?''

"வராப்போனு ஆபீஸ்?''

"ஆபீஸுமாச்சு, அடுப்புக் கட்டியுமாச்சு. இப்ப ஆபீஸ், கீபீஸ் எல்லாம் ஞாபகம் வருமா என்ன? பொண்டாட்டிதான் ஆபீஸ் எல்லாம். அவள் அனுப்பி வைக்கிறபோதுதான் ஆபீஸ் ஞாபகம் வரும்.''

"அவளேதான் கூட வரப்போருளே!''

"நான் நெனைக்கல்லே. அவளாவது வரதாவது! அவள் அழகான அப்பா அனுப்பிவச்ச பிற்பாடுதானே அவள் வரணும்?.....'' என்று சொல்லிக்கொண்டே இருந்தபோது ரங்கநாதன் திடுதிப் என்று வந்து சேர்ந்தான்.

அவன் வருகை அத்தைக்கே சட்டென்று தூக்கி வாரிப் போட்டது. ராஜலக்ஷ்மியும் திகைத்துப் போனுள். உள்ளே நுழைந்தவன், நேராக அத்தையிடம் வராமல் தடதடவென்று மாடிக்குப் போய்விட்டான். அத்தையும் ராஜலக்ஷ்மியும் பிரமிப்புடன் மாடிப்படியைப் பார்த்துக்கொண்டே நின்று போயினர்.

ராஜலக்ஷ்மியுடன் பேசிக்கொண்டிருந்த வார்த்தைகள் ரங்கநாதன் காதில் விழுந்திருக்குமோ என்றுகூடத் தோன்றிற்று அத்தைக்கு. இந்த நிலைமை ராஜலக்ஷ்மிக்கும் சங்கடமாக இருந்தது.

"ஏன் அத்தை, இதென்ன திடும்னு வந்துவிட்டானே! அவள் வரல்லே போலே இருக்கு'' என்ருள் அடக்கமான குரலில்.

இந்தப் பேச்சு அத்தையின் உணர்ச்சிகளைக் கிண்டி விட்டது. "ஆமாண்டி! நான் சொல்லல்லையா? இவனை மதிச்சு அவா அனுப்பமாட்டாளோ பின்னே? பைத்தியக் காரன் மாதிரி ஓடினதுதான் மிச்சம்" என்று மெதுவான குரலிலேயே சொல்லி அத்தை முகத்தை ஒரு திருப்புத் திருப்பி மோவாய்க்கட்டையைத் தோள்பட்டையில் இடித்துக் கொண்டாள்.

"சரி, நீங்க போய் என்ன சாமாசாரம்னு விசாரி யுங்கோ. எனக்கும் நாழியாச்சு. நானும் போய்விட்டு வரேன்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினுள் ராஜலக்ஷ்மி.

அத்தை மாடிக்குப் போனுள். மாடி அறையில் ரங்க நாதன் ஒரு மேஜைக் கெதிரே நாற்காலியில் திக்பிரமை பிடித்தவன்போல் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். அவள், "ஏண்டா ரங்கண்ணு, என்னடா சமாசாரம்? இன்னும் லீவு நாலு நாள் இல்லே!" என்ருள் பதற்றத்தை அடக்க முயன்றுகொண்டே.

ரங்கநாதன், "ச்சூ!" என்று சூள் கொட்டினுன். ஆனுல் வாயைத் திறந்து பதிலே சொல்லவில்லை. அவன் முகத்தில் திரையிட்டிருந்த ஆழ்ந்த சோகத்தை எளிதில் உணர்ந்துகொண்டாள் அத்தை.

சற்று முன், 'ஒட்ட வைத்தால் மாத்திரம் உறவு ஒட்டிக் கொள்ளுமா என்ன? அதுக்காக இருக்கணும்' என்று விட்டேற்றியாகப் பேசினவள்தான். ஆயினும் இருபது வருஷ காலத்துக்கு மேலாக வளர்த்த தோஷம் விடுமா? அவன் துயரம் நிறைந்த வதனத்தைக் கண்டு அவள் உள்ளம் துடித்தது. தாய்மையை அடையும் பாக்கியம் பெருவிட்டாலும், தாய்மையின் இணையற்ற அன்பைப் பரிமாறிப் பராமரித்து வந்த அவள் உணர்ச்சி பொங்கிக் கொண்டு மேலெழுந்தது. "ரங்கண்ணு, என்னடா அப்பா சமாசாரம்? எப்ப வந்தே? அங்கே எல்லோரும் சௌக்கியமா? உன் மூஞ்சியைப் பார்த்தா என்னமோபோல இருக்கே" என்று வார்த்தைகளை உருக்கி வடித்தாள்.

ரங்கநாதன் மன உணர்ச்சிகள் அவ்வளவும் சமுத்திர அலைகள்போல் சீறி எழுந்தன. அத்தையின் வாத்ஸல்யம் நிறைந்த வார்த்தைகள் அவன் துயரத்தை விசிறிக் கிளப்பின. அவள் அவன் மனுஷி! அவள் ஒருத்திதான் அவன் மனுஷி இப்போது. அவளைத் தவிர இந்த உலகில் இன்னும் ஒருத்தியைத்தான் தன் அந்தரங்கங்களை யெல்லாம் அறியத் தகுதியுள்ள மனுஷியாகக் கருதினான் அவன். அவள்தான் ருக்கு! ஆனால் அந்த ருக்கு இப்போது அவன் இருதய பீடத்தில் வீற்றிருந்த அன்பை அசுசிப் படுத்தி விட்டாள். அன்புக்குப் பதிலாக அவளிடத்தில் வெறுப்புத் தான் ஏற்பட்டிருந்தது அவனுக்கு.

எனவே அத்தையின் அன்புமொழிகள் அவன் நெஞ்சை உருக்கின. ஒரு குழந்தைபோல் கதறிவிடலாம் போல்கூட இருந்தது அவனுக்கு. ஆயினும் புருஷன்! சமாளித்துக் கொண்டான். "அத்தை! என்னை இப்போது ஒன்றும் கேட்காதே. சுடச் சுட ஒரு டம்ளர் காபி போட்டுக் கொண்டு வா" என்று திணறித் திணறிப் பேசினான்-

அத்தை அவன் முகத்தை நன்றாகக் கவனித்தாள். "ஏன்? தலையை ரொம்ப வலிக்கிறதா?" என்றாள்.

"ஆமாம். மண்டையே சிதறிப் போகிறது."

அத்தை சட்டென்று அந்த அறையைவிட்டுக் கீழே போனாள். அவள் மனம் மாத்திரம் ரங்கநாதனுக்குப் போன இடத்தில் ஏதோ அவமானம் ஏற்பட்டிருக்கிறது என்பதை உணர்ந்துவிட்டது. அந்த அவமானம் எதனால் ஏற்பட்டது, எப்படி ஏற்பட்டது என்பதெல்லாம்கூட அவளுக்குக் கவலை யில்லை. அவள் கோபம் முற்றும் சம்பந்தி தேவராஜ ஐயங்கார் பேரில்தான். அவர்தான் தமது அலக்ஷ்ய புத்தியைக் காட்டி, மாப்பிள்ளையை அவமதித்திருப்பார் என்று எண்ண எண்ண அவள் கோபம் பன்மடங்கு அதிகமாயிற்று. விஷயத்தை யறிய அவள் மனம் துடித்தது. இருந்தாலும் அந்தச் சமயத்தில் அவனிடம் மேலும் கேள்வி கள் போட்டுப் புண்ணில் கோலிட்டதுபோல் செய்ய வேண்டாமென்று கருதினாள் அவள்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் காபியும் கையுமாக அத்தை மாடிப்படி யேறிச் சென்றுள். ரங்கநாதன் ஒரு தலையணையைப் போட்டுக்கொண்டு தரையில் குப்புறப் படுத்திருந்தான். "ரங்கண்ணு, இந்தா காபி சாப்பிடு" என்றுள் பரிவுடன்.

ரங்கநாதன் எழுந்து உட்கார்ந்தான். அவன் கண்களும் கன்னங்களும் மிளகாய்ப் பழம்போல் சிவந்திருந்தன. அத்தை கொடுத்த காபியை வாங்கிச் சாவதானமாகச் சாப்பிட்டான் அவன். "அப்பாடா! இந்தக் காபி எத்தனை ருசியா யிருக்கிறது இப்போது!" என்று அவனையும் மீறிப் பேச்சுக்கள் அவன் வாயினின்று பிறந்தன.

அத்தைக்கு இந்த வார்த்தை ஒன்றே போதாதா? தூபம் போட்டதுபோல் ஆகிவிட்டது, அவள் உள்ள நிலை இந்த வார்த்தையால். "ஏண்டா ரங்கண்ணு, உனக்கு நல்ல காபிகூடவா போட்டுக் கொடுக்கல்லே அங்கே? உம். அப்பவே தெரியும், இப்படி ஏதாவது நடக்கும்னு. உன் மாமனுருக்கு மனுஷாளிடத்திலே மதிப்பே கிடையாது. இல்லாதபோனு கல்யாணத்திலேயே அப்படி அவமானப் படுத்துவாரா உன்னை? உம். அது கிடக்கட்டும். அங்கே உனக்குக் காபி கூடவா சரியாப் போட்டுக் கொடுக்கல்லே?" என்றுள்.

"என்னமோ போட்டுக் கொடுத்தா, அத்தை. அதை யெல்லாம் இப்போது என்னை ஒன்றும் கேட்காதே. எனக்குத் தலை சுற்றுகிறது."

அத்தை சற்றுநேரம் மௌனமாயிருந்தாள், பிறகு அவளால் அவனைக் கேட்காமல் இருக்க முடியவில்லை. "ஏண்டா, என்னதான் நடந்தது, சொல்லேண்டா. இதைத் தெரிஞ்சுகொள்ள எனக்குச் சுவாதீனமில்லையா?...... ஆமாம். நீ போனபோது உன் மாமனுர் ஊரிலிருந்தாரா இல்லையா? அதையாவது சொல்லேன்."

"ஊரில்தான் இருந்தார். ஆனல் வீட்டில் இல்லை."

"நெனச்சேன் நானே! உனக்கு வேணும்டா வேணும். பொண்ணைக் கொண்டுவிடுன்னு ஒரு கடுதாசி போட்டா,

கதறிண்டு கொண்டுவிட வேண்டாமா? நீயாக் கொடுத்துண்ட இடந்தானே இது? குனிஞ்சு கொடுத்தாக் குதிரை ஏறத்தான் செய்வா. இப்ப, பொண்ணை அனுப்பினுளா பாரு உன்னேடே. ஏன்? இங்கிருந்து போனயே ரயில் சார்ஜு கொடுத்துண்டு; கூட அனுப்பி வச்சா என்ன? ஏன்னு அப்படி வண்மையும் வரிசையும் சீரும் செனத்தியுமாத்தானே சேஞ்சு, கொண்டுவிடப் போரு! இப்ப அனுப்பச் சௌகரியப் படல்லேன்னு சொல்லிப் போகச் சொன்னுளாக்கும். போனுப்பலே திரும்பி வந்திருக்கே. இதை என்னண்டை சொன்னுத்தான் அவமானமாக்கும். அங்கே போய்ச் சிரிப்பாணிப்பட்டு வரலாம், இங்கேதான் எல்லாம் சிதம்பர ரகசியம். ஆமாம். கையிலே கொண்டு போன பெட்டி எங்கே? படுக்கை எங்கே?'' என்று தன் ஆத்திரம் முற்றும் கொட்டித் தீர்த்தாள் அத்தை.

''அத்தை, நான்தான் முதலிலேயே சொல்லி விட்டேனே, என்னை ஒன்றும் கேட்காதே என்று. திரும்பத் திரும்பக் கேட்கிருயே; பெட்டி, படுக்கை யெல்லாம் எங்கேயும் போய்விடவில்லை.ஏன் இப்படிப் பதற்றப்படுகிருய்? நேற்று முழுவதும் தூக்கமேயில்லை. கொஞ்சம் தூங்கினுல் தான் உடம்பு சரியாகும்போல் இருக்கிறது.''

''ஆஹா! நன்னுத் தூங்கு. நீ தூங்கறதை வேண் டாம்னு சொல்றேனு என்ன?'' என்று சொல்லிக் காபி டம்ளரை எடுத்துக்கொண்டு 'விடுவிடெ'ன்று போய் விட்டாள் அத்தை.

ரங்கநாதன் தலை, தலையணை மீது ஆயிரம் தடவை உருண்டு புரண்டது. ஆனுல் அவன் விரும்பிய தூக்கம் என்னவோ வரவில்லை. எழும்பூரில் சேறும் சகதியும் படிந்த உடையுடன் இறங்கியவன், நேராகக் கடைக்குப் போய்ப் புதிய வேஷ்டி, ஷர்ட்டு முதலியவற்றை வாங்கிக்கொண்டு, சில மணி நேரம் ஒரு ஹோட்டலில் தங்கிவிட்டு, சென்னை யிலிருந்த கணக்கற்ற நண்பர்களில் ஒருவரைக்கூடப் பார்க்க மனமின்றி, மத்தியான்னம் புறப்படும் பெங்களூர் எக்ஸ்பிரஸில் ஏறிவிட்டான். பெங்களூரிலிருந்து உடனே

மைசூருக்குப் போக அவனுக்கு என்னவோபோல் இருந்தது. ஒரு நாள்முற்றும் பெங்களூரிலேயே தங்கினுன். மைசூருக்குப் போனுல், அத்தை அவன் மட்டும் தனியாக வந்ததைப்பற்றி நூறு கேள்விகள் கேட்பாள் என்பது அவனுக்குத் தெரிந்த விஷயந்தான். இதற்கு அஞ்சித்தான் அவன் ஒரு நாள் பெங்களூரிலேயே வசித்தான். வேதவரத்தில் நடந்த விஷயத்தைப்பற்றி அத்தையிடம் எப்படிச் சொல்ல முடியும் அவனுல்? அவன் மனமே முறிந்து போயிருந்தது அந்தச் சம்பவத்தினுல். அந்த அதிர்ச்சியினுல் உண்டான வெறியினுலும் அடக்கமுடியாத கோபத்தினுலும் அங்கிருந்து கிளம்பி விட்டானே யொழிய, பின்னர் அதைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்தபோது, தான் அத்தனை அவசரப் பட்டிருக்கக் கூடாது என்றுகூட ஒரு சமயம் தோன்றும் அவனுக்கு. ருக்குவின் அன்றைய நடத்தைக்குக் காரணம் வெறும் கூச்சந்தான் என்று ஒரு சமயம் நினைத்தாலும் அவள் கூறிய, 'இஷ்டமில்லை' என்கிற தீர்மானமான வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்று அடுத்த விநாடியே அவன் மனத்தில் கேள்வி எழும். எவ்வளவோ விட்டுக் கொடுத்தும் இனிய வார்த்தைகளால் அன்பூட்டியும் அவள் மனத்தில் ஆசை அலைகளைத் தூண்டியுங்கூட, அவள் அவனை உதறித் தள்ளி விட்டுப் போய்விட்டதை எண்ணிப் பார்த்தபோது, பிடறியில் அடியுண்ட சிங்கராஜனைப் போலச் சீற்ற முண்டாயிற்று அவனுக்கு. "சீ, இத்தனை உதாசீனமா என்னிடம்! தானுகக் கனிந்து வராத பழத்தைத் தடியால் அடித்துக் கனிய வைத்தாவது தின்பதா? வேண்டாமே அக் கனி. வீசியெறிந்தால் தொலை தூரத்தில் போய் விழுகிறது. அப்புறம் அது அங்கேயே இருந்து அழுகி நாறத்தான் நாறட்டுமே. அவ்வளவுதான் அதன் விதி!" என்று எண்ணினுன் அவன்.

இந்த எண்ணமேதான் அவன் உள்ளத்தில் கடைசியாக நிலைத்துவிட்டது. இந்த உறுதி ஏற்பட்டதும் அவனுக்கு வீட்டு ஞாபகம் உண்டாயிற்று. 'அத்தை கேட்டால் ஏதாவது பதில் சொல்லிக்கொள்ளலாம். எதைச் சொன்னுல்

தான் என்ன ?' என்று நினைத்தான் அவன். பிறகுதான் மைசூருக்கு வந்தான். அத்தையின் கேள்விகளையும் ஏதோ தட்டிக் கழித்துப் பேசினான். அவன் மனம் ருக்குவின் விஷயத்தில் ஒருவிதத் தீர்மானத்துக்கு வந்ததுபோல் தோன்றினாலும், அதை எப்படிப் பிறரிடம் வெளியிட முடியும்? வெளியிடத்தான் அவன் மான உணர்ச்சி இடம் தருமா ?

அன்றிரவு சாப்பாட்டின்போது அத்தை மறுபடியும் கேட்டாள் அவனை: "ஏண்டா ரங்கண்ணா! இப்ப உன்னோடேதான் அனுப்பல்லே. பின்னே எப்பத்தான் கொண்டு விடறதா இருக்கா ?'' என்று.

"எப்பவோ, யாருக்குத் தெரியும் ?''

இந்தப் பதில் அனாயாசமாக வந்தது ரங்கநாதன் வாயிலிருந்து. இது விஷயமாக அத்தை மறுபடியும் பேச்சுக் கொடுத்தால், யோசனை செய்யாமல் ஏதாவது அவள் கேள்விக்குத் தன் போக்காகச் சமயத்துக்கேற்றபடி பதில் சொல்லுவது என்று அவன் எண்ணினானோ என்னவோ ?

"யாருக்குத் தெரியுமா; இங்கேயிருந்து போய்ட்டு வந்தையே உனக்குத் தெரியாமே வேறே யாருக்குத் தெரியும் !'' என்று மடக்கினாள் அத்தை.

"எனக்கு ஒன்றும் தெரியாது.''

"அப்போ, அவளைக் கொண்டுவிடறதைப் பத்தி அவள் அப்பா ஒண்ணும் சொல்லல்லையா ?''

"அதெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது. அது அவள் அப்பா பாடு, அவள் பாடு.''

"நன்னாயிருக்குடா பேச்சு, நன்னாயிருக்கு! அதுக்குத் தான் அன்னிக்கே அடிச்சுண்டேன், அந்தப் பொண் வேண் டாம்டான்னு. உன் மாமனார்க்காரன் பேச்சும் விதரணையும் எனக்கு அப்பவே பிடிக்கலே. அப்பச் சொன்னாக் கேட்டியா? அந்த இந்திராணியை விட்டா, வேறே லோகத்திலேயே பொண் கிடையாதுன்னு அத்தனை அகௌரவத்தையும் பாராமே மேல் விழுந்துகொண்டு போய்க் கல்யாணம்

பண்ணிண்டையே! இப்பத் தெரியறதாக்கும் எல்லாம். மாமனுர் படைச்ச லக்ஷணமும் ஆம்படையாளைப் படைச்ச அழகும்!………''

"என் புத்தியைச் செருப்பால் அடிக்கணும். வேறே என்னை என்ன பண்ணச் சொல்லுகிருய்?'' என்று தன்னையும் மீறி மனம்விட்டு மிகுந்த வெறுப்புடன் பேசிவிட்டு ரங்கநாதன் சாப்பாட்டை முடித்துக்கொண்டு எழுந்து போனுன்.

"இந்த லக்ஷணத்துக்கு ரெண்டு வாரம் லீவு வாங்கிண்டு போனுனும். இங்கேயிருந்து நாலு வரி எழுதிப் போட்டா அலறியடிச்சுண்டு வரவேண்டாமா? மரியாதையைக் காப்பாத்திக்காதவன் கதி இப்படித்தான். இப்பச் சொல்றேன்னு பாரு. இன்னிக்கி எட்டா நாள் இந்த நேரத்துக்குள்ளே உன் பொண்டாட்டி இங்கே வந்து சேராத போனு என் பேர் நாச்சியாரா பாரு!'' என்று சபதம் செய்வதுபோல் சொன்ன வார்த்தைகளை ரங்கநாதன் காதில் வாங்கிக்கொள்ளவே யில்லை. அவன் கை அலம்பிக்கொண்டு மாடிக்குப் போய்விட்டான்.

அத்தையின் சபதத்தின் மூலம் நமக்கும் அவள் பெயர் தெரிந்துவிட்டது! அடுத்த நாளே அவள் ஆத்திரத்துடன் எழுதின கடிதமும் தபாலில் சேர்ந்துவிட்டது.

16

## கடிதமும் பதிலும்

தேவராஜ ஐயங்கார் கையில் ஒரு கடிதத்துடன் சமைய லறைக்குள் நுழைந்தார். சில நாட்களாக மறைந்து போயி ருந்த சிரிப்பும் சந்தோஷமும் மறுபடியும் அவர் முகத்தில் அப்போது தோன்றியிருந்தன. ''செங்கமலம்!'' என்று கொஞ்சம் கெட்டியான குரலிலேயே அழைத்தார் உற்சாகத் துடன்.

அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக அடுப்பை விசிறிக் கொண்டிருந்த செங்கமலம் அவரது குதூகலம் நிரம்பிய குரலைக் கேட்டுச் சட்டென்று திரும்பினாள்.

''செங்கமலம், மாப்பிள்ளையிடமிருந்து கடுதாசி வந்தி ருக்கிறது!'' என்றார் தேவராஜ ஐயங்கார்.

''மாப்பிள்ளையண்டையிருந்தா?'' என்றாள் ஆச்சரியத் துடன் அவள்.

''ஆமாம். ருக்குவை உடனே கொண்டுபோய் விட வேண்டுமாம்.''

''குருடன் கண் வேணும்னுதானே அழறான்? திடுதிப் புன்னு சொல்லிக்கொள்ளாமே போய்விட்டு இப்படிக் கடுதாசி எழுதணுமா? இந்தக் காலத்துப் பிள்ளைகள் போக்கே ஒண்ணும் புரியமாட்டேங்கிறது. அந்தப் பொண்ணு, விழுந்து கிடந்த கண்றாவியை நெனச்சுண்டா இப்பக்கூட என் வயறு பத்தி எரியறது. அந்தக் கொட்டற மழையிலே இப்படிக் கோவிச்சுண்டு போகும்படியா அப்படி என்ன வந்துவிட்டது? உம்...நாலு பேர் வாயிலே விழுந்து எழுந்திருக்கணுமே!... என்னமோ! கடுதாசியிலே என்ன எழுதியிருக்கார்?''

"அவர் எழுதவில்லை. அவர் அத்தைதான் எழுதியிருக்கிருள்."

"அத்தையா?"

"ஆமாம். அவள்தான் எழுதியிருக்கிருள். இதோ நீயே படித்துப் பார்த்துக்கொள்" என்று சொல்லிக் கடிதத்தை அவள் கையில் கொடுத்தார் தேவராஜ ஐயங்கார்.

செங்கமலம் கடிதத்தை வாங்கிப் பிரித்தாள். அதில் எழுதியிருந்தது இவ்வளவுதான்.

**தேவராஜ ஐயங்காருக்கு**

**உங்கள் பெண்ணை இந்தக் கடிதம் கண்டவுடனே கொண்டு விடவும். தவறினால் பெண் உங்களுடனேயே இருக்கட்டும்.**

**நாச்சியாரம்மாள்.**

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும் செங்கமலத்துக்கு ஒன்றுமே தோன்றவில்லை. சற்று நேரம் கடிதமும் கையுமாக மௌனமாகவே உட்கார்ந்து விட்டாள். "செங்கமலம், என்ன யோசிக்கிருய்? அவள் சுபாவம். அதைக் காட்டியிருக்கிருள் கடுதாசியில் கூட. இதைப் பார்த்து இடிவிழுந்து போய்விடுவதா?" என்று சமாதானப்படுத்துவது போல் பேசினுர் தேவராஜ ஐயங்கார்.

இருந்தாலும் செங்கமலத்தின் மனம் கேட்கிறதா? இத்தனை கண்டிப்புடன் இரண்டே வரியில் உத்தரவு அனுப்பும்படி அவர்களுக்கு என்ன அவமரியாதை ஏற்பட்டு விட்டது என்று யோசிக்கலானுள் அவள். தேவராஜ ஐயங்கார் கல்யாணத்தின்போதும் பின்னருங்கூடச் சம்பந்தி வீட்டார் விஷயத்தில் அசிரத்தையாக இருப்பதுபோல் நடந்துகொண்டதை அவள் ஏற்கனவே பல முறை கண்டித்துப் பேசியிருக்கிருள். அதையெல்லாம் அவர் துளிகூடப் பொருட்படுத்தவேயில்லை. அவரது சுபாவம் அது என்று அவள் அறிந்துதான் இருந்தாள். இருப்பினும் மாப்பிள்ளையும் அவரது அத்தையுங்கூட அவர் குணத்தை அறிந்துகொண்டு அதன்படி போக வேண்டுமென்று எந்தச் சட்டத்தில் சொல்லியிருக்கிறது? இதை எண்ணியவுடனே செங்கமலத்தின் உள்ளம் கொஞ்சம்

கொதிப்படையத்தான் அடைந்தது. "ஆமாம். அவள் சுபாவம், இவள் சுபாவம்னு பிறத்தியாரைப் பத்திப் பேசிவிட்டாப் போதும். அப்ப இருந்தே நீங்க ரொம்ப மட்டும் மரியாதையுமா நடந்துண்டு வரேளே! இந்த லக்ஷணத்துக்கு அவாமேலே குத்தம் படிக்கணுமாக்கும். என்ன இருந்தாலும் கொண்டு கொடுத்துச் சம்பந்தம் பண்ணின இடத்திலே கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது இசைவா நடந்துண்டிருந்தா இப்படியெல்லாம் வந்திருக்குமா? அன்னிக்கே பிடிச்சு நானுந்தான் அடிச்சுக்கறேன். கேட்டாத்தானே! யானை தன் தலையிலேயே மண்ணைப் போட்டுக்கற மாதிரி..."

"போதும் போதும். ஆரம்பித்து விட்டாயாக்கும். இப்ப அப்படி என்ன மரியாதைக் குறைவாய் நடந்து விட்டது?"

"இன்னும் என்ன வேணுமாம்? வரத் தகாத மாப்பிள்ளை வரபோதே ஆத்திலே இல்லே. வந்த பிள்ளையை க்ஷேமம் விசாரிக்கக்கூட இல்லாமே தலைபோற காரியம் வந்துடுத்து. அப்புறம் ஒரு நாளைக் கிழமையைப் பண்ணணும்னு வச்சிருந்த பணத்தை, மாட்டுக்கு அழுது தொலைச்சாச்சு. இன்னிக்கு ஒரு நாளுன்னு வச்சுக்கறபோது செய்யாமே பின்னுடி செய்யறேன்னு, அவா கேட்டுண்டு போகணும்! நியாயம் நன்னுத்தானே இருக்கு?"

"அதனுலேதான் உன் அழகான மாப்பிள்ளை கொட்டுகிற மழையிலே சொல்லாமல் கோபித்துக்கொண்டு போய் விட்டானுக்கும்!"

"இதோ பாருங்கோ. நீங்க மாப்பிள்ளையைப் பத்தி ஒண்ணும் சொல்லவேண்டாம். இப்படி ஒரு அழகான மாமனுரைப் படைச்சுட்டா...உம்...எல்லாம்...நான் வந்த வழி. மருக்கொழுந்து போல ஒரு பொண்ணைப் பெத்திருக்கான்னு ஊரெல்லாம் 'ஒம்மல்' இந்த லக்ஷணத்துக்கு!" என்று பொலபொலவென்று கண்ணீர் விட்டாள் செங்கமலம்.

செங்கமலத்தின் துயரம் அளவுக்கு மீறிப் போய்விட்டதென்பதை உணர்ந்தார் தேவராஜ ஐயங்கார். அன்றியும்

அன்றிரவு மாடு இறந்ததே அவர் மனத்தில் ஒரு பெரிய அதிர்ச்சியை ஏற்படுத்திவிட்டது. அத்துடன் மாப்பிள்ளை திடீரென்று மறைந்த சம்பவமும் சேர்ந்தது. சோகம் தேக்கமிட்டிருக்கும் ருக்குவின் முகத்தைப் பார்த்தபோது அவர் உள்ளத்தின் குதூகலம் முற்றும் வறண்டு போய் விட்டது. எனவே இந்தச் சந்தர்ப்பத்தில் செங்கமலத்தை மடக்கிப் பேச முடியவில்லை அவரால். சமையலறையிலிருந்து திரும்பிக் கூடத்துக்கு வந்தார். ஊஞ்சலில் உட்கார்ந்தார்.

எதிர் அறையில் ருக்கு ஒரு புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு ஏதோ படிப்பதுபோல் பாவனை செய்து கொண்டிருந்தாள், புத்தகத்திலிருந்த எழுத்து ஒன்றாவது அவள் கண்ணுக்குத் தெரிந்ததா என்ன? அன்றிரவு தாயின் உத்தரவுப்படி மனமின்றியே மாடி அறைக்குச் சென்றவள், ரங்கநாதனை அங்கே காணாமல் திகிலடைந்து போய்த் தொபீரென்று தரையில் விழுந்த பின் மறுநாள் காலை வெகு நேரம் வரையில் பேச்சு மூச்சின்றிக் கிடந்தாள். சுமார் எட்டு மணி வரையில் அவள் இறங்கி வரப்போகிறாள் என்று எதிர்பார்த்துக்கொண் டிருந்த செங்கமலத்துக்கு, அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. மாடிக்குச் சென்றாள். அங்கே ருக்கு கிடந்த காட்சி அவளுக்குப் பீதியை உண்டாக்கிவிட்டது. ஒன்றும் தோன்றாமல் குய்யோ முறையோ என்று கதறி விட்டாள்.

செங்கமலத்தின் கூக்குரல் கேட்டு வாசலிலிருந்த தேவராஜ ஐயங்காரும் மற்றும் சிலரும் மாடிக்கு ஓடினார்கள். ருக்குவுக்கு மூர்ச்சை தெளியவைத்து அவளிட மிருந்து ரங்கநாதன் ராத்திரியே எங்கேயோ போய்விட்டான் என்கிற விஷயத்தை அறிவதற்குள் செங்கமலமும் தேவராஜ ஐயங்காரும் பட்டபாடு வர்ணிக்கத் தரமன்று.

ரங்கநாதன் மறைந்த விஷயம் அவர்கள் உள்ளத்தில் எண்ணத் தகாத எண்ணங்களை யெல்லாம் எழுப்பியது. செங்கமலம் ருக்குவிடம் ஆயிரம் கேள்விகள் கேட்டாள். ருக்கு சரியாகப் பதில் சொன்னால் தானே! தம்பதிகளுக் கிடையே ஏதாவது மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டதா என்று

அறிய, ருக்குவின் மனத்தைக் கிளறிக் கிளறிக் கேட்டாள் செங்கமலம்.

ருக்கு எல்லாக் கேள்விகளுக்கும் ஒரே பதிலைத்தான் அளித்தாள். ''பாதி ராத்திரி இருக்கும். மழையிரைச்சலிலே அந்த மாடு அலறின சப்தம் கேட்டு எழுந்தேன் நான். கீழே வந்து பார்க்க வேண்டும் என்றேன். அவர் வேண்டாம் என்று தடுத்தார். ஆனல் எனக்கு மனசு கேட்கவில்லை. வந்துவிட்டேன். மறுபடியும் மாடிக்குப் போனபோது அவரைக் காணேம். இதுதான் எனக்குத் தெரியும்'' என்று தான் ருக்கு கூறினுள்.

இந்தப் பதில் செங்கமலத்துக்குத் திருப்தியை அளிக்க வில்லை. மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் ஏதோ மனஸ் தாபம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று அவள் பெண்மை யுள்ளம் ஊகித்துக்கொண்டது. இதைப்பற்றி எந்தவிதமாகப் பிரஸ்தாபித்தாலும் ருக்கு பதிலே சொல்லாமல் இருப்பது கண்டு அவள் தாயுள்ளம் பதைத்தது.

தேவராஜ ஐயங்காரும் கவலையடைந்தார். செங்கமலமும் அவரும் தனிமையில் உட்கார்ந்து விஷயம் இன்னதென்று அறியாமல் புலம்பித் தவித்தனர். ஆனல் ருக்கு என்ன செய்வாள் பாவம்! தன் புருஷனுக்குத் தான் இணங்காததால் தான் அவன் கோபமடைந்து போய்விட்டான் என்பதை அவள் உணர்ந்துதான் இருந்தாள். அதை எப்படிப் பெற்ருே ரிடம் சொல்ல முடியும்?

இப்போதுகூடப் புத்தகமும் கையுமாக உட்கார்ந்து அவள் அதே சிந்தனையில்தான் ஊறிப்போயிருக்கிருள், 'கொட்டுகிற மழையில் கோபித்துக்கொண்டு போய் விட்டாரே! எப்படி நினைத்தாரோ! உடம்புக்கு ஏதாவது வந்துவிட்டால் என்ன செய்வது? இவ்வளவு கோபத் துடன் போனவர் உடம்பைப்பற்றி எனக்கு ஏன் எழுதப் போகிருர்? அப்போதிருந்த நிலையில் அவர் அந்தக் கருக் கிருட்டிலே மறைந்துவிட்டாரே! ஊருக்குப் போனுரா அல்லது வேறே எங்கேயாவது!'...ருக்குவுக்கு எண்ணவும் பயமாயிருந்தது. ஆனல் அவள் அஞ்சுவதைக் கண்டு

அவள் மனசின் எண்ண அலைகளுக்கு அணை போடுவ தென்பது சாத்தியமா? 'என்ன இருந்தாலும் நான் அப்படி நடந்துகொண் டிருக்கக் கூடாது. அவர் இதோடு என்னைக் கைவிட்டுவிட்டால்?' என்று ஒரு கேள்வி எழும்.

'கைவிடாமல் இன்னும் பொறுத்துக்கொண் டிருப்பாரா என்ன? அவர் புருஷன். நெஞ்சழுத்தம் உள்ளவர். நீ பெண். உனக்கே இத்தனை மன உறுதி சாத்திய மென்றால், அவர் இன்னும் எத்தனை உறுதியுடன் இருப்பார்? அவர் ஆசையை முற்றும் மழைபோல் சொரிந்தார். நீ திரஸ்கரித்தாய். இப் போது அவர் போய்விட்டார். உன்னை விட்டுப் போய் விட்டார். மனம் முறிந்து போய்விட்டார் அவர். இனி உன்னைப்பற்றி அவருக்கு என்ன கவலை? உன்னை விட்டால் அவருக்குப் பெண்கள் கிடைக்க மாட்டார்களா என்ன? அவரது ஆசை ஊற்று உன்வரையில் வற்றி உலர்ந்து போய் விட்டது. ஆனால், அதைத் தோண்டி யெடுக்க ஆயிரம் பெண்கள் காத்துக்கொண் டிருப்பார்கள். நீதான் மோசம் போனாய், உன் செய்கையால்!' என்று அவள் மனம் இடித்துக் கூறும் அவளிடம்.

'அன்று நான் திரஸ்காரம் செய்திராவிட்டால் இன்று அவர் கதி என்ன ஆகியிருக்கும்? பூமியே எரிந்து சாம்ப லாய்ப் போனால் ஊற்றைத் தோண்டி எடுப்பதாவது? என் வரையில் அவரது ஆசை ஊற்று உலர்ந்தே போனாலும் சரி; அவர் நன்றாய் இருந்தால் போதும். அவரது ஆசை ஊற்றில் திளைக்க ஆயிரமல்ல, பதினாயிரம் பெண்கள்தாம் வரட்டுமே! வாழ்வுதானே எனக்கு இல்லை? இதை நான் சகித்துக்கொள்ளத் தயார். இதன் ஒளியாக என் மார்பகத்தை முத்தமிட்டுக்கொண் டிருக்கும் மாங்கல்யம்—அவர் கரத்தின் ஸ்பரிசத்தைக் கிரகித்துக் காந்தத்தைப்போல என் இருத யத்திலே சதா அதைப் பாய்ச்சிக்கொண் டிருக்கும் இந்த மாங்கல்யம் என்றும் எனக்கு இருந்தால் போதும். வாழ்வு நாளைக்கே வரும். சந்நியாசிதான் சொல்லியிருக்கிறாரே!'' என்று அவள் எண்ணி ஆறுதல் அடைவாள்.

இப்படியாக ருக்குவின் மன உறுதி அவள் உள்ளத்தில் தோன்றும் கேள்வி பதில்களின் மூலம் உரமேறி அசைக்க முடியாத தாகிவிட்டது. இந்த நிலைமைக்கு வந்தபின் ருக்கு சில சமயம் கவலையின்றி யிருப்பது போலக் காணப்பட்டாள். இதைக் கண்டு செங்கமலமே சந்தேகப்பட்டாள் என்றால் சொல்லவேண்டுமா ?

ஊர் வாய் சும்மா இருக்கிறதா ? என்ன என்னவோ பிதற்றத் தொடங்கிவிட்டது. ஊர்ப்பெண்களும் ஆண்களும் கோவில் புறத்திலும் கொல்லைப் புறத்திலும் கிணற்றடியிலும் குளத்தங்கரையிலுமாகக் கூடிக் கூடிப் பேசிக்கொண்டனர். 'பொழுது விடியறத்துக்குள்ளேயே மாப்பிள்ளை மனஸ்தாபப் பட்டுண்டு போயிட்டானுமே! இதென்ன அநியாயம்!' என்று ஆச்சரியத்துடன் ஆரம்பமான ஊர்வாய், 'இல்லாத போனு, விடிந்ததும் விடியாததுமாக் குளத்தங்கரையிலேயும் தோப்பிலேயும் என்ன காரியம் அந்தப் பொண்ணுக்கு? தூங்கி எழுந்திருக்கிறத்துக்கு முன்னே ஊரை ஒரு பிரதக்ஷிணம் வராளாமே?...... ஆம்படையான் கைவிட்டுப்போன கையோடே குளிப்பென்ன, குங்குமம் என்ன, குளத்தங்கரை என்ன, முகத்திலேதான் அத்தனை குஷால் என்ன ?' என்பது போல வளர்ந்துகொண்டே எல்லை மீறிப் போய்விட்டது. ஆனால் அதை அடக்க யாரால் முடியும் ?

ரங்கநாதன் மறைந்த பிறகுகூட ருக்கு தன் சங்கல்பத்தை விடவில்லை. மனத்தில் ஒருவித உறுதி ஏற்பட்டு விட்டது அவளுக்கு. விடியற்காலையில் எழுந்து குளத்துக்குச் சென்று ஸ்நானஞ் செய்துவிட்டு, அரசமரத் தடியிலிருந்த நாகபீடத்தைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் செய்வதுதான் நாள் தோறும் அவள் செய்த முதல் காரியமாயிருந்தது. இதிலிருந்து கிளம்பிய ஊர்வாய் விரிவாகப் பெருகியது அவளுக்குத் தெரியாது. தெரிந்திருந்தாலும் அதைப்பற்றி அவள் கவலைப் பட்டிருப்பாளா என்பது வேறு விஷயம்.

செங்கமலத்துக்கு அவள் செய்கையெல்லாம் ஒரு பைத்தியக்காரியின் செய்கைபோல இருந்தது. 'விடிந்ததும் விடியாததுமாகக் குளத்தங்கரையில் என்ன காரியம்?' என்று கண்

டித்துச் சொல்லிப் பார்த்தாள். ஆனால் அவள் கேட்டால் தானே. குளத்திலிருந்து திரும்பியபின் பூஜை அறையில் மணிக்கணக்காக ஏதோ ஜபம் செய்பவள்போல 'மொட்டு மொட்' டென்று அவள் உட்கார்ந்திருப்பதைக் கண்ட செங்க மலத்துக்கு, ஒருகால் அவள் புத்தியே சுவாதீனமற்றுப் போய் விட்டதோ என்றுகூடத் தோன்றிற்று. இப்போதெல்லாம் ருக்கு பூஜை அறையை விட்டால், கூடத்து அறையோடு சரி. முன் போலக் குதூகலமாக வீடு முற்றும் உலாவுவதோ வாசலில் போய் நிற்பதோ இல்லை. கையில் ஏதாவது ஒரு புத்தகம் இருக்கும். மனசில் ஏதாவது ஒரு யோசனை இருக் கும். கண்களில் வெறிச்சென்ற ஒரு பார்வையும் அந்தப் பார்வையிலே ஒரு பயங்கரமான உறுதியும் இருக்கும். முன் போலத் தாய்க்கு ஒத்தாசையாக வீட்டுக் காரியங்களைக்கூடக் கவனிக்கவில்லை அவள்.

செங்கமலத்துக்கோ எந்தக் காரியத்திலும் மனம் செல்ல வில்லை. வேதனையும் விசாரமும் அவள் நெஞ்சைப் பிடுங்கித் தின்றன. இந்த நிலையையெல்லாம் விவரித்துக்கொண்டே போவதென்றால் அதற்கு எல்லையே இல்லை.

கடைசியில் அத்தையின் கடிதமும் வந்து சேர்ந்தது.

கடிதத்தைப்பற்றிச் செங்கமலத்துக்குத் தெரிவித்து, அவள் கொடுத்த 'டோஸை'யும் பெற்றுக்கொண்டு திரும்பி வந்து ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டே தேவராஜ ஐயங் கார் சிறிது நேரம் மௌனமாகவே ஏதோ யோசித்துக்கொண் டிருந்தார். எவ்வளவு நேரம் அவர் அப்படி உட்கார்ந்து கொண்டிருந்தாரோ! செங்கமலம் உள்ளே யிருந்து வந்து, "ஏன்னா, அப்புறம் என்ன பண்ணறதா யோசனை?" என்று கேட்ட பின்புதான் அவர் சிந்தனை கலைந்தது.

"செங்கமலம், எனக்கு என்னவோ இதிலெல்லாம் குடி முழுகிப் போய்விட்டதாக ஒன்றும் தெரியவில்லை. இருந்தா லும் இப்போதுள்ள நிலைமையில் எனக்கு என்ன செய்வ தென்றே தோன்றவில்லை. நீ என்ன சொல்லுகிறாய்?" என்று அவர் சொன்ன பதில் செங்கமலத்துக்கே பரிதாபமாக இருந் தது.

"உம், ஏதோ கடன் பட்டோ, உடன்பட்டோ செய்ய வேண்டியதைச் செய்து நல்லபடியாக அவளைக் கொண்டு போய் இவாளண்டை விட்டுவிட்டாப் போதும். அத்தனை கண்டிப்போடே கடுதாசி போட்டிருக்கிற போது சும்மா இருந்தா அப்புறம் விபரீதமாப் போயிடும்" என்று மிகுந்த கவலையுடன் பேசினுள் செங்கமலம்.

இந்தப் பேச்சு எதிர் அறையில் புத்தகமும் கையுமாக உட்கார்ந்திருந்த ருக்குவின் செவிகளில் விழுந்தது. அவளுக்கும் விஷயம் ஒருவாறு புலனுகிவிட்டது. தன்னைப்பற்றித் தான் பெற்ருேர் பேசிக்கொள்ளுகிருர்கள் என்பதை நொடியில் அறிந்துகொண்டாள். தன்னை உடனே கொண்டுவந்து விடும்படி தன் புருஷனிடமிருந்து தகப்பனுருக்குக் கடிதம் வந்திருப்பதாக எண்ணினுள் அவள். மழையிருட்டில் மறைந்த தன் கணவன் இப்படிக் கடிதம் எழுதியிருப்பதன் மூலம், அவன் சௌக்கியமாக ஊர்போய்ச் சேர்ந்திருப்பான் என்பதை ஊகித்துக்கொண்டாள். அவன் க்ஷேமமாயிருப்பதை உணர்ந்ததில் சந்தோஷத்தினுல் சட்டென்று கேட்டு விட்டாள் அங்கிருந்தபடியே: "அம்மா, அவரிடமிருந்து கடுதாசி வந்திருக்கிறதா என்ன? சௌக்கியமா யிருக்கிருராமா?" என்று.

"ஆமாம். உன் ஆத்துக்காரர் எல்லோரையும் போலப் புறப்பட்டுப் போனுரே! லக்ஷணமாக் கடுதாசி போட்டிருக்கார்!" என்று வெடுக்கென்று பதில் சொல்லிவிட்ட செங்கமலம், என்ன நினைத்துக்கொண்டாளோ என்னவோ, மேலே பேசாமல் நிறுத்திக்கொண்டாள். இப்படிப் பேசினுல் ஏற்கனவே புண்பட்டிருக்கும் ருக்குவின் மனம் பின்னும் கஷ்டப்படுமே என்று நினைத்தாளோ என்னவோ?

ஆனுல் ருக்கு அறையை விட்டு எழுந்து வந்தாள். ஊஞ்சலருகே வந்து சங்கிலியைப் பிடித்துக்கொண்டு, "அப்பா, அங்கிருந்து கடுதாசி வந்ததா என்ன? அவரா எழுதியிருக்கிருர்?" என்று கேட்டாள் மறுபடியும்.

"அவர் கடுதாசி போடவில்லையம்மா. அத்தைதான் போட்டிருக்கிருள். உன்னை உடனே கொண்டுவந்து விடச்

சொல்லி'' என்று அன்பு ததும்பும் குரலில் கூறினர் தேவராஜ ஐயங்கார்.

''ஏதோ? அந்தக் கடுதாசி எங்கே அப்பா?''

செங்கமலம் தன் கையிலிருந்த கடுதாசியை ருக்குவிடம் கொடுத்தாள். ருக்கு அதிலிருந்த இரண்டே வரிகளை ஒரு தடவைக்கு மூன்று தடவை படித்துப் பார்த்தாள். அவளுக்கு என்ன என்னவோ எண்ணம் உண்டாயிற்று. 'அந்தரங்கத்தில் நடைபெற்ற விஷயங்களை அத்தையிடம் சொல்லுவாரா?'' என்று ஒரு கேள்வி. 'ஊஹூம்; மாட்டார்' என்று உடனே பதில்,

'ஆனல் ஏன் இப்படிக் கண்டிப்புடன் இரண்டே வரியில் அத்தை எழுதியிருக்கிருள்?'

'அவர் எழுதச் சொல்லியிருப்பாரா, தமக்கு எழுதப் பிடிக்காமல்.'

'இதற்கு என்ன அர்த்தம்?'

'அவரிடம் உள்ள ஆசை ஊற்று, உன் வரையில் வற்றிப் போகவில்லை.'

'அப்படியா? அவருக்கு இன்னுங்கூட என்மேல் கருணை இருக்கிறதா?'

'இல்லாமல் என்ன? அதனல்தான் இந்தக் கடிதம் வந்திருக்கிறது.'

'ஆனல் இந்தக் கடிதத்தில் கண்டபடி நான் எப்படி உடனே போக முடியும்? நாகதோஷம் தீர ஒரு மண்டல காலம் பூர்த்தியாக வேண்டுமே!'

ருக்குவின் எண்ணம் தடைப்பட்டது. சட்டென்று அவள், தலைநிமிர்ந்து தன் பெற்றோரைப் பார்த்தாள். அவளுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

''உம். வெறுமே யோசனை பண்ணிண்டு உட்கார்ந்திருந்தா எப்படி? இன்னும் ரெண்டு மூணு நாளுக்குள்ளே ஒரு நல்ல நாளாப் பாத்துக் கொண்டுபோய் விடத்தான் வேணும்'' என்று செங்கமலம் தேவராஜ ஐயங்காரைப் பார்த்துச் சொன்னள்.

"அதைத்தான் யோசனை செய்கிறேன். எப்படியும் கொண்டுபோய் விடவேண்டியதுதானே?" என்று பதிலளித்தார் தேவராஜ ஐயங்கார்.

"ருக்கு, ஒண்ணும் கவலைப்படாதேடி அம்மா, பகவான் கைவிட்டு விடமாட்டார். ஏன் இப்படி உருகி உருகித் தேஞ்சு போறே? ஏதோ சோதனைக் காலம் இதெல்லாம்!" என்று தேறுதல் சொன்னாள் செங்கமலம், ருக்குவைப் பார்த்து.

"அம்மா!" என்றாள் ருக்கு அடைபட்ட குரலில்.

"ஏண்டியம்மா! சொல்லேன், உனக்கு என்ன வேணும் சொல்லு? எல்லாம் செஞ்சு கொண்டுவிடச் சொல்றேன் உன் அப்பாவை. அவருக்கு என்ன, செய்யக் கூடா தூங்கறதா என்ன? உன்னைத் தவிர வேறே யாருடீ எங்களுக்குத்தான்?" என்று குழையக் குழையப் பேசினாள் செங்கமலம்.

"இப்போ என்னை அங்கே கொண்டுபோய் விடவேண்டாம் அம்மா."

செங்கமலம் திடுக்கிட்டாள். தேவராஜ ஐயங்காரும் பிரமித்துப் போனார்.

"என்ன? இப்போக் கொண்டுபோய் விடவேண்டாமா!" என்று இரண்டு பேரும் ஒரே சமயத்தில் கேட்டனர் ஆச்சரியத்துடன்.

"வேண்டாம்!" என்று அழுத்தமாகப் பதிலளித்தாள் ருக்கு.

## 17

## சலனம்

நாச்சியாரம்மாள் சபதம் பலிக்கவில்லை. அவள் ஆத்திரத்துடன் தேவராஜ ஐயங்காருக்கு எழுதிய கடிதத்துக்கே எட்டு நாட்களுக்கு மேலாகியும் பதில் வந்து சேரவில்லை. "இன்றைக்கு எட்டாவது நாள் இந்த நேரத்துக்குள்ளே நாட்டுப்பெண் வந்து சேரா விட்டால் என் பேர் நாச்சியாரல்ல!" என்று அவள் வீருப்புக் கூறியதுதான் மிச்சம். அந்த வீருப்பு நின்றதுடன், அவள் பெயர் நாச்சியாரம்மாள் என்பதும் இங்கே நிலைபெற்று விட்டது. தன் பெயரை அவள் எடுத்துவிடத் தயாராயிருந்தாலும், நாம் விடப் போவதில்லை.

தேவராஜ ஐயங்கார் கடிதம் கண்டவுனே பெண்ணைக் கூட்டிக்கொண்டு வந்து விடுவாரென்றோ, அல்லது தன் கடிதத்துக்காவது பதில் வரும் என்றோ அவள் தினந்தோறும் எதிர்பார்த்து வந்தாள். ஒவ்வொரு நாளாகப் பத்து நாட்கள் கழிந்துவிடவே நாச்சியாரம்மாளுக்கும் நம்பிக்கை குறைந்தது. அவள் நம்பிக்கை குறையக் குறைய, சம்பந்தியிடத்தில் கோபமும் அதிகரித்து வந்தது. அந்தக் கோபம் அடிக்கடி ராமபாணம் போல் ரங்கநாதன்மீதும் பாயத் தொடங்கிற்று. சாக்கிட்டுக் சாக்கிட்டு அத்தை நாச்சியாரம்மாள், ரங்கநாதன் 'வேதவரத்தான் பெண்ணை'க் கட்டிக்கொண்ட குற்றத்தைப் பற்றித் தினுசு தினுசாக ஏசி, அவன் மனத்தைச் சுட்டெரித்து வந்தாள்.

கடைசியில் ஒரு நாள் எதிர்பார்த்த கடிதம் வந்து சேர்ந்தது. ஆனால் எதிர்பார்த்த மனிதர் கையில்தான் அது கிடைக்கவில்லை.

ரங்கநாதன் ஒரு நாள் காலை ஆபீஸுக்குப் போகக் கிளம்பி வாசலில் வந்தபோது தபால்காரன் அவன் கையில் அந்தக் கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனுன். கடிதத்தை வாங்கிய ரங்கநாதன் அது யார் பேருக்கு வந்திருக்கிறது என்பதைக்கூடக் கவனிக்கவில்லை. அவன் மனக் கலக்கத்தில் அதை அப்படியே சட்டைப்பையில் வைத்துக்கொண்டு அவசர அவசரமாக ஆபீஸுக்குப் போய் விட்டான்.

ஆபீஸில் போய் உட்கார்ந்தபின்தான் அவன் அந்தக் கடிதத்தைப் பிரித்தான். அத்தை பேருக்கு வந்திருந்தது. தேவராஜ ஐயங்கார்தான் எழுதியிருந்தார். ருக்குவுக்கு ஏதோ உடம்பு சரியில்லையென்றும் இன்னும் இரண்டு வாரம் கழிந்தபின் கொண்டுவந்து விடுவதாகவும், அதுவரை பொறுத்துக்கொள்ளும்படியும் அதி விநயமாகத்தான் எழுதி யிருந்தார் அவர். கடிதத்தைப் படித்தபின்தான் அவன் கவரின்மேலிருந்த விலாசத்தைப் பார்த்தான். தேவராஜ ஐயங்கார் அத்தைக்குத்தான் எழுதியிருந்தார்.

சில நாட்களாக அவன் ருக்குவைப் பற்றிய எண்ணத் தையே அடியோடு விட்டுவிட வேண்டுமென்று கருதியிருந் தான். ஆனுல் இந்தக் காரியம் அவன் சக்திக்கு மேம் பட்டதாக இருந்தது. அவனுக ருக்குவை மறக்க முயல்வதில் வெற்றியடைய முடியுமோ முடியாதோ! அத்தை நாச்சியாரம்மாள் அத்தனை சுலபமாக அவன் ருக்குவை மறந்துவிடும்படி விடுவாளா என்ன? நிமிஷத்துக்கு ஒரு முறை மொத்தமாக 'வேதவரத்தாரை'ப் பற்றி ஏதாவது சாக்கிட்டுச் 'சொட்டுப்' பேசி ரங்கநாதன், தூக்கத்தில்கூட அவர்களை மறக்க முடியாதபடி செய்துவந்தாள் அவள். இந்த நிலையில் மாமனுர் கைப்பட அத்தைக்கு எழுதிய கடிதமும் அவனிடம் வந்து சேர்ந்தது.

கடிதத்திலிருந்து அவன் அறிந்துகொண்ட விஷயம் ஒன்றுதான். ருக்குவுக்குத் தன்னிடம் வந்து வாழ மனம் இல்லை; அதனுல்தான் உடம்பு சரியில்லை என்று சால்ஜாப்புச் சொல்லியிருக்கிருள்; அதன்படி தேவராஜ ஐயங்கார் கடிதம்

எழுதியிருக்கிறுர் என்பதுதான் அந்த விஷயம். எனவே இரண்டு வாரம் அல்ல, இருபது வாரம் கழிந்தாலுங்கூட ருக்கு அவனிடம் வரப்போவதில்லை என்கிற முடிவுக்கு வந்துவிட்டான் அவன். அப்படி ஒருகால் சில வாரங்களுக்குப் பின் வருவதானுல் அவளை ஏற்றுக்கொள்வதா வேண்டாமா என்கிற பிரச்னையைப்பற்றி அவன் யோசிக்க வில்லை.

யோசனை எதற்கு? யோசிப்பதற்கு முன்னரே அவன் அதைப்பற்றி ஒரு முடிவுக்கு வந்துவிட்டவன் போல் இருந்தான். அவன் எண்ணங்கள் எல்லாம் அவனது முடிவுக்குச் சாதகமாகவே இருந்தன. ஒரு வாரகாலம் வேதவரத்தில் தங்கியிருந்தபோது ஒரு நாளாவது சுமார் பத்துநிமிஷ காலம் எதிரே நின்று ஆசையோடு பேசி யிருப்பாளா அவள்? ஏதோ ஒரு கடமையைச் செய்பவள் போலக் காபி கொடுத்துவிட்டு ஓடிப்போவதும், எதிரே நிற்கவே கூச்சப்படுபவள் போல நடிப்பதும் எதற்காக? அவள் செய்கையெல்லாம் கூச்சத்தினுல்தான் உண்டான தென்று சமாதானம் பண்ணிக்கொண்ட போதிலும், உண்மையான அன்பு இருந்தால் இந்தக் கூச்சம் ஒரு நொடியில் மறைந்துவிடாதா? ஆசைக்கு வெட்கம் ஏது? ஆனுல்—ஆனுல்—ஆசை இருந்தால்தானே வெட்கம் விலகி வழி விட?—இப்படி யெல்லாந்தான் எண்ணினுன் ரங்க நாதன். அவன் பிசகா என்ன அது? அவன் நிலையில் யாருமே இப்படித்தான் எண்ண முடியும். இல்லாவிடில் அந்த இன்பமான வேளையில்கூட, இனிய ஏகாந்தத்தின் மத்தியிலே, கூச்சம் வந்து குறுக்கிட்டு ஆசைக்கே அணை போட்டுவிடுமா என்ன? அந்தக் கூச்சத்துக்குத்தான் அவ்வளவு சக்தி ஏது? ஆரம்பத்தில் கொஞ்சம் நடித்துக் காட்டும் அது. அதுவும் பெண் என்ருல் அதற்குக் கிள்ளுக் கீரை. தன் நடிப்புச் சக்தியைப் பெண்மேல்தான் செலுத்த முடியும் அதனுல்.

அந்த நடிப்பில் மயங்கிப் பெண், தன் உண்மையான ஆவலை உணராமல் இருந்துவிடுவதில்லையே! இது இயற்

கைக்கே முற்றும் மாருக அன்ரே இருக்கிறது! அன்றியும் அந்த நேரத்திலா கிளம்பும், 'இஷ்டமில்லே!' என்கிற கண்டிதமான வார்த்தை! அதற்கு அர்த்தந்தான் இது. 'அவளுக்கு உடம்பு சரியில்லே; அதாவது இங்கே வந்து தன்னுடன் வாழ அவளுக்கு விருப்பமில்லே.'

ரங்கநாதனுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. கையிலிருந்த கடிதத்தைக் கசக்கிப் பக்கத்தில் இருந்த குப்பைக் கூடையில் எறிந்தான். ஆனல் மறு விநாடியே அதைக் குனிந்து எடுத்துச் சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டான்; ஆபீஸில் இருக்கும் வேறு யாராவது அதைப் பார்த்து விடக் கூடுமோ என்கிற நினைவால்.

கடிதத்தை அந்நியர் பார்த்து அவன் குடும்ப விவகாரங்களேக் கிரகித்துக்கொள்ளும்படியாக அதில் ஒன்றுமில்லே. சர்வ சாதாரணமான குடும்பக் கடிதமேதான் அது. இருந்தாலும் ரங்கநாதன், கடிதத்தை வைத்துக்கொண்டு தான் மனக் கண்ணில் கண்டதையெல்லாம் பிறரும் காண முடியும் என்று நினேத்தானே என்னவோ, யாருக்குத் தெரியும்? எதிரே மேஜைமேல் கட்டுக் கட்டாக ஆபீஸ் காகிதங்கள் குவிந்து கிடந்தன. அவன் கண்ணுக்கு அவையெல்லாம் புலப்பட்டதாகவே தெரியவில்லே. பித்துப் பிடித்தவன் போல, அவன் சிந்தனேக் கடலில் மூழ்கிக் கிடந்தான். காலம் அவனுக்காகக் காத்துக்கொண் டிருக்குமா என்ன? பக்கத்து மேஜையண்டை உட்கார்ந்து வேலே செய்துகொண் டிருந்த வேருெரு குமாஸ்தா ரங்கநாதனேக் கவனித்தான். நேரம் போவதைக்கூட நினேயாமல் ரங்கநாதன் நாற்காலியில் சாய்ந்தபடியே ஒரு வேலேயும் செய்யாமல் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவனே விசாரித்தான். "என்ன ஸார் ரங்கநாதன்! உடம்புக்கு என்ன? அப்படியே உட்கார்ந்து விட்டீர்களே!" என்ருன் அந்தக் குமாஸ்தா.

அவன் குரலேக் கேட்ட பின்புதான் ரங்கநாதன் நாற்காலியில் சற்று நிமிர்ந்து உட்கார்ந்தான். அவன் சிந்தனேயும் கலேந்தது. ஆனல் உடனே அவனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லே. கொஞ்சம் நிதானித்துக்கொண்டு,

"ஒரே மண்டையிடி ஸார், ராத்திரி பூராவும் தூக்கமே இல்லை" என்றான் ரங்கநாதன்.

"லீவு போட்டுவிட்டு வீட்டுக்குப் போய்ப் படுத்துக் கொள்ளுகிறதுதானே!"

"உம். ஏற்கனவே இரண்டு வாரம் லீவு வாங்கி யாயிற்று!" என்று சொல்லிவிட்டு ரங்கநாதன் மேஜை மேல் இருந்த கட்டுகளைப் பிரித்து வேலையில் ஈடுபட்டான்.

வேலை ஓடவில்லை. மிகவும் பிரயாசையுடன் சில கட்டு களைப் பார்த்து எழுதவேண்டியவற்றை எழுதித் தீர்த்தான். அவற்றை எடுத்துக்கொண்டு போன ஆபீஸ் பியூன் சிறிது நேரத்திற்குப் பின் அவனிடம் வந்து, அவனை மானேஜர் கூப்பிடுவதாகக் கூறிச் சென்றான்.

ரங்கநாதன் மானேஜரிடம் போய் நின்றான்.

மானேஜர் ஒரு தடவை அவனை ஏற இறங்கப் பார்த்தார். அவர் பார்த்த பார்வையிலிருந்தே ரங்கநாதனுக்கு ஒருவாறு விஷயம் புரிந்துவிட்டது. அவன் செய்த வேலையில் ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது. அதைப் பற்றி விசாரிக்கவே மானேஜர் அழைத்திருக்கிறார். "ரங்கநாதன், இந்தப் 'பைலை'ப் பார்த்தாயா? இதென்ன இப்படி எழுதியிருக்கி றாயே!" என்றார் கொஞ்சம் கெட்டியான குரலில்.

ரங்கநாதன் 'பைலை' வாங்கி மானேஜர் குறிப்பிட்ட இடத் தைப் பார்த்தான். அவனுக்கு அப்போது இருந்த மனக்கல வரத்தில், அவன் எழுதியிருந்த விஷயத்துக்கே அர்த்தம் என்ன என்று புரியவில்லை. "எனக்கு ஒன்றும் புரியவில்லை ஸார்!" என்று சொல்லிவிட்டான் வெடுக்கென்று.

மானேஜர் ஆச்சரியமடைந்தார். "ரங்கநாதன்!" என்றார் அழுத்தமான குரலில். "உன் பேச்சு ரொம்ப அழகா யிருக்கிறது. நீ எழுதியிருப்பது உனக்கே புரியவில்லையா? எழுதவேண்டியதற்கு நேர் மாறாக அல்லவா எழுதியிருக் கிறாய்?" என்றார் மறுபடியும்.

"ஒரே மண்டையிடியாக இருக்கிறது ஸார். என்ன எழுதினேன் என்றே தெரியவில்லை. தப்பு இருந்தால் தயவு

செய்து மன்னியுங்கள். எனக்கு உட்கார்ந்திருக்கவே முடிய வில்லை.

"சரி. அப்படியானல் வீட்டுக்குப் போய்ப் படுத்துக் கொள்!"

ரங்கநாதன் சரேலேன்று மானேஜர் அறையை விட்டுக் கிளம்பி வெளியே வந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் வீட்டிலிருந்த மாடி அறையில் அவன் படுக்கையில் புரண்டுகொண் டிருந்தான் என்பதைச் சொல்லத் தேவை யில்லை.

அடுத்த நாள் முதல் சுமார் ஒரு வார காலம் வரையில் ரங்கநாதன் ஒரு யந்திரம்போல் ஆபீஸுக்குப் போவதும் ஏதோ வேலை செய்வதும் திரும்புவதுமாக இருந்தான். ஆபீ ஸிலும் அவன் வேலையில் இடைவிடாமல் தவறு ஏற்பட்டுக் கொண்டே இருப்பதை மானேஜர் கவனித்து வந்தார். அவன் வேலைக்குச் சேர்ந்தது முதல் அது வரையில் அதிகமாகப் பிழையொன்றும் செய்ததே இல்லை. அன்றியும் அவனுடைய வேலையில் புத்திசாலித்தனமும் சுறுசுறுப்பும் காணப்படுவதாக மானேஜரே பலமுறை பாராட்டியிருக்கிறார். எனவே இப்போது தவறுகள் நேருவதற்குக் காரணம் அவனது உடல் நலம் குன்றியிருப்பதுதான் என்று கருதினர் அவர். ஆனல் தவறுகளோ நாளுக்கு நாள் அதிகரித்துவரத் தலைப்பட்டன. மானேஜருக்கும் பொறுக்க முடியவில்லை. ரங்கநாதனை அழைத்து, 'ரங்கநாதன், உன் உடம்பை நல்ல டாக்டர் யாருக்காவது காட்ட வேண்டும் என்று நினைக்கிறேன். ஆபீஸ் வேலையில் இப்படித் தப்பு விழுந்தால் துரை கோபித்துக் கொள்ள மாட்டாரா? நமது கம்பெனி டாக்டருக்கு இதோ ஒரு கடிதம் கொடுக்கிறேன்: அவர் உன்னை முதலில் பரிசோ தித்துப் பார்த்து என்ன சொல்லுகிறார் பார்ப்போம். அவசிய மானல் நீ லீவு எடுத்துக்கொள்ளவும் நான் துறையிடம் சிபார்சு பண்ணுகிறேன்' என்று கூறினர்.

மானேஜர் யோசனை ரங்கநாதனுக்கும் பிடித்திருந்தது. அவர் எழுதிக்கொடுத்த கடிதத்தைப் பெற்றுக்கொண்டு சென்று கம்பெனி டாக்டரைப் பார்த்தான். கம்பெனி டாக்

டர் அவனை நெடுநேரம் பரிசோதித்துப் பார்த்து விட்டு, ஒரு ரிபோர்ட் அனுப்பிவிட்டார். அந்த ரிபோர்ட்டில் மூளையில் மிகவும் கொதிப்பு ஏற்பட்டிருக்கிறதென்றும், அவன் எவ்வித மான வேலைக்கும் தற்போது தகுதியற்றவனாயிருப்பதாகவும், குறைந்த பக்ஷம் ஒருமாத காலத்துக்காவது அவன் பரிபூரண மாக ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் கண்டிருந் தது.

டாக்டர் ரிபோர்ட்டு அனுப்பிய மறுநாளே ரங்கநாத னுக்கு ஒரு மாதகாலம் லீவு 'ஸாங்ஷன்' ஆகிவிட்டது. அடுத்த நாள் முதல் ஒரு மாதகாலம் அவன் ஆபீஸுக்குப் போக வேண்டியதில்லை.

இந்த விஷயத்தையெல்லாம் அவன் தன் அத்தையிடம் விவரமாகச் சொல்லவில்லை. ஒரு மாதம் லீவு வாங்கிக்கொண் டிருப்பதாக மட்டுமே கூறினான். அத்தைக்கு இதைக் கேட்க ஆச்சரியமாயிருந்தது. "ஏண்டா ரங்கண்ணா, இப்பத்தானே ரெண்டு வாரம் லீவு வாங்கிண்டு ஊருக்குப் போயிட்டு வந்தே? ஆபீஸுக்குப் போக ஆரம்பிச்சு இன்னும் பத்து நாள் கூடச் சரியா ஆகவில்லையே! இதுக்குள்ளே எதுக்கு ஒரு மாசம் லீவு?" என்று கேட்டாள் அவள்.

உடம்பே சரியில்லை. அதற்காகத்தான் லீவு வாங்கிக் கொண்டேன். ஒரு மாசம் எங்கேயாவது ஊர்சுற்றலாமென்று நினைக்கிறேன். அத்தை, இன்றைக்கு ராத்திரியே புறப்படப் போகிறேன் தெரியுமா?" என்றான் பரபரப்புடன்.

நச்சியாரம்மாளுக்குத் தூக்கிவாரிப்போட்டது. "ஏண்டா உனக்கு ஏதாவது பைத்தியம் கியித்தியம் ஆரம்பமா என்ன? இப்பப் பணத்தைச் செலவழிச்சுண்டு போய் ரொம்பப் பலனைக் கண்டாச்சு. மறுபடியும் எங்கேயோ ஊர் சுத்தப் போறேன்னு சொல்றையே. நெஜமாச் சொல்லு. ஊர் சுத்தவா போறே நீ? வேதவரத்துக்குப் போவே!" என்று நிஷ்டுர மாகப் பேசினாள்.

"அத்தை, அடிக்கடி வேதவரம் வேதவரம் என்று ஏன் என் பிராணனை வாங்குகிறாய்? இந்தப் பிடுங்கல் பொறுக்கா மல்தான் ஒரு மாசம் லீவு போட்டு விட்டு எங்காவது

தொலைந்து போகப் போகிறேன். நிச்சயமாகச் சொல்லு கிறேன். வேதவரத்துக்குப் போகப்போகிறதில்லை. அவ்வளவு தானே!''

"ஆமாண்டா, நான் சொன்னது தப்புத்தான். நீ ஊரை யாவது சுத்து; உலகத்தையாவது சுத்து. நல்லதைச் சொன்னாக் கசக்கத்தான் கசக்கும்!'' என்று சொல்லிவிட்டு அத்தை சட்டென்று போய்விட்டாள்.

அன்றிரவு ரங்கநாதன் வீட்டைவிட்டுப் புறப்படும்போது, "அத்தை, ஒரு மாசத்தில் வந்துவிடுகிறேன். கவலைப் படாதே. அடிக்கடி கடுதாசி போடுகிறேன்'' என்று சொன்னதைக் கேட்டதுந்தான் நாச்சியாரம்மாள் அவன் வார்த்தைகளின் உண்மையை உணர்ந்தாள். உண்மை யாகவே அவன் கிளம்பிவிட்டதை அறிந்ததும் அவளுக்கு ஒன்றுமே பேசத் தெரியாமல் வாயடைத்துப் போயிற்று. வாயைப் பிளந்தபடியே வாசலில் நின்று அவன் ஏறிச்சென்ற டாங்கா தெருக்கோடியில் திரும்பும் வரையில் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அடுத்த வீட்டு ராஜலக்ஷ்மியும் அப்போது வாசலில்தான் நின்றிருந்தாள். டாங்கா தெருக்கோடி சென்று மறைந்தபின். அவள் அத்தையைப் பார்த்து, "ஏன் அத்தை, மருமான் எங்கோ ஊருக்குப் போருப்பலே இருக்கே? எந்த ஊருக்கோ?'' என்று விசாரித்தாள்.

"ராஜலக்ஷ்மி, இப்படி வாயேன் சித்தே'' என்றாள் அத்தை.

ராஜலக்ஷ்மி வந்தாள். அத்தை அவளைக் கூட்டிக் கொண்டு உள்ளே போனாள். "ஏண்டி ராஜலக்ஷ்மி, வாசலிலே சொல்லிக்கொள்ள என்னவோ போல இருந்தது. அதான் உள்ளே வரச்சொன்னேன். 'எங்கேயோ ஊர்சுத்தப் போறேன். ஒரு மாசம் லீவு வாங்கிண்டிருக்கேன்'னு சொல்லி விட்டுத் திடுதிப்புன்னு பொறப்பட்டுப் போய்விட்டான். என் னத்தைச் சொல்றது? 'வேதவரத்துக்காடா போறே?'ன்னு கேட்டேன். 'இல்லேன்னு சொன்னான்''' என்று தொடங்கி அவன் வேதவரத்துக்குப் போய் வந்த விஷயத்தைப் பற்றி

யும், ருக்குவை அவனுடன் தேவராஜ ஐயங்கார் அனுப்பாத தையும், உடனே கொண்டுவந்து விடும்படி; தான் ஒரு கடிதம் போட்டும் அவர் பதில் போடாமல் இருப்பது பற்றியும், தன் மனத்தில் தோன்றியபடி ஒன்றுக்குப் பத்தாகக் குற்றம் சாட்டிப் பேசி, அத்தை நாச்சியாரம்மாள், ராஜலக்ஷ்மியின் முன் வேதவரத்தாரிடம் தனக்குள்ள அசூயையை முற்றும் விவரித்து முடித்தாள்.

அவள் தோரணையாகச் சொன்னதைக் கேட்ட ராஜலக்ஷ்மிக்கும் அவள் வார்த்தைகள்தாம் உண்மை என்று பட்டிருக்கவேண்டும். "அத்தை, இப்பக்கூட உங்க மருமான் அங்கேதான் போயிருப்பான். சொன்னு நீங்க ஏதாவது சொல்லப் போறேளேன்னு ஊர் சுத்தப் போறேன்னு சொல்லியிருக்கான்" என்றுதான் அவள் அபிப்பிராயப்பட்டள்.

"நானும் அதே மாதிரிதாண்டி நெனச்சேன். ராஜலக்ஷ்மி, நீ என்ன சொல்றே பார்க்கலாம்னுதான் உன்னைக் கேட்டேன்."

"பத்து நாள் பொறுத்துண்டு பாருங்கோ. அதுக்குள்ளே அவனண்டையிருந்து கடுதாசி வந்தாப் பார்க்கலாம். இல்லாவிட்டால் வேதவரத்துக்கு இன்னெரு கடுதாசி போடற தினுசிலே போட்டாத் தானுக விஷயம் தெரிஞ்சுவிடறது."

நாச்சியாரம்மாளுக்கும் இந்த யோசனை தகுந்ததாகவே தோன்றிற்றி!

## 18

### மூடுமந்திரம்

என்றைக்கும் இல்லாத தேஜஸுடன் அன்று ருக்கு வின் முகம் காணப்பட்டது. அதை எதிரில் உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண் டிருந்த அவள் தாய் செங்கமலங்கூடக் கண்டுகொண்டாள். சுமார் ஒரு மாத காலத்துக்கு மேலாகப் பாசி பிடித்த பளிங்குக் கல்போல இருந்த தன் மகளின் வதனம் அன்று பள பள வென்று பிரகாசிப்பதைக் கண்ட செங்கமலத்துக்கே உள்ளத்தில் ஒரு வித மகிழ்ச்சி உண்டா யிற்று. அந்த மகிழ்ச்சியில் தன்னையும் அறியாமல் பேசினுள் அவள் : "ருக்கு, இன்னிக்கித்தான் உன் முகத்தைப் பாத் தாத் திருப்தியா இருக்கு!" என்று.

"அம்மா, இனிமேல் எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை. கவலையே வேண்டாம்!" என்று தாயின் வார்த்தைக்குச் சட்டென்று பதிலளித்தாள் ருக்கு. அவள் மனத்தில் பொங்கி எழும்பிக்கொண் டிருக்கும் ஆனந்தத்தை அவளால்கூட அடக்க முடியவில்லை. "என்னடி ருக்கு, இப்படிப் பேசறே? இத்தனை நாளா எனக்குத்தான் கவலை; உனக்கு ஒண்ணு மில்லை போலச் சொல்றையே. உன் முகத்தைப் பார்க்கவே முடியாமே இருந்தது. என்ன உடம்புன்னு கேட்டாலும் சரியாப் பதில் சொல்ல மாட்டேங்கிறே. இந்தப் பட்டிக் காட்டிலே ஒரு டாக்டர் உண்டா, மருந்து உண்டா, சட்டுன்னு போய்ப் பார்க்கறத்துக்கும் செய்யறத்துக்கும்...? ஆமாம் நானுந்தான் கேக்கிறேன். இப்படி ஒரே பிடிவாதமா விஷயத்தைச் சொல்லாமே மறைக்கறையே..." என்று செங்கமலம் பேசிக்கொண்டே வந்தபோது ருக்கு சட் டென்று இடைமறித்து, "அம்மா. அதை மட்டும் என்னை

ஒன்றும் கேட்காதே!'' என்று பதிலளித்து விட்டு ஏதோ நினைத்துக்கொண்டவள் போல் திடுமென்று எழுந்து போய் விட்டாள்.

"என்னடீ ருக்கு இப்படி, எழுந்து ஓடறையே? மோருஞ் சாதம் சாப்பிடல்லே?'' என்று கேட்ட செங்கமலத்துக்குப் பதிலே இல்லை.

ருக்கு அரைகுறையாகவே சாப்பாட்டை முடித்து விட்டுக் கையலம்பிக்கொண்டு கூடத்துக்குப் போய் ஊஞ்சலில் உட்கார்ந்தாள். அவளையும் அறியாமல் அவள் வாய் ஏதோ ஒரு பாட்டைப் பாடத்தொடங்கியது. வெகு நாட்களுக்குப் பின் ருக்கு பாடுகிருள். ஆம். ஒரு மண்டல காலத்துக்குப் பின் பாடுகிருள் அவள். அவள் உள்ளத்தில் ஆனந்தம் நிரம்பியிருந்தது. அதனுல்தான் அத்தனை நாட்களாகப் பாடாதவள் அன்று பாடுகிருள். அவள் மனத்திலிருந்து ஒரு பெரும் பாரம் கழிந்தது போல இருந்தது அவளுக்கு. சந்நியாசியின் கட்டளையைச் சிரமேல் தாங்கி ஒரு மண்டல காலம் நாகப்பிரதக்ஷிணம் செய்து முடித்துவிட்டாள். அவள் கழுத்தை இறுக்கிக்கொண்டு அவளது மாங்கல்யத்தில் சிக்கியிருந்த நாக சர்ப்பம் அன்றைத் தினத்தோடு விலகி நாகபீடத்துடன் ஐக்கியமாகியிருக்கும். அவள் வாழ்வின் பாதையிலே சீறி நின்ற சர்ப்பத்துக்குச் சாந்தி செய்தாகிவிட்டது. அது அவள் வழியை விட்டு இன்று விலகிப் போய்விட்டது. இனி அவள் கணவன் உயிருக்குப் பயமேயில்லை. இந்த எண்ணமே ருக்குவின் மனத்தில் பரிபூர்ணமான ஆனந்தத்தைத் தந்திருந்தது.

அன்று காலை மிகவும் பயபக்தியுடன் நாகபூஜை செய்து முடிக்கும் வரையில் அவள் மனம் திக் திக்கென்று அடித்துக் கொண்டது. நாக பூஜை முடிந்ததும் திடீரென்று தன் எதிரில் மறுபடியும் அந்தச் சந்நியாசி தோன்றுவார்; வெற்றிகரமாக விரதத்தை முடித்ததைக் குறித்துச் சந்தோஷித்துத் தன்னை ஆசீர்வதிப்பார் என்றுகூட நினைத்தாள் அவள். ஆனுல் அவள் எதிர்பார்த்தபடி சந்நியாசி அவள் முன் மீண்டும் தோன்றவில்லை. இதனுல் சிறிது ஏமாற்றங்கூட உண்டாயிற்று அவளுக்கு.

இந்த ஏமாற்றம் ஒருவித நம்பிக்கைக் குறைவையும் அளித்தது. 'சீ, ஏதோ சந்நியாசி சொன்னதைக் கேட்டு அவரிடம் மனஸ்தாபப் பட்டுக்கொண்டேனே! இதெல்லாம் வெறும் மூட நம்பிக்கையாக முடியுமானுல்...?' என்று கேட்டுக் கொண்டாள், தன்னைத்தானே.

'சந்நியாசி சொன்னதை மதிக்காமல் அவர் கட்டளையை மீறி நடந்துவிட்டு, பிறகு ஏதாவது துரதிருஷ்டம் வாய்த்தால் அது ஒரே 'நெஞ்சீரலா'க அல்லவா போய்விடும்!' என்கிற பதில் அவளுக்குத் தானகவே கிடைத்துவிட்டது.

அன்றியும் நாக பூஜை முடிந்தவுடன் அன்றைய வரையில் இல்லாத ஒரு மன நிம்மதியும் உண்டாயிற்று அவளுக்கு. அடுத்த நாளே மைசூருக்குப் போய் ரங்கநாதனைப் பார்க்க வேண்டும் என்கிற துடிப்பு ஏற்பட்டது. ஆனுல் அவன் இப்போது அவளை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிருனு என்பதுதானே கேள்வி? அதைக்கூடப் பொருட்படுத்தவில்லை அவள். அவளது விரதத்துக்குப் பங்கம் ஏற்படாமல் இனிது நிறைவேறியதே, அவளது எதிர்கால வாழ்வுக்கு ஒரு நல்ல சூசகம் என்று கருதினுள் அவள். ரங்கநாதனிடம் போய் எப்படியாவது கெஞ்சிக் காலில் விழுந்து அவனது அன்பைப் பெற்றுவிட முடியும் என்று நம்பினுள் அவள்.

அந்த நம்பிக்கையில்தான் அவள் சாப்பிடுவதைக்கூடச் சரியாகக் கவனிக்காமல் அரைகுறையாக முடித்துக்கொண்டு வந்து ஆனந்தமாகப் பாடுகிருள். அவள் பாடுவது வாசல் திண்ணைமேல் படுத்திருந்த தேவராஜ ஐயங்காருக்குக்கூடக் காதில் விழுந்தது. அவரே திடுக்கிட்டுப் போனுர். ஒரே ஏக்கமாகக் கேட்டதற்குக்கூடச் சரிவரப் பதில் சொல்லாமல் இருந்த ருக்குவா இத்தனை குதூகலமாகப் பாடுகிருள்? அவருக்கே ஆச்சரியமாக இருந்தது. திண்ணையை விட்டு எழுந்து உள்ளே வந்தார். அவர் கூடத்துக்கு வந்ததும் செங்கமலம் கையலம்பிக்கொண்டு வந்ததும் சரியாக இருந்தது.

"மோருஞ் சாதங்கூடச் சாப்பிடாமே வந்துட்டியே! பைத்தியக்காரி போல என்னடீ பாட்டு வேண்டியிருக்கு!" என்ருள் செங்கமலம்.

"செங்கமலம், குழந்தை கொஞ்ச நாழி சந்தோஷமாய்ப் பாடிக்கொண் டிருந்தால் அதைக் கெடுக்கிறாயே!" என்றார் தேவராஜ ஐயங்கார்.

"ஆமாம் அப்பா. இந்த அம்மாவே எப்போதும் இப்படித் தான். என்னை நாளைக்கே கொண்டுபோய்...என்று சட்டென்று பேசிவிட்ட ருக்குவுக்கு வெட்கம் வந்துவிட்டதோ என்னவோ? வார்த்தையை முடிக்காமலே நிறுத்தி விட்டாள்.

என்ன குழந்தைத்தனமான பேச்சு! ஆனால் அந்தப் பேச்சிலிருந்து செங்கமலத்தின் தாய் உள்ளம் எத்தனை விஷயங்களை அறிந்துகொண்டு விட்டது! எத்தனை விஷயங்களைக் கற்பனை செய்துகொண்டது!

"ஆமாம்னா! அங்கேயிருந்து கடுதாசி வந்தே ரொம்ப நாளாச்சு. இத்தனை நாளா என்ன உடம்போ என்னவோ? கேட்டாக்கூடப் பதில் சொல்லாமே இருந்துட்டா. நாளைக்கே ஒரு நல்ல நாளாப் பாருங்கோ, கொண்டுபோய் விட்டு விடலாம்" என்றாள் அவள்.

தேவராஜ ஐயங்காருக்கும் அவள் பேச்சு உசிதமாகப் பட்டது. அத்தையின் கடிதத்தைக் கண்டதும், தன்னைக் கொண்டுபோய் விடவேண்டாமென்று கூறிய ருக்குவே, இன்று கொண்டுபோய் விடச் சொல்லுகிறாள். ருக்கு, கணவனிடம் போக மறுத்ததற்குக் காரணம் என்னவென்று எத்தனையோ விதமாகத் தேவராஜஐயங்காரும் செங்கமலமும் கேட்டுப்பார்த்தாகிவிட்டது. அப்பொழுதெல்லாம் ஏதோ தேக அசௌக்கியம் என்று மட்டுமே ஒருவாறாகப் பதில் சொல்லித் தட்டிக் கழித்துவிட்டாள் ருக்கு. எனினும் ருக்குவுக்கும் ரங்கநாதனுக்கும் ஏதோ மனஸ்தாபம் ஏற்பட்டிருக்கிறது என்பதைச் செங்கமலமும் தேவராஜ ஐயங்காரும் ஊகித்துக் கொள்ள முடியாதா என்ன? இருந்தாலும் இத்தகைய விஷயங்களையெல்லாம் பச்சையாகக் கேட்டுத் தெரிந்துகொள்ள முடிகிறதா? தாய் என்கிற முறையில் விஷயத்தைக் கிரகிக்கச் செங்கமலமும் தன்னால் ஆனவரையில் முயன்றுதான் பார்த்தாள். பெண்மையின் ரகசியங்களைப் பெண்மை யறிந்து

கொள்வது இயல்புதானே! ஆனல் ருக்கு பிடி கொடுக்கவே இல்லை! சந்நியாசியின் கட்டளைப் பிரகாரம் ரகசியத்தைக் காப்பாற்ற வேண்டியது அவள் கடமை அல்லவா? அந்தக் கடமையை நன்கு உணர்ந்திருந்தாள் அவள். எனவே செங்கமலத்துக்கும் எல்லாம் ஒரே மூடுமந்திரமாக இருந்தது.

இந்த நிலையில் அத்தை நாச்சியாரம்மாள்மைசூரிலிருந்து இரண்டே வரியில் ஒரு கடிதம் எழுதிப் போட்டு விட்டாள். கடிதம் கண்டவுடனே ருக்குவைக் கொண்டு போய்விடத் தேவராஜ ஐயங்கார் தயாராக இருந்தாலும் ருக்கு அப்போது மைசூருக்குப் போக விரும்பவில்லை. வேறென்றும் செய்யத் தெரியாமல் தேவராஜ ஐயங்கார், ருக்குவுக்கு உடம்பு சரியில்லை என்றும் இன்னும் சில தினங்கள் கழிந்த பிறகு அவளைக் கொண்டுவிடுவதாகவும் நாச்சியாரம்மாளுக்குப் பதில் கடிதம் எழுதிப் போட்டார். அந்தக் கடிதமே ரங்கநாதன் கையில் கிடைத்தது என்பது தெரிந்த விஷயம்.

இப்போது ருக்குவே தன்னைக் கொண்டுபோய் விடும்படி கூறியதால் செங்கமலம் சூட்டோடு சூடாகத் தன் புருஷனிடம் உடனே நாள் பார்க்கும்படி சொன்னுள்.

''ருக்கு, அம்மா சொல்லுகிருளே. ஒரு நாளைப் பார்க்கட்டுமா அம்மா!'' என்று மிகுந்த வாஞ்சையுடன் கேட்டார் தேவராஜ ஐயங்கார்.

ருக்குவின் இதழ்களில் புன்னகை தவழ்ந்தது. அவள் சம்மதத்துக்கு அடையாளமாக அவருக்கு ஓர் 'உம்' கிடைத்தது.

## 19

## 'அவர் எங்கே ?'

மறுநாள் காலையிலேயே தேவராஜ ஐயங்கார் பஞ்சாங்கமும் கையுமாக ஜோஸ்யரைப் பார்க்கப் புறப்பட்டார். அவர் வாசலுக்கு வந்தபோது, அப்போதுதான் அங்கே வந்த தபாற்காரன் அவரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றான். தேவராஜ ஐயங்கார் கடிதத்தைப் பிரித்துப் படித்தார். அவர் முகம் சவம் போல் வெளுத்துவிட்டது. கடிதமும் கையுமாகத் திரும்பி உள்ளே வந்து, "செங்கமலம்!" என்றார் பதை பதைக்கும் குரலில்.

சாதாரணமாகத் தேவராஜ ஐயங்காரை நல்ல தைரிய சாலி என்றே சொல்லவேண்டும். எந்த விதமான துன்பம் தரும் செய்தியைக் கேட்டாலும் சட்டென்று கலங்கிப் போக மாட்டார் அவர். அப்பேர்ப்பட்டவரே பதைப்புடன் செங்கமலத்தைக் கூப்பிட்டாரென்றால் ?—

செங்கமலம் அவர் குரலைக் கேட்டவுடனே வந்து விட்டாள். அந்தக் குரலில் இருந்த அகப்பதைப்பை அவள் நன்கு உணர்ந்துவிட்டாள். வந்ததும் வராததுமாக அவர் முகத்தை உற்று நோக்கிவிட்டு, "ஏன்னா, என்ன சேதி? உங்க மூஞ்சி ஏன் இப்படி இருக்கு!" என்று துடித்தாள் செங்கமலம்.

"செங்கமலம், மாப்பிள்ளை இங்கே இருப்பது போல அவர் அத்தை கடுதாசி எழுதியிருக்கிறாளே!"

"மாப்பிள்ளை இங்கே இருக்கிறாரா? என்ன...?"

"இதோ பார் கடுதாசியை."

செங்கமலம் கடிதத்தை வாங்கிப் பார்த்தாள்.

மைசூர்.

‘சம்பந்தி தேவராஜ ஐயங்கார் சுவாமிக்கு,

உங்கள் கெட்டிக்காரத்தனத்தை ரொம்பவும் மெச்சுகிறேன், இப்படிப் பொண்ணைக் கொடுப்பது போல் கொடுத்து, மாப்பிள்ளையையும் இழுத்துக் கொண்டுபோய் வீட்டிலேயே வைத்துக்கொள்ளும் சாமர்த்தியம் எல்லோருக்கும் வராது. போன தடவை அவன் இங்கிருந்து போனபோதே எனக்கு இஷ்டமில்லை. ஆனால் என் இஷ்டப்படியா இப்போது காரியம் நடக்கிறது? போன காரியம் பலிக்காமல் திரும்பிவிட்டான். ஆனால் மறுபடியும் ரகசியமாகக் கடுதாசி போட்டு மாப்பிள்ளையை அழைத்துக் கொண்டுவிட எல்லோருக்கும் தெரியாது. போய்க் கடுதாசி போடுகிறேன் என்று சொன்னவன்தான். கடுதாசி இன்னமும் வரப்போகிறது! இருபது வருஷ காலத்துக்குமேல் வளர்த்ததுதான் கண்ட பலன். இன்னும் சில தினங்களில் இங்கிருந்து சில மனுஷாள் காசிக்குப் போவதாயிருக்கிறார்கள். கூடப் போனாலும் போகிற வழிக்காவது புண்ணியம் உண்டு.

நாச்சியாரம்மாள்.

இந்தக் கடிதத்தைக் கண்டு செங்கமலமே பிரமித்துப் போனாள். கடிதத்திலிருந்து மாப்பிள்ளை மைசூரில் இல்லை என்பது நன்றாகத் தெரிந்துவிட்டது. ரங்கநாதன் வேதவரத்தில் இருப்பதாகக் கடிதம் சொல்லுகிறது. இதற்கு என்ன அர்த்தம் ?

வேதவரத்தை விட்டுக் கொட்டும் மழையில் நள்ளிரவிலே கிளம்பிச் சென்ற ரங்கநாதன் மைசூருக்குப் போனான் என்பது மட்டும் இந்தக் கடிதத்தின் மூலம் தெரிந்து விட்டது. ஆனால் அங்கிருந்து கிளம்பி மீண்டும் வேதவரத்துக்கு வந்துவிட்டதாக அதே கடிதம் கூறுகிறது. ஏற்கனவே ரங்கநாதன் திடீரென்று மறைந்ததும் ருக்குவின் சோகத் தோற்றமும் செங்கமலத்துக்கும் தேவராஜ ஐயங்காருக்கும் பெருத்த சம்சயத்தை உண்டாக்கியிருந்தன.

இப்போது மைசூரை விட்டும் ரங்கநாதன் கிளம்பிப் போய்விட்டானென்றால் என்ன நினைப்பது? வேதவரத்துக்குப் போவதாக அவன் அத்தையிடம் சொன்னானே என்னவோ? அதனால்தான் அவள் இப்படிக் கடிதம் எழுதியிருக்கிறாள். இந்தச் சந்தர்ப்பத்தில் நாச்சியாரம்மாள் மிகவும் துடுக்காகக் கடிதம் எழுதியிருப்பதைப்பற்றித் தேவராஜ ஐயங்காரோ செங்கமலமோ கொஞ்சங்கூடக் கவலைப்படவில்லை. ரங்க நாதன் எங்கே போயிருப்பான் என்றுதான் அவர்கள் கவலைப் பட்டார்கள்.

கடிதத்தை வைத்துக்கொண்டு இன்னது செய்வதென்று தெரியாமல் இருவரும் கல்போலச் சமைந்து நின்று போனார் கள். அந்தச் சமயத்தில் அங்கே வந்தாள் ருக்கு. தன் பெற்றோரின் முகத்தோற்றம் அவளுக்குக் கிலேசத்தை உண்டாக்கியது. மாறி மாறி இருவரையும் பார்த்தாள் அவள். அவள் தாயின் கையில் இருந்த கடிதம் அவள் கண்ணில் பட்டது.

"அம்மா! கடுதாசி வந்ததா என்ன?" என்று கேட்டு விட்டாள்.

செங்கமலத்தின் கண்களில் ஜலம் துளும்பிக்கொண் டிருந்தது. அவள் தன் கையில் இருந்த கடிதத்தை ருக்குவிடம் கொடுத்தாள்.

ருக்கு கடிதத்தைப் பார்த்தாள். அவள் மனம் துடி துடித்து. கோவென்று கதறிவிடலாம்போல இருந்தது, அவள் மன நிலை. முதல் நாள்தான் கொஞ்சம் அல்ப சந்தோஷம் அடைந்திருந்த அவள் நெஞ்சிலே ஆயிரம் தேள்கள் கொட்டினால் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது அவளுக்கு. 'உன் உதாசீனத்தின் பலன் இது!' என்கிற வார்த்தைகளை அவள் நெஞ்சுக்குள்ளேயே யாரோ செதுக்கி வேதனை உண்டாக்குவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

'அவர் எங்கே போயிருப்பார்? இங்கிருந்து மைசூருக்குப் போனதாகவே கடிதம் கூறுகிறது. ஆனால் மைசூரை விட்டு மறுபடியும் இங்கே வரவே இல்லையே!...ஏன் இங்கே

வரப்போகிருர் ? அவர் வரும்படி நான் நடந்துகொண்டேனு? நடந்துகொள்ளத்தான் முடிந்ததா ? இனி அவரை நான் காண முடியுமா ?’ என்பன போல் பல கேள்விகள் அவள் உள்ளத்தில் எழுந்தன.

இந்தக் கேள்விகளுக் கெல்லாம் பதிலுரைப்பது போல, சந்நியாசி கூறிய மந்திர வார்த்தைகள் அவளுக்கு ஞாபகம் வந்தன. ‘இதனுல் சில கஷ்டங்கள் நேரலாம். ஆயினும் மனம் தளராதே. விதியின் இந்தப் பயங்கரமான உண்மை உன் மட்டில் இருக்கட்டும். பிறருக்குச் சொல்லாதே. இது முக்கியம் !’

மேற்கண்ட வார்த்தைகள் நினைவுக்கு வந்ததும் ருக்கு தன் எதிர்காலம் எப்படி இருக்கக்கூடும் என்று கண நேரம் சிந்தித்துப் பார்த்தாள். ஆனுல் அந்தச் சிந்தனையால் அவளுக்குத் துயரமோ திகிலோ உண்டாக வில்லை. எது வந்தாலும் தாங்கிக்கொண்டே தீரவேண்டும் என்ற முடிவே அவளுக்குத் தைரியத்தை அளித்தது. அன்றியும் தனக்குத் தாம்பத்திய வாழ்வே கிடைக்காமற் போனுலும் அந்த வாழ்வின் ஒளியாக விளங்கும் மாங்கல்யத்தைக் காப்பாற்றிக் கொள்ள எவ்விதமான கஷ்டத்தை அநுபவிக்கவும், எந்த விதமான தியாகத்தைச் செய்யவும் தயாராக இருந்தாள் அவள். எனவே இப்போது அவள் செய்ய வேண்டிய காரியம் ஒன்றுதான். எப்படியாவது தன் கணவன் இருக்குமிடம் போய்ச் சேர வேண்டும் என்பதுதான் அது. இந்த முடிவுக்கு வந்தவுடன் ருக்கு, தன் தகப்பனுரைப் பார்த்து, “ அப்பா ; உடனே மைசூருக்குப் போகவேண்டும். அங்கே போனுல் சமாசாரத்தை நேரில் அறிந்துகொள்ள லாம் ” என்ருள் திடமான குரலில்.

“ ஆமாம். இப்பவே புறப்படுங்கோ. போய்ச் சேர்ந்ததுமே ஒரு தந்தி கொடுத்துவிட்டு விவரமாக ஒரு காயிதமும் போடுங்கோ ” என்று ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே கூறினுள் செங்கமலம்.

தேவராஜ ஐயங்காருக்கும் வேறு என்ன செய்வதென்று தெரியவில்லை. உடனே மைசூருக்குப் புறப்படவே துடித்தார் அவரும்.

"அம்மா! நாம் மாத்திரம் இங்கே என்ன செய்ய வேண்டும்? அப்பாவுடன் கூடவே போகலாமே!" என்றாள் ருக்கு.

செங்கமலத்துக்கும் ருக்குவின் யோசனை சரியென்றே தோன்றியது. "ஏன்னா, நாங்களும் வரோமே?" என்றாள் தயக்கத்துடன்.

"சீக்கிரம் புறப்படுங்கள்" என்றார் தேவராஜ ஐயங்கார்.

அந்தச் சந்தர்ப்பத்தில் அவர் வேறு என்ன சொல்ல முடியும்?

## 20

### நாச்சியாரம்மாளின் கோபம்

ராஜலக்ஷ்மி சொன்ன யோசனையைக் கேட்டுக் கொண்டு, அத்தை நாச்சியாரம்மாள் ரங்கநாதன் மைசூரை விட்டுக் கிளம்பிச் சென்ற பதினைந்து நாட்கள் வரையில் பொறுத்துப் பார்த்துவிட்டு வேதவரத்துக்கு ஒரு கடுதாசி எழுதிப் போட்டுவிட்டாளே யொழிய, அவள் மனம் மாத்திரம் நிச்சிந்தையாகவே இல்லை. 'பத்து நாட்களில் கடிதம் போடு கிறேன், ஊர் சுற்றப் போகிறேன்' என்றுதானே சொல்லி விட்டுப் போனான் ரங்கநாதன்? அவன் வேதவரத்துக்குப் போனானே இல்லையோ என்கிற சந்தேகம் உண்டாயிற்று. அவளுக்கு. 'அப்படித்தான் அவன் வேதவரத்துக்கே போயிருந்தான் என்றாலும் இந்தமாதிரி கடுதாசி எழுதிவிடுவ தால்மட்டும் அவன் திரும்பி வந்துவிடப் போகிறானா என்ன? தேவராஜ ஐயங்காரும் ரங்கநாதனுமாகக் கூடிக்கொண்டு, கடுதாசியைத் தூக்கி உடைப்பிலே போட்டுவிட்டுச் சும்மா இருந்துவிட்டார்களானால் என்ன செய்வது?' என்று நினைத் தாள் நாச்சியாரம்மாள். இப்படித் தன்னை அலக்ஷயப்படுத்தி விட்டு ரங்கநாதனும் மாமனார் வீட்டோடு குந்திவிட்டா னானால், அதைவிட வேறு அவமானமே வேண்டியதில்லை அல்லவா அவளுக்கு? இந்த எண்ணமே அவள் மனத்தில் வலுத்துவர லாயிற்று.

கடிதம் எழுதிப் போட்டுவிட்டபின், 'என்ன அசட்டுக் காரியம் செய்துவிட்டோம்!' என்று எண்ணி எண்ணி அங்க லாய்ப்படைந்தாள் நாச்சியாரம்மாள். அந்தக் கடிதத்தின் முடிவில் அவள் யாத்திரை கிளம்பப் போவதாக எழுதியிருந் தது வெறும் பயமுறுத்தலுக்காகத்தான். ஆனால் இப்போது

அவளுக்கு நிஜமாகவே காசியோ ராமேசுவரமோ போய்விட்டால்கூடத் தேவலை என்று தோன்றிவிட்டது. கடிதத்துக்கு எந்த விதமான பதிலுமின்றி வேதவரத்தாருடன் சேர்ந்து கொண்டு தன் மருமகனும் தன் முகத்தில் கரியைத் தீற்றி விடுவதற்கு முன், ஊரைவிட்டுக் கிளம்பி யாத்திரா மார்க்கமாகப் போய்விடலாம் என்று கருதினுள் அத்தை.

இந்த யோசனையைப் பற்றி ஆலோசனை செய்ய அவள் ஒரு நாள் அடுத்த வீட்டு ராஜலக்ஷ்மியிடம் சென்றுள். "ராஜலக்ஷ்மி, நீ சொன்னதைக் கேட்டுண்டு கடுதாசி எழுதிப் போட்டுவிட்டேன். இப்ப நாலு நாளாச்சு. ஒரு தகவலும் தெரியல்லே. எனக்கு இப்படி யெல்லாம் சிறுமைப் பட்டுண்டு இந்தச் சம்சாரத்தையெல்லாம் கட்டிண்டு அழணும்னு என்ன தலையெழுத்தடீ? பேசாமே காசியோ ராமேசுவரமோ போகலாம்னு பாக்கறேன். நீ என்ன சொல்றே?" என்று கேட்டாள் நாச்சியாரம்மாள்.

"ஏன் அத்தை, அப்படிச் சொல்றேக? இப்பத்தானே கடுதாசி எழுதி நாலு நாளாச்சு. நாளைக்கே உங்க மருமானும் மருமானும்படையாளும் வந்து சேராப் போனுக் கேளுங்கோ. ஏன் இத்தனை அவசரம்?" என்று பதில் சொன்னுள் ராஜலக்ஷ்மி.

"ராஜலக்ஷ்மி, அதுக்கில்லேடீ, என்னமோ இப்பவே இருவது நாளாச்சு, அவன் வீட்டை விட்டுப் போயி! சாப்பிட்டாப்பலே இல்லை. எந்தக் காரியம் செஞ்சாலும் செஞ்சாப்பலே இல்லை. பொழுதும் போகமாட்டேங்கிறது. ஆனு, 'அவன் இருக்கிறபோது மட்டும் வீட்டோடேயா உக்காந்திருந்தா?ன்'னு கேப்பே. அவன் வீட்டிலே இருந்தாலும் ஆபீஸிலே இருந்தாலும் மனசு என்னமோ நிச்சிந்தையா இருந்துது அப்போ. இப்ப என்னமோ எந்த நிமிஷத்திலே என்ன வருமோன்னு பயப்படற மாதிரி மனசு 'திக்குத் திக்கு'ன்னு அடிச்சுண்டே இருக்கு."

"அப்படித்தான் இருக்கும். இருபது வருஷத்துக்கு மேலாகக் கையின் கீழேயே வச்சுண்டு வளர்க்கல்லையா?"

நாச்சியாரம்மாள் அதற்குமேல் பேசவில்லை. அவள் நெஞ்சை அடைத்துக்கொண்டிருந்த துக்கம் கண்களிலிருந்து கரகரவென்று நீரைச் சொரியச் செய்தது. புடைவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு சற்று நேரம் மௌனமாகவே உட்கார்ந்திருந்தாள். உண்மையிலேயே அத்தை நாச்சியாரம்மாளுக்கு மருமான் தன்னை விட்டுவிட்டு, 'ஒரு மாசம் ஊர் சுற்றப் போகிறேன்' என்று சொல்லிப் பிரிந்து சென்றது தாங்க முடியவில்லை. மருமான் பேரிலும் வேதவரத்தார் பேரிலும் ஆயிரம் நிஷ்டுரங்கள் சொன்னலும், அவளது அந்தரங்கத்தில் வேரூன்றியிருந்த தாய்மை உணர்ச்சி ரங்கநாதன் பிரிவால் துடிதுடிக்கலாயிற்று. இந்த உணர்ச்சி அவள் மனத்தில் தலையெடுக்கும்போதெல்லாம், 'ரங்கநாதன் வேதவரந்தான் போனனே? வேறு எங்கேயாவது போய்விட்டானே? ஒரு மாசம் லீவு வாங்கிக்கொண்டு போகும்படி அப்படி அவனுக்கு என்ன வந்துவிட்டது? கொஞ்ச நாட்களாகவே அவன் உடம்பு தேய்ந்துபோய் இளைத்து வந்ததே? ஏன் அப்படி? எப்போ பார்த்தாலும் மண்டையிடி, மண்டையிடி என்று சொன்னனே? அத்தனை மண்டையிடி வரும்படியாக என்ன மண்டைக் குடைச்சல் ஏற்பட்டு விட்டது அவனுக்கு?' என்று பல விதமாக எண்ணி வாடுவாள் அவள். இப்போது ராஜலக்ஷ்மியுடன் பேசிக்கொண்டிருந்தபோது இவ்வித எண்ணங்கள் அவள் மனத்தில் எழும்பி அவளை மௌனத்தில் ஆழ்த்திவிட்டன.

ராஜலக்ஷ்மியும் அத்தையின் மௌனத்தைக் கலைக்க விரும்பவில்லை. ஆனல் அவள் மௌனத்தைக் கலைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டபோது ராஜலக்ஷ்மியால் சும்மா இருக்க முடியுமா? ஏதோ காரியமாக அவள் வாசலுக்குப் போனபோது அடுத்த வீட்டு வாசலிலிருந்து ஒரு டாங்கா திரும்பிப் போவதைப் பார்த்தாள். உடனே உள்ளே மடமடவென்று நடந்து வந்து, "அத்தை, உங்க மருமான், நாட்டுப்பெண் எல்லோரும் வந்துவிட்டாப்போல இருக்கே! இப்பத்தான் உங்க வீட்டு வாசலிலேயிருந்து ஒரு டாங்கா திரும்பிப்

போறது'' என்று மூச்சுக்கூட விடாமல் பேசி முடித்தாள் ராஜலக்ஷ்மி.

அத்தை திடுக்கிட்டு எழுந்தாள். "நிஜமாவாடீ ராஜ லக்ஷ்மி! வேணும்னு பரிகாசம் பண்ணறையா என்ன?'' என்று அசடு வழியும் முகத்தோடு கேட்டாள் அத்தை.

"பரிகாசமில்லே அத்தை. நிஜமாத்தான் சொல்றேன்'' என்றாள் ராஜலக்ஷ்மி.

நாச்சியாரம்மாள் புடைவைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக்கொண்டே, "ராஜலக்ஷ்மி, சித்தெக்கழிச்சு கொஞ்சம் வந்துவிட்டுப் போறையா?'' என்று சம்பிரதாய மாக அழைத்துவிட்டுத் தன் வீட்டை நாடிச் சென்றாள்.

நாச்சியாரம்மாள் வீட்டுக்குள் நுழைந்ததும் முதல் முதலாகக் கண்டது தேவராஜ ஐயங்காரைத்தான். நடு ஹாலில் இருந்த ஒரு நாற்காலியில் அவர் உட்கார்ந்திருந் தார். நாச்சியாரம்மாளுக்கு அவரைப் பார்த்தவுடனே கோபம் வந்தது. 'திரிசமக்காரப் பிராம்மணன்! ஒரு கடுதாசிக்கு இரண்டு கடுதாசி போட்டும் பதில் போடாமல் இருந்துவிட்டு, ஒன்றும் தெரியாத பரமசாதுபோல உட்கார்ந்திருக்கும் அமர்ச்சியைப் பாரு!' என்று மனத்துக் குள்ளேயே நினைத்துக்கொள்ளத்தான் நினைத்தாள். ஆனால் எத்தனை பகைதான் இருந்தபோதிலும் வந்ததும் வராதது மாகச் சண்டைக்கு இழுப்ப தென்றால் முடிகிறதா? அன்றியும் சம்பிரதாயம் என்று ஒன்று இருக்கிறதே. அது அல்லவோ மனுஷர்களைத் தங்கள் விருப்பத்துக்கு முற்றும் மாறான செய்கைகள் பலவற்றைச் செய்யச் சொல்லுகிறது! நாச்சியாரம்மாள் மாத்திரம் எப்படி இதற்கு விலக்காக முடியும்? நவ நாகரிகம் எல்லாம் தெரிந்தவளா என்ன அவள், சம்பிரதாயத்தைத் தூக்கிச் சாக்கடையில் போட்டு விடுவதற்கு? பழங்காலத்து மண்தானே அவளும்? "சௌக்கியமா?'' என்று மாமூலான ஒரு சின்னக் கேள்வியைப் போட்டுவிட்டு, அந்தக் கேள்விக்குப் பதிலைக்கூட எதிர்பாராமல் ஹாலைத் தாண்டி உள்ளே போனாள்.

தேவராஜ ஐயங்கார் அத்தை நாச்சியாரம்மாளின் குசல விசாரணைக்குப் பதிலாகத் தலையை மட்டும் அசைத்தார். அதற்குள் அவள் உள்ளே போய்விடவே அவருக்கு அவளை விசாரிக்க முடியவில்லை. 'மாப்பிள்ளை சௌக்கிய மாக இருக்கிறாரா?' என்கிற ஒரே கேள்வியை மட்டும் கேட்கவேண்டுமென்று அவர் மனம் துடிக்கத்தான் துடித்தது. இருப்பினும் அவருக்குச் சட்டென்று கேட்க வாய் வரவில்லை.

உள்ளே சமையலறைக்கு முன் அறையில் ஒரு சுவரில் சாய்ந்தபடி செங்கமலம் நின்றிருப்பதையும் கதவோரமாக ஒரு மூலையில் ருக்கு நிற்பதையும் கண்டாள் நாச்சி யாரம்மாள். "சம்பந்தியம்மா. சௌக்கியந்தானா? இப்பத் தான் வர பயணம்போல் இருக்கு?" என்று கேட்டுவிட்டு, "உக்காருங்களேன். கொஞ்சம் காரியமா அடுத்தாத்து வரைக்கும் போயிருந்தேன்" என்று பேசியபடியே, ருக்குவைப் பார்த்தும் பாராதவள் போல முகத்தை வைத்துக்கொண்டு சமையலறைப் பக்கம் போனாள் நாச்சியாரம்மாள்.

நாச்சியாரம்மாள் க்ஷேம விசாரணைக்குப் பதிலளிக்க வேண்டுமென்றுகூடத் தோன்றவில்லை செங்கமலத்துக்கு. 'மாப்பிள்ளை ஊரில் இருக்கிறாரா? அவர் சௌக்கியமா?' என்று கேட்டறியத்தான் அவள் மனமும் துடித்தது. ஆனால் அத்தை ருக்குவைப் பார்த்தும் பாராததுபோலச் சென்றதைக் கண்ணுற்றதும் செங்கமலத்துக்குத் திக்கென்றது. 'ருக்கு, அத்தையைச் சேவித்துவிட்டு வா!" என்றாள் மெல்லிய குரலில்.

ருக்கு சமையலறைப் பக்கம் போனாள். அத்தை அடுப்பங்கரை மூலையில் விறகுக் கட்டையும் கையுமாக நின்று கொண்டு, அடுப்பை மூட்ட யத்தனிக்கும் தறுவாயில், ருக்கு அவள் முன் சென்று சேவித்தாள்.

சட்டென்று, "என்னடீயம்மா, கையிலே விறகுக் கட்டையை வச்சிண்டிருக்கிறபோது சேவிக்கிறையே. என்ன அவசரம் அப்படி? மகராஜியா நன்னா இருக்கணும்!"

என்று சொல்லிவிட்டு, நாச்சியாரம்மாள் அடுப்பை மூட்டிக் காபி போடத் தொடங்கினுள்.

நாச்சியாரம்மாள் மிகவும் அமைதியான முகத்துடன் அடுப்பை மூட்டிக் காபி போட முயலுவதைக் கண்டதும் செங்கமலத்துக்குக் கொஞ்சம் தெம்பு உண்டாயிற்று மாப்பிள்ளை ரங்கநாதன் சௌக்கியமாயிருப்பதற்கு அதுவே ஒரு நல்ல அடையாளமாக எண்ணிக்கொண்டாள் அவள். நாச்சியாரம்மாள் கடிதத்தின் பிரகாரம் ரங்கநாதன் மைசூரில் இல்லாமற் போனுல் கொஞ்சங்கூடப் பதற்றப் படாமல் அவளால் சம்பந்தி விசாரணை செய்ய முடியுமா என்றே நினைத்தாள் செங்கமலம். எனவே அவள் மனத் துக்குக் கொஞ்சம் நிம்மதி உண்டாயிற்று.

செங்கமலத்தின் மனத்தை நாச்சியாரம்மாள் அறிந் தாளா என்ன? அவள் அடுத்த வீட்டிலிருந்து வந்தவுடன் தேவராஜ ஐயங்கார், செங்கமலம், ருக்கு முதலியவர்களைக் கண்ணுற்ருள். இரண்டே வரியில் எழுதிய தனது முதல் கடிதத்துக்குப் பதில்கூட எழுதாமல் உதாசினம் செய்வது போல் சும்மா இருந்துவிட்ட தேவராஜ ஐயங்கார், இப்போது தம் மனைவி சகிதமாகப் பெண்ணைக் கொண்டுவிட வந்திருக் கிருர். இதற்குக் காரணம் என்ன? தன்னுடைய இரண்டா வது கடிதமேதான். மாப்பிள்ளையையும் வீட்டோடு கொண்டு போய் வைத்துக்கொண்டுவிட்டார் என்று அவர்மீது குற்றம் சாட்டியும், தனக்கு இனிமேல் இந்த உலகத்தில் எவ்விதப் பற்றும் இல்லை என்பதாகவும், யாத்திரா மார்க்கமாகச் சென்று பகவத் கைங்கரியத்தில் ஈடுபடப்போவதாகப் பயமுறுத்தியும் எழுதிய அந்த இரண்டாவது கடிதத்தைப் பார்த்தவுடனே தேவராஜ ஐயங்கார் தம் பழியைக் கழித்துக் கொள்ளும் நிமித்தம் பெண், மாப்பிள்ளை எல்லோரையும் அழைத்துக்கொண்டு வந்துவிட்டார் என்று கருதினுள் அவள்.

அடுத்த வீட்டிலிருந்து வந்ததும் நாச்சியாரம்மாள் ரங்க நாதனைக் கண்ணுல் பார்க்காவிட்டாலும், அவள் மனம் அவன் மாடியில் இருப்பதாகவே கற்பனை செய்துகொண்டது.

எனவே அவனைப்பற்றி விசாரிக்க வேண்டுமென்று அவளுக்கும் தோன்றவில்லை. இந்த நிலையில் அவள் சம்பந்தி முதலானவர்களுக்குக் காபி தயாரிப்பதில் மும்முரமாக இருந்தாள். ருக்குவுக்கு மாத்திரம் தன் கணவனைப்பற்றித் தன் தாயார்கூட அத்தையைக் கேட்கவில்லையே என்று தோன்றிற்று. அவளே கேட்டுவிடலாமா என்றுகூட நினைத்தாள். ஆனால் அது எப்படி முடியும்? புது நாட்டுப்பெண்! அன்றியும் அத்தையின் சுபாவமும் அத்தனை சௌஜன்யமான தாக இல்லை என்பது தெரிந்த விஷயந்தானே! ருக்கு என்ன செய்வாள் பாவம்! அத்தையைச் சேவித்துவிட்டு எழுந்தவள், மனத்தில் கலக்கத்துடனே ஒரு சுவர் ஓரத்தில் போய் நின்று கொண்டாள்.

இதற்குள்ளாக நடு ஹாலில் இருந்த தேவராஜ ஐயங்கார் கொஞ்சம் சமாளித்துக்கொண்டு எழுந்து உள்ளே வந்தார். "என்ன நாச்சியாரம்மா, இப்போது காபிக்கு என்ன அவசரம்? எல்லாம் சாப்பிட்டுக்கொண்டால் போகிறது. உங்கள் மருமான் சௌக்கியமா யிருக்கிறுரா?" என்று மிகப் பிரயாசைப் பட்டுக்கொண்டே கேட்டார். ருக்குவின் இருதயம் அத்தையின் வாயிலிருந்து என்ன பதில் வரப் போகிறதோ என்று அறியத் தவிக்கும் ஆவலால் கனவேகத்துடன் அடித்துக்கொண்டது.

தேவராஜ ஐயங்காரின் கேள்வி நாச்சியாரம்மாளைத் தூக்கி வாரிப்போடச் செய்தது. அவள் கையிலிருந்த காபிப் பொடி டப்பாகூட நழுவிக் கீழே விழுந்துவிட்டது. "என்ன? மருமானு? ரங்கண்ணுவா? யாரைக் கேக்கறைக?" என்று அவள் கேட்டபோது அவள் கண்கள் அகல விரிந்து விட்டன.

"நாச்சியாரம்மா, உங்களைத்தான் கேட்கிறேன். மாப் பிள்ளை இங்கே இல்லையா?"

"இங்கேயா? இங்கிருந்து போய் இருவது நாள் ஆச்சே! உங்களோடே அவனும் வரல்லே!"

"எங்களோடேயா? இல்லையே!"

"ஆனல் ரங்கண்ணு எங்கே?"

"அதைத்தானே நானும் கேட்கிறேன்? வேதவரத்துக்குப் போவதாகவா இங்கே சொன்னர்?"

"இல்லே."

"ஆனல் நீங்கள் இப்படி ஒரு கடுதாசி எழுதியிருக்கிறீர்களே. அவர் வேதவரத்தை விட்டு அன்று ராத்திரிப் போனவர் மறுபடியும் அங்கே வரவேயில்லேயே! நீங்கள் இரண்டே வரியில் ருக்குவைக் கொண்டுவிட வேண்டுமென்று எழுதின கடுதாசியைப் பார்த்தபோது மாப்பிள்ளேதான் அங்கிருந்து கோபித்துக் கொண்டு வந்து, இங்கே உங்களே விட்டு அப்படி எழுதச் சொன்னரோ என்றுகூட எண்ணினேம்."

இதைச் சொன்னவுடனே நாச்சியாரம்மாளுக்குக் கோபம் பொங்கியெழுந்தது. முதல் கடிதாசிக்குத் தேவராஜ ஐயங்கார் எழுதிய பதில் கடிதத்தை ரங்கநாதனே அத்தைக்குக் காண்பியாமல் வைத்துக்கொண்டானல்லவா? அது அவளுக்குத் தெரியுமா என்ன? "சம்பந்தி சுவாமிக்குக் கடுதாசி போட்டாக்கூடப் பதில் போட அலக்ஷ்யம் ஏன்? அப்பவே பெண்ணேக் கொண்டுவந்து விட்டிருந்தா இப்படியெல்லாம் வருமா?" என்ருள் ஆத்திரத்துடன்.

"நாச்சியாரம்மா, நீங்கள் இப்படிக் கோபித்துக் கொள்ளக் கூடாது. அந்தக் கடுதாசி எனக்குக் கிடைத்த இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம் உங்களுக்குப் பதில் எழுதிப் போட்டேன். ருக்குவுக்கு உடம்பு சரியாயில்லேயென்றும் இன்னும் இரண்டு வாரம் கழிந்ததும் கொண்டு வந்து விடுவதாகவும் அதில் எழுதி யிருந்தேனே?"

"போறும். கடுதாசி எழுதினதைப் பார்க்கல்லேயோ பின்னே! எனக்கு எழுதின கடுதாசிமட்டும் எனக்கு வந்து சேராம போக, தபாலாபீஸிலே எனக்கு யாரும் தாயாதி கிடையாது. இந்தச் திரிசமம் எல்லாம் கொஞ்சங்கூட நன்னுயில்லே!" என்று சொல்லிவிட்டு நகர்ந்து போய் ஒரு மூலேயில் உட்கார்ந்து விட்டாள் நாச்சியாரம்மாள்.

தேவராஜ ஐயங்கார் முகத்தில் ஈயாடவில்லே. ஏதோ அவள் சுபாவம் அப்படியென்று பேசாமல் இருந்துவிடக் கூடிய

சமயமா அது! ரங்கநாதன் மைசூரை விட்டுச் சென்றவன் இந்த இருபது நாட்களாக எங்கே இருக்கிருன் என்று தெரியவில்லை. அதைப்பற்றி அத்தையிடமிருந்து மற்றும் சில தகவல்களைக் கிரகித்துக்கொண்டால் ஒரு வேளை அவனைத் தேடிப் பிடிக்க முயலலாம் என்று எண்ணினுர் அவர். எனவே மறுபடியும் அவர் நாச்சியாரம்மாளிடம் சென்று வெகு நைச்சியமாகப் பேச ஆரம்பித்தார். “நாச்சியாரம்மா, நீங்கள் பதற்றப்படாமல் நான் சொல்வதைக் கேட்கணும்” என்று பீடிகை போட்டு ஆரம்பித்து, ரங்கநாதன் அன்றிரவு, நடு ராத்திரியில் ஊரைவிட்டு ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமல் கிளம்பியது முதல் அத்தையின் கடிதம் வந்தது, அதற்குத் தாம் பதில் எழுதினது, பிறகு இரண்டாவது கடிதத்தைப் பார்த்துத் திகில் அடைந்து, மாப்பிள்ளை மைசூரிலும் இல்லை என்று உணர்ந்து, ஓடோடியும் வந்தது முதலான விஷயங்களை விஸ்தாரமாகக் கூறி முடித்தார் தேவராஜ ஐயங்கார்.

அத்தை நாச்சியாரம்மாள் சம்பந்தி கூறியவற்றையெல்லாம் கேட்டுவிட்டுத் திக்பிரமை பிடித்தவள்போல் உட்கார்ந்து போனுள். ருக்குவும் செங்கமலமும் மூலையோடு மூலையாக ஒட்டிக்கொண்டு அடுத்த நிமிஷம் என்ன நேருமோ என்று நடுங்கிக்கொண் டிருந்தனர். நாச்சியாரம்மாள் மனக்கடலில் புயல் அடிக்கத் தொடங்கியது. ‘நடுராத்திரியிலேயா—அதுவும் அந்த நல்ல தினத்து நடுராத்திரியிலேயா சொல்லிக் கொள்ளாமல் ஊரைவிட்டு வந்துவிடுவது! ஏன்?’ என்கிற கேள்விகளில் ஆரம்பமான சூருவளி, அவள் மனத்தில் எல்லையற்ற பிரச்னைகளை எழுப்பிக் குழப்பியது. ‘ருக்குவுக்கும் அவனுக்கும் ஏதாவது மனஸ்தாபம் ஏற்பட்டிருக்குமா? ஏன்? அப்படியானுல் மறுபடியும் அவனை நாடியவள்போல அங்கே வரத்தான் துணியுமா அவளுக்கு? சீ! இப்படியெல்லாம் நினைப்பது பெண் குலத்துக்கே அபக்கியாதி தருமல்லவா?

அப்படி யொன்றும் இராது. இப்படியெல்லாம் நேரிடக் காரணம் தேவராஜ ஐயங்காரைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது. அவரது அலக்ஷ்ய புத்தியையும் உதாசினத்தை யும் பற்றி ரங்கநாதன் ருக்குவிடம் கேட்டிருப்பான். அவள் தன் தந்தைக்கு விட்டுக்கொடுக்காமல் அவர் சார்பாகப் பேசி யிருப்பாள். இதனுல் இருவருக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு, முற்றி, அதன் விளைவாக ரங்கநாதன் ராத்திரியோடு ராத்திரி யாகக் கிளம்பியிருப்பான் என்கிற முடிவில்தான் அவள் மனக்குழப்பம் அவளைக் கொண்டுபோய் விட்டது. அத்துடன் அவள் மனத்தின் சூருவளியும் நின்றது.

இப்போது அத்தை நாச்சியாரம்மாளின் கண்கள் காளியின் கண்கள் போலச் சிவந்து போயின. ஆத்திரத் துடன் உதட்டை அழுந்தக் கடித்தபோது அகஸ்மாத்தாக நாக்கைக் கடித்துக்கொண்டாள். நாவின் வலியும் அவள் கோபத்தைக் கொந்தளித்து எழச் செய்தது. “நடுராத்திரி யிலே ஊரை விட்டு ஓட்டினதுமில்லாமே, நைச்சியமாப் பேச வந்துவிட்டா இங்கே! மாப்பிள்ளைக்கு மரியாதை பண்ணின அழகு ரொம்ப நன்னுத்தான் இருக்கு! இன்னொத்தரா யிருந்தா இதோடே முகாலோபனம்கூடப் பண்ணமாட்டாள்; இந்தப் பைத்தாரப் பிள்ளைக்கு அத்தனை துப்பு ஏது, தொரமை ஏது? அங்கிருந்து வந்து ‘முண்டச்சி’ யாட்டம் தலையைப் பிடிச்சிண்டு குந்திக் கிடந்தது. ஒரு மாசம் லீவு வாங்கிண்டு ஊரைச் சுத்திவிட்டு வந்தா மாத்திரம் மாமனுர் பண்ணின அவமரியாதைக்கு மாத்துக் கெடச்சுடுமா என்ன? மாமனுர் படைச்ச லக்ஷணத்துக்கும் ஆம்படையா படைச்ச அழகுக் கும் தீர்த்த யாத்திரை ஒண்ணுதான் பாக்கி. மாப்பிள்ளை யில்லாத வீட்டிலே மகளைக் கொண்டுவந்து விட்டுவிட்டுக் கொஞ்சலும் குலாவலும் குசலப் பிரச்னமும் வேண்டாமே! சொல்லாமே கொள்ளாமே வந்த வழியைப் பாத்துண்டு திரும்பிப் போகலாம்! கல்யாணம் பண்ணின அழகைப் பார்த் துக் கண் பூத்துப் போச்சு. இப்ப, சாந்தி பண்ணின சவர ணையைக் கேட்டுக் காதே பூரிச்சு விட்டது!” என்று கர்ச்சித் தாள் நாச்சியாரம்மாள்.

தேவராஜ ஐயங்காருக்குத் தம் மண்டைமேல் தடி கொண்டு அடிப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அவர் பிரமித்துப் போய் ஒன்றும் தோன்ருமல் உட்கார்ந்து விட்டார். அவருடன் ஒட்டிக்கொண்டே நின்ற வண்ணம் நடுங்கிக் கொண் டிருந்த ருக்குவும் செங்கமலமும் சுவருக்குள்ளேயே பதுங்கிவிட்டனரோ என்று எண்ணும்படி யிருந்தது.

அந்தச் சமயத்தில் அடுத்த வீட்டு ராஜலக்ஷ்மி புது நாட்டுப்பெண்ணைப் பார்க்க வந்து சேர்ந்தாள்.

## 21

## பெண்ணைப் பெற்றவர்

தேவராஜ ஐயங்கார் உட்கார்ந்திருந்த நிலையையும்; செங்கமலமும் ருக்குவும் நின்றிருந்த பரிதாபத்தையும் பார்த்த வுடனே ராஜலக்ஷ்மிக்கு முகம் குன்றிப் போயிற்று. அவள் அங்கே வந்து சேர்ந்த சமயம் சரியான சமயம் அல்ல என்பதை அவள் நொடிப்பொழுதில் உணர்ந்துகொண்டாள். உடனே, வந்தது தெரியாமல் திரும்பிப் போய்விடலாமா என்றுகூட நினைத்தாள் ராஜலக்ஷ்மி. ஆனால் அது முடியாத காரியம் ஆகிவிட்டது. ஏனெனில் அவள் வந்ததை நாச்சி யாரம்மாள் பார்த்துவிட்டாள்.

ராஜலக்ஷ்மியைக் கண்டதும் நாச்சியாரம்மாளுக்குத் துக்கம் பீரிட்டுக்கொண்டு வந்தது. "ராஜலக்ஷ்மி, இப்படிக் கூட உண்டா லோகத்திலே, சொல்லடீ நீ! வேணும்னு சதிபண்ணக் கச்சை கட்டிண்டு வந்திருக்காளே! இங்கிருந்து போன பிள்ளையாண்டான் அங்கே போகவில்லையாம். எங்கே போனனோ? என்ன பண்ணருனோ? பைத்தியம் பிடிச்சவன்போலப் புறப்பட்டுப் போனனே! எங்கே தவிக்கிருனோ, தெரியவில்லையே! ராஜலக்ஷ்மீ! நான் என்ன பண்ணுவேண்டீ! என் வயிறு பத்தி எரியறதே! சாந்தி பண்ணறேன் பெரு வாழ்வேன்னு! ராத்திரியோடே ராத்திரியா வீட்டை விட்டு வெளியேத்திப்பிட்டு, இங்கே எனக்கொண்ணும் தெரியாதுன்னு பாடம் படிக்க வந்திருக்கா!" என்று சொல்லி நாச்சியாரம்மாள் கோவென்று கதறியழுதாள்.

ராஜலக்ஷ்மிக்கு நடந்த விஷயம் ஒன்றும் சரியாகப் புரியவில்லை. ஆயினும் மொத்தத்தில் ஏதோ கோளாறு

ஏற்பட்டு விட்டது என்பதை மட்டும் அறிந்துகொண்டாள் அவள். இந்தச் சந்தர்ப்பத்தில் தர்மசங்கடமாக அங்கே போய்ச் சேர்ந்தது அவளுக்கே என்னவோபோல் இருந்தது. நாச்சியாரம்மாளை அழவேண்டா மென்றுகூடச் சொல்லத் தெரியவில்லை அவளுக்கு. திக்பிரமை பிடித்தவள்போல விழித்துக்கொண்டு நின்றாள்.

நாச்சியாரம்மாளே அழுகையை நிறுத்திக்கொண்டு மறுபடியும் பேசலானாள்: "ராஜலக்ஷ்மி, நீதான் சொல்லு. இது லோகத்துக்குத்தான் அடுக்குமா! யாராவது நடு ராத்திரியிலே மாப்பிள்ளையை வீட்டை விட்டு விரட்டுவாளா!" என்று அவள் சொன்னபோதே இடைமறித்து, "அத்தை, ஏன் இப்படிப் பதட்டப் படறேக? அப்படி யெல்லாம் அவா ஏன் செய்யப்போறா?" என்று பேசினாள் ராஜ லக்ஷ்மி.

"உனக்குத் தெரியாதடீ ராஜலக்ஷ்மி, அவா குணம் அந்தப் பிராம்மணனுக்கு மரியாதை என்கிறது மருந் துக்குக் கூடத் தெரியாது!" என்று நாச்சியாரம்மாள் சொன்னதைக் கேட்டதும் இடிவிழுந்தாற்போல உட் கார்ந்து கிடந்த தேவராஜ ஐயங்காருக்கு ஆத்திரம் பொங்கியது.

"நாச்சியாரம்மா! நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்க்கிறேன். உங்கள் பேச்சுக்கு எல்லையே இல்லைபோல் இருக்கிறது. இது கொஞ்சங்கூட நன்றாயில்லை. அப்படி மரியாதை பிசகி நான் என்ன பண்ணிவிட்டேன்?" என்று சற்று அழுத்தமான குரலில் தேவராஜ ஐயங்கார் தம்மாலும் அடக்க முடியாமல் கேட்டு விட்டார்.

அவர் கோபமாகப் பேசவில்லை. நாச்சியாரம்மாள், தம்மையும் தமது குடும்பத்தையும் ஏசிப் பேசியதைக்கூட அவர் பொருட்படுத்தவில்லை. ஆனால் அந்நிய ஸ்திரீ ஒருத்தி முன்னிலையில் அவள் தங்களை 'இளக்காரப்' படுத்துவதை அவரால் பொறுக்க முடியவில்லை.

நாச்சியாரம்மாளை மடக்கி அவர் கேட்ட கேள்வி அவளுக்கு எரிகிற தீயில் எண்ணெய் விட்டதுபோல் ஆயிற்று.

"இன்னும் என்ன பண்ணணுமாம்! ஒண்ணுமே பண்ணவிட்டால் எங்க பிள்ளை இப்ப எங்கே? போறும். நீங்க பண்ணினதெல்லாம் பத்துத் தலைமுறைக்கும் பொறும்! உங்க ஜோலிக்கு நான் வரல்லே. இனிமேல் உங்களுக்கும் எனக்கும் என்ன இருக்கு? உடன் பிறந்தான் பிள்ளையை ஊட்டி வளர்த்து உங்களுக்குன்னு அழுதாச்சு. வளர்த்த பாசம் விடல்லே. பைத்தியக்காரியாத்தான் ஆக்கியாச்சே என்னை! திருப்திதானே இனிமேலே! வந்த வழியைப் பாத்துண்டு போறதுதானே! எதிரே இருந்து வயத்தெரிச்சலைக் கொட்டிக்கணும்னு......"—மேலே பேச முடியாமல் மூச்சுத் திணறியது நாச்சியாரம்மாளுக்கு.

தேவராஜ ஐயங்காருக்கு நாச்சியாரம்மாளின் மென்னியைப் பிடித்துத் திருகிவிடலாம் போல அத்தனை கோபம் கொதித்து எழுந்தது. பல்லை நறநறவென்று கடித்தார் அவர், பொறுக்க முடியாமல். அவர் கண்கள் கோவைப் பழம் போலச் சிவந்து நீர் கொண்டு ஜொலித்தன. அவரது சாத்விக சுபாவமும் கவலையைப் பெரிதாகக் கருதாத மனப்பான்மையும் எங்கே சென்று மறைந்தனவோ என்று எண்ணும்படி இருந்தது. 'சாது மிரண்டால், காடு கொள்ளாது' என்பது சரியான வாக்கியம். அந்தச் சாது மிரண்டு போனார். ஆத்திரத்துடன் எழுந்தார். "நாச்சியாரம்மா!" என்று இடிமுழக்கம் போன்ற குரலில் பேசினார் அவர். அதற்குமேல் என்ன சொல்லியிருப்பாரோ!—இருக்கையைவிட்டு எழுந்தவர் என்ன செய்ய முனைந்தாரோ நல்ல வேளையாகச் சட்டென்று சுவரோடு சுவராக ஒட்டிக் கிடந்த செங்கமலம் ஒரே ஓட்டமாக அவர் எதிரே வந்து நின்றாள். "இதோ பாருங்கோ, அத்தைதான் ஏதோ சொல்லி விட்டாலும், நீங்ககூட இப்படி ஆத்திரப்படறது சரியா? நாலு பேர் என்ன சொல்லுவா? நம்ம குழந்தையைப் பாருங்க

ளேன்!'' என்று துக்கம் தொண்டையை அடைக்கப் பேசினாள்.

குழந்தையென்று கூறியவுடனே தேவராஜ ஐயங்காரின் பார்வை ருக்கு இருந்த திக்கில் திரும்பியது. சோகமே உருவாக அவள் நின்ற காட்சி அவர் கோபத்தை அடியோடு கரைத்துவிட்டது. அதற்கு மாறாக அவர் இருதயத்திலிருந்து துக்கம் பொங்கிக்கொண்டு வந்தது. ஆனால் மெல்லச் சமாளித்துக்கொண்டார். மறுபடியும் நாச்சியாரம்மாளைப் பார்த்தார். "நாச்சியரம்மா!'' என்றார். இப்போது அவர் குரலில் அவரது தாழ்மையின் உணர்ச்சி தொனித்தது. "உனக்கு ஒரு நமஸ்காரம்! நாங்கள் போய் வருகிறோம்'' என்றார் தழுதழுத்த குரலில்.

நாச்சியாரம்மாள் பதில் பேசவில்லை. முகத்தை ஒரு திருப்புத் திருப்பிக்கொண்டாள்.

"செங்கமலம், புறப்படு போகலாம். மாப்பிள்ளை கூட இங்கே இல்லை. இன்னமும் இங்கே என்ன வேலை நமக்கு!'' என்று வெறுப்புடன் கூறினார் தேவராஜ ஐயங்கார்.

செங்கமலத்தின் முகம் தொங்கிப் போயிருந்தது. அவள் கண்களில் ஜலம் துளும்பிக்கொண் டிருந்தது. அவளுக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. பதியின் முகத்தைப் பார்த்தாள் பரிதாபமாக. சிறுமைப்பட்டு நின்ற அந்தச் சம்பந்தி தம்பதிகளைக் கண்ட ராஜலக்ஷ்மிக்கே வருத்தம் உண்டாயிற்று.

"அத்தை!'' என்றாள் ராஜலக்ஷ்மி.

நாச்சியாரம்மாள் ராஜலக்ஷ்மியைப் பார்த்தாள்.

"அத்தை, உங்களுக்குள்ளே ஆயிரம் மனஸ்தாபம் இருக்கலாம். ஆனால் நீங்க இப்படியெல்லாம் பேசி, வந்த மனுஷாளை உடனே திரும்பிப் போகச் சொல்றது சரியில்லே. அவாளுக்கு மட்டும் தங்கள் பெண் நன்னாயிருக்கணும்னு ஆசையாயிராதா என்ன? ஏதோ மற்ற விஷயங்களிலே மனத்தாங்கல் ஏற்படறது சகஜம். இதையெல்லாம் பெரிசாக்கிச் சண்டை போட்டுக்கொண்டு அதனாலே நம்ம குழந்தை

களுடைய வாழ்வையே பாழாக்கலாமா?'' என்ருள் ராஜலக்ஷ்மி கனிவுடன் கூடிய குரலில்.

"ஏண்டீ ராஜலக்ஷ்மி! நான் பண்ணின தப்புத்தான் உன் கண்ணுக்கும் பிரமாதமாகத் தெரியறதோ!'' என்று நிஷ்டுரமாகப் பேசினுள் நாச்சியாரம்மாள்.

இதற்குள் தேவராஜ ஐயங்காரே ராஜலக்ஷ்மியை நோக்கி, "அம்மா, எங்களுக்கு அவ்வளவுதான் பிராப்தம். நாங்கள் கொடுத்துவைத்தது அவ்வளவுதான்!'' என்று சொல்லிவிட்டு, "செங்கமலம், ஏன் இன்னும் தாமதம்?'' என்ருர்.

செங்கமலத்தால் மெல்லவும் முடியவில்லை; விழுங்கவும் முடியவில்லை. ருக்குவைப் பார்த்தாள். ருக்குவுக்கு என்ன யோசனை தோன்றிற்ருே என்னவோ? தன் தாயின் காதில் 'குசுகுசு' வென்று பேசினுள்.

செங்கமலம் நாச்சியாரம்மாளைப் பார்த்து, "மாப்பிள்ளை இங்கிருந்து போகிறபோது ஒரு மாசம் லீவு வாங்கிண்டு தானே போறதாகச் சொன்னுர்?'' என்று கேட்டாள்.

நாச்சியாரம்மாள் பதில் பேசவில்லை. அவளுக்குப் பேசவே பிடிக்கவில்லையோ என்னவோ? ஆனுல் ராஜலக்ஷ்மி விட்டுக்கொடுக்காமல் அத்தைக்குப் பதிலாகப் பேச முன் வந்தாள். "ஒரு மாசம் லீவிலேதான் போயிருக்கிருன் என்று அத்தை சொன்னுள். இப்பவே இருவது நாளுக்கு மேலே ஆச்சு. இன்னும் ஒரு வாரத்திலேயே வந்துவிடணும்'' என்ருள் ராஜலக்ஷ்மி.

இதைக் கேட்டதும் ருக்கு, தன் தாயின் காதோடு காதாக என்ன பேசினுளோ தெரியவில்லை. ஆனுல் செங்கமலத்தின் முகம் மாத்திரம் பின்னும் இருளடைந்து போயிற்று.

தேவராஜ ஐயங்காரோ அங்கிருந்து உடனே புறப்பட்டுப் போய்விடத் துடிக்கிருர். செங்கமலம் அவரிடம் வந்தாள்; அவர் காதில் ஏதோ சொன்னுள். அவரே சற்று நேரம் அயர்ந்தாற்போல நின்றுவிட்டார். ஆனுல் மற்றும் சிறிது நேரத்துக்கெல்லாம் தேவராஜ ஐயங்கார் சமாளித்துக்கொண்டார். "ருக்கு!'' என்ருர்.

ருக்கு அவர் அருகில் வந்து நின்ருள்

"இது என்ன பைத்தியக்காரத்தனம்? நீ வரவில்லை எங்களுடன்?" என்று கேட்டார்.

"இல்லை அப்பா."

"இங்கே நீ எப்படியம்மா இருக்க முடியும்? மாப்பிள்ளை கூட இல்லையே? இந்த இடத்தில் உன்னை விட்டு விட்டுப் போக..."

தேவராஜ ஐயங்கார் வார்த்தையை முடிக்கவில்லை. அதற்குள் நாச்சியாரம்மாள் ஆத்திரத்துடன், "இங்கே யாரும் உங்கள் பெண்ணை விட்டுவிட்டுப் போகும்படி கெஞ்சல்லே. பேஷாய் அழைச்சுண்டு போங்கோ! பெண்ணைக் கொண்டு வந்து விடற அழகைப் பார்க்கல்லையோ பின்னே!" என்று சொல்லிவிட்டுச் சரேலென்று அந்த இடத்தை விட்டுப் போய் விட்டாள்.

நாச்சியாரம்மாள் அங்கிருந்து போய்விட்டபின், தேவராஜ ஐயங்கார் ருக்குவைப் பார்த்து, "ருக்கு, பார்த்தாயா அம்மா! இந்த மாதிரி மனுஷியிடம் உன்னை எப்படி ஒப்பித்துவிட்டு நாங்கள் போவது?" என்றார்.

அத்தை எதிரே இல்லாததால் ருக்குவுக்கும் பேசத் தைரியம் வந்தது. "அப்பா, இன்னும் ஒரு வாரத்தில் எப்படியும் அவர் வந்துவிடுவார். இங்கே எனக்கு எந்த விதமான கஷ்டமும் இராது. என்னை இங்கேயே விட்டு விட்டுப் போங்கள்' என்றாள் அவள்.

ராஜலக்ஷ்மி, ருக்குவின் முகத்தைப் பார்த்தாள். குழந்தையுள்ளம்போல நிர்மலமாகத் தோன்றிய அவளது இனிய முகமும் உறுதியான பேச்சுக்களும் ராஜலக்ஷ்மியின் மனத்தைக் குழையச் செய்தன. 'பெண்ணைப் பார்த்தால் லக்ஷ்மி போல இருக்கா: இந்த அத்தைக்குத்தான் என்ன கேடோ, வச்சுண்டு பாலிக்கிறத்துக்கு!' என்றுதான் தோன்றிற்று ராஜலக்ஷ்மிக்கு.

செங்கமலத்தைப் பார்த்துக்கொண்டே தேவராஜ ஐயங்காருக்கும் கேட்கும்படி ராஜலக்ஷ்மி சொன்னாள்: "ஏன் மாமி, உங்க பெண் சொல்றாப்போல அவளை இங்கேதான் விட்டு விட்டுப் போங்களேன். நாளைக்கே உங்க மாப்பிள்ளை

வந்து சேர்ந்து, நீங்கள் பெண்ணையும் கூட்டிக்கொண்டு போய்விட்டதை அறிஞ்சா ரொம்பவும் கோபம் வரும் அவனுக்கு. அவளை இங்கே விட்டு விட்டுப் போனு, இப்ப எத்தனை மனஸ்தாபம் இருந்தாலும் அதெல்லாம் தானுக மறைஞ்சு போகும்'' என்று.

தேவராஜ ஐயங்கார் சற்று நேரம் யோசித்துப் பார்த்தார். ''செங்கமலம், இந்த அம்மா சொல்லுகிற யோசனை உசிதமாகத்தான் படுகிறது. நீ என்ன நினைக்கிருய்?''

''எனக்கும் அப்படித்தான் தோணறது. நமக்கு மாத்திரம் சண்டை போடணும்னு ஆசையா என்ன? இப்பக்கூட எனக்கு அத்தையிடத்திலே கொஞ்சங்கூடக் கோபம் இல்லே. என்னவோ பாவம், ஆத்திரத்திலே இப்படிச் சொல்லிவிட்டார். நம்பகூட இந்த ஊரிலேயே எங்கேயாவது கொஞ்சநாள் இருந்துகொண்டு மாப்பிள்ளை வந்தபின் பார்த்துக்கொண்டு போகலாம்னு தோணறது'' என்ருள் செங்கமலம்.

''ஆமாம், நீங்க கவலைப்படவேண்டாம். நான் அடுத்த வீட்டிலேதான் இருக்கிறேன். உங்க பெண்ணை நான் அடிக்கடி வந்து பாத்துக்கறேன். அவளுக்கு ஒரு கஷ்டமும் இராது. அத்தை கொஞ்சம் முன்கோபக்காரி. நாளைக்கே அவள் கோபம் தணிந்துபோகும். நீங்க கொஞ்சங்கூடப் பயப்படவேண்டாம். தைரியமா விட்டுவிட்டுப் போகலாம். ஆனல் நீங்க சொல்ருப்போல இன்னும் கொஞ்சநாள் இங்கேயே இருந்து பார்த்துக்கொண்டு போறதும் நல்லதுதான். இப்ப ஸத்தியா என்னேடே நீங்க என் வீட்டுக்கு வாருங்கோ'' என்று அன்புடன் அழைத்தாள் ராஜலக்ஷ்மி.

தேவராஜ ஐயங்காரும் செங்கமலமும் ராஜலக்ஷ்மியின் அழைப்பை ஏற்றுக்கொண்டனர் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் அந்தச் சந்தர்ப்பத்தில் அவர்கள் வேறு என்ன செய்ய முடியும்? உடனே இருவரும் அத்தை நாச்சியாரம் மாளைத் தேடிச் சமையலறைப் பக்கம் சென்றனர். அங்கே அவள் ஒரு சுவரில் சாய்ந்தபடி ஏதோ எண்ணமிட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்த்து, 'சம்பந்தியம்மா, ஏதோ தப்புச் செஞ்சிருந்தாலும் மன்னிச்

சுக்கணும். உங்களை விட்டா எங்களுக்குத்தான் யார் மனுஷா? போய்விட்டு வரோம். மாப்பிள்ளை வந்து சேர்ந்ததுமே சமாசாரம் தெரிவியுங்கோ. ருக்கு குழந்தை, சிறுசு, இந்த லோகமே தெரியாது அவளுக்கு. நீங்கதான் தாயாருக்குத் தாயாராயிருந்து அவளைப் பார்த்துக்கணும். உங்களுக்குத் தெரியாததைச் சொல்ல வரல்லே நான். என்னமோ பெத்த மனசு கேக்கல்லே!'' என்று சொல்லும்போதே செங்கமலத்துக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டு மேலே பேசவொட்டாதபடி தடை செய்தது.

நாச்சியாரம்மாள் இருந்த இடத்தில் வேறு யாராவது இருந்திருந்தால் கண்டிப்பாக அந்த மனுஷ்யர் மனம் இளகிப் போயிருக்கும். ஆனால் நாச்சியாரம்மாள் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை வாயைத் திறந்தும் ஒரு வார்த்தை பேசவில்லை.

செங்கமலமும் தேவராஜ ஐயங்காரும் சமையலறையை விட்டு வெளியே வந்தனர். ருக்குவிடம் சில விநாடி காலம் நின்றுவிட்டுக் கிளம்ப மனமின்றியே கிளம்பினார்கள். ராஜலக்ஷ்மி அவர்களை அழைத்துக்கொண்டு தன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள்.

சமையல் அறைக்குப் பக்கத்து அறையில் சுவர் ஓரமாக நின்ற ருக்கு நின்றவள்தான். அவளை ஏன் என்று கேட்பார் கூட அங்கே யாருமில்லை.

நாச்சியாரம்மாள் சமையல் அறையை விட்டு வெகு நேரம் வரையில் வெளியே வரவே யில்லை.

ருக்குவுக்கும் சமையல் அறைப் பக்கம் போகத் துணியவில்லை. தன் தலை விதியை நொந்த வண்ணம் கண்ணீர் வடித்தபடி நின்றபடியே எண்ணமிடலானாள்.

'என்னால் எத்தனை பேருக்குக் கஷ்டம்? இந்த அத்தையிடம் வந்து அப்பாவும் அம்மாவும் அவமானப்பட யார் காரணம்? படுக்கை யறையை விட்டுப் பாதி ராத்திரியில்

அவர் வெளியேறிச் சென்றது யாரால்? இருபது வருஷ காலத்துக்கு மேலாக அன்புடன் வளர்த்த அத்தையையும் விட்டுப் பிரிந்து ஒரு மாச காலம் ஊர் சுற்றப் போகிறேன் என்று சொல்லி அவர் மனம் குழம்பிச் சென்றது யாரால்? ஆயிரம் கோபம் இருந்தபோதிலும் எதிருக்கு எதிராகவே அத்தை, எங்களை ஏசிப் பேசினது யாரால்? எல்லாம் என்னுல்தானே? நான்தானே இத்தனைக்கும் காரணம்' என்று எண்ணி எண்ணி ஏக்கம் உற்ற வண்ணம், உயிரற்ற சிலை போல நின்று போனுள் ருக்கு.

## 22

## 'புகுந்த இடம்'

செங்கமலத்தையும் தேவராஜ ஐயங்காரையும் கூட்டிக் கொண்டு ராஜலக்ஷ்மி வீட்டை விட்டுப் புறப்பட்டுப் போன பின், நெடுநேரம் வரையில் நாச்சியாரம்மாள் சமைய லறையைவிட்டு எழுந்து வெளியே வரவில்லை. சமையல் அறையில் மூட்டப்பட்டிருந்த அடுப்பில் விறகுகள் கனிந்து எரிந்து சாம்பல் பூத்து அணைந்துகூடப் போய்விட்டன. அவற்றைத் தூண்டிவிடவும் அவள் முயலவில்லை. அடுப் பின் மேல் இருந்த பித்தளைப் பாத்திரத்தில் காபி தயாரிப் பதற்காக அவள் வைத்திருந்த ஜலம் பொங்கித் தணிந்து கொஞ்சம் கொஞ்சமாக ஆறிக்கொண்டே வந்து பழையபடி பச்சை ஜலமாகவே ஆகிவிட்டது. அறையில் இருந்த வெளிச்சமும் மறைந்து போய் இருள் மூடி வந்தது. நாச்சி யாரம்மாள் சுவரோடு சுவராகச் சாய்ந்தபடி ஏதேதோ எண்ணமிட்டுக்கொண் டிருந்தாள்.

தேவராஜ ஐயங்கார் தன் பேச்சைக் கேட்டு வெகுண் டெழுந்து, 'நாச்சியாரம்மா!' என்று சிங்க கர்ஜனை போன்ற குரலுடன் கையை ஓங்கிக்கொண்டு வந்த காட்சி அவள் நெஞ்சையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. அந்தச் சமயத்தில் செங்கமலம் வந்து தடுத்திராவிட்டால் என்ன நேர்ந்திருக்கும் என்பதை நாச்சியாரம்மாள் நன்கு உணர்ந்துவிட்டாள். 'ஒரு சம்பந்தி-அதுவும் பெண்ணைக் கொடுத்தவன்-தன்னையும் மீறிக் கையை ஓங்கிக்கொண்டு அடிக்க வருவதா? கேவலம் தன்னை-ஒரு 'பொம்மனுட் டி'யை-அடிக்கத் துணிந்தவன், மாப்பிள்ளையை என்ன தான் பண்ணியிருக்கமாட்டான்! இப்படிப்பட்ட சம்பந்தியா

எனக்கென்று வந்து வாய்க்கவேண்டும்! பணமும் காசும் கொடுக்காவிட்டாலும், சீரும் வரிசையும் செய்யாவிட்டாலும் மனுஷ்யன் யோக்கியதையோடாவது இருக்கக்கூடாதா? கல்யாணத்தின்போதே அத்தனை துடுக்காக நடந்து கொண்டானே! அதிலிருந்தே தெரிகிறதே லக்ஷணம்!' என் பதுபோலப் பலவிதமான எண்ணங்கள் நாச்சியாரம்மாள் மூளையைக் குழப்பி, மந்தப்படுத்தி, அவள் ஆக்ரோஷத்தைத் தான் அதிகரிக்கச் செய்தன. அந்த ஆக்ரோஷத்தில்தான் செங்கமலம் எதிரே வந்து, 'போய் வருகிறேன்' என்று சொல்லி உத்தரவு கேட்டதற்குக்கூட அவள் பதில் பேசா மல் மௌனமாயிருந்தாள். அன்றியும் அதற்குமேல் தேவ ராஜ ஐயங்கார் முன்னிலையில் ஏதாவது துடுக்காகப் பேச வும் அவளுக்குக் கொஞ்சம் அச்சம் ஏற்பட்டது. என்ன இருந்தாலும் 'பொம்மனாட்டி'தானே!

சமையல் அறை முற்றும் இருட்டுச் சூழ்ந்துகொண்ட பின்புதான் நாச்சியாரம்மாள் எழுந்தாள். சமையல் அறையைவிட்டு ருக்கு நின்றிருந்த அறைக்குப் போனாள். ருக்குவும் நின்ற இடத்தைவிட்டு நிலை பெயரவே யில்லை. இருட்டில் நாச்சியாரம்மாளுக்கு அங்கே ருக்கு இருந்தது கூடத் தெரிந்ததோ தெரியவில்லையோ? அந்த அறையி லிருந்த ஒரு விளக்கை ஏற்றின பின்புதான் அவள் ருக்கு வின் பக்கம் திரும்பினாள். ருக்குவைப் பார்த்த பிறகே நாச்சியாரம்மாளுக்குச் செங்கமலம் விடைபெற்றுச் சென்ற போது தன் பெண்ணை அங்கே விட்டுச்செல்வதற்கு அறி குறியாகச் சொன்ன வார்த்தைகள் ஞாபகத்துக்கு வந்தன. 'ஹூம்! இந்தக் கடனிழவைக் காலிலே கட்டறத்துக்காகத் தான் அத்தனை நயப்பு வார்த்தைபோல் இருக்கு!' என்று அப்போது நாச்சியாரம்மாள் சொல்லாத வார்த்தைகள் இப் போது அவள் மனத்துக்குள்ளேயே அரைபட்டுக்கொண் டன, ஆனால், 'எதற்காக இந்தக் கால்கட்டு எனக்கு? அவன்கூட இல்லை. அவன் இல்லாத சமயத்திலே இந்தத் தலைவேதனை யெல்லாம் என்னத்துக்கு?' என்று தோன் றியது நாச்சியாரம்மாளுக்கு.

அதுவுமல்லாமல் ருக்கு வந்து சேர்ந்த சமயம் ரங்கநாதனே அங்கில்லே. அவன் எங்கே இருக்கிருன், என்ன செய்துகொண் டிருக்கிருன் என்றுகூடத் தெரியவில்லே. 'சீ தரித்திரப் பீடை! இதன் கால்வழியே சரியாயில்லேயே!' என்று நாச்சியாரம்மாள் மனத்துக்குள்ளேயே சலித்துக் கொண்டாள். அவளுக்கு ருக்குவிடம் ஒரு வார்த்தைகூடப் பேசப் பிடிக்கவில்லே. விளக்கை ஏற்றிவிட்டு வெளியே வந்து கூடத்தில் சிறிது நேரம் 'மொட்டு மொட்'டென்று உட்கார்ந்திருந்தாள். ருக்கு நின்று நின்று பார்த்தாள். அத்தை சமையல் அறையைவிட்டு வெளியே வராமல் இருந்த வரையில் அவளுக்கே அத்தையிடம் சென்று பேசத் தைரியம் வரவில்லே. அத்தை சமையல் அறையை விட்டுத் தான் இருந்த அறைக்கு வந்து விளக்கேற்றின பின் தன்னுடன் ஏதாவது பேசுவாள் என்று எதிர்பார்த்தாள் ருக்கு. அவள் நின்றுகொண் டிருந்ததைக்கூடக் கண்டுகொள்ளாதவள் போல அத்தை கூடத்துக்குப் போய் விட்டாளே! அவள் மனம் ஒடிந்து போனுள். 'அத்தை என்னிடம் முகம் கொடுத்துக்கூடப் பேசாமல் இப்படியே இருப்பதாஞல் இந்த வீட்டில் இன்னும் ஒரு வாரம் எப்படிக் காலம் தள்ள முடியும்! அவர் எடுத்துக்கொண் டிருக்கும் லீவு முடிய இன்னும் ஒரு வாரம் இருப்பதாக அடுத்த வீட்டு மாமி சொன்னுளே. ஆகவே அவர் இப்போது எங்கிருந்தாலும் ஆபீஸுக்கு வரவேண்டு மல்லவா? அதற்காகவாவது இன்னும் ஒரு வார காலத்தில் எப்படியும் வந்து சேருவார். அவர் வந்த பின் தலேயெழுத்து என்ன ஆகப்போகிறதோ? என்னிடம் அவர் ஆசையோடு இருக்கப் போகிருரா இல்லேயா என்பதெல்லாம் இருக்கட்டும். அதைப் பற்றிக்கூட இப்போது நினைக்க வேண்டியதில்லே போல் அல்லவா இருக்கிறது? அதற்கு முன்னுல் இப்போது இந்த ஒரு வாரத்தையும் கழித்தாக வேண்டுமே! அத்தை என்னிடம் பேசாமலே இருந்துவிட்டால் என்ன செய்வது? நானுகப் போய் அவளிடம் பேசட்டுமா? என்ன பேசுவது? எப்படிப் பேச [ஆரம்பிப்பது? எந்த விஷய

மாகப் பேசுவது? ஒன்றுமே தெரியவில்லையே! எதைப் பற்றிப் பேசினாலும் அத்தைக்கு இப்போது மனசு இருக்கப் பட்ட நிலையில் தப்பாகத்தானே படும்' என்று நினைத்துக் கொண்டே ருக்கு நின்றிருந்தபோது நாச்சியாரம்மாள் மறு படியும் அவள் இருந்த அறைக்குள் வந்தாள்.

ருக்குவின் நெஞ்சு 'பக், பக்'கென்று அடித்துக் கொண்டது. அத்தை இப்போது தன்னிடம் பேசத்தான் வந்திருக்கிருள் என்று அவள் முடிவு கட்டிவிட்டாள். 'அத்தை என்ன கேட்பாளோ, எப்படிப் பேச்சை ஆரம்பிப் பாளோ, என்ன வசவுகளைப் பொழிவாளோ?' என்றெல் லாம் எண்ணியபோது ருக்குவுக்கு நடுக்கம் எடுத்தது. ஆனால் அவள் எதிர்பார்த்தது ஒன்றும் நேரிடவில்லை. நாச்சியாரம்மாள் ருக்குவைக் கவனியாமலே விளக்கண்டை சென்றாள். சட்டென்று அதை வாயால் ஊதி அணைத்தாள். அறையில் இருள் தோய்ந்தது. நாச்சியாரம்மாள் தரதர வென்று நடந்து அறையை விட்டுப் போனபோது அவள் கால், வழியில் கிடந்த ஒரு மணைப் பலகையின் மேல் இடறியது. 'சனியன், வழியிலே கொண்டுவந்து போட்டு வச்சிருக்கு!' என்று சற்றுக் கெட்டியாகச் சொல்லிக் கொண்டே குனிந்து மணைப் பலகையை எடுத்து ருக்கு இருந்த பக்கமாக விட்டெறிந்து விட்டு வெளியே சென்றாள் நாச்சியாரம்மாள்.

நாச்சியாரம்மாள் ருக்குவிடம் கொண்டிருந்த கோபத் துக்கெல்லாம் பழி தீர்த்துக்கொள்வதுபோல மணைப் பலகை அவள் முழங்காலில் சென்று தாக்கியது. 'அப் பாடி!' என்று அடங்கின குரலில் வாய்விட்டுச் சொல்லி விட்டு ருக்கு முழங்காலைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விட்டாள்.

'அப்பாடி!' என்று ருக்கு மெல்லிய குரலில்தான் சொன்னாள். ஆனால் அத்தையின் பாம்புக் காதுகளில் அந் தக் குரல் எப்படியோ கேட்டுவிட்டது. அத்துடன் அடக்கி வைத்திருந்த அவளுடைய ஆத்திரமெல்லாம், மூடி வைத் திருந்த அக்கினி குண்டத்தைத் திறந்து விசிறி விட்டதுபோல்

கிளம்பிவிட்டது. ''அடேயப்பா, என்ன நடனம்! மணையை ஒரு பக்கமாகப் போட்டத்துக்கே இத்தனை அலுத்துக் கணுமா! காலிலே கீலிலே பட்டுவிட்டா அப்புறம் ஊரிலேயே இருக்க விடமாட்டே!'' என்று சீறினுள் அத்தை.

ருக்கு பதில் பேசவில்லை. மணைப்பலகையோ முழங் காலில் பலமாகத் தாக்கிவிட்டது. வலியோ பொறுக்க முடியவில்லை. வாய்விட்டு அழுதால்தான் வலி குறையும் போல் இருந்தது அவளுக்கு. ஆனுல் வாய்விட்டு அழ வில்லை அவள். அவள் இருதயத்தில் இதைவிடப் பெரிய அடி விழுந்திருக்கும்போதே அவள் வாய்விட்டு அலற வில்லையே. காலில் பட்ட இந்த அடிக்கா கதறப் போகிருள்!

ருக்கு, பதில் பேசாமல் இருக்கவே நாச்சியாரம்மாளுக் குப் பின்னும் ஆத்திரம் மூண்டது. இந்த மாதிரிச் சந் தர்ப்பங்களில் சினம்கொண்ட வெறியர்களுக்கு எதிராளி பேசினுலும் தவருகப் படும்; பேசாவிட்டாலும் தவருகப் படும். நாச்சியாரம்மாளும் இப்படிப்பட்ட ஒரு வெறி நிலை யில்தானே இருக்கிருள்! அவள் கோபம் அதிகரிப்பது சகஜந் தானே! ஆயினும் சுவருடன் கோபித்துக்கொண்டு என்ன பண்ணுவது? சுவரை அறைந்தால் கைதானே நோவும். அப்படித்தான் இருந்தது நாச்சியாரம்மாள் கோபமும். ருக்கு வின் மௌனத்தைக் கண்டு அவள் ருக்குவின் காதில் விழும்படி என்ன என்னவோ முணுமுணுத்துக்கொண்டாள். ஆனுல் ருக்கு சாய்ந்திருந்த சுவருக்காவது அந்த வார்த்தை கள் உறைத்திருக்குமோ என்னவோ? அவளுக்கு உறைத்த தாகவே தெரியவில்லை.

''உடம்பிலே சூடு, சொரணை ஏதாவது இருந்தால் தானே உறைப்பதற்கு!'' என்றுகூட அலுத்துக்கொண்டு பார்த்துவிட்டாள் நாச்சியாரம்மாள். ஆனுல் ருக்கு வாய் திறக்கவேயில்லை. ஏனெனில் நாச்சியாரம்மாளின் கோபத்தை ருக்கு பரிபூரணமாக அறிந்துகொண்டாள். அவள் தன் பாணம் முழுவதையும் பிரயோகித்து ருக்குவை வலுச் சண்டைக்கு இழுக்கிருள் என்பதை ருக்கு நன்குணர்ந்தாள்,

இந்தச் சந்தர்ப்பத்தில் எத்தனைக் கெத்தனை மௌனமாய் இருக்கிறோமோ அத்தனைக்கத்தனை நல்லது என்று கருதினுள் அவள்.

நாச்சியாரம்மாளும் ருக்குவின் மௌனத்தைக் கண்டு வேறு வழியின்றிக் கூடத்துக்குப் போய்விட்டாள். அன்றிரவு அவள் சமைக்கவும் இல்லை, சாப்பிடவும் இல்லை. அவளுக்கிருந்த கோபத்திலும் வருத்தத்திலும் பசி, தாகம் எல்லாம் தெரியுமா என்ன!

அவளே சாப்பிடாமல் முந்தானையை உதறிப் போட்டுக் கொண்டு கூடத்தில் படுத்துவிட்டாள் என்ருல் ருக்குவைப் பற்றிக் கேட்பானேன்! புது இடம்! அதுவும் இத்தனை அழ காகப் 'புகுந்த இடம்!' இந்தப் புகுந்த இடத்தில் புகத் தகாத வேளையில் புகுந்ததன் பயனுகப் பட்டினியும் பசியு மாக, முழங்காலைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்த இடத்தி லேயே தலை சாய்ந்துவிட்டாள் அவள். சற்று நேரத்துக் கெல்லாம் நாச்சியாரம்மாள் கோபத்தைத் தணியவைக்க வந்த தூக்கம், அவள் துயரத்தையும் தணிக்க வந்தது.

## 23

## ராஜலக்ஷ்மி

அடுத்த நாள் காலையில் நாச்சியாரம்மாள் எழுந்திருப்பதற்கு முன்பே ருக்குவுக்குக் கண் விழித்துவிட்டது. எழுந்து என்ன செய்வதென்று தெரியவில்லை. ஆனால் படுத்துக்கொண்டிருந்தால் மட்டும் எப்படி? வீட்டுக்கு நாட்டுப் பெண். அதுவும் புது நாட்டுப்பெண். சும்மா இருக்க முடியுமா? மனசில் ஆயிரம் கவலை இருந்தாலும், அத்தை அறுபதினாயிரம் வசவுகளை வைதாலும் ருக்கு சும்மா இருப்பது எப்படி! சமையல் அறைக்குள் போய் அந்த அறையைச் சுத்தமாகப் பெருக்கிவிட்டு அடுப்பை மெழுக ஆரம்பித்தாள் ருக்கு.

அவள் அடுப்பு மெழுகி முடியும் தறுவாயில்தான் அத்தை எழுந்து உள்ளே வந்தாள். ருக்குவைப் பார்த்ததும், ''ஏண்டீ, உன்னை யார் அடுப்பு மெழுகச் சொன்னது? வாழல்லையோ பின்னே சவரணை! போறும் போடி!'' என்று சொல்லி வெடுக்கென்று அவள் கையிலிருந்த சுருணையைப் பிடுங்கித் தூர எறிந்தாள் அத்தை.

ருக்கு சட்டென்று நிமிர்ந்தாள். அவள் கண்களில் கர கர வென்று ஜலம் வந்துவிட்டது. ஆனால் கண்களைத் துடைத்துக்கொண்டால் அத்தை என்ன சொல்லுவாளோ என்கிற பயத்தால், கண்களைத் துடைத்துக்கொள்ளாமல் தலை குனிந்துகொண்டாள். ''ஆமாம், உங்க அப்பனும் ஆத்தாளுந்தான் உன்னை இங்கே தள்ளிவிட்டுப் போனாளே! அவா தைரியந்தான் என்ன? உனக்குந்தான் என்ன தைரியம்டீ!'' என்றாள் அத்தை.

அத்தை மறுபடியும் தன் பெற்றோர்களைப் பற்றிப் பேச்செடுப்பது ருக்குவுக்குப் பிடிக்கத்தான் இல்லை. இருந்

தாலும் அவளால் தடுக்க முடியுமா அத்தை பேசுவதை? தடுத்தால்தான் சும்மா விட்டுவிடுவாளா அவள்! அதை விடத் தன் பெற்றோரைப் பற்றி அத்தை, பேச்சே எடுக்கா மல் செய்ய என்ன வழி இருக்கிறது என்றுதான் யோசனை செய்ய முடிந்தது ருக்குவால்.

ருக்கு பதில் பேசாமல் யோசனையில் ஆழ்ந்துவிடவே அத்தைக்குச் சங்கடமாகப் போயிற்று. "போறும்; இந்த வீட்டிலே நீ ஒண்ணும் காரியம் செய்து என்னைக் கடைத் தேறப் பண்ண வேண்டாம்! நீ வெறுமே இருந்தால் போறும்!" என்று கசந்துகொண்டாள் அத்தை.

அதற்குமேலும் பேசாமல் இருந்தால் தப்பாய்ப் போய் விடுமோ என்று பயந்தாள் ருக்கு. எனவே, "அத்தை!" என்றாள் மெதுவாக. அதற்குமேல் என்ன சொல்ல நினைத் தாளோ, அவள் வாயிலிருந்து வார்த்தையே வரவில்லை.

"என்னவாம் அத்தைக்கு! அத்தையைப் படைச்ச அழகுக்குக் கூப்பிடக் கூட வாய் வரதே! எங்கேடி அவன்? எல்லாருமாச் சேர்ந்து திரிசமம் பண்ணிவிட்டு இங்கே ஒண்ணும் தெரியாதவா போல நாடகம் நடிக்கவா வந்திருக்கேக!" என்று சீறினாள் நாச்சியாரம்மாள்.

ருக்கு நடுநடுங்கிப் போனாள். அவள் கண்களில் துளும் பிக்கொண் டிருந்த கண்ணீர் இரண்டு துளிகளாகத் தரை யில் விழுந்தது. ருக்குவின் கண்ணீரைப் பார்த்துவிட்டாள் நாச்சியாரம்மாள். அவள் கோபத் தீயில் அந்தக் கண்ணீர் எண்ணெயை விட்டதுபோல் ஆயிற்று. "ஏண்டி, நீலித் தனமா பண்ணறே? உன்னை அடிச்சுட்டாளா, கொன் னூட்டாளா? அடேயப்பா! வரபோதே இத்தனை சாகஸம் கத்து வச்சுண் டிருக்கிறவள் இன்னும் நாலு நாள் ஆயிட் டால் என்னதான் பண்ணமாட்டே!" என்று கர்ஜித்தாள் அவள்.

"அத்தை! நான் அப்படியெல்லாம் ஒண்ணும் பண்ண வில்லையே!" என்று வேறொன்றும் சொல்லத் தெரியாமல் பேசினாள் ருக்கு.

“ஒண்ணும் பண்ணல்லையா? இன்னும் என்னடீ பண்ணணும்! எல்லோருமாச் சேர்ந்து இங்கே என்னைப் பரீக்ஷை பார்க்க வந்திருக்கெககளே! இது போருதா!”

ருக்குவுக்கு அதற்குமேல் அழுகையை அடக்க முடியவில்லை. அத்தையின் எதிரே அழுதால் அவள் கோபம் இன்னும் அதிகமாகுமே என்று எண்ணி ஜிவ்வென்று அந்த இடத்தைவிட்டு அடுத்த அறைக்குப் போய் விக்கி விக்கி அழத் தொடங்கினுள் அவள்.

அத்தை அவளைப் பின்பற்றிப் போகவில்லை. சமையல் அறையை விட்டுச் சனியன் ஒழிந்தால் தேவலை என்று நினைத்தாளோ என்னவோ? அடுப்பை மூட்டிச் சாவதானமாகக் காபி போடுவதில் முனைந்தாள்.

ருக்குவும் சற்று நேரம் அழுது, தன் துக்கத்தை ஆற்றிக்கொண்டாள். பிறகு கண்களைத் துடைத்துக்கொண்டு வெளியே வந்தாள். அவளைப் பார்த்துக்கொண்டே அடுத்த வீட்டு ராஜலக்ஷ்மியும் வந்து சேர்ந்தாள். ருக்குவின் முகத்தைப் பார்த்தவுடனே ராஜலக்ஷ்மிக்கு அவள் நிலைமை நன்ருகத் தெரிந்துவிட்டது.

எனவே, மெல்லிய குரலில் ருக்குவைப் பார்த்து, “அத்தை எங்கே?” என்று கேட்டாள். ருக்கு வாயால் பதில் சொல்லாமல் சமையல் அறைப் பக்கமாகக் கையைக் காட்டினுள். ராஜலக்ஷ்மி உடனே சமையல் அறைக்கு நடந்தாள்.

ருக்குவுக்கு மாத்திரம் தன் தாயும் தகப்பனும் எங்கே இருக்கிருர்கள் என்று கேட்க வேண்டும்போல் இருந்தது; இருப்பினும் கேட்கவில்லை. ராஜலக்ஷ்மியைப் பின்பற்றிச் சமையலறைக்கு முன் அறையில் போய் நின்று கொண்டால் ராஜலக்ஷ்மியும் அத்தையும் பேசுவதிலிருந்து அவர்களைப்பற்றி அறிந்துகொள்ள முடியும் என்று நினைத்து மறுபடியும் அந்த அறைக்குப் போய் ஒரு சுவர் ஓரமாக நின்றுகொண்டாள்.

ராஜலக்ஷ்மியைப் பார்த்ததும் நாச்சியாரம்மாளுக்குப் கோபம் வரத்தான் வந்தது. அவள் தன் சம்பந்திகளுக்காகப் பரிந்துகொண்டு பேசினுள் அல்லவா?

அந்தக் கோபத்தில், "ஏண்டியம்மா ராஜலக்ஷ்மீ! உன் சம்பந்திகள் வந்திருக்காப்பலே இருக்கே!" என்றாள் குத்தலாக.

ஆனால் ராஜலக்ஷ்மி, இந்தக் குத்தல் பேச்சுக்களுக் கெல்லாம் பயந்துவிடப் போகிறவளா? "ஆமாம் வந்திருக்கா. அதைப்பத்தி உங்களண்டை சொல்லிவிட்டுப் போகலாம்னு தான் வந்தேன். வாருங்களேன், பார்த்து விட்டுப் போக லாம்" என்றாள்.

இப்படி ராஜலக்ஷ்மி குறும்பாகப் பேசித் தன்னையே அவள் வீட்டுக்கு அழைக்கவே, நாச்சியாரம்மாளுக்கு முகம் சின்னதாய்ப் போய்விட்டது. சிறிது நேரம் அவளுக்குப் பேசவே தோன்றாமல் மௌனமாய் இருந்துவிட்டாள். பிறகு தனக்குக் கோபம் என்று ராஜலக்ஷ்மி எண்ணிக்கொள்ளப் போகிறாளே என்று கருதி, "ராஜலக்ஷ்மி, நீ என்ன நெனச் சுக்குவையோ என்னவோ! நேத்திக்கி என்னாலும் தாள முடியல்லேடி" என்றாள்.

"இருந்தாலும் உங்களுக்கு அத்தனை கோபம் கூடாது. புது மனுஷாள்! அதுவும் சம்பந்திகள். அப்படி யெல்லாம் வாயிலே வந்தபடி பேசினால் என்ன நினைச்சுக்கமாட்டா? பாவம், அந்த அம்மா தங்கம்னாத் தங்கம். நேத்து ராத்திரி பூராவும் கண்ணை மூடவே இல்லை. விசாரப்பட்டு விசாரப் பட்டு, அழுதழுது அவளுக்குக் கண் ரெண்டும் இத்தனை பெரிசா வீங்கிப் போச்சு. என்ன இருந்தாலும் நீங்க அப்படி யெல்லாம் கேட்டிருக்கப்படாது. அவாளுக்கு மாத்திரம் மாப்பிள்ளையைப் பத்தி விசாரம் இல்லாமெயா இருக்கும்? அந்தப் பிராம்மணன் பாவம்! போய்ப் பெஞ்சிமேலே உக்காந் தவர்தான். ராத்திரி பூராவும் படுக்கக்கூட இல்லை. என்னமோ ஒரே ஒரு பெண்ணைப் பெத்தவா. அவாளுக்கு அந்த ஒரு பெண்தானே பிரபஞ்சம்! அந்த அம்மா ராத்திரி பூராவும் கதையாச் சொன்னா. பெண்ணுக்குச் செய்ய ணும்னு கொள்ளை ஆசை இருக்கு அவளுக்கு. அவருக்குந் தான் பாவம் ஆசை யில்லையா என்ன? வேளை சரியா யில்லைன்னு தோணறது. கூடக் கொஞ்சம் வெகுளி, பாவம்!

அந்த அம்மா சொன்னதிலேயிருந்துதான் எனக்கு இதெல்லாந் தெரிஞ்சுது. நீங்க வேணு அவாளை அப்படிக் கரிச்சுக் கொட்டினகளே யொழிய உங்களைப் பத்திப் பல்லத்தனை வார்த்தை பதட்டமாச் சொல்லணுமே அவா. ஊஹூம்! என்னமோ, தங்களுடைய போருத காலந்தான் உங்களுக்கு அத்தனை கோபம் வரும்படி பண்ணித்துன்னு சொல்ரு'' என்று ராஜலக்ஷ்மி அத்தையைக் கண்டிக்கும் தோரணையிலேயே பேசினுள்.

ராஜலக்ஷ்மிக்கு நாச்சியாரம்மாளிடத்தில் அவ்வளவு சுவாதீனம் இருந்தது என்றுதான் சொல்லவேண்டும். மைசூருக்கு அவள் வந்தது முதலாக ராஜலக்ஷ்மிதான் அவளுக்கு எந்தக் காரியத்திலும் மந்திரிபோல் யோசனை சொல்லி வந்தாள். நாச்சியாரம்மாளின் முன் கோபத்தையும் அவளுக்குச் சம்பந்தியிடத்தில் இருந்த அசூயையும் ஏற்கனவே ராஜலக்ஷ்மி அறிந்திருந்தாள். ஆகையால் இந்தச் சந்தர்ப்பத்தில் சம்பந்திகளைப்பற்றிச் சுவாதீனத்துடன் அவளிடம் பேச ராஜலக்ஷ்மியால் முடிந்தது. அன்றியும் ருக்குவை நேரில் கண்டபிறகு ராஜலக்ஷ்மிக்கே அவளிடத்தில் ஒரு பிடிப்பு ஏற்பட்டு விட்டது. 'இத்தனை லக்ஷணமாக இருக்கும் பெண் நாட்டுப்பெண்ணுக வாய்த்திருக்கும்போது சீர், வரிசை என்றெல்லாம் கிறுக்குப் பேசிக்கொண் டிருக்கிருளே அத்தை!' என்று அவள்மீது ராஜலக்ஷ்மிக்குக் கொஞ்சம் கோபங்கூட உண்டாயிற்று. அதுவுமன்றி அத்தை சொல்லிக்கொண் டிருந்ததுபோல் தேவராஜ ஐயங்காரும் செங்கமலமும் அப்படியொன்றும் துஷ்ட மனுஷ்யாளாகவும் காணப்படவில்லை.

'ராஜலக்ஷ்மிக்கு என்ன இத்தனை சுவாதீனம் தன்னிடம்? இப்படித் தன்னையே கண்டிக்கிருளே!' என்று நினைத்தாளா அத்தை? இல்லவே இல்லை. தனக்குத் தலையைக் காலை வலித்தால் அவள்தானே சகல ஒத்தாசைகளையும் செய்கிருள்? ரங்கநாதனைத் தன் வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போய்ச் சாப்பாடு போட்டு ஆபீஸுக்கு அனுப்புவதும் அத்தைக்கு ஆஸ்பத்திரியிலிருந்து மருந்து வாங்கிக் கொடுப்பதும் கஞ்சி

வைத்துச் சாப்பிட உதவி புரிவதும், ராஜலக்ஷ்மியல்லவா! நாச்சியாரம்மாளை விடப் பத்து வயது குறைவாயிருக்குமோ என்னவோ அவளுக்கு? ஆனால் நாச்சியாரம்மாளைவிடப் பெருந்தன்மையிலும் லோகவிவகார ஞானத்திலும் பத்து வயது மூத்தவளாகவே விளங்கினாள் அவள். எனவே அவள் கண்டித்ததை நாச்சியாரம்மாள் தவறாகக் கருதவில்லை. ஆனால் தன் சம்பந்திகளுக்காக அவள் ஏன் அத்தனை பரிந்து கொண்டு பேசுகிறாள் என்று மட்டும் அவள் மனத்தில் எண்ணாமல் இருக்க முடியவில்லை. இருந்த போதிலும் நாச்சியாரம்மாள் அதைப்பற்றி ராஜலக்ஷ்மியை ஒன்றும் கேட்கவில்லை.

தன் பெற்றோர்களைப் பற்றி ராஜலக்ஷ்மி சொன்ன வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே முன் அறையில் நின்றருக்குவின் உள்ளம் ஈயம் துள்ளுவது போலத் துள்ளித் துடித்தது. அவள் புடைவைத் தலைப்பு முற்றும் கண்ணீரால் நனைந்தது. அவள் தன்னைப்பற்றிக்கூடக் கவலைப்படவில்லை. அவள் தலைவிதிதான் இப்படியெல்லாம் இருக்கிறது. அவள் பெற்றோர்களும் இங்கே வந்து சேர்ந்து இப்படியெல்லாம் தவிக்க வேண்டுமா என்று எண்ண அவளுக்கு நெஞ்சு குமுறி வெடித்தே போகும்போல் இருந்தது.

ராஜலக்ஷ்மி சொன்ன வார்த்தைகளுக்கு அத்தை பதிலே சொல்லவில்லை. மௌனமாகவே காபி போடுவதில் ஈடுபட்டிருந்தாள். காபி போட்டு முடிந்ததும் ஒரு டம்ளர் ராஜலக்ஷ்மியின் எதிரே வைத்து, "ராஜலக்ஷ்மி, இந்தா, கொஞ்சம் காபி சாப்பிடு!" என்றாள்.

"ஆமாம்; எனக்கென்ன இப்ப காபி? இப்பத்தான் சாப்பிட்டுவிட்டு வரேன். நீங்களும் உங்க நாட்டுப்பெண்ணும் சாப்பிடுங்கோ முதலிலே" என்று சொல்லிவிட்டு, நாச்சியாரம்மாள் ருக்குவைக் கூப்பிடுகிறாளா இல்லையா என்றுகூடத்

தாமதியாமல் அங்கிருந்தபடியே, 'ஏண்டியம்மா, நாட்டுப் பெண்ணே! உன் பேர் என்ன? இப்படி வா, காபி சாப்பிடு'' என்று அழைத்தாள் ராஜலக்ஷ்மி.

அதற்குமேல் நாச்சியாரம்மாளுக்கும் என்ன தோன்றியதோ என்னவோ? "இங்கே வாடி ருக்கு! இந்தக் காபியைச் சாப்பிடு'' என்றாள் முகத்தில் அசடு வழிய.

ருக்கு உள்ளே வந்தாள். "உன் பேர் ருக்குவா? வா, இப்படி உக்காரு. ஏன் சங்கோசப்படறே? காபி சாப்பிடு!'' என்று அன்புடன் அழைத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள் ராஜலக்ஷ்மி. அவளது வார்த்தைகள் ருக்குவின் துயரத்தை வெகுவாக ஆற்றிவிட்டன என்றே சொல்லவேண்டும். அவள் மனத்தில் அந்தச் சமயத்தில் ஒரே எண்ணந் தான் உண்டாயிற்று. தன் தாயும் தந்தையும் ஊருக்குப் போய்விட்டாலுங் கூட, அத்தை தனக்கு எந்த விதமான துன்பம் இழைத்தாலும், தாய்க்குத் தாயாக அன்புடன் அழைத்துத் தனக்கு ஆறுதல் சொல்ல அடுத்த வீட்டு மாமி இருக்கிறாள் என்கிற எண்ணந்தான் அது.

இந்த எண்ணத்தால் அவள் உள்ளத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டது. அவள் முகத்தில் தேங்கியிருந்த சோகத்தினிடையே கொஞ்சம் மலர்ச்சியும் லேசாகப் படர்ந்தது; காபியை வாங்கிக் குடித்தாள். உடனே ராஜலக்ஷ்மி, "மகாலக்ஷ்மி போல வீட்டுக்கு வந்திருக்கே. நாளைக்கே லீவு கழிச்சு அவனும் வந்துவிடுவான். அத்தைக்கும் வீட்டுக் காரியம் செய்ய முடியாத கஷ்டமேதான் இப்படிக் கோபம் கோபமாவரது. போய்க் குளிச்சுவிட்டு நன்னா நாலுவிதமாச் சமைச்சுப் போடு அத்தைக்கு காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து ரெண்டு வேளை சாப்பிட்டாளானா, அப்பறம் நாளைக்கே வந்து சொல்லிக்குவா, 'என் நாட்டுப் பெண்ணைப்போல உண்டா!'ன்னு'' என்று சொல்லிவிட்டு, அத்தையைக்

கையைப் பிடித்து இழுத்துக்கொண்டே எழுந்திருந்து, ''நீங்க இப்படி வாருங்கோ. இனிமே இந்த அடுப்பங்கரைப் புகையையெல்லாம் கண்ணிலே வச்சு மூடிக்கொள்ள உங்களுக்கு உரிமையில்லே!'' என்று சொல்லி அத்தையை வலுக்கட்டாயமாக இழுத்துக்கொண்டு வெளியே போனாள்.

'' நீ ஒரு கூத்துடீ ராஜலக்ஷ்மி! சின்னக் கொழந்தையாட்டம் வெளேயாடறே!'' என்றுதான் நாச்சியாரம்மாளுக்குச் சொல்லத் தெரிந்ததே யொழிய, வேறொன்றும் ராஜலக்ஷ்மியை மடக்கிப் பேசத் தெரியவில்லே.

ருக்குவும் ராஜலக்ஷ்மி சூக்ஷ்மமாகக் கூறியதைப் புரிந்து கொண்டு சமையல் செய்ய முற்பட்டாள்.

## 24

## தர்ம சங்கடம்

நாச்சியாரம்மாளுக்கு நிலைமை மிகவும் தர்ம சங்கடமாய் இருந்தது. ராஜலக்ஷ்மி அவளைக் கையைப் பிடித்துச் சமையல் அறையினின்றும் வெளியே அழைத்துப் போனுள் அல்லவா? கூடத்துக்கு வந்ததும் ராஜலக்ஷ்மி, நாச்சியாரம்மாள் சம்பந்திகள் இடத்தில் நடந்துகொண்டது தனக்குத் துளிகூடப் பிடிக்கவில்லை யென்றும், அண்டை அயலில் இருப்பவர்கள் இதை யறிந்தால் அவளைப் பற்றி என்ன நினைப்பார்களென்றும் இடித்துக் கூறினுள். நாச்சியாரம்மாளும் நிதானமாக ராஜலக்ஷ்மி சொன்ன விஷயங்களையெல்லாம் சிந்தனை செய்து பார்த்தாள். வாஸ்தவத்தில் அவள் நடந்துகொண்ட விதம் உலக நிந்தனைக்கு இடமளிப்பதாகவே தோன்றியது அவளுக்கு.

'இன்னும் சில நாட்களில் எப்படியும் ரங்கநாதன் வந்து சேருவான். ஒரு மாச காலந்தானே லீவு வாங்கிக்கொண்டு போயிருக்கிருன்? அவன் மனநிலை எப்படி இருக்குமோ? தன் மாமனுர், மாமியார் முதலியவர்களை அத்தை கேவலமாகப் பேசி அவமரியாதைப் படுத்தினுள் என்று கேள்விப்பட்டால் அவன்தான் என்ன சொல்லுவானே?' மாமனுர்மீது உண்டான கோபத்திலிருந்து மனைவியிடம் மனஸ்தாபப்பட்டுக் கொண்டு வேதவரத்தை விட்டு நடுராத்திரியில் வெளியேறி வந்துவிட்டான் என்றுதான் நாச்சியாரம்மாள் நினைத்திருந்தாள்: எனினும், 'இப்போது ஒரு மாச காலம் ஊர் திரிந்து விட்டு வந்தால் அந்த மாப்பிள்ளைக் கோபமெல்லாம் தணிந்து போயிருக்காதா?' என்று தோன்றுவது சகஜந்தானே! கூட, பச்சைக்கிளிபோல் அழகான பெண்டாட்டி எதிரே நின்றுளா

ளுல் வேறென்ன வேண்டும்? அவள் தகப்பனையும் தாயையும் அத்தை அவமானப்படுத்தினுள் என்றுதானே நினைப்பான். 'நமக்கேன் இந்த உபத்திரவமெல்லாம்?' என்று பலவிதமாக எண்ணிப் பார்த்தாள் நாச்சியாரம்மாள்.

அவள் மனத்தில் ஓடும் சிந்தனைகளை அவள் முகமாறுதல்களைக் கண்டே உணர்ந்துகொண்டாள் எதிரே உட்கார்ந்திருந்த ராஜலக்ஷ்மி. "அத்தை, ஏதோ போனதெல்லாம் போகட்டும். இப்பக்கூட அவாள் உங்களைப் பத்திக் கொஞ்சங்கூட ஆயாசப்பட்டுக்கொள்ளவே யில்லை. இதோ அவாள் பெண்ணே உள்காரியம் எல்லாம் பார்க்க வந்து விட்டா. உங்களையும் அவாளையும் உக்கார வச்சுப் பண்ணிப் போடரு; நன்னுச் சாப்பிடுங்கோ. இதோ நானே போய் அவாளைக் கூட்டிக்கொண்டு வரேன்" என்ருள்.

நாச்சியாரம்மாளுக்குப் பதில் ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. அவள் பதில் சொல்லாமல் இருக்கவே ராஜலக்ஷ்மி மறுபடியும் கேட்டாள்: "என்ன, கூட்டிக்கொண்டு வரட்டுமா? உங்களுக்குச் சம்மதந்தானே?" என்று.

"ஏண்டீ ராஜலக்ஷ்மி! நான் வேண்டாம்னு சொல்லப் போறேன்? அவா பொண்ணுச்சு, மாப்பிள்ளையாச்சு! நாளைக்கே அவாளெல்லாம் ஒண்ணுப் போயிடுவா! நான்தான் தனிச்சு நிப்பேன். எனக்கேண்டியம்மா இந்த அவதூறெல்லாம்! ஜாம் ஜாம்னு வரட்டும்; இருக்கட்டும்."

"அப்படிச் சொல்லுங்கோ. அதுதானே வேண்டுங்கிறேன்" என்று சொல்லிவிட்டு எழுந்தாள் ராஜலக்ஷ்மி.

சற்று நேரத்துக்கெல்லாம் தேவராஜ ஐயங்காரும் செங்கமலமும் ராஜலக்ஷ்மியுடன் வந்து சேர்ந்தார்கள். செங்கமலத்துக்கும் தேவராஜ ஐயங்காருக்கும் மாப்பிள்ளை ரங்கநாதன் வந்து சேரும் வரையில் அங்கேயே இருந்துவிட்டுப் பிறகு ஊருக்குப் போக வேண்டும் என்று எண்ணம். இந்த எண்ணத்தினுல்தான் அவர்கள் முந்திய நாள் நாச்சியாரம்மாளிடம் சிறுமைப்பட்ட போதிலும், அதையெல்லாம் பாராட்டாமல் மீண்டும் அந்த வீட்டிலேயே வந்து இருக்கச் சம்மதித்தனர். ராஜலக்ஷ்மி அத்தையிடம் சொல்லியதுபோல, அவர்

களுக்கு நாச்சியாரம்மாளிடம் கொஞ்சங்கூட மனக் கசப்பு ஏற்படவில்லை. தங்களுடைய கெட்ட காலமே இப்படியெல்லாம் நேரிட்டது என்று எண்ணி அவர்கள் தம்மைத் தாமே சமாதானப்படுத்திக் கொண்டனர். 'எங்கேயாவது நம்ம பேரைச் சொல்லாமே, ருக்கு அவள் ஆம்படையானோடே நன்னயிருந்தாளானுப் போரும்!' என்று செங்கமலம் தேவராஜ ஐயங்காரிடம் சொல்லுவாள். அதுதான் அவர் விருப்பமும். எனவே ருக்குவின் நன்மையின் பொருட்டு அவர்கள் எந்தவிதமான துன்பத்தையும் சகித்துக்கொள்ளத் தயாராய் இருந்தனர்.

மறுபடியும் அந்த வீட்டுக்குள் நுழையக் கொஞ்சம் யோசனை செய்யத்தான் செய்தார் தேவராஜ ஐயங்கார். 'வீட்டை விட்டுப் போ!' என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளுவது போல நாச்சியாரம்மாள் சொன்ன பிறகு, மறுபடியும் அவளிடம் போவதா என்று எண்ணினர் அவர். ஆனால் செங்கமலமும் ராஜலக்ஷ்மியும் வற்புறுத்திச் சொல்லிய வார்த்தைகளும் ருக்குவிடத்தில் அவருக்கிருந்த வாஞ்சையுமே அவரது சுய கௌரவத்தைக் கூட ஒதுக்கித் தள்ளும்படி செய்தன.

பெற்றோர் வந்து சேர்ந்தபின்னர், ருக்குவுக்கும் மனத்தில் கொஞ்சம் ஆறுதல் ஏற்பட்டது. 'அடுத்த வீட்டு மாமி சமயத்திலே தெய்வம்போல வந்து துணை செய்தாள்!' என்று அவளது அபலை நெஞ்சம் ராஜலக்ஷ்மியை மனமார வாழ்த்தியது. ராஜலக்ஷ்மி வழி காட்டியதிலிருந்து ருக்குவும் குடும்பக் காரியங்களில் ஈடுபட்டு விட்டாள். அன்றியும் அவள் தாய் தந்தையரும் வந்து சேரவே, அவர்கள் எதிரிலேயே அவளைக் கண்டிக்கவோ அவள் வேலைகளில் குற்றம் கண்டு பிடிக்கவோ இயலாது போயிற்று நாச்சியாரம்மாளுக்கு.

நாச்சியாரம்மாளுக்குத்தான் இப்போது ரொம்பவும் பிடித்துவிட்டாற்போல் இருந்தது. அவளால் எல்லாரோடும் தாராளமாகப் பேசிப் பழக முடியவில்லை. முதல் நாள், வாயில் வந்தபடி பேசிவிட்டு, மறுநாளே கூடிக் குலாவுவதென்ருல் 'என்னமோ போல'த் தானே இருக்கும். அவள் தேவராஜ

ஐயங்கார் இருந்த பக்கமே தலைகாட்டவில்லை. ருக்குவோடும் செங்கமலத்துடனும்கூட அவள் கல கலப்பாகப் பேசவில்லை. உள்ளூர அவர்களிடம் அவளுக்கு ஏற்பட்டிருந்த வெறுப்புத் தீர்ந்தால்தானே அதெல்லாம் சாத்தியமாகும்?

இந்த நிலையில் அந்த இடத்தில் தங்கியிருப்பது செங்கமலத்துக்கும் கொஞ்சம் சிரமமாகவே இருந்தது. நாச்சியாரம்மாளோ முகம் கொடுத்துப் பேசவேயில்லை. தானாக அவளிடம் பேசாமல் இருந்துவிட்டாலும் அவள் என்ன நினைப்பாளோ என்று கொஞ்சம் 'அஞ்சிக்கை' யாகவே இருந்தது செங்கமலத்துக்கு. என்ன இருந்தாலும் பெண்ணைக் கொடுத்தவள்! ஒரு நாளைக்கு நாலைந்து தடவையாவது அவளாக, நாச்சியாரம்மாளிடம் போய் நின்றுகொண்டு ஏதாவது பேசிப் பார்ப்பாள். ஆனால் அவள் பேச்சுக்கெல்லாம் நாச்சியாரம்மாள் ஏதோ மென்று விழுங்குவதுபோல ஒவ்வொரு வார்த்தை பதில் சொல்லித் தீர்ப்பாள். இப்படியாக இரண்டு, மூன்று தினங்கள் போவதே மிகவும் கடினமாக இருந்தது.

இதையெல்லாம் ராஜலக்ஷ்மியும் அடிக்கடி அங்கே வந்து போவதன் மூலம் அறிந்துகொண் டிருந்தாள். தேவராஜ ஐயங்காருக்கோ அங்கே இருக்கக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. அவர்தான் முதல் முதலாகச் செங்கமலத்திடம், 'ஊருக்குப் போய்விடலாம்' என்று தமது அபிப்பிராயத்தைச் சொன்னார். செங்கமலத்துக்கு மாத்திரம் மாப்பிள்ளை வந்ததும் பார்த்துவிட்டுப் போகலாம் என்று தோன்றத்தான் தோன்றியது. இன்னும் நாலைந்து நாட்கள்தாம் பல்லைக் கடித்துக்கொண்டு இருந்து பார்க்கலாமே என்பதுதான் அவள் எண்ணம். ஆனால் தேவராஜ ஐயங்கார் அப்படி நினைக்கவில்லை. "வேண்டுமானால் நீ மாத்திரம் இரு. நான் புறப்பட்டுப் போகிறேன்" என்று சொன்னார் அவர்.

ருக்குவுக்கும் அவர்கள் ஊருக்குத் திரும்புவதுதான் நல்லது என்று தோன்றிற்று. 'இன்னும் சில தினங்களில் தன் புருஷன் வந்துவிட்டால் அப்புறம் என்ன நேருமோ? அவன் தன்னை எப்படி நடத்துவானோ? அவர்களிடம் முகம் கொடுத்துப் பேசுவானோ, மாட்டானோ? பாதிராத்திரியில்

வேதவரத்தை விட்டுக் கிளம்பியவன் அவன்! இப்போது அவன் மனமும் குணமும் எந்த நிலையில் இருக்கின்றனவோ?'' என்றெல்லாம் யோசனை செய்தபோது ருக்குவுக்குத் தாயும் தந்தையும், தன் கணவன் வந்து சேருவதற்கு முன் ஊருக்குக் கிளம்பிப் போய்விட்டால் பரவாயில்லை என்றே தோன்றியது. ஆனால் அவள், தன் எண்ணத்தை எப்படி அவர்களிடம் சொல்லுவது என்று தெரியாமல் திகைத்தாள்.

ஒரு சமயம் செங்கமலமே அவளிடம் பிரஸ்தாபம் செய்தாள்: ''உன் அப்பா என்னடீ இப்படிப் பறக்கிறாரே, ஊருக்குப் போகணும், ஊருக்குப் போகணும்னு ; மாப்பிள்ளை வந்தாப் பார்த்துண்டு போகலாம்னுக் கேக்க மாட்டேங்கிறாரே!'' என்று.

''அம்மா, அப்பா சொல்லுவது சரிதான். இங்கே அத்தையோ மூஞ்சியைக் கொடுத்துக்கூடப் பேசவில்லை. மாப்பிள்ளை திடுதிப்புனு புறப்பட்டுப் போனவர் வரும்போது எப்படி இருக்கிறாரோ? இப்போது புறப்பட்டுப் போய்விட்டால், அவர் வந்து சேர்ந்த பிற்பாடு வேணுமானால் ஒரு பயணம் வந்துவிட்டுப் போனால் போகிறது. எனக்குக்கூட அதுதான் சரியென்று தோன்றுகிறது'' என்று ருக்கு சொன்னாள்.

செங்கமலத்துக்கும் இது சரியான யோசனையாகவே பட்டது. இந்த யோசனையைச் செங்கமலம் ராஜலக்ஷ்மியிடம் கூறினாள். ராஜலக்ஷ்மிக்கும் அது யுக்தமாகவே இருந்தது. ரங்கநாதன் வந்தபின், தானே தன் கைப்பாடாக அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதுவதாகவும், அவர்கள் தங்கள் பெண்ணைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும் ஆறுதல் சொன்னாள் ராஜலக்ஷ்மி.

கடைசியில் செங்கமலமும் தேவராஜ ஐயங்காரும் மறுநாளே மைசூரை விட்டு வேதவரத்துக்குக் கிளம்பினார்கள். நாச்சியாரம்மாளுக்கும் தன் தலையை விட்டுப் பெரிய பாரம் நீங்கியதுபோல் இருந்தது.

## 25

## ரங்கநாதன்

தேவராஜ ஐயங்காரும் செங்கமலமும் மைசூரை விட்டுப் புறப்பட்டுச் சென்ற தினத்துக்கு அடுத்த தினம் மத்தியான்னம் சுமார் இரண்டு மணிக்கு நாச்சியாரம்மாள் கூடத்தில் கால் நீட்டிக்கொண்டு உட்கார்ந்து ஒரு கந்தல் புடைவையைத் தைத்துக்கொண் டிருந்தாள். இன்னும் நாலு நாட்களுக்குள் எப்படியும் ரங்கநாதன் வந்து சேரவேண்டும் என்பது அவளுக்குத் தெரியும். அப்படி வராவிட்டால் என்ன செய்வது என்று ஒரு கேள்வி அவள் மனத்தில் எழும்பி அவளைச் சிந்தனைக்கு உள்ளாக்கியது. 'திடுதிப்புன்னு ஊர் சுத்தப் போறேன்னு கிளம்பிப் போயிட்டானே. எங்கே போனுனே, என்ன பண்ணுருனே?' என்று அவள் மனசு அலைந்த போதிலும், 'உம். எப்படியும் லீவு கழிஞ்சு போச்சே. வந்துதானே ஆகணும்' என்று ஆறுதல் அடையும். இந்த ஆறுதல் சில நாட்களாகவே அவள் ரங்கநாதனையும் பிரதி தினமும் வருவான் வருவான் என்று எதிர்பார்க்கும்படி செய்தது. அதிலும், தேவராஜ ஐயங்கார், செங்கமலம், ருக்கு முதலியவர்கள் வந்து சேர்ந்து அவர்களுடன் ரங்கநாதன் வராமற்போகவே, அதனுல் ஏமாற்றமடைந்த நாச்சியாரம்மாளின் மனம், இப்போது முன்னைவிடப் பன்மடங்கு அதிக ஆவலுடன் ரங்கநாதன் வரவை எதிர்பார்த்தது.

ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்தவுடன் தபால்காரன் வரும் வரையில் கடிதமாவது வரும் என்று நினைத்து ஆயிரம் தடவை வாசலுக்கும் உள்ளுக்குமாக நடந்திருப்பாள். அந்த நேரம் கடந்தபின், ரெயில் வரும் நேரம் என்று ஒன்று இருக்கிறதல்லவா? அதுவரையில் அவள் நெஞ்சு, 'ஜிகுஜிகு,

ஜிகுஜிகு' என்று அடித்துக்கொண்டு அவள் மனத்திற்குள் ளேயே ரெயில் ஓடுவது போன்ற அதிர்ச்சியை உண்டாக்கும். ஆனால் அந்த நேரமும் வந்து போகும். நாச்சியாரம்மாளும் ஏக்கத்துடன் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, ஏதாவது வீட்டு வேலைகளைக் கவனிக்கச் செல்வாள்.

சம்பந்திகள் வீட்டில் இருந்தபோதே நாச்சியாரம்மாள் ரங்கநாதன் வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாளெனி னும், அவள் அதைப்பற்றி ஒரு வார்த்தைகூட அவர்களிடம் பேசவில்லை. ஏன்? அவள் அவர்களிடம் வேறு எந்த வார்த் தைகள்தாம் பேசினாள்? ஆரம்பத்திலிருந்தே அவர்களைக் கண்டால் பிடிக்காமல் போய்விட்டது அவளுக்கு. அதோடு, சமீபத்தில் நிகழ்ந்த சம்பவங்களும் அவள் வெறுப்பைத்தான் அதிகரிக்கச் செய்தன. ராஜலக்ஷ்மி புண்ணியம் கட்டிக் கொண்டு ருக்குவுக்கு, 'சமையல் கான்ட்ராக்ட்' வாங்கிக் கொடுக்காமல் இருந்தால், அவள் பாடு போதும் போதுமென்று ஆகிவிட்டிருக்கும். நல்ல வேளையாக அவள் தாய் தந்தைய ரும் சீக்கிரம் ஊருக்குப் போய்விட்டனர். அத்தைக்கும் கொஞ்சம் நிம்மதியாக இருந்தது.

அன்றைத் தினம்கூட அவள் தன் மருமான் வரவை வெகுநேரம் வரையில் எதிர்பார்த்துக்கொண் டிருந்து விட்டு ரெயில் நேரமும் கடந்துபோனபின், பொழுதைப் போக்க எண்ணித் துணி தைப்பதில் முனைந்தாள். ருக்கு எங்கோ பின்கட்டில் காரியமாயிருந்தாள்.

நாச்சியாரம்மாளுக்குப் புடைவை தைப்பதிலும் மனம் ஓடவில்லை. அடுத்த வீட்டுக்குப் போய் ராஜலக்ஷ்மியோடு கொஞ்சநேரம் பேசிவிட்டாவது வருவோம் என்று எண்ணி அரைகுறையாகத் தைத்துக்கொண் டிருந்த புடைவையை அப்படியே ஊசி, நூல் எல்லாவற்றுடனும் கூடத்திலேயே போட்டுவிட்டுக் கிளம்பினாள்.

அவள் அடுத்த வீட்டுக்குள் நுழைந்த சில விநாடிகளுக் கெல்லாம் திடீரென்று ரங்கநாதன் வந்து சேர்ந்தான். மள மளவென்று மாடிக்கு போய்ச் சட்டை, கோட், எல்லாவற் றையும் கழற்றி யெறிந்துவிட்டு, ஒரு துண்டை எடுத்துத்

தோள்மேல் போட்டுக்கொண்டு இறங்கி வந்தான். மைசூரை விட்டுப் போனபோது அவனிடம் எவ்வளவு படபடப்புக் காணப்பட்டதோ அதைவிட அதிகமான படபடப்பும் வேக மும் தென்பட்டன இப்போது. வீட்டைவிட்டுப் போனபோது ஏற்பட்டிருந்த மனக் கலவரத்தினுல் அந்தப் படபடப்பு, உண்டாகியிருந்தது அவனுக்கு. இப்போதோ அவன் மனக் கலவரத்தைப் போக்கிக்கொள்ள வழி கண்டுபிடித்து விட்டான். அந்த வழி என்ன என்பது பிரச்னையல்ல. ஆனுல் அதனுல் அவன் மனத்தில் ஒருவித நிச்சிந்தை ஏற்பட்டிருந் தது. அதுதான் அவனுக்கு இப்போது குதூகலம் அளித்துப் படபடப்பை உண்டாக்கியிருந்தது.

துள்ளிக் குதித்துக்கொண்டு மாடிப்படி இறங்கி வந்த ரங்கநாதன், "அத்தை!" என்று கொஞ்சம் கெட்டியாகவே கூப்பிட்டுக்கொண்டே கூடத்தை யடைந்தான். அங்கே அத்தை இல்லை. அவள் அரைகுறையாக விட்டுப்போன கந்தல் புடைவையும் அதில் கோத்திருந்த ஊசியும் நூலுமே இருந்தன. ரங்கநாதன் கூடத்துக்கு நடந்துவந்த வேகத்தில் காலின் கீழேயிருந்த புடைவையைக்கூடக் கவனிக்கவில்லை. அதை மிதித்து விட்டான். நெட்டுக் குத்தலாக மாட்டிக் கொண்டு நின்ற ஊசி அவன் பாதத்தில் சுரீலென்று தைத்து விட்டது. "ஆ!" என்று கூச்சலிட்டுக்கொண்டே காலைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டான் அங்கேயே.

பின்கட்டில் காரியமாயிருந்த ருக்குவுக்கு ரங்கநாதன் 'அத்தை!' என்று அழைத்த குரல் காதில் விழவில்லை. ஊசி காலில் ஏறிவிட்டதால், 'ஆ!' என்று அவன் கூவியதுதான் கேட்டது.

குரல் கேட்டவுடன் அவள் திடுக்கிட்டுப் போனுள். சட்டென்று அந்தக் குரல் இன்னுருடையது என்றுகூட உணர்ந்துகொள்ள முடியவில்லை அவளால். ஏதோ ஓர் உணர்ச்சியால் தள்ளப்பட்டவள்போல அவள் பின்கட்டி லிருந்து கூடத்துக்கு விரைந்தாள். கூடத்துக்கு எதிர் அறை யின் வாசற்படியைத் தாண்டும்போதே அவள் கண்கள் ரங்க நாதனைப் பார்த்துவிட்டன. அதற்கு மேல் அவளால் அடி

யெடுத்து வைக்க முடியவில்லை. சரேலென்று உள்ளே போய் விடலாம் என்றுகூட அவள் மனம் எண்ணிற்றோ என்னவோ? ஆனால் அவளுடைய கால்கள் நிலைப்படியிலேயே நின்று போயின.

அப்போது ரங்கநாதன் கூடத்தில் உட்கார்ந்துகொண்டு காலில் தைத்திருந்த ஊசியைச் சாவதானமாகப் பிடுங்கிக் கொண் டிருந்தான்.

மைசூருக்கு வந்தபின் முதல் முதலாக ருக்கு ரங்கநாதனை அப்போதுதான் பார்க்கிறாள்! நடுராத்திரியில் அவளை விட்டுப் பிரிந்து சென்ற நாயகனை மறுபடியும் தரிசிக்கிறாள்! 'எங்கே சென்றாரோ, என்ன நினைக்கிறாரோ, மறுபடியும் தன்னை ஏற்றுக்கொள்ளுவாரோ, மாட்டாரோ?' என்றெல்லாம் ஆயிரம் யோசனைகள் செய்து ஏக்கமுற்றிருந்த அவளுடைய மனத்திற்குத் திடீரென்று ஓய்வை யளித்துவிட்டது அவன் பிரஸன்னம். மௌனமாக நிலைப்படியில் சாய்ந்துகொண்டு நின்று போனவள், வைத்த கண் வாங்காமல் ரங்கநாதனையே உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தாள்.

ஊசியைப் பிடுங்கி யெறிந்துவிட்டு நிமிர்ந்தான் ரங்க நாதன். அவன் கண்கள் எதிரே அன்ற வாசற்படியில் நின்ற ருக்குவைக் கண்டன. அவ்வளவுதான்! அவன் முகம் இருண்டது. சற்றுமுன் அவன் முகத்தில் தென்பட்ட குதூ கலம் எங்கே போய் மறைந்துகொண்டதோ தெரியவில்லை. திக்பிரமை பிடித்தவன்போல வெறிக்க வெறிக்கப் பார்த்தபடி அப்படியே உட்கார்ந்துவிட்டான்.

ரங்கநாதன் தன்னைப் பார்க்கும் வரையில் நிலைப்படியி லேயே நின்ற ருக்கு, அவன் பார்வை தன்மேல் விழுந்தபின் அங்கே நிற்கமுடியாமல் சரேலென்று உள்ளே போய்விட் டாள்.

சற்று நேரம் உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திராமல் திருதிருவென்று விழித்துக்கொண் டிருந்த ரங்கநாதன் மெல்லச் சமாளித்துக்கொண்டு எழுந்து கூடத்தை விட்டுச் சமையலறைப் பக்கம் போனான்.

சமையலறையில் ருக்கு ஒரு மூலையில் நின்றிருந்தாள். ரங்கநாதன் அங்கே வந்து அவள் நின்றிருப்பதைக் கவனியாதவன் போலவும் வேறு யாரையோ தேடுவது போலவும் பாவனை செய்தான்.

ருக்குவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவனை எப்படி விசாரிப்பது, என்ன கேட்பது என்று தெரியாமல் தடுமாறினாள். ஆனால் ரங்கநாதன் சும்மா இல்லை. 'ருக்கு!' என்று அவளைக் கூப்பிட அவனுக்குப் பிடிக்கவில்லையோ என்னவோ? "ஹூம்!" என்று ஒரு தரம் நின்ற இடத்திலிருந்தே கனைத்துக்கொண்டான்.

அவன் கனைத்த சப்தம் கேட்டு நிமிர்ந்தாள் ருக்கு. அதற்கு மேல் அவளால் பேசாமல் இருக்க முடியவில்லையோ அல்லது ஏதோ அவனுடன் பேசி ஆகவேண்டும் என்று நினைத்தாளோ! "ஊசி ஆழமாகத் தைத்துவிட்டதா என்ன, காலிலே?" என்று கேட்டபோது அவள் முகத்தில் சொல்ல முடியாத லஜ்ஜையும் அசட்டுத்தனமும் கொட்டின.

"ஹொஹொம்!" என்று இப்போது இன்னும் சற்றுக் கெட்டியான குரலிலே கனைத்துக்கொண்டான் ரங்கநாதன். அந்தக் கனைப்பில் அவனது ஆழ்ந்த வெறுப்பும் அசிரத்தையும் தொனித்தன. "இந்த ஊசி என்ன பிரமாதம்? இதைவிடப் பெரிய ஊசி என் இருதயத்திலேயே தைத்து வேரூன்றிப் போச்சே!" என்று நிறுத்தி நிறுத்திப் பேசிவிட்டு, "உம், நீ...இப்போது..." என்று ஏதோ கேட்க வந்தவன், வார்த்தையை முழுவதும் சொல்லாமல், "ச்சூ!" என்று சூள் கொட்டிவிட்டு, இதழ்களைக் கடித்துக்கொண்டே திரும்பிவிட்டான்.

ருக்குவின் கண்களில் நீர் துளும்பிற்று. அவன் வார்த்தைகளின் அர்த்தத்தை எளிதில் புரிந்துகொண்டாள் அவள். அவள் விதியின் விசித்திரப் போராட்டத்தில் மற்றொரு புதிய அத்தியாயம் ஆரம்பமாகிவிட்டது. அதை உணர்ந்துகொண்டதனால் ஏற்பட்ட வருத்தமே அவளைக் கண்கலங்கச் செய்தது. 'ஈச்வரா! இந்தச் சோதனைக்கு எல்லையில்லையா?" என்று எண்ணிக்கொண்டே நின்றாள் ருக்கு.

அடுத்த வீட்டுக்குப் போன நாச்சியாரம்மாள் ராஜலக்ஷ்மி யுடன் பேச்சுச் சுவாரஸ்யத்தில் ஆழ்ந்து போனுளோ என்ன வோ? ரங்கநாதன் திடீரென்று வந்து சேர்ந்தது தெரியுமா என்ன அவளுக்கு, உடனே திரும்பிவர? அவள் அடுத்த வீட்டோடு 'புதைந்து' போனுள்.

ரங்கநாதன் சமையலறையை விட்டுத் திரும்பி நேராக மாடிக்குப் போய் ஒரு நாற்காலியில் அமர்ந்தான். அவனையும் அறியாமல் அவனுக்கே சிரிப்புக்கூட வந்துவிட்டது. பைத்தி யக்காரன்போலத் தனக்குத்தானே கணீரென்று சிரித்துக் கொண்டான்.

மைசூரைவிட்டுப் போனபோது அவன் மனமே உடைந்து போயிருந்தது. அவன் மூளையே குழம்பிப் போய்க் கிடந்தது. 'ருக்குவைப் போன்ற ஒரு பெண்ணு தனக்கு மனைவியாக வந்து வாய்க்கவேண்டும்!' என்றுகூட எண்ணி னுன் அவன். இப்பேர்ப்பட்ட நிகழ்ச்சியொன்று இதற்குமுன் நடந்ததாக அவன் அறிந்தவரையில் எங்கும் கேள்விப்பட் டதுகூட இல்லை. பருவகாலத்தின் முழுமலர்ச்சியுடன் மனே கரமாக அசைந்தாடிக்கொண்டு ஒளி வீசும் லாவண்யமான புஷ்பத்தின் தேனைச் சுவைக்கவென்று, மோப்பம் பிடித்துக் கொண்டே தன்னிலை மறந்து மயங்கிப் பறந்துவரும் வண்டு போல வந்தான் அவன். ஆனுல் வண்டு மலரைத் தொட்டது மே, மலரின் இதழ் சுருங்கி மூடிக்கொள்வது எங்கேயாவது. உண்டா? தேனைக் குடிக்க ஆவலுடன் வந்த வண்டின் இறக்கையிலே முள் குத்திவிட்டது. இறக்கை கிழிபட்டுப் போயிற்று. அந்த ஆத்திரத்தில் மருண்டு ஓடிய வண்டு போல் இருந்தான் அவன். அந்த மருட்சியிலே, அந்த ஆத்தி ரத்திலே, அந்தக் கோபத் துடிப்பிலே, அவன் பித்தனைப் போல மாறி மைசூரைவிட்டு ஒரு மாதம் லீவு வாங்கிக் கொண்டு ஓடினுன். நேராகச் சென்னையை அடைந்தான். இரண்டு மூன்று தினங்கள் அங்கே தங்கியிருந்தான். சென் னையில் பல பழக்கமான 'மூஞ்சி'களை அவன் அடிக்கடி பார்க்க நேர்ந்தது. அவன் மனம் அப்போதிருந்த நிலையில் அறிமுகமான மனிதர்கள், நண்பர்கள், பள்ளித் தோழர்கள்

யாரையுமே அவனுக்குப் பார்க்கப் பிடிக்கவில்லை. யாராவது தெரிந்தவர் தாமாகவே அவனைக் கண்டு அவன் க்ஷேம லாபங்களை விசாரிக்கப் புகுந்துவிட்டால் என்ன செய்வது? தன்னைப்பற்றி என்ன சொல்லிக்கொள்வது? அப்படிச் சொல் லிக்கொள்ளத் தக்க விஷயமா இது? சொல்லிக்கொண்டா லும் அவமானந்தானே அது! எனவே, அவனால் இரண்டு மூன்று தினங்களுக்குமேல் சென்னையில் தங்கவும் பிடிக்க வில்லை. சென்னையை விட்டு எங்கேயாவது போய்விடுவது என்றெண்ணி, எங்கே போவது என்றுகூட நிச்சயித்துக் கொள்ளாமல் சென்ட்ரல் ஸ்டேஷனை அடைந்தான். அவன் டிக்கட் 'கௌன்ட'ரண்டை போனபோது அவனுக்கு முன் னால் நின்றிருந்தவர், 'கோயமுத்தூருக்கு ஒரு டிக்கட்' என் றார். ரங்கநாதனும் கோயமுத்தூருக்கே ஒரு டிக்கட்டை வாங் கிக்கொண்டு ரெயிலில் போய் ஏறிக்கொண்டான்.

கோயமுத்தூரில் ஒரு ஹோட்டலிலேயே ஓர் அறையை ஏற்படுத்திக்கொண்டு சில நாட்கள் தங்கியிருந்தான். அந்த ஊர் முழுவதும் நாலு நாட்களில் சுற்றிப் பார்த்தாகிவிட்டது. வெயில், மழை, காற்று ஒன்றையும் பாராமல் ஒவ்வோரிட மாகச் சுற்றியபடியே இருந்தான். கால் போனபடி நடந் தான். ஆனால் அவன் மனம் மட்டும் ஒரே வழியில்தான் போய்க்கொண் டிருந்தது. அந்த மனத்தைத் தன் வழியில் திருப்பத்தானே இத்தனை சிரமம்! மனத்திலிருந்த துன்ப நினைவுகளையெல்லாம்-ருக்குவைப் பற்றிய ஞாபகம் முழுவதை யும் - மறக்க விரும்பினான் அவன். மறந்தால்தான் மன அமைதி ஏற்படும்போல் தோன்றியது அவனுக்கு. ஆனால் மறக்க முடிகிறதா அத்தனை எளிதில்!

அரைமணி நேரமாவது அறைக்குள்ளேயே உட்கார்ந்து கிடந்தால் ஆயிரம் சிந்தனைகள் தாமாகவே வந்து குவிந்து விடுகின்றன, அவன் உள்ளத்தில். அத்தனையும் ருக்குவைப் பற்றியே! அவ்வளவும் சிதைந்து போன தன் வாழ்வின் சுகத்தைப்பற்றியே! அவன்தான் என்ன செய்வான் பாவம்! அந்த நினைவைக் கொன்றுவிடத்தானே இந்த அக்ஞாத வாசம் புரிகிறான் அவன்? ஆனால் அவன் சக்தியை மீறியதாக

அல்லவோ இருக்கிறது அது? அதைத் தடுக்க முடியவில்லையே அவனல்!

இந்த எண்ணம் எழும்போதெல்லாம் சட்டென்று அவனும் அறையைவிட்டு எழுந்துவிடுவான். எங்கேயாவது சுற்ற ஆரம்பிப்பான். தலைக்கு மேலே படை பதைக்கிற வெயில்? காய்ந்துகொண் டிருக்கும்; ஒரு சமயம் 'பிசுபிசு'வென்று தூறிக்கொண் டிருக்கும்; இன்னொரு சமயம் நல்ல மழை பெய்துகொண் டிருக்கும். வேறொரு சமயம் மப்பும் மந்தாரமுமாக இருந்துகொண்டு சில்லென்று கூதல் அடித்துக்கொண் டிருக்கும். அதெல்லாம்கூட அவனுக்குத் தெரிவதில்லை. அறையை விட்டுக் கிளம்பி விட்டானனல் அர்த்தமில்லாதபடி தெருத் தெருவாகத் திரிவான். எதிரே வரும் வண்டிகளையோ மனிதர்களையோகூடக் கவனிப்பதாகத் தோன்ருது, அவன் கண்ணைப் பார்த்தால். கால்கள் திரிந்து திரிந்து தாமாகவே வலியெடுத்துப் போகும் வரையில் நடந்து கொண்டே யிருப்பான். இப்படித் திரியும்போது சிலசமயம் ஒரே தெருவிலேயோ சந்திலேயோ அநேகம் தடவைகள்கூட அவன் நடந்து செல்வதைப் பலர் பார்த்திருப்பார்கள். அதைப் பற்றிப் பலர் பலவிதமாக அவனைக் குறிப்பிட்டுப் பேசிக்கொண்டும் இருக்கலாம். ஆனல் அவனுக்கு அதெல்லாம் தெரிந்தால்தானே! பல தடவைகள் ஒரே தெருவில் அவன் நடமாடியதை அவன் உணர்ந்துகொண்டால்தானே!

ஒரு சமயம் ஹோட்டலில் அவன் அறைக்குப் பக்கத்து அறையில் வசித்து வந்த ஒருவர், "ஏன் ஸார், நேற்றுச் சாயந்திரம் பிராம்மண அக்கிரகாரத்தில் நீங்கள் நாலைந்து தடவை நடந்தீர்களே; யாரையாவது பார்க்கப்போய் அட்ரஸ் தெரியவில்லையா என்ன?" என்று கேட்டதற்கு, ரங்கநாதன், "என்ன? நானு? பிராம்மண அக்கிரகாரத்திற்கா போனேன் நேற்று? இல்லவே யில்லையே! நேற்று நான் அந்தப் பக்கமே போகவில்லையே. 'பாரஸ்ட் காலேஜ்' பக்கமல்லவா போயிருந்தேன்?" என்று பதிலளித்தான். இதைக் கேட்டு அந்த மனிதர் திடுக்கிட்டுப்போனர். அதற்குமேல் அவர் என்ன கேட்பது அவனை? 'முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப்

பார்க்கிறன் பேர்வழி!' என்றுதான் நினைத்தார் அவர். 'ஓஹோ! ஆசாமி இப்படியா?' என்று மனத்துக்குள்ளேயே சொல்லிக்கொண்டார் அவர். ஆனல், இது அவர் மனத்துடன் மாத்திரம் நிற்கிறதா? ஹோட்டலில் தங்கியிருந்த மற்ருெரு மனிதர் காதுக்கும் மெதுவாக எட்டியது. அப்புறம் கேட்பானேன்?

இரண்டே நாட்களில் ஹோட்டல் முற்றும் ரங்கநாதனைப் பற்றி ஒருவிதமான அபிப்பிராயம் உண்டாயிற்று. உலகத்திலே எத்தனையோ பேர் எப்படி யெப்படியோ இருக்கிறர்கள். அதையெல்லாம் பற்றி ஹோட்டல்காரருக்கு என்ன கவலை? அவரைப் பொறுத்தவரையில் தம்முடைய ஹோட்டலில் தங்குகிறவர்கள் பண விஷயத்தில் ஒழுங்காக நடந்துகொள்ளுகிறர்களா என்பதுதானே அவர் நோக்கம்? இருப்பினும் ஹோட்டலில் வசிக்கும் மற்றப் பேர்வழிகள் சும்மா இருக்கிறர்களா? அவர்களுக்குத்தான் ஒழிந்தவேளையில் பொழுதுபோக வேண்டுமே! அவர்களுடைய ஆராய்ச்சியின் பயனுகப் பின்னும் இரண்டு தினங்களிலேயே ரங்கநாதனைப்பற்றி வேருெரு முக்கியமான விஷயம் தெரிந்தது. அவன், 'பலே பேர்வழி!' என்பதல்ல அது; 'சரியான பைத்தியம்!' என்பதுதான். அவனுடைய நடவடிக்கைகளைக் கவனிக்கும்போது பைத்தியங்களில் அவன் ஒரு தினுசுப் பைத்தியம் என்றே புலனுயிற்று அவர்களுக்கு. இதனுல் அவனைப்பற்றி ஹோட்டலில் கிண்டலும் கேலியும் அதிகமாயின.

ஹோட்டலில், கூட வசிப்பவர்கள் தன்னைப் பரிகாசம் செய்கிறர்கள் என்று அறிந்துகொள்ளவே ரங்கநாதனுக்குச் சில தினங்கள் பிடித்தன. தன் விஷயத்தில் நேரடியாகப் புகுந்துகொள்ளாத வரையில் யார் எதைச் சொன்னுலும் சொல்லிக்கொள்ளட்டும் என்றுகூட இருந்துவிட்டான் அவன். ஏனெனில் அவன் மனக்கலக்கத்திலே வெளியே என்ன நடக்கிறது என்பதைப்பற்றி அவனுல் ஆராயவே முடியவில்லை. தன்னுல் ஆனமட்டும், 'வேண்டாம். வேண்டாம்! அவளைப்பற்றிய நினைவே வேண்டாம். அந்த அருவருப்பான சம்பவத்தைப் பற்றிய ஞாபகமே வேண்டாம்'

என்று மனத்தை விட்டுப் பழைய சம்பவங்களை விரட்டி விடத்தான் பார்த்தான். ஆனால் அவன் எவ்வளவு முயன்ற போதிலும் அந்த ஒரு நினைவுதான் அவன் மனத்தில் நிலைத்திருந்தது. ருக்கு ஒருத்திதான் அவன் மன உலகம் முற்றும் சஞ்சரித்து அவனைச் சித்திரவதை செய்தாள்.

கோயமுத்தூர் வாசமும் புளித்துப் போய்விட்டது ரங்கநாதனுக்கு. தன் நிலையை மறக்க ஒரு கோயமுத்தூர் அல்ல, நூறு கோயமுத்தூர் வேண்டுமானாலும் போகத் தயாராயிருந்தான் அவன். அத்தனை நீண்ட பிரயாணத்துக்கு அவனிடம் பணம் உண்டா, மற்றச் சௌகரியங்கள் உண்டா என்பதெல்லாம் வேறு விஷயம். அவன் மனநிலை அப்படி இருந்தது. 'கோயமுத்தூரைவிட்டு நீலகிரிக்குப் போனால் இயற்கை யன்னையின் இனிய காட்சிகளில் மனத்தை ஓட விடலாமல்லவா? மனத் துயரங்களை மறக்க நீலகிரி நல்ல இடமல்லவா? மனத் துயரங்கள் மடிய மறுத்தாலும் மலைச் சாரலில் மடிவதற்கு வேண்டிய இடம் இருக்கிறதல்லவா அங்கே?' என்று எண்ணியது அவன் மனம். அவனுடையமான உணர்ச்சியின் முன்னர் அவனது புருஷத்துவத்தின் தைரியம்கூட, மனோதிடம் கூட, தலைதூக்க முடியாமல் ஒளிந்துகொண்டது.

நீலகிரிக்குப் போனான். பாம்புகள்போல் வளைந்து வளைந்து செல்லும் சாலைகளில் திரிந்தான். பல இடங்களைப் பார்த்தான். காபித் தோட்டங்களைக் கண்ணுற்றான். மலைச் சரிவிலே மணம் வீசும் தேயிலைச் செடிகள் அணிவகுத்து நிற்கும் தோற்றத்தைக் கண்டான். முட்டைக்கோஸும் உருளைக்கிழங்கும் மூலைக்கு மூலை நாறிக்கொண்டு கிடக்கும் நிலங்களையெல்லாம் பார்த்தான். வானைத் தொட்டுக்கொண்டு கோணல் மாணலின்றி நிற்கும் 'யுகலிப்டஸ்' மரங்களையும் 'பைன்' மரங்களையும் 'ஸைபர்' மரங்களையும் மற்றும் குளிர்ச் சீமையிலே காணப்படும் பல மரங்களையும் பார்த்துக் கொண்டே திரிந்தான். மல்லிகையும் ரோஜாவும் மற்றும் பல புஷ்பங்களும் எத்தனை வர்ணங்களில் இருக்கின்றன அங்கே? கண்ணைப் பறிக்கும்படியாக எத்தனை தினுசு மலர்

கள் எவ்வளவு பெரிதாகப் பூத்திருக்கின்றன அந்தப் பிர தேசத்தில்? ஆனல் ஒரு மலரிலாவது வாசனை இருக்க வேண்டுமே! இதழ் ஒன்று மட்டும் இலையத்தனை பெரிசிருக் கும். ஆனல் மணம் எங்கே அந்த மலருக்கு? இன்னும் என்ன என்னவோ பார்த்தான் ரங்கநாதன். ஆனல் அவன் கண் கண்டதையெல்லாம் அவன் மனம் காணவில்லையே! எப்படி அவனுக்கு நிம்மதி உண்டாகும் ?

நீலகிரியிலும் சில நாட்கள் அமைதியின்றிக் கழிந்தன. ரங்கநாதன் தன்னல் ஆனமட்டும் என்ன என்னவோ யோசனைகள் செய்துதான் பார்த்தான். மனத் துயரங்களை மறக்க மது அருந்தலாமா என்றுகூட ஓர் எண்ணம் உண்டா யிற்று அவனுக்கு. ஆனல் மது மயக்கம் தீர்ந்தபின் மனத் துயரம் பன்மடங்கு அதிகமாக வன்றே ஆகும்! அதை மறக்க மீண்டும் குடிக்கவேண்டும். குடிவெறி தீர்ந்ததும் மீண்டும் துன்ப நினைவுகள் உள்ளத்தில் எழும். மறுபடியும் குடிக்க வேண்டும். இதற்கு முடிவுதான் என்ன? இப்படி ரங்கநாதன் யோசித்துப் பார்த்தபோது அவனுக்கே வெறுப்பு உண்டா யிற்று. 'ருக்குவின் குற்றத்துக்காக நான் தண்டனை அநு பவிக்க வேண்டும்! அந்தத் தண்டனையின் அநுபவத்தை மறக்க நான் குடிக்கவேண்டும்! பேஷ்!' என்று எண்ணித் தனக்குத்தானே கேட்டுக்கொண்டு தன்னையும் அறியாமல் உரக்கச் சிரித்துக்கொண்டான் அவன்.

நீலகிரியிலும் நிம்மதி கிடைக்கவில்லை ரங்கநாதனுக்கு. எங்கே போனல் மன நிம்மதி கிடைக்கும் என்று அவன் யோசித்துப் பார்த்தான். ஆனல் ஒரு முடிவுக்கும் வர முடிய வில்லை அவனல். கடைசியில் லீவு முடியும் காலமும் வந்து விட்டது. இன்னும் நாலைந்து நாட்களே பாக்கியிருந்தன. கையிலிருந்த பணமும் செலவழிந்து போயிற்று. பின்னும் ஒரு மாதம் லீவுக்கு எழுதிப் போட்டுவிட்டு, வேறு எங்கேயாவது போகலாமா என்று நினைத்தான். ஆனல் என்ன பிரயோ ஜனம்? எங்கே போனல்தான் என்ன? லீவு நாட்கள் அதிக மாக அதிகமாக ஆபீஸ் வேலை இல்லையே ஒழிய மனத்துக்குத் தான் வேறு வேலை இருக்கிறதே, அவனுக்கு! ஆபீஸ் வேலை

யில் ஈடுபட்டுப் போனுலாவது அந்தச் சமயத்திலேனும் இந்த விஷயங்களையெல்லாம் மறந்திருக்க முடியுமல்லவா? லீவு கழிந்ததும் நேராக ஆபீஸுக்குப் போய் 'டியூடி'யில் சேர்ந்து விடுவதென்று தீர்மானித்தான் அவன். ஆபீஸ் நேரம் தவிர மற்ற நேரங்களில் ஏதாவது பொழுதுபோக்கில் ஈடுபடவும் முடிவு செய்தான். அது பயனற்றதாக இருக்குமானுல் ஆபீஸில் அளவுக்கு மீறி அதிக வேலைகளைச் செய்வதென்றும், அப்படிச் செய்வதால் அலுப்படைந்து தானுகவே தூக்கம் வந்துவிடும் என்றும் எண்ணினுன். இந்த வழி ஒன்றுதான் அவனுக்குப் பிடித்திருந்தது. மற்றக் கேவலமான மார்க்கங்களும் இழிவான செயல்களும் சாகஸக் காரியங்களும் செய்வதை அறவே வெறுத்தான். அவையெல்லாம் கோழைகள், துன்மார்க்கர்கள், பேடிகள் இவர்கள் செய்யும் காரியம் என்பதே அவன் கருத்து.

இப்படி ஒரு முடிவு செய்துகொண்டு ரங்கநாதன் ஒருநாள் திடும் என்று நீலகிரியிலிருந்து பஸ்ஸில் ஏறிக் கிளம்பி மைசூருக்கு வந்து சேர்ந்தான். சற்றும் எதிர்பாராத சமயத்தில் ருக்குவின் முன் பிரஸன்னமாகி ருக்குவையும் திகைக்க வைத்துத் தானும் திகைத்துப்போனுன். நீலகிரியிலிருந்து அவன் கிளம்பும்போதும் சரி, அதற்கு முன்னுலும் சரி, ருக்கு மைசூருக்கு வந்து தன் வீட்டில் இருப்பாள் என்று கனவில்கூட அவன் கருதவில்லை. அன்றிரவு அவன் முகத்துக்கெதிராகவே, 'இஷ்டமில்லை!' என்று நிர்த்தாக்ஷிண்யமாகக் கர்ண கடூரமான வார்த்தையைச் சொல்லிவிட்டு, அவன் அணைப்பினின்றும் திமிறிக்கொண்டு போய்விட்ட ருக்குவா மறுபடியும் அவனிடம் வரப்போகிருள்? அவன் எண்ணவேயில்லை. அவளை மறந்து ஆபீஸ் வேலையில் மூழ்கி ஓர் யந்திரமாக மாறிவிட நினைத்தான் அவன். அதில்தான் இப்போது அவன் ஆனந்தம் இருந்தது. ஆனந்தம் இருந்ததோ இல்லையோ? ஆனந்தத்தைப் பெற எண்ணினுன் அவன் அந்த வறட்டு வாழ்க்கையில். அந்த எண்ணத்தினுல் சந்தோஷத்தை வலுக்கட்டாயமாக வரவழைத்துக் கொண்டு குதித்தோடி வந்தான் வீட்டுக்கு.

வீட்டிலே நுழைந்ததும் அந்த அற்ப சந்தோஷங்கூட மறைந்து போய்விட்டது. எதிரே நிற்கிருள் ருக்கு, எதிர் பாராத விதமாக. 'ஊசி ஆழமாகக் காலில் பாய்ந்துவிட்டதா?' என்று கேள்வி வேறு கேட்கிருள்! அவன் சிரிக்காமல் வேறு என்ன செய்வது அந்தச் சந்தர்ப்பத்தில்? ஒரே சிரிப்பாகச் சிரித்தான், மாடியில் போய் உட்கார்ந்துகொண்டு! அந்தச் சிரிப்புத்தான் எத்தனை பயங்கரமாக இருந்தது. அந்த மட்டும் கீழேயிருந்த ருக்குவின் காதில் விழாமலிருந்ததே, அந்தச் சிரிப்பின் சப்தம்!

## 26

## பெண்ணு இவள்!

ரங்கநாதன் சமையல் அறையை விட்டுச் சென்றபின் கண்களினின்றும் பெருகிய கண்ணீரைக்கூடத் துடைத்துக் கொள்ளாமல் நெடுநேரம் சிந்தனையில் ஆழ்ந்தபடியே நின்று விட்டாள் ருக்கு. 'இதைவிடப் பெரிய ஊசி என் இருதயத்தில் தைத்து வேரூன்றிப் போச்சே!' என்று அவன் சொன்ன வார்த்தைகளே அவள் சிந்தனைக்குக் காரணம். அந்த நாள் இரவுச் சம்பவம் அவன் மனத்தை எவ்வளவு தூரம் புண் படுத்தி விட்டது என்று உணர்ந்தபோது ருக்கு துடியாய்த் துடித்தாள். பழைய நினைவுகள் எல்லாம் அவள் மனக்கண் முன் எழுந்து அவளைச் சித்திரவதை செய்யலாயின. நேரம் போனதே தெரியவில்லை அவளுக்கு. கடைசியில் அவளுடைய சிந்தனைக்கும் தடையேற்பட்டது. மாடியில் போய் உட்கார்ந்து கொண்ட ரங்கநாதன் சற்று நேரம் எண்ணமிட்டுக்கொண்டே இருந்துவிட்டு மறுபடியும் இறங்கிவந்தான்.

ருக்குவின் எதிரில் நின்றுகொண்டு ஒரு கனைப்புக் கனைத்த பிறகுதான் அவன் வந்திருப்பதை அறிந்தாள் அவள். நின்ற இடத்திலேயே கண்ணும் கண்ணீருமாகக் கற்சிலை போல் இருந்த அவளைக் கண்ட ரங்கநாதனுக்கே கொஞ்சம் மனம் சபலித்ததோ என்னவோ? ஒரு நிமிஷ காலம் ஒன்றும் பேசாமல் அவனும் நின்றுவிட்டான்.

அவன் கனைத்த சப்தமே ருக்குவுக்குத் தன் நினைவை உண்டாக்கிற்று. சட்டென்று கண்களைத் துடைத்துக்கொண் டாள். ஆனால் அவளுக்கும் பேச வரவில்லை. எதிரிலேயே மௌனமாகத் தன் கணவன் நிற்பதைப் பார்த்தபோது ருக்குவுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. ஏதோ சொல்ல

வாயெடுத்தாள். அதே சமயத்தில் அவனும் ஏதோ பேச வந்தவன்போல ஒருதரம் கனைத்துக்கொண்டான். அத்துடன் இருவருக்கும் இடையே மற்றொரு நீண்ட மௌனம் குறுக்கிட்டது.

இந்த மௌனம் ருக்குவுக்கே சகிக்க முடியாததாய் இருந்தது. அவள் உள்ளத்தில், 'அத்தையைப் போய்க் கூப்பிட்டுக் கொண்டு வரலாமே' என்று தோன்றிற்றோ என்னவோ? சரேலென்று அவள் சமையல் அறையைவிட்டு வெளியே வந்து வாசல் பக்கமாக நடந்தாள்.

அவள் சென்றபின் ரங்கநாதன் சில விநாடி அங்கேயே 'திரு திரு' வென்று விழித்துக்கொண்டு நின்றான். பிறகு அவன் கால்கள் அவன் உணர்வின்றியே அவனை மாடிக்குத் தள்ளிக்கொண்டு போயின.

ருக்கு அவசரமாக அடுத்த வீட்டுக்குச் சென்றாள். ஏனெனில் அத்தை அங்கேதான் இருப்பாள் என்று நினைத்தாள் அவள். அத்தை இல்லாவிட்டாலும் அடுத்த வீட்டு மாமியிடமாவது 'அவர்' வந்திருப்பதைக் கூறி அவளையாவது அழைத்து வரலாம் அல்லவா? ஆனால் அடுத்த வீட்டில் அத்தையையும் காணோம், மாமியையும் காணோம். வேலைக்காரிதான் இருந்தாள். ருக்கு அவளைக் கேட்டபோது சற்று முன்தான் அத்தையும் ராஜலக்ஷ்மியும் கடைக்குப் போனதாகத் தெரிந்தது.

ருக்குவுக்கு இப்போது என்ன செய்வதென்று தெரியவில்லை. அத்தையும் ராஜலக்ஷ்மியும் கடையிலிருந்து திரும்பும் வரையில் அங்கேயே இருக்கமுடியுமா அவளால்? 'வீட்டைத் திறந்து போட்டுவிட்டு இங்கே வந்து என்ன பண்ணுகிறாய்?' என்று அத்தை வந்ததும் கோபித்துக்கொண்டால் என்ன பண்ணுவது? அன்றியும், 'வந்த புருஷனுக்குக் காபிகூடப் போட்டுக் கொடுக்கவில்லையே?' என்றெல்லாம் எண்ணமும் உண்டாயிற்று ருக்குவுக்கு. உடனே அங்கிருந்து திரும்பி வீட்டுக்கு வந்தாள். அவள் வந்தபோது சமையல் அறையில் ரங்கநாதன் இல்லை.

ருக்கு ஓர் யந்திரம்போல் காபி தயாரிப்பதில் ஈடுபட்டாள். அடுப்பை மூட்டிக் காபிக்கு ஜலம் வைத்ததும் அவள்

மனத்தில் இன்ஞேர் எண்ணம் உண்டாயிற்று. திடும் என்று இப்போது அத்தை வந்து சேர்ந்து, 'உன்னை யார் இப்போ காபி போடச் சொன்னது? நான் வீட்டில் இல்லாத சமயத்தில் இந்த அதிகப் பிரசங்கித்தனம் எல்லாம் உனக்கு ஏன் ?' என்று கோபித்துக்கொண்டால் என்ன செய்வது என்று யோசித்தாள் அவள். ஒருகால் அவள் வரக் கொஞ்சநேரம் பிடித்ததானுல் தான் காபிகூடப் போட்டுக் கொடுக்காமல் இருந்தால், அப்போதும் அத்தை தன்னை நிந்திப்பாள் என் பதையும் உணர்ந்தாள். இந்த நிலையில் என்ன செய்வாள் பாவம்? மனத்தில் எத்தனையோ எண்ணங்கள் தோன்றுகின் றன! ஆனுல் சரீரம் மாத்திரம் வெறும் யந்திரம்போல இயங்குகின்றது! சிறிது நேரத்துக்கெல்லாம் காபியும் 'ரெடி' யாகிவிட்டது.

'இந்தக் காபியை எப்படிக் கொண்டுபோய் அவருக்குக் கொடுப்பது? அவர் திரும்பி என் முகத்திலேயே விட்டெறிந் தால்?' என்கிற கேள்வி பிறப்பதும் சகஜந்தானே! 'எதற்கும் அத்தை வந்துவிட்டால் நல்லதல்லவா?' என்கிற எண்ணத் துடன் ருக்கு வாசலில் போய்ப் பார்த்தாள். அத்தை வரக் காணேம். ருக்குவுக்கு மறுபடியும் அடுத்த வீட்டுக்குப் போக விருப்பமில்லை. உள்ளே வந்து காபியை இரண்டு டம்ளர்களில் கொட்டி எடுத்துக்கொண்டு மாடிக்குக் கிளம்பினுள். மாடிப் படி முற்றும் ஏறி முடிப்பதற்குள் அவள் சரீரம் வேர்த்து விரு விருத்துப் போய்விட்டது.

அவள் காபியும் கையுமாக ரங்கநாதன் அறைக்குள் நுழைந்தபோது அவன் அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக்கொண் டிருந்தான். ருக்கு, காபி டம்ளர்களை அறையி லிருந்த மேஜைமேல் வைத்துவிட்டு நின்ருள். ரங்கநாதன் அறையின் மறு கோடியிலிருந்து திரும்பியபோது ருக்குவைப் பார்த்தான். 'என்ன தைரியம் இவளுக்கு! எதிரில் வந்து நிற் கிருளே!' என்று ஆச்சரியப்படுபவன் போல மாறியது அவன் முகத்தோற்றம். உலாவிக்கொண்டே அவன் மேஜையண்டை வந்தபோது ருக்கு, "காபி ஆறிப்போகிறதே!" என்று மிகவும் மிருதுவான குரலில் கூறினுள். "ஆனுல் மனசு ஆற

மாட்டேன் என்கிறதே !'' என்று வெடுக்கென்று பதில் அளித்துவிட்டுத் திரும்பினுன் ரங்கநாதன்.

இந்தப் பதிலைக் கேட்டு ஒரு விநாடி காலம் அயர்ந்தாற் போல நின்றுபோனுள் ருக்கு. எனினும் அடுத்த விநாடியே அவள் சமாளித்துக்கொண்டாள். அவனையே மடக்கிப் பேசு கிறவள்போல, ''எப்படி ஆறும்? ஆருதுதான்!'' என்ருள் சற்று அழுத்தமான குரலில்.

இப்போது ரங்கநாதனே திகைத்துப்போனுன். உலாவிக் கொண்டிருந்த அவனது கால்கள் தரையோடு தரையாகப் பதிந்தே போயின. ருக்குவின் வாயிலிருந்து இப்பேர்ப்பட்ட வார்த்தைகள் வரும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை.

''என்ன சொன்னுய்? எப்படி ஆறுமா? யாரைக் கேட் கிருய்?'' என்று சற்றுக் கோபமாகப் பேசினுன் அவன்.

''யாரைக் கேட்க முடியும்? கேட்கவேண்டியவரைத் தான்.''

''கேட்க வேண்டியவரை !......ஹூம்........கேட்க..... வேண்டியவரை! பேஷ்! நல்ல சாகஸம் இது! இங்கே என்ன, சண்டை போடுவதற்கென்ரு வந்திருக்கிருய்?'' என்று மிக வெறுப்புடன் பேசினுன் ரங்கநாதன்.

ரங்கநாதன் மிகவும் துடுக்காகக் கேட்ட இந்தக் கேள்வி ருக்குவின் நெஞ்சைப் பிளந்தது. அவள் கண்களில் பொல பொலவென்று கண்ணீர் வந்துவிட்டது. ''நான் ஏன் உங்க ளுடன் சண்டை போடவேண்டும்? சண்டை போடத்தான் என்னுல் முடியுமா?'' என்று அவள் கேட்டபோது அவள் வாயிலிருந்து சரிவர வார்த்தைகள் வெளிவர முடியாமல் தத்தளித்தன.

''ஏன் முடியாது? உன்னுல் முடியாததுகூட இருக்கிறதா இந்த உலகத்தில்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டுவிட்டு ரங்கநாதன் பூமியே அதிரும்படி கடகடவென்று உரக்கச் சிரித்தான்.

என்ன கோரமான சிரிப்பு! அவன் உள்ளத்தில் கொண் டிருந்த வெறுப்பு முழுவதும் அந்தச் சிரிப்பில் தொனித்தது. அந்தத் தொனி ருக்குவை மெய் சிலிர்க்கச் செய்துவிட்டது!

அவன் வார்த்தைகளுக்குப் பதிலே சொல்ல முடியாமல் அவள் தொண்டை அடைத்துக்கொண்டது. அவள் மௌன மாக நிற்பதைக் கண்ட ரங்கநாதனுக்கு அவளைக் கண்ணால் பார்க்கக்கூடப் பிடிக்கவில்லை. 'கெஞ்சிக் கெஞ்சி அழைத்த போது உதாசீனப் படுத்தியதுமன்றி, என் அணைப்பையும் வெறுத்து உதறிவிட்டு ஓடிப்போனவள் இப்போது காபியும் கையுமாக எதிரில் வந்து தைரியத்துடன் நிற்கிறாள். அன்றி யும் தன் குற்றத்தை என்மேல் சாட்டவும் துணிகிறாள்! என்ன துணிவு இவளுக்கு! இப்பேர்ப்பட்ட பெண் எந்தக் காரியத்துக்குத்தான் துணியமாட்டாள்! பெண்ணா இவள்! சாகஸத்தில் கைதேர்ந்த சித்திராங்கி!' என்றுதான் அவன் மனம் கூறிக்கொண்டது.

சற்றுநேரம் மௌனமாக உதடுகளைக் கடித்துக்கொண்டே பார்த்தான் ருக்குவை. 'இந்த இடத்துக்கு இவள் எப்படி வந்து சேர்ந்தாள்? இவளை அடியோடு மறந்து ஆபீஸ் வேலை களில் மூழ்கி அலுத்து, வாழ்க்கையை, உலகத்தையே, ஏன் எல்லாவற்றையுமே மறந்து போகலாம் என்று எண்ணி வந்த இடத்திலே இவள் பழியாக வந்து காத்துக் கிடக்கிறாளே! இது என்ன சூழ்ச்சி? நம்மீது ஏன் இந்த வஞ்சம்?' என்று எண்ணமிட்டவாறே ரங்கநாதன் ருக்குவைப் பார்த்து, "நீ இங்கே எப்படி வந்தாய்?" என்று கேட்டான்.

"அப்பா, அம்மா இரண்டு பேரும் கொண்டுவந்து விட்டு விட்டுப் போனார்கள்."

"ஏனோ?"

"அத்தை கடுதாசி போட்டிருந்தார்..."

"ஆமாம். அதற்குத்தான் உன் அப்பா பதில் எழுதி விட்டாரே; உன்னைக் கொண்டுவந்து விட முடியாதென்று?"

"அவர் அப்படி எழுதவில்லையே!..."

"பின்னே எப்படி எழுதினார்? 'என் பெண்ணுக்கு உடம்பு சரியில்லை. இப்போது அழைத்துக்கொண்டு வரச் சௌகரியப்படாது'....." என்று எழுதினதற்கு என்ன அர்த்தம்?"

"எனக்கு அந்த அர்த்தம் கிர்த்தம் எல்லாம் தெரியாது."

"உம்; உனக்குத் தெரியாதுதான். ஆனால் உலகத்துக்குத் தெரியும். கொதிக்கும் எண்ணெயைக் குளிர்ந்த பானகம் என்று எண்ணிப் பருக வந்து, சுட்டுக்கொண்ட என் மனத்துக்குத் தெரியும்."

ருக்கு கொஞ்சம் நிதானித்தாள். அவளால் பேச முடியவில்லை. மூச்சே திணறிப்போவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது அவளுக்கு. "இப்படி எல்லாம் நீங்கள் சொல்லக் கூடாது...காபி...ஆறிப்போகிறது. சாப்பிடுங்கள்..." என்றுதான் அவளால் சொல்ல முடிந்தது.

அந்தச் சமயத்தில் கீழே அத்தையின் குரல் கேட்டது. 'இப்படிப் பாலைத் திறந்து போட்டுவிட்டு எங்கே போய்த் தொலைஞ்சாளோ தெரியவில்லையே! பாழும் பூனை துளிகூட மிச்சமில்லாமல் குடிச்சுடுத்தே!' என்று அத்தை உரத்த குரலில் சொல்லிக்கொண்டது மாடியிலிருந்த ருக்கு, ரங்கநாதன் இருவர் செவிகளிலும் விழுந்தது.

தாற்காலிகமாக, மனத்திலிருந்து ஒரு சுமை இறங்கியது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று ருக்குவுக்கு. முகத்தில் அரும்பியிருந்த வேர்வையைப் புடைவைத் தலைப்பால் துடைத்துக்கொண்டபடியே அவள் அந்த அறையை விட்டுக் கிளம்பினாள்.

ரங்கநாதனும் ஒரு நீண்ட பெருமூச்சுடன் நாற்காலியில் உட்கார்ந்து எதிரே மேஜைமேல் இருந்த காபி டம்ளர்கள் மீது பார்வையைச் செலுத்தினான்.

## 27

## நாச்சியாரம்மாள் தர்பார்

"ஏண்டீ! சித்தே நாழி வெளியிலே போனு அதுக்குள்ளே இப்பேர்ப்பட்ட காரியம் பண்ணி வைக்கறையே! இருந்த பாலை எல்லாம் பூனைக்கு வச்சுட்டு எங்கே போய்த் தொலைஞ்சே? நீ இங்கே இருக்கேன்னு நெனச்சுண்டுதானே போனேன்?" என்று ருக்கு கீழே வந்ததும் வராததுமாகக் கேட்டாள் அத்தை நாச்சியாரம்மாள்.

"இல்லை அத்தை, பாலைப் பூனை குடிக்கவில்லை" என்று சொல்லிவிட்டுத் தயக்கத்துடன் நின்ருள் ருக்கு.

"பூனை குடிக்காமல் பின்னே யார் குடிச்சது? பால் செம்பு காலியாக் கிடக்கிறதே!"

"காபி போட்டேன்."

"காபி போட்டாயா? என்ன அவசரம் வந்துட்டுது இப்ப காபி போட? நான் வரத்துக்குள்ளே அது ஆறிப் பச்சைத் தண்ணியாப் போயிருக்கும்! இப்பேர்ப்பட்ட காரியம் செஞ்சு வைக்கறயே! இப்ப யார் குடிக்கிறது அந்தக் காபியை?"

"இல்லை. அவர் வந்திருக்கிருர்..."

"யார்?"

"உங்க மருமான்."

"நெஜமாவா? ரங்கண்ணுவா வந்திருக்கான்!"

"ஆமாம்."

"ஏது? இப்ப ரெயில் வர வேளைகூடத் தப்பிப்போச்சே! எப்படி வந்தான்? எங்கேயிருந்து வந்தான்? இப்ப எங்கே இருக்கான்? மாடியிலேயா?" என்று நாச்சியாரம்மாள் தனக்கேற்பட்ட ஆச்சரியத்திலும் ஆனந்தத்திலும் அடுக்கடுக்காகக் கேள்விகளைக் கேட்டாள்.

"மாடியிலேதான் இருக்கிறுர்" என்று மட்டுமே பதிலளித்தாள் ருக்கு.

"காபி போட்டுக் கொடுத்தாயா? நெறையப் பொடி போட்டுத் 'திக்'காப் போட்டுக் கொடுத்தையா? காபி நன்னு இருந்தாத்தான் அவன் சாப்பிடுவான்" என்று தன் அந்தரங்க வாஞ்சை ஒன்றையும் அடக்க முடியாமல் பகிரங்க மாக்கிக்கொண்டே நாச்சியாரம்மாள், "பரண்மேலே கூடையிலே கத்தரிக்காய் இருக்கு. வெண்டைக்காய் இருக்கு. கத்தரிக்காய்ப் பச்சடின்னு அவனுக்கு ரொம்ப இஷ்டம். வெண்டைக்காயை நிறைய நெய்யை விட்டு வதக்கி, கத்தரிக்காய்ப் பச்சடி பண்ணி, ஏதாவது நல்ல குழம்பு பண்ணு. இதோ வந்துவிடறேன்" என்று அவசர அவசரமாகச் சொல்லிக்கொண்டே நாலு அடி எடுத்துவைத்தாள். மறுபடியும் திரும்பிவந்து, "அடியம்மா, நீ ஒண்ணும் பண்ணவேண்டாம்; ஒண்ணுக்கொண்ணு பண்ணிப் பண்டத்தைப் பாழாக்கி வைக்காதே. இதோ நானே வந்து பண்ணறேன்" என்று கூறிவிட்டு மாடிக்குப் போனுள் நாச்சியாரம்மாள்.

ரங்கநாதன் நாற்காலியோடு நாற்காலியாகப் புதைந்து போயிருந்தான். எதிரே மேஜைமேல் ஆறிப்போன காபி, டம்ளர்களில் ஏடுகட்டிக் கிடந்தது. நாச்சியாரம்மாள் அவனுக்கெதிராக வந்து நின்றுகொண்டு, "ரங்கண்ணு, எப்படா அப்பா வந்தே?" என்று ஆர்வத்துடன் கேட்டாள்.

"கொஞ்ச நாழியாச்சு" என்று ஒரே வார்த்தையில் பதிலளித்துவிட்டு நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தான் ரங்கநாதன்.

"காபி சாப்பிடல்லே? ஆறிப்போயிட்டாப்போல இருக்கே!" என்று சொல்லிக்கொண்டே காபி டம்ளர்களைக் கையிலெடுத்தாள் நாச்சியாரம்மாள்.

ரங்கநாதன் பதில் சொல்லாமல், 'ச்சூ!' என்று சூள் கொட்டினுன். "ஏண்டா ரங்கண்ணு, காபின்னு உனக்கு இஷ்டமாச்சே. நன்னுப் போடலேயா என்ன?" என்று சொல்லி டம்ளர்களிலிருந்த காபியைச் சேரக் கலந்து ஏடு கட்டியிருந்ததைக் கரைத்துவிட்டு, நாச்சியாரம்மாள் காபி

நன்ருக இருக்கிறதா இல்லையா என்று அறிய ஒரு வாய் குடித்துப் பார்த்தாள். "ஐயையே! ஒரே விஷக் கசப்பாயிருக்கு. சர்க்கரையே போடல்லையே! எனக்குத் தெரியும்; இப்படி ஏதாவது பண்ணி வைப்பாள்னு!" என்று சொல்லிக் கொண்டே டம்ளர்களுடன் திரும்பிக் கீழே சென்ருள் நாச்சியாரம்மாள். காபி கசந்ததை அறிய முடிந்தது நாச்சியாரம்மாளுக்கு; ஆனல் ரங்கநாதன் மனம் கசந்திருக்கிறதே! - அதை அறிய முடிந்ததா?

கீழே போனதும் போகாததுமாகப் புலிபோலச் சீறினுள் நாச்சியாரம்மாள். "ஏண்டீ, என்ன காபி இது? ஒரே விஷக் கசப்பா யிருக்கே. சர்க்கரையே போடாமே கொண்டு வச்சுட்டு வந்துட்டையே. எப்படிச் சாப்பிடுவன் அவன்? ஆறி அவலாப் போச்சு. நன்னுச் செய்யத் தெரிஞ்சாச் செய்யணும். இல்லாட்டாப் பேசாமே இருக்கணும்!" என்று கெட்டியான குரலிலேயே கொஞ்சம் கசறிவிட்டு, நாச்சியாரம்மாள் காபிக்குச் சர்க்கரை போட்டுச் சரிப்படுத்தி எடுத்துக்கொண்டு மறுபடியும் மாடிக்குப் போனுள்.

ரங்கநாதனைத் திடீரென்று சந்தித்ததால் ஏற்பட்ட பிரமையிலும் அத்தை வீட்டில் இல்லாத அலைச்சலிலும் மனத்தில் எழும்பிய எண்ணங்களினுலும் நிலை தடுமாறிப் போயிருந்தருக்கு காபிக்குச் சர்க்கரை போட மறந்துவிட்டது அத்தனை பெரிய குற்றமா என்ன! அந்தக் குற்றம் அத்தைக்குத் தெரிந்ததேயொழிய ரங்கநாதனுக்குத் தெரிந்ததா? ரங்கநாதன் அறிந்த குற்றத்தைத்தான் அத்தை அறிந்தாளா?

அவள் மாடிக்குப் போய் மீண்டும் காபி சாப்பிடும்படி ரங்கநாதனிடம் சொன்னபோது, அவன், "காபியே வேண்டாம்" என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டான்.

"ஏண்டா ரங்கண்ணு, நன்னுப் போட்டிருக்கேண்டா. சுடச்சுட இருக்கு. ஒரு வாய் குத்திண்டுதான் பாரேன்" என்று கெஞ்சாக் குறையாகத்தான் மன்ருடினுள் அத்தை.

"அத்தை, என்னைத் தொந்தரவு பண்ணுதே. அந்தக் காபியைக் கொண்டுபோய்ச் சாக்கடையில் கொட்டு!"

"வந்ததும் வராததுமா ஏண்டா இப்படிக் கோவம் வரது உனக்கு? சொல்றதைக் கேளுடா."

"அத்தை, நீ இப்படி உபத்திரவம் பண்ணுவதானல் இன்று ராத்திரியே கிளம்பிப் போய்விடுகிறேன்!"

அதற்குமேல் அத்தையால் ஒன்றும் பேசமுடியவில்லை. எங்கே மறுபடியும் கிளம்பிப் போய்விடுவானே என்ற பயம் பிடித்துக்கொண்டது அவளை. சட்டென்று காபி டம்ளர்களுடன் திரும்பிவிட்டாள்.

கீழே ருக்குவைக் கண்டதும் அவள் கோபம் பொங்கியெழுந்தது. ருக்கு காபி போட்டுக் கொடுத்தது ரங்கநாதனுக்குப் பிடிக்கவில்லையென்றுதான் அவளுடைய பெண்மை மனம் எண்ணிக்கொண்டது. இந்த எண்ணம் உண்டானவுடன் அவளுக்குப் பழைய விஷயங்களெல்லாம் ஞாபகத்துக்கு வந்தன. நடுராத்திரியில் ரங்கநாதன் வேதவரத்தை விட்டு வெளியேறியதைப் பற்றித்தான் அவள் தன் போக்காக ஓர் அர்த்தம் கற்பித்துக்கொண் டிருக்கிருளே! அதுதான் அவள் கோபத்தைப் பின்னும் அதிகரிக்கச் செய்தது. ருக்குவின் கண் எதிரிலேயே அவள் போட்ட காபியைச் சாக்கடையில் விசிறிக் கொட்டிவிட்டு லொட்டென்று டம்ளர்களை ஒரு மேடைமேல் வைத்தாள் அவள்.

இந்தச் செய்கையைக் கண்ட ருக்கு பதை பதைத்துப் போனுள். தன் கணவன் காபி சாப்பிட மறுத்துவிட்டதால் தான் அத்தைக்கு இத்தனை பதற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதை நொடிப் பொழுதில் உணர்ந்துகொண்டாள் அவள். அத்தையோ காபியை வீசிக் கொட்டிவிட்டு ருக்கு இருந்த திக்கில்கூடத் திரும்பிப் பாராமல் ஜிவ்வென்று கிளம்பிப் போய்க் கூடத்தில் உட்கார்ந்துகொண்டாள். இந்தச் சந்தர்ப்பத்தில் அத்தையிடம் போய்ச் சமையலைப் பற்றி அவளுக்கு ஞாபகமூட்டுவதா வேண்டாமா என்று தெரியவில்லை, ருக்குவுக்கு. சிறிது நேரம் நிதானித்துப் பார்த்தாள், தன்னைப் பற்றித் தவருகவோ கேவலமாகவோ அத்தையிடம் ஏதாவது தன் கணவன் சொல்லியிருப்பானே என்று அவள் எண்ணிய போது அவள் மனமே குழம்பிப் போயிற்று. 'அப்படி ஏதாவது சொல்லியிருந்தால் அப்புறம் இந்த வீட்டில் நான் எப்படி இருக்கமுடியும்? அத்தை விடுவாளா என்ன?' என்று தன்

ளைத்தானே கேட்டுக்கொண்டாள். அடுத்த விநாடியே மற்றோர் எண்ணம் உதித்தது அவள் உள்ளத்தில். 'இந்த வீட்டை விட்டுக் கழுத்தைப் பிடித்துத் தள்ளினாலும் சரி, வெளியே போகக்கூடாது' என்பதுதான் அந்த எண்ணம். இந்த உறுதி ஏற்பட்டவுடனே தேகத்தில் ஓர் அசுர பலம் உண்டானதுபோல் இருந்தது அவளுக்கு. எந்தவிதமான துன்பம் நேரிட்டாலும் சகித்துக்கொள்ளத் தயாராக இருந்தாள் அவள். எனவே இப்போது சமையல் அறையை விட்டுக் கூடத்துக்குப் போய், "அத்தை, கறிகாய் எல்லாம் நறுக்கி விட்டேன். அடுப்பு எரிந்து கனிந்து போகிறது. நானே வைத்துச் சமைத்துவிடுகிறேன்" என்று சொன்னாள்.

"போறும், நீ ஒண்ணும் பண்ணவேண்டாம். காபியைத்தான் விஷமாக்கி வச்சையே! இன்னும் சோத்திலேயும் மண்ணைப் போட்டுவிட வேண்டாம். உங்க அப்பா செஞ்ச காரியத்துக்கு உன் கையாலே பண்ணிப்போட்டுச் சாப்பிட மாட்டாளோ பின்னே! ராத்திரியோடு ராத்திரியா வீட்டை விட்டுத் துரத்திவிட்டது மறந்து போச்சா என்ன? நீ வெறுமே இருந்தாப் போறும்!" என்று தூற்றிவிட்டு எழுந்து நாச்சியாரம்மாள் சமையல் அறைக்குப் போனாள்.

நாச்சியாரம்மாள் சொன்ன வார்த்தைகள் தன் பிறந்த வீட்டின் கௌரவத்தையே குலைப்பது போலத் தோன்றிற்று ருக்குவுக்கு. தன்னைப்பற்றி அத்தை ஆயிரம் வார்த்தைகள் சொன்னால்கூடச் சகித்துக்கொள்ளலாம்போல் இருந்தது. ஆனால் தன் பெற்றோரைப்பற்றி அத்தை வெடுக்கு வெடுக்கென்று ஏதாவது சொல்லிக்கொண்டிருந்தால் அதைச் சகிக்க முடியுமா அவளால்! ஏன்? பிறந்தகத்தைப்பற்றி இழிவாகக் கூறினால் எந்தப் பெண்ணால்தான் பொறுத்துக் கொள்ள முடியும்? ஆனால் ருக்குவின் நிலைமை மற்றப் பெண்களின் நிலைமையைப் போலவா இருக்கிறது? அத்தை சீறி எழுந்தபோது ருக்குவுக்கு நெஞ்சை அடைப்பதுபோல்தான் இருந்தது. ஆனால் அடுத்த சில விநாடிகளிலேயே அவள் சமாளித்துக்கொண்டாள். 'ஏதோ பெரியவள், சொல்லிவிட்டுப் போகிறாள். இதையெல்லாம் மனசில் வைத்துக்கொள்ளக்

கூடாது' என்று எண்ணித் தன்னைத்தானே தேற்றிக் கொண்ட ருக்கு, அத்தைக்குச் சமையலில் ஒத்தாசை புரிவ தற்காக உள்ளே சென்றுள்.

அத்தையோ அவளுடன் முகம் கொடுத்துக்கூடப் பேச வில்லை. அவள் செய்த காரியத்தையும், 'வேண்டாம்' என்று தடுக்கவில்லை. இப்படி நாச்சியாரம்மாளும் நாட்டுப் பெண்ணு மாகச் சமையல் மும்முரத்தில் இருந்தபோது ராஜலக்ஷ்மி வந்தாள். அத்தை, ருக்கு இருவரும் உள்ளே காரியம் செய்து கொண்டிருந்தது ராஜலக்ஷ்மிக்கே புதுமையாக இருந்தது.

ருக்கு வந்து சேர்ந்தபிறகு, அத்தை சமையலறைப்பக்கம் கால் வைப்பதுகூடக் கிடையாது. ராஜலக்ஷ்மியின் ஆக்ஞைப் படி, 'ஹாய்'யாகக் காலை நீட்டிக்கொண்டு கூடத்தோடு கூட மாக உட்கார்ந்திருந்தாள். இப்போது அவள் ஓடி ஓடிக் காரியம் செய்வது கண்டு ராஜலக்ஷ்மி, 'ஏதோ விசேஷம் இருக்கிறது!' என்று உணர்ந்துகொண்டாள்.

"என்ன அத்தை, இரண்டு பேரும் சேர்ந்து என்னமோ ததியாராதனை பண்ணருப் போலே இருக்கே! நான்கூடச் சாப்பாட்டுக்கு வரலாம்!" என்று குறும்புத்தனமாகக் கேட் டாள் ராஜலக்ஷ்மி.

நாச்சியாரம்மாள் முகத்திலிருந்த கடுகடுப்புக் கொஞ்சம் குறைந்தது. ஒரு அசட்டுச் சிரிப்புடன், "என்னமோ போடி ராஜலக்ஷ்மி, என்ன பரிகாசம் வேண்டியிருக்கு? இப்பத்தான் கொஞ்ச நாழியாச்சு ரங்கண்ணு வந்து ; நாம் ரெண்டு பேரும் கடைக்குப் போயிருந்தோமோ இல்லையோ, அப்ப வந்திருக் கான். இந்தப் பொண்ணு வகையா ஒரு டம்ளர் காபி போட்டுக் கொடுக்காதோ வந்தவனுக்கு? ஒரே சுண்டைக் கஷாயம் மாதிரி போட்டுக் கொடுத்திருக்கு! அவன்தான் சுப்ரதீபமா யிருக்கானே கொஞ்ச நாளாகவே ? அப்படியே விசிறிக் கொட்டிவிட்டான். என் கைப்பட ரெண்டு தினுசு பண்ணியாவது போடலாம்னுதான் வந்தேன். அதுக்குள்ளே இப்படிக் கேலி பண்ணறையே!" என்றுள் நாச்சியாரம்மாள்3

ராஜலக்ஷ்மி ருக்குவின் முகத்தைக் கவனித்துப் பார்த் தாள். அவள் தன்னை உற்று நோக்குவதை அறிந்த ருக்கு,

தன் முகத்தை வேறு புறமாகத் திருப்பிக்கொண்டாள். இருப்பினும் ராஜலக்ஷ்மிக்கா தெரியாது இப்பேர்ப்பட்ட சமயத்தில் அத்தையின் குணமும் பேச்சுக்களும் எப்படி இருந்திருக்கும் என்று! எனவே அத்தைக்கு ஒரு 'செக்' போடுவதுபோல் பேசினுள் அவள்.

"அத்தை, முதல் முதலிலே இங்கே வந்து காபி போட்டு ஆம்படையானுக்குக் கொடுக்கறது லேசான விஷயமா என்ன? ஏதோ தட்டும், தவறும்; இதையெல்லாம் உங்களேப் போலப் பெரியவா பெரிசாக்கிக் காட்டலாமா? இப்படியெல்லாம் நீங்க செய்யறது அவனுக்குத் தெரிஞ்சா அப்புறம் வீடு என்னமாயிருக்கும்? நீங்களே சொல்றெக, சுப்ரதீபமாயிருக்கான் அவன் என்று. அப்படி இருக்கிற போது பெரியவாளா இருக்கப்பட்டவான்னு எல்லாத்தையும் சரிக்கட்டி வைக்கப் பாக்கணும். இப்படி வாருங்கோ நீங்க. ருக்குவுக்குத் தெரியாதா என்ன ஆம்படையானுக்குச் சமைச்சுப்போட? எட்டு ஊருக்குப் பண்ணுவா! அந்தக் கடைக்காரன் புதுசா ரெண்டு புடைவை கொடுத்தனுப்பியிருக்கான். நீங்க வாருங்கோ பாக்கறத்துக்கு; கூப்பிடத்தான் வந்தேன்" என்று சொல்லி நாச்சியாரம்மாளேயும் அழைத்துக்கொண்டு கிளம்பினுள் ராஜலக்ஷ்மி.

ராஜலக்ஷ்மியின் வார்த்தையை நாச்சியாரம்மாளால் மீற முடியவில்லே. அவள் பின்னுலேயே நடந்தாள்.

## 28

## அத்தையின் கூத்து

நாச்சியாரம்மாளுக்குத் தலைகாலே தெரியவில்லை. ராஜலக்ஷ்மி சொல்லும் வார்த்தைகள் எல்லாம் நிஜமாயிருக்குமா என்று எண்ணி எண்ணி ஆச்சரியப்பட்டுக்கொண்டே கையிலிருந்த புடைவைகள் இரண்டையும் திருப்பித் திருப்பிப் பார்த்தபடி உட்கார்ந்து போனாள். "ஏன் அத்தை, இப்படி ஆச்சரியப்படறெக? உங்களண்டை வேணும்னு பொய் சொல்லணும் என்கிறதான்னா எனக்கு? அவள் அம்மா ஊருக்குப் போறபோது நூத்தம்பது ரூபாயை என்னண்டை கொண்டு வந்து கொடுத்து நல்லதா ரெண்டு புடைவை வாங்கிக் கொடுக்கச் சொன்னா. அதுக்கோசரந்தான் உங்களையும் கடைக்குக் கூட்டிண்டு போனேன். கடையிலே நல்லதா ஒண்ணும் கிடைக்கல்லே. இதுக்கு முன்னாடியே இந்தப் புடைவைக்காரன் கிட்டே ஒரு வார்த்தை சொல்லி வச்சேன். அவன் சரியான சமயத்திலேதான் இந்த ரெண்டையும் அனுப்பி வச்சான். ரெண்டும் உங்க ருக்குவுக்குத்தான்! அவள் தாயார் தகப்பனார்தான் வாங்கச் சொல்லி என்னண்டை பணமும் கொடுத்துவிட்டுப் போனா" என்று ராஜலக்ஷ்மி எத்தனை முறை எடுத்துரைத்த போதிலும் நாச்சியாரம்மாளுக்கு ஆச்சரியம் பிடிபடவே இல்லை.

"நெஜமாவாடீ ராஜாக்ஷ்மீ! அவளுக்குக்கூட இத்தனை விதரணை தெரிஞ்சுதா? ஒரு வேளை உனக்குன்னு வாங்கி வச்சுட்டு என்னைப் பைத்தியக்காரியாக்கப் பேசறையா?" என்றாள் நாச்சியாரம்மாள் சம்சயத்துடன்.

"அட ராமா! அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே, அத்தே; நீங்களேதான் சொன்னெகளே, சித்தெ மின்னெ.

சிறுசுகளுக்குத்தான் இந்த மாதிரிப் புடைவையெல்லாம் நன்னு யிருக்கும்னு. இதுகளைப்போய் நான் வாங்கிப்பேனு?'' என்றுள் ராஜலக்ஷ்மி.

அதற்குமேல் நாச்சியாரம்மாள் ஒன்றும் சொல்லவில்லை. வந்திருந்த புடைவைக்காரனிடம் விலையைப் பேசித் தீர்த்துப் பணம் கொடுத்து முடித்து அனுப்பும் வரையில் ராஜலக்ஷ்மி யைப் பார்த்துக்கொண்டே சும்மா இருந்தாள் அவள். புடைவைக்காரன் புறப்பட்டுப்போன பிறகு, ராஜலக்ஷ்மி நாச்சியாரம்மாளிடம் இரண்டு புடைவைகளையும் கொடுத்து, ''இதோ பாருங்கோ அத்தை, மருமான் வந்திருக்கானே இல்லையோ! இனிமேல் அவனும் நாட்டுப்பெண்ணும் ஒழுங்கா யிருந்தாத்தான் நன்னுயிருக்கும்னு மனசிலே கெட்டியா வச்சுக்கொள்ளுங்கோ. இந்தப் புடைவையிலே இன்னிக்கு ஒண்ணு, நாளைக்கு ஒண்ணு பிரிச்சு அவளைக் கட்டிக்கச் சொல்லுங்கோ. ஏற்கனவே கோவிச்சுண்டு போன பிள்ளை; அவன் மனசு வெறுக்கும்படி ஏதாவது சொல்லாமே உங்க 'தோல் வாயை' மூடிண்டு வெறுமே இருங்கோ. இல்லா மெப்போனு நான் ரொம்பக் கெட்டவளா இருப்பேனுக்கும்!'' என்று எச்சரிக்கை செய்து அனுப்பினுள் ராஜலக்ஷ்மி.

''ஏண்டி ராஜலக்ஷ்மி, குருடன் கண் வேணும்னு சொல்வானு, வேண்டாம்னு சொல்வானு? அவா ரெண்டு பேரும் பிரீதியா இருக்கறதுக்கு நானு குறுக்கே நிக்கறேன்? மருமானும் மருமானும்படையாளும் எப்படியோ சந்தோஷமா இருக்கணும்னுதான் நானும் பார்க்கறேன். ஆனு அந்தப் பெண்ணைப் பெத்தவாளுக்குன்னு தெரியணும் அதெல்லாம். நல்ல நாளும் தானுமா ஒரு சீருன்னும் வரிசையின்னும் ஒண்ணுமே பண்ணுமே தடிக்கட்டையாட்டம் ஒரு பொண்ணைக் கொண்டுவந்து நிறுத்தினு, அவனுக்குத்தான் சொல்றேன்; கோவம் வருமோ வராதோ? அப்புறம், 'அவன் முன்கோவக்காரன். கோவிச்சுண்டு ராத்திரி யோடே ராத்திரியா வந்துவிட்டான்'னு அவன் மேலே குத்தம் சொல்றதிலே என்ன பிரயோஜனம்? அன்னிக்கே ஏதோ பொன்னுலே செய்யறதைப் பூவாலேயாவது சேஞ்சு

நல்லபடியா அனுப்பிவைக்கிறதுதானே, பொண்ணையும் மாப்பிள்ளையையும்! யார் வேண்டாம்னு சொன்னது? நான் என்ன, 'இதைச் செய், அதைச் செய்' என்று கேட்டேனு என்ன?'' என்று அத்தை தோரணையாக வக்கணை பேசி விட்டுப் புடைவைகளை எடுத்துக்கொண்டு கிளம்பினுள்.

அவளைப் பின்தொடர்ந்து வாசல் வரைக்கும் வழிவிட வந்த ராஜலக்ஷ்மி, அத்தையின் மனநிலையை நன்ருக உணர்ந்துகொண்டாள். அவளுக்குத் தேவராஜ ஐயங்கார் மீதிருந்த கோபத்தையெல்லாம் சட்டென்று தணிய வைத்தது அந்தப் புடைவைகள்தாம் என்பது விளங்கிவிட்டது ராஜலக்ஷ்மிக்கு. 'பொன்னுல் செய்வதைப் பூவினுலாவது செய்யக்கூடாதா?' என்று வாய் ஒழுங்காகப் பேசின அத்தை, நடைமுறையில் அத்தனை பெருந்தன்மையைக் காட்டுவாளா என்று எண்ணியபோது ராஜலக்ஷ்மிக்கே சிரிப்பு வந்துவிட்டது. புதுப் புடைவைகளைக் கண்ட ஆனந்தத்தில் அத்தை தன்னை மறந்து உளறுகிருள் என்று கண்டு கொண்டாள் ராஜலக்ஷ்மி. எனவே தனக்குத் தெரிந்த மற்ருெரு விஷயத்தையும் அத்தையிடம் சொல்ல இதுவே தருணம் என்று கருதி, வாசற்படியண்டை வந்ததும், "அத்தை, இன்னொரு சமாசாரங்கூட உங்களிடம் சொல்ல ணும்'' என்ருள்.

"என்னடீ அது'' என்று கேட்டாள் அத்தை.

"உங்க சம்பந்திகள் ஊருக்குப் போறபோது சொல்லி விட்டுப் போனு: எப்படியாவது இன்னும் ஒரு மாசத்துக்குள் ளேயோ, ரெண்டு மாசத்துக்குள்ளேயோ உங்க பேருக்கு ஆயிரம் ரூபா அனுப்பறதாகச் சொன்னு! அந்த ரூபாயை வச்சுண்டு, மாப்பிள்ளைக்கோ பெண்ணுக்கோ யாருக்கு வேணுமானுலும் உங்க இஷ்டப்பிரகாரம் எதை வேணும்னு லும் செஞ்சுக்கச் சொல்லிச் சொல்லிவிட்டுப் போனு. இன்னும் கொஞ்ச நாள் கழிச்சு இது விஷயமா உங்களுக்கே ஒரு கடுதாசியும் போடறதாகச் சொன்னு.''

"ராஜலக்ஷ்மி, இதென்னடீ பரிகாசம்? நான் என்ன அப்படிப் பணம் பணம்னு பேயாப் பறக்கிறேனு என்ன?''

" அப்படிச் சொன்னேனு நான்? அவா சொல்லிவிட்டுப் போனதைத்தானே சொன்னேன்."

" நிச்சயமாவா ஆயிரம் ரூபா அனுப்பறேன்னு சொன்னு !"

" நான் என்ன பொய்யா சொல்லப் போறேன்?"

" அப்படின்னு நேரிலே என்னண்டை ஒரு வார்த்தை சொல்லப்படாதோ? வாயைத் திறந்தா முத்து உதிர்ந்து போகும்னு இருந்தாளே, இங்கே இருக்கிற வரைக்கும்?"

" அதுக்கென்ன பண்ணறது? அவாளுக் கென்னமோ உங்களண்டை சொல்லக் கூடாதுங்கிற எண்ணமேயில்லே. ஆனு அவா உங்க வீட்டிலே இருக்கிறபோது நீங்க மூஞ்சி யைக் கொடுத்து ஒரு வார்த்தையாவது பேசினுத்தானே! உங்களண்டை சொல்ல முடியாமல் போனதனுல்தான் என்னண்டை சொன்னு. இருந்தாலும் நீங்க அப்படி இருந் திருக்கக் கூடாது. தெனந் தெனமா அவாள் எல்லாம் உங்க வீட்டிலே வந்து குந்தியிருக்கப் போரு?" என்று ஒரு 'டோஸ்' விட்டாள் ராஜலக்ஷ்மி.

" என்னமோ போடி, ராஜலக்ஷ்மி, அப்ப வீடு என் னமா யிருந்துதுன்னு நெனக்கிறே நீ? இவா பொண்ணைக் கூட்டிண்டு வந்த லக்ஷணமும் வீட்டை விட்டுப் போன பிள்ளை எங்கே இருக்கான், எப்ப வரான்னுகூடத் தெரியாமே இருந்ததும்; உம், அதையெல்லாம் உன்னண்டை சொல்லிக் கிண்டு என்ன ஆகப்போறது? அப்ப என் நிலைமையிலே நீ இருந்தையானுத் தெரிஞ்சிருக்கும்! எனக்கென்னமோ இன் னதுதான் செய்யறதுன்னே தெரியல்லே. ஏதோ ஏறத்தாழத் தான்நடந்துண் டிருப்பேன்" என்று இழுத்தாற் போலப் பேசிவிட்டுக் கிளம்பினுள் அத்தை.

"போனதெல்லாம் போகட்டும். இனிமே அதைப்பத்தி யெல்லாம் நெனைக்கவே வேண்டாம். நாளைக்கே அவா ரெண்டு பேரும் மனசு ஒத்து நன்னு யிருந்தாத்தான் உங்க ளுக்கும் மதிப்பு உண்டாகும். கொஞ்ச நாளைக்கு உங்க 'துராங்கார'த்தையெல்லாம் மூட்டைகட்டி வச்சுடுங்கோ" என்று சிரித்துக்கொண்டே சொன்னுள் ராஜலக்ஷ்மி.

"ஆமாண்டியம்மா. என்னை 'நொட்'டடிக்காப் போனு உனக்குப் போது போகாது! உம்!" என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே நடந்து சென்ருள் நாச்சியாரம்மாள்.

அன்றிரவு சாப்பிடும்போது நாச்சியாரம்மாள் அடிக்கொரு தடவை, 'ருக்கு, ருக்கு!' என்று அழைத்ததும், ரங்கநாதனுக்கு வலுக்கட்டாயமாக ருக்குவையே பரிமாறச் சொல்லிவிட்டு, அவன் பக்கத்தில் உட்கார்ந்து, "இந்தக் கறி நன்னுயிருக்கும்; அந்தப் பச்சடியைத் தொட்டுத்தான் பாரேன்; இந்தக் குழம்பு எத்தனை மணமாயிருக்கு; எல்லாம் உன் ஆம்படையாள் பண்ணினதுதான்; நள பாகமா அமைந்திருக்கு!" என்றெல்லாம் சற்றைக் கொருதரம் அவன் ஒன்றும் கேட்காமல் இருக்கும்போதே சொல்லி அவனை உண்பித்ததும், அவன் பார்க்க வேண்டும் என்று ருக்குவைப் புதுப் புடைவைகளில் ஒன்றைக் கட்டிக்கொள்ளச் சொன்னதோடு நிற்காமல், அவன் சரியாகக் கவனிக்கிருனு இல்லையா என்று அறிய, "தலைப்பைக் கொஞ்சம் இழுத்துவிடு; புதுப் புடைவையோன்னே, அப்படித்தான் ஏறிண்டு போகும்...இந்தக் கலர் உன் உடம்புக்கு நன்னு யிருக்கு...!" என்பது போன்ற பேச்சுக்களைப் பேசியதும், இன்னும் அவளுக்கு ஏற்பட்டிருந்த ஆனந்தத்தில் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் என்ன என்னவோ உளறிக் கொட்டியதும், ரங்கநாதனுக்கும் ருக்குவுக்கும் மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கி விட்டன.

ரங்கநாதனுக்கு இதெல்லாம் ஒன்றுமே பிடிக்கவில்லை. சாப்பிடக்கூடப் பிடிக்கவில்லை என்று சொல்லலாம். ஆனல் அத்தை அடித்த கூத்தில் அவன் திக்பிரமை யடைந்து போனுன். சாப்பாட்டைச் சீக்கிரம் முடித்துக்கொண்டு மாடிக்குப் போனல் போதும் என்று ஆகிவிட்டது அவனுக்கு.

அவன் சாப்பிட்டுவிட்டுப் போனவுடன் ருக்குவையும் சாப்பிடச் செய்து, "இதோ பார், அலமாரியிலே வெத்திலை பாக்கு எல்லாம் இருக்கு. எடுத்துண்டு நீ போ. நான் உள் காரியத்தைப் பார்த்து முடிச்சுக்கறேன்" என்று சொன்ன போது ருக்குவே, 'இது கனவா, நினைவா?' என்று பிரமித்துப் போனுள். அத்தை இன்னொரு தடவையும் சொன்ன பிறகுதான் அவள் மாடிக்குக் கிளம்பினுள்.

## 29

## கண்ணும் மனமும்

வெற்றிலைத் தட்டுடன் ருக்கு மாடி அறையில் நுழைந்த போது ரங்கநாதன் நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக்கொண் டிருந்தான். ருக்கு, வெற்றிலைத் தட்டை அந்த அறையிலிருந்த ஒரு 'ஷெல்பி'ல் வைத்து விட்டுக் கதவோரத்திலேயே சிறிது நேரம் நின்ருள். அவள் வந்ததையோ வெற்றிலைத் தட்டை வைத்ததையோ கவனியாதவன்போல் இருந்தான் ரங்கநாதன். அவன் புஸ்தகம் படிப்பதில் மும்முரமாயிருப்பது போலப் பாவனைதான் செய்கிருன் என்று தெரியாதா என்ன ருக்குவுக்கு? தன் வரவை அவன் அறிந்துகொண்டான் என்பதையும் அவள் உணர்ந்து கொண்டாள். எப்படியெனின் அவள் அறையில் வந்து நின்றது முதலாக, அவன் சுமார் பத்து நிமிஷ நேரம் வரையில் ஒரே பக்கத்தைப் படித்துக்கொண் டிருக்கிருன் என்ருல், அவன் படிக்கிருனு, படிப்பதுபோல் பாவனை செய்கிருனு என்று தெரிந்துகொள்ள முடியாதா என்ன அவளுக்கு ? தன்னுடன் பேசுவதைத் தவிர்க்கவே அவன் புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு பராமுகமாய் இருக்கிருன் என்பதை அறிந்ததும் ருக்குவுக்கு அங்கே சும்மா நின்றுகொண் டிருப்பது கஷ்டமாயிருந்தது.

அவன் எதிரே போய் நின்றுகொண்டு ஏதாவது பேச்சுக்கு இழுக்க அத்தனை சுவாதீனம் இருக்கிறதா என்ன அவளுக்கு? கதவோரத்தில் நின்று நின்று பார்த்துவிட்டு மெல்ல அறையைவிட்டு வெளியே வந்தாள். அந்த அறைக்கு அடுத்தாற்போல் மற்ருேர் அறையும் அதன் பின்னுல் ஒரு மொட்டை மாடியும் இருந்தன.

ருக்கு மொட்டை மாடியில் போய்க் கைப்பிடிச் சுவரைப் பிடித்துக்கொண்டு கொஞ்சநேரம் நின்று பார்த்தாள். வானத்தின் நிலவு மொட்டை மாடியை முழுக்காட்டியிருந் தது. அந்த நிலவின் குளிர்ச்சியுடன் காற்றின் குளிர்ச்சியும் கலந்து ருக்குவின் மனத்துக்குக் கொஞ்சம் சாந்தியளித்தது. ரங்கநாதன் அறையின் ஜன்னல் வழியாக எலெக்டிரிக் விளக் கின் வெளிச்சமும் மொட்டை மாடியில் விழுந்திருந்தது. ருக்கு கைபிடிச் சுவரைப் பிடித்துக்கொண்டு நின்றபடியே, அடிக் கடி அந்த ஜன்னலிலிருந்து வரும் விளக்கு வெளிச்சம் மறை கிறதா என்று பார்த்துக்கொண் டிருந்தாள். சுமார் அரை மணி நேரம் ஆனபின் அந்த வெளிச்சம் மறைந்தது. உடனே ருக்குவின் மனம் திக் திக் என்று அடிக்கத் தொடங் கியது. 'எப்படியும் அவர் என்னைத் தேடி இங்கே வருவார்?' என்று அவள் மனம் தனக்குத்தானே சொல்லிக்கொண்டது. அடுத்த கணமே, 'அவர் வராவிட்டால்?' என்கிற கேள்வியும் பிறந்தது அவள் உள்ளத்தில். 'எதற்கும் இன்னும் சிறிது நேரம் பார்ப்போமே!' என்று சமாதானப்படுத்திக்கொண் டது மனம்.

ஆனால் அவள் மனம் சங்கடப்பட்டுக்கொண்டதுதான் மிச்சம். விளக்கு அணைந்து வெகு நேரமான பின்பும் ரங்க நாதன் மொட்டைமாடிப்பக்கம் வரவேயில்லை. ஒருசமயம் அவன் காலடி யோசைகூடக் கேட்டதுபோல் இருந்தது ருக்குவுக்கு. அவள் நெஞ்சு 'பக், பக்'கென்று பின்னும் கன வேகத்துடன் அடித்துக்கொண்டு நின்றது. அவ்வளவுதான்.

ரங்கநாதன் நேராக மாடிப்படி யிறங்கிக் கீழே போய் விட்டுத் திரும்பி வந்து தன் அறைக்கே போய்விட்டான். ருக்குவுக்கு நின்றுநின்று கால்கள் வலியெடுத்துக்கொண்டன. கடைசியில் கால்களைப் பிடித்துக்கொண்டு கைபிடிச் சுவர் ஓரத்திலேயே உட்கார்ந்துவிட்டாள், சிறிது நேரம். கால் களின் வலியும் கொஞ்சம் ஆறியது. ஆனால் மனத்திலிருந்த வலி இப்போது அதிகமாகிவிட்டது அவளுக்கு.

'ராத்திரி முழுவதும் நான் இப்படியே இந்த மொட்டை மாடியில் இருக்க வேண்டியதுதானா?' என்று தன்னைத்தானே

கேட்டுக்கொண்டாள். வானத்திலேயிருந்து வாரி யிறைக்கும் நிலவிலே அவளுடைய புதுப் புடைவையையும் பொங்கி வழியும் அழகையும் கண்ணுலாவது காணக்கூடாதா ரங்கநாதன்! அவன் மனந்தான் முறிந்துபோய்க் கிடக்கிறதே! அவன் ஏன் வரப்போகிருன்?

நேரம் செல்லச் செல்ல ருக்குவின் மனத்தில் ஏற்பட்ட பாரமும் தாங்க முடியாததாக ஆகிவிட்டது. எப்படி யாலுைம் சரி; தன் கணவனிடம் போய், அவன் காலில் விழுந்தாவது தன்னை ஏற்றுக்கொள்ளும்படி கெஞ்சிப் பார்க்கலாம். 'அப்போதாவது அவன் மனம் இளகாதா?' என்று எண்ணிக் கொண்டே மொட்டை மாடியை விட்டுப் புறப்பட்டாள் ருக்கு.

அவள் ரங்கநாதன் அறைக்குச் சென்றபோது அந்த அறை அந்தகாரத்தில் மூழ்கிக் கிடந்தது. நிலா வெளிச்சத்திலிருந்து வந்து திடீரென்று இருட்டில் நுழைந்தபடியால் ருக்குவுக்கு அந்த அறையின் நிலைமை பிடிபடவே சற்று நேரம் பிடித்தது. அப்போதுதான் அறையின் ஜன்னல் ஒன்றன் வழியாகச் சந்திர வெளிச்சம் ஒரு மூலையில் விழுவது தெரிந்தது, அவளுக்கு. ஒரே இருட்டாக இருந்த வேருேர் இடத்திலே, அறை மத்தியிலே ரங்கநாதன் தன் படுக்கையை விரித்துக்கொண்டு குப்புறப் படுத்திருந்தான்.

ருக்கு அவன் படுக்கையின் அருகே சென்ருள். அவனை யும் அறியாமல் அவளுடைய காலில் அணிந்திருந்த மெட்டிகள், 'எங்கள் யஜமானி உங்கள் பாதத்தை நாடி வந்திருக்கிருள். தலை நிமிர்ந்து பாருங்கள்!' என்று அபயப் பிரதானம் கேட்பதுபோல், 'கிணிக், கிணிக்' என்று ஒலித்தன. மெட்டி யோசையைக் கேட்டுத் தலை நிமிர்ந்தான் ரங்கநாதன். 'ச்சூ! சனியன்!'. என்று தூக்கம் கலைக்கப்பட்டவன், அலுத்துக் கொள்வதுபோல் முனகிவிட்டு, வேறு புறமாகத் திரும்பிப் படுத்துக்கொண்டான்.

நிஜமாகவே அவன் நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருந்தால் ருக்குவின் மெட்டியோசை அந்தத் தூக்கத்தைக் கலைத்துவிட முடியாது. அவனுக்கே தூக்கம் வரவில்லை. சாப்பிட்டு விட்டு மாடியேறி வந்தவன் ஏதோ ஒரு புஸ்தகத்தை எடுத்து

வைத்துக்கொண்டு படிப்பதில் ஈடுபட நினைத்தான். ஆரம்பத்தில் கொஞ்சம் படிக்கவும் படித்தான். ஆனால் ருக்கு உள்ளே நுழைந்ததுமே அவன் படிப்பும் நின்றுபோயிற்று. அவள் வந்ததைக் கண்டுகொள்ளாமல் இருக்கவேண்டும் என்று கருதியே புஸ்தகத்தை விட்டுக் கண்ணை யெடுக்காமல் இருந்தான். ருக்குவும் சிறிது நேரம் நின்று பார்த்துவிட்டுப் போய் விட்டாள். ரங்கநாதனுக்குத் தன் எண்ணத்தில் ஓரளவு வெற்றி கிடைத்தது. மறுபடியும் படிப்பதில் முனைந்தான். சுமார் ஒரு மணி காலம் வரையில் புஸ்தகத்தோடு முட்டிக் கொண்டான். கண் மாத்திரம் புஸ்தக ஏடுகளைப் பார்த்துக் கொண்டே யிருந்தன. கையோ ஏடுகளைப் புரட்டிக்கொண் டிருந்தன. ஆனால் மனம் பழைய ஞாபகங்களை ஏடு ஏடாகப் புரட்டித் துளைத்தது அவன் இருதயத்தை. அந்த நள்ளிரவின் ஞாபகமும் ருக்குவின் உதாசீனமும் திரும்பத் திரும்ப அவன் நினைவேடுகளிலிருந்து மனக்கண் முன் தோன்றி அவனை வருத்தி வதைத்தன. கடைசியில் கையிலிருந்த புஸ்தகத்தை மேஜைமீதே எறிந்துவிட்டுப் படுக்கையை விரித்துக்கொண்டு படுத்தான். ஆனால் தூக்கம் வந்தால்தானே!

படுக்கையை விரித்துவிட்டுக் கீழே போய்த் திரும்பும் போது அவனையும் மீறிக் கண்கள் மொட்டை மாடியில் கைபிடிச் சுவரின்மேல் சாய்ந்துகொண்டு நின்ற ருக்குவைப் பார்த்துவிட்டன. அவள் நின்றிருந்த நிலை, நளனைப் பற்றித் தமயந்தி அன்னப் பறவையிடம் கேட்கும் ரவிவர்மாவின் படத்தை ஞாபகம் மூட்டியது. தன்னையும் அறியாமல் அந்தக் காட்சியைக் கண்டவண்ணம் கண நேரம் நின்றுவிட்டான் ரங்கநாதன். ஆனால் அடுத்த சில விநாடிகளிலேயே தன்னுணர்வு பெற்ற அவன் அந்த இடத்தை விட்டுத் திரும்பினான். 'சீ, என்ன மதி மயக்கம்! அழகுக்குப் பணியும் இந்த மனத்தில் உறுதிக்கு இடம் இருக்குமா?' என்று எண்ணினான். உடனடியாகவே இந்தக் கேள்விக்குப் பதிலும் கிடைத்தது அவனுக்கு. 'அழகைக் கண்டு கண் மயங்கி விட்டது. ஆனால் உள்ளம் மயங்கிவிட்டதா என்ன? உள்ளத்தின் கண்ணெதிரே அவள் உதாசீனமல்லவா சிலை யடித்து நிற்கி

றது ?' என்று உறுதிப்படுத்திக்கொண்டு வந்து படுக்கை மேல் படுத்தான். தன்னல் ஆன மட்டும் தூங்க முயன்றான். ஆனல் நித்திரை வரவில்லை ; ருக்குதான் வந்தாள்.

அவள் வரவை அறிந்து குப்புறப் படுத்தான். ஆனல் அவள் மெட்டியோசை காதில் விழுந்தது. 'சனியன் !' என்று அலுத்துக்கொண்டு வேறுபுறம் திரும்பிக்கொண்டான். ருக்குவுக்கு அழுகை வந்துவிட்டது. இருந்தாலும் அடக்கிக் கொண்டு சிறிது நேரம் நின்றாள். அவனிடம் ஏதோ சொல்ல வேண்டும்போல் தோன்றிற்று அவளுக்கு. ஆனல் சொல்ல வாய் வரவில்லை. ஏதாவது கேட்டால் அவன் மறுபடியும் கோபித்துக்கொள்வானே என்று பயமாயிருந்தது அவளுக்கு. மெல்ல மெட்டியோசைகூடக் கேட்காதபடி அந்த இடத்தை விட்டு நடந்து சென்று மறுபடியும் அந்த மொட்டை மாடிக் கைபிடிச் சுவரே கதி என்று அதைப் பற்றிக்கொண்டு நிற்க லானாள். ஆனல் எத்தனை நேரம் நிற்க முடியும்? கால்கள் தளர்ந்தன. கைகளும் சுவரின் மேல் ஊன்றியதால் வலித் தன. கடைசியில் சுவரடியிலேயே படுத்துவிட்டாள் ருக்கு. சந்திரிகையின் மடியிலேயே காற்றுத் தாலாட்ட, ஒரு குழந்தை போலத் தூங்கியே போனாள், பாவம்!

ருக்கு அறையை விட்டுச் சென்றதைக்கூட அறியாமல் ரங்கநாதன் கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தான். அவன் மறுபடியும் திரும்பிப் படுத்தபோதுதான் ருக்கு அங் கில்லை என்று தெரிந்தது அவனுக்கு. 'அப்பா ! ஒரு வேதனை விட்டது !' என்று எண்ணிக்கொண்டாலும், ஏதோ ஒரு வேதனை அவன் மனத்துக்குள்ளேயே இருக்கத்தான் இருந் தது. அந்த வேதனைதான் அவனைத் தூங்கவிடாதபடி சிந்த னைக் கடலில் ஆழ்த்தியது. 'இப்படி இருந்தால் இதற்கு ஒரு வழி ஏற்படாது. நாளைக்கே ரெயிலேற்றி அவளை ஊருக்கு அனுப்பிவிட்டால்தான் இந்தத் தொல்லை ஒழியும். அத் தைக்கோ வேதவரத்தில் நடந்த விஷயம் ஒன்றும் தெரியாது. அவள் தன் போக்காகப் பணம், காசு, சீர், வரிசை என்றெல் லாம் ஏதேதோ எண்ணி நிஷ்டுரப்பட்டுக் கொள்ளுகிறாளே, அதோடு சரி ! அவளிடம் விஷயத்தைச் சொல்லுவதென்று

லும், இது சொல்லத் தகுந்த விஷயமா! இந்தச் சந்தர்ப்பத்தில் அவளைச் சந்தோஷமாக வைக்கவென்று அந்தப் பெண்ணின் தாயார் தகப்பனர், பணத்தைப் பாராமல் நகைகளும் புடைவைகளும் வாங்கத்தான் வாங்குவார்கள். இந்தப் பைத்தியமும் தலைகால் தெரியாமல் கூத்தாடும். இதையெல்லாம் சகித்துக்கொண்டு இங்கே இருக்க முடியுமா என்ன? நாளைக்கே அவளை அனுப்பிவிடுவதுதான் சரி' என்பது போன்ற பல எண்ணங்கள் அவன் மனத்தில் உண்டாயின. கடைசியில் இந்த முடிவுதான் சரி என்று தோன்றியது அவனுக்கு. சூட்டோடு சூடாக இதை ருக்குவிடம் சொல்லிவிட வேண்டுமென்று எண்ணிப் படுக்கையை விட்டு எழுந்தான்.

அப்போது நடுராத்திரிக்குமேல் நெடுநேரம் ஆகிவிட்டது. மேல் வானத்தில் சந்திரன் ஓடிக்கொண் டிருந்தான். மொட்டை மாடியில் நிலவு மறைந்து நிழல் விழுந்திருந்தது. அந்த நிழலோடு நிழலாகக் கிடந்தாள் ருக்கு. ரங்கநாதன் அறையை விட்டு அங்கே வந்தபோது அவள் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தாள். ரங்கநாதன் அவளுக்குப்பின்னல் வந்து நின்று அவளை, 'ருக்கு!' என்று கூப்பிட வாயெடுத்தான். ஆனல் சட்டென்று நிறுத்திக்கொண்டான். 'ருக்கு!' என்று அவள் பெயரைச் சொல்லக்கூடப் பிடிக்கவில்லையோ என்னவோ அவனுக்கு! ஒருதரம், 'ஹூஹூம்!' என்று கனைத்தான். ஆனல் ருக்குவின் சரீரம் அசையவில்லை. ரங்கநாதன் அங்கிருந்து திரும்பி மறுபடியும் தன் அறைக்கு வந்தான். படுக்கையில் படுக்கப் பிடிக்கவில்லை அவனுக்கு. படுக்கையைத் தாண்டிச் சென்று எலெக்டிரிக் விளக்கை ஏற்றிவிட்டு நாற்காலியில் உட்கார்ந்து மேஜைமேல் கிடந்த புஸ்தகத்தை எடுத்து மறுபடியும் கையில் வைத்துக்கொண்டான்.

அரைமணி நேரம் புஸ்தகத்தில் ஒரே ஏட்டைப் பார்த்துக்கொண் டிருந்தான். அவன் அந்த ஏட்டைப் புரட்டும்போது வந்து சேர்ந்தாள் ருக்கு. அடுத்த பக்கத்திலிருந்த முதல் எழுத்துக்கூட அவன் கண்ணில் விழவில்லை.

## 30

## அடித்த கை

உள்ளே வந்த ருக்கு சிறிது நேரம் வரையில் நின்ற இடத்தைவிட்டு நிலை பெயரவில்லை. ரங்கநாதன் தன் வருகையை அறிந்து திரும்பியாவது பார்க்கிறானா என்று அறிய விரும்புகிறவள்போல் இருந்தது அவள் நின்ற நிலை. ஆனால் ரங்கநாதனா அவ்வளவு எளிதில் அவள் பக்கம் திரும்பிப் பார்த்துவிடுவான்! அவள் உள்ளே நுழைந்தபோதே அவள் வரவை உணர்ந்துகொண்டான் அவன். கையிலிருந்த புஸ்தகத்தில் ஓர் ஏட்டைத் திருப்பி விட்டு ஏதோ வெகு தீவிரமாகப் படிப்பவன்போல் பாசாங்கு செய்தான். எனினும் அவன் மனத்துக்குள்ளே ஓர் எண்ணமேதான் இப்போது தலைதூக்கி நின்றது: 'அவள்தான் வந்திருக்கிறாளே. சட்பட்டென்று ஒரே வார்த்தையில் உன் அபிப்பிராயத்தைச் சொல்லிவிடேன் அவளிடம்' என்று துடித்தது அவன் மனம். 'அவள்தான் வந்து நிற்கிறாளே; என்ன எண்ணத்துடன் இங்கே வந்திருக்கிறாள் என்பதைத்தான் முதலில் அறிந்துகொள்ளுவோமே!' என்று மனத்தை அடக்கிக்கொண்டு மௌனமாகவே புஸ்தகத்தின்மீது கண்ணோட்டம் செலுத்தலானான்.

பின்னும் சிறிது நேரம் சென்றது. கீழே கூடத்துச் சுவரில் மாட்டியிருந்த கடிகாரம் அந்த நிசப்தமான வேளையில் 'டண், டண், டண்' என்று மூன்று தடவை பயங்கரமாக அடித்த ஓசை கேட்டது. ருக்குவும் பொறுமையை இழக்கலானாள். ரங்கநாதன் அவள் பக்கமே திரும்பிக்கூடப் பாராதது அவளுக்குச் சங்கடமாகவே இருந்தது. எனினும் மனசைத் தைரியப்படுத்திக்கொண்டு நின்ற இடத்திலிருந்து

நடந்து அவன் எதிரேயிருந்த மேஜையண்டை வந்து நின்ருள்.

ரங்கநாதன் அப்போதும் தலை நிமிர்ந்து பார்க்கவில்லை. ருக்கு, மேஜையண்டை நின்றபடியே சிறிது நேரம் பொறுத்துப் பார்த்தாள். ஆனால் பலன் இல்லை.

ரங்கநாதன் கையிலிருந்த புஸ்தகத்தில் அந்த ஒரே ஏட்டைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியுமா ருக்குவுக்கு? அவள் மனசில் என்ன தோன்றியதோ என்னவோ? சரேலென்று மேஜையை விட்டு அப்புறம் சென்று சுவரிலிருந்த 'ஸ்விட்சை' அமுக்கித் திடும் என எலெக்டிரிக் விளக்கை அணைத்துவிட்டாள்.

அறை முற்றும் இருள் சூழ்ந்தது. அந்த இருட்டில் ரங்கநாதன் உட்கார்ந்திருந்த நாற்காலி தரையில் கரகர வென்று இழுக்கப்பட்டது போன்ற சப்தம் கேட்டது. அவன் நாற்காலியை விட்டு எழுந்தான். "இது என்ன காரியம்? விளக்கை ஏன் அணைத்தாய்?" என்ருன் கடுமையான குரலில்.

"விளக்கு எதற்கு ? அநாவசியம் என்று தோன்றிற்று" என்று அறையின் வேருெரு பக்கத்திலிருந்து பதில் வந்தது.

"இந்தத் திமிர் பிடித்த பேச்செல்லாம் இங்கே வேண்டாம்!"

"இதில் திமிர் என்ன இருக்கிறது? உண்மையைத்தானே சொன்னேன்?"

"உண்மை? என்ன உண்மை?"

"நானும் வந்தது முதல் பார்க்கிறேன்; அந்த ஒரே பக்கத்தைத்தானே படித்துக்கொண் டிருக்கிறீர்கள்? இதற்குள் சுமார் ஐம்பது தடவையாவது படித்தாயிருக்கும். மனப்பாடம் ஆகிவிட்டிருக்குமே! விளக்கில்லா விட்டால்கூட பாடம் வருமே. அடுத்தபக்கத்தைப் புரட்டும்போதுதானே இனி விளக்கு வேண்டும்?"

"போதும். உன் அதிகப் பிரசங்கத்தைக் கேட்க இது நேரமல்ல. விளக்கைப் போடு."

"ஓ, பரீக்ஷைக்குப் படிக்கிறீர்களோ! தெரியாமல் விளக்கை அணைத்துவிட்டேன்."

அடுத்த விநாடியே எலெக்டிரிக் விளக்கு எரிந்தது. தூர நின்றிருந்த ருக்கு, இதழ்களில் ஒரு பரிகாசப் புன்னகை மலர்ந்திருக்க, கண்களில் ஒரு நம்பிக்கையின் பிரகாசம் ஜொலிக்க, அசைந்து நடந்து ரங்கநாதன் அருகில் வந்து நின்ருள்.

ரங்கநாதன் உதடுகளே அழுந்தக் கடித்தான். அவன் கண்களில் கோபம் தாண்டவமாடியது. கையிலிருந்த புஸ்த கத்தை மேஜைமீது விட்டெறிந்தான். ஏதோ சொல்லத் துடிப்பவன்போல அவன் நாக்கு வாய்க்கு வெளியே வந்து சட்டென்று மறைந்துகொண்டது. சொல்ல வந்த விஷயத்தை அவனுல் சொல்ல முடியவில்லே.

அவன் வீசியெறிந்த புஸ்தகத்தை ருக்கு மேஜைமேல் இருந்து ஒரே நொடியில் கையிலெடுத்துப் பிடித்துக்கொண் டாள். "ஏதோ, எந்தப் பக்கம் அது, சொல்லுங்கள். பாடம் வந்து விட்டதா, பார்க்கலாம். உம். பார்க்காமல் ஒப்பிக்க முடியுமா?" என்று கேட்டுக்கொண்டே புஸ்தகத்தைப் பிரித்து முகத்துக்கு எதிராக வைத்துக்கொண்டு மேஜையின் மேல் சாய்ந்த வண்ணம் நின்ருள்.

அவளது சாகஸத்தைக் கண்டு ஒரு கணம் பிரமித்தே போனுன் ரங்கநாதன். ஆனுல் மறுகணமே அவன் பிரமை நீங்கிவிட்டது. "ஆஹா! அன்றிரவு அப்படி ஒரு உதாசீனம்! இன்றிரவோ இப்படி ஒரு பரிகாசம்! இளக்காரம்! எல்லாம் இளக்காரம்! என்ன இவளது சாகஸம்!' என்று அவன் நினைத்தபோது அவன் கோபம் பதின்மடங்கு அதிக மாகப் பொங்கி எழுந்தது. ஆத்திரம் ஆத்திரமாக மேஜை யண்டை வந்து ருக்குவின் கையிலிருந்த புஸ்தகத்தை வெடுக் கென்று பிடுங்கினுன். அந்தப் புஸ்தகத்தினுலேயே பளீ ரென்று அவள் கன்னத்தில் ஓர் அறை அறைந்தான். பிறகு புஸ் கத்தை ஒரு மூலேயில் வீசி எறிந்துவிட்டுப் படபடப்புடன் நாற்காலியை இழுத்து வேருெரு ஜன்னலருகே போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். எதிரே ஜன்னலுக்கு அப்பால் வானத்தின் கருமையிலே நிலவின் வெள்ளிப் பூச்சுப் படர்ந்தி ருந்தது, அவன் உள்ளத்தின் இருளிலே ருக்குவின் பிரசன் னம் படர்ந்திருந்ததுபோல.

ருக்குவின் கன்னத்தில் ரங்கநாதன் புஸ்தகத்தால் அறைந்தது அவளுக்கு வருத்தம் உண்டாக்கவில்லை. அதனுல் அவள் அழக்கூட இல்லை. அந்த அடியை ஏற்றுக் கொண்டபின் அவள் முகம் இன்னமும் அழகாக விளங்கியது. அவள் மனசிலிருந்த ஒரு பெருஞ் சுமையை இறக்கிவிட்டது போல உதவியது அந்த அறை. 'அப்பாடா! அடிப்பதற்குத் தமக்குள்ள உரிமையைக் காண்பித்துவிட்டார்! இதே போல...' என்று எண்ணி அவள் மனம் பேரானந்தம் அடைந் தது. ஆரம்பத்திலேயே அவள் மனசை ஒருவிதமாகத் திடப் படுத்திக்கொண்டுதான் அவனிடம் வந்தாள். சிறிது நேரத் துக்கு முன் அவன் மொட்டை மாடிக்குச் சென்று பார்த்த போது, தூங்கிக்கொண் டிருந்தவள், அவன் உள்ளே வந்து எலெக்டிரிக் விளக்கை ஏற்றினவுடன் அந்த வெளிச்சம் மொட்டை மாடியில் விழுந்ததால் விழித்துக்கொண்டாள். விழித்துக்கொண்டவுடனே முதல் முதலாக அவள் பார்வை ஜன்னல் பக்கமேதான் சென்றது. விளக்கு எரிந்துகொண் டிருந்ததால் தன் கணவன் விழித்துக்கொண் டிருக்கிருன் என்பதை உணர்ந்துகொண்டாள். இந்தத் தடவை எப்படி யாவது தைரியத்துடன் நடந்துகொண்டு அவனிடம் பேசி அவன் மனசைக் கவர்ந்து அவனிடம் தனக்குரிய ஸ்தானத் தைப் பெறவேண்டும் என்று நிச்சயித்துக்கொண்டாள்.

இப்போதோ அவள் கிண்டலாகப் பேசிய பேச்சுக்களுக் குப் பதில் கிடைத்துவிட்டது. அவன் அவளிடம் தனக்குள்ள உரிமையில் ஓர் உரிமையை அவள் அறியும்படி செய்துவிட் டான். 'அடித்த கை அணைக்கவும் வராதா என்ன?' என்று மனசுக்குள்ளேயே கேட்டுக்கொண்டாள். இந்தக் கேள்வி யும் அவள் ஆனந்தத்தை அதிகரிக்கச் செய்தது.

ரங்கநாதன் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு ஜன்னல் பக்கமாகப் போய் உட்கார்ந்ததும், ருக்கு அவன் வீசி யெறிந்த புஸ்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டு அவனுக்குப் பின்புறமாகப் போய் நின்ருள்.

மறுபடியும் அவள், தன் அருகில் வந்தது ரங்கநாதனுக்குப் பிடிக்கவில்லை. சட்டென்று நாற்காலியை விட்டு எழுந்தான்.

'இந்தப் புஸ்தகம் உங்களுக்கு உபயோகப்படாதா? அப்படி வீசி யெறிந்தீர்களே!'' என்று மிகவும் பணிவான, துளிகூட ஆயாசமென்பதே தோன்ருத, இனிய குரலில் கேட்டாள் ருக்கு.

அறை விழுந்தவுடனே ருக்கு பயந்து அறையை விட்டுப் போய்விடுவாள் என்று ரங்கநாதன் எண்ணினுனே என்னவோ! அவள் மீண்டும் தன்னிடம் நெருங்கிக் கேட்ட கேள்வி அவனுக்கே தடுமாற்றத்தை உண்டாக்கியது. சற்று முன் அவன் உள்ளத்தில் கொதித்துக்கொண் டிருந்த கோபமும் இப்போது தணிந்திருந்தது. ''உபயோகப்படும், உபயோகப்படாது! அதைப் பற்றியெல்லாம் நீ கேட்கவேண்டிய அவசியமில்லை!'' என்று சற்று அலக்ஷ்யமாகப் பேசினுன் அவன்.

''இல்லை.......அவசியம் இருப்பதால்தான்.......கேட்கிறேன்'' என்று நிதானமாக ருக்கு பதில் கூறியதைக் கேட்ட ரங்கநாதன் திடுக்கிட்டுப் போனுன். அவன் அலக்ஷ்யமாக உதறி யெறிந்து பேசியபோதிலும் ருக்கு விட்டுவிடவில்லை. அவன் திகைப்பு நீங்குவதற்கு முன்பே மறுபடியும் பேச ஆரம்பித்துவிட்டாள்: ''இந்தப் புஸ்தகம் உங்களுக்கு உபயோகமில்லா விட்டால் எனக்குக் கொடுங்கள்'' என்ருள் அவள்.

இதைக் கேட்டு ரங்கநாதனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. 'கலீர்' என்று சிரித்துவிட்டான். ''இந்தப் புஸ்தகம் உனக்கு வேண்டுமா? இது என்ன புஸ்தகம் தெரியுமா?'' என்று தன்னையும் அறியாமல் பேசிவிட்டான். எவ்வளவுக் கெவ்வளவு ருக்குவுடன் பேசக்கூடாது என்று அவன் நினைத்திருந்தானே அந்த நினைப்புக்கே ஒரு தோல்வியல்லவா அது? அது போதுமே ருக்குவுக்கு! அத்தையின் கட்டளைப்படி ஆச்சரியப்பட்டுக்கொண்டே மாடிக்கு வந்தவள் அங்கே தன் புருஷனுடன் பேச்சுக் கொடுக்கப் பகீரதப் பிரயத்தனம் செய்தாள். ஆனல் பலிக்கவில்லை. இந்தப் புஸ்தகம் குறுக்கிட்டு அவளால் சுயமாகச் செய்ய முடியாத காரியத்தைச் செய்துவிட்டது. எனவே அவன் கேட்ட கேள்விகளுக்குப்

பதிலாக, "அது என்ன புஸ்தகமானுல் என்ன? அது எனக்கு வேண்டும். அவ்வளவுதானே!" என்ருள்.

'இது ஏதடா அசடு?' என்று தோன்றிற்று ரங்கநாதனுக்கு. அந்தப் புஸ்தகம் ஒரு பொருளாதார சாஸ்திர நூல். அதுவும் இங்கிலீஷில் எழுதப்பட்டது. அதில் ஒரு அக்ஷரம் கூடப் படிக்க ருக்குவுக்குத் தெரியாது. அப்படியிருக்க அந்தப் புஸ்தகம் எதற்கு அவளுக்கு என்று அவனே ஆச்சரியப்பட்டான்.

அவன் ஒன்றும் பேசாமல் சும்மா இருந்ததைக் கண்டு ருக்குவே பேசினுள்: "உங்களுக்கு என்மீதுள்ள உரிமையை இந்தப் புஸ்தகத்தின் மூலமாகக் கொண்டாடினீர்கள்; அதுவும் முதல் முதலாக! உங்களுக்கும் எனக்கும் உள்ள உறவை இந்தப் புஸ்தகமல்லவா சமயத்தில் ஞாபக மூட்டியது? இதைப் பூஜையில் வைக்கவேண்டும்!" என்று அன்பு நெகிழ்ந்த குரலில் சொல்லி வரும்போது சட்டென்று இடைமறித்து, "போதும்! இந்தக் கிண்டலை நிறுத்து. உரிமையாம் உரிமை! உரிமையைப் பற்றிப் பேச உனக்கு வாய் வேறு! உரிமையைக் கொண்டாட, 'என் இஷ்டம்' என்று ஒன்று இருக்கிறதே, அது இடம் கொடுக்க வேண்டாமா?" என்று அழுத்தமான குரலில் கூறிவிட்டு ரங்கநாதன் எதிரிலிருந்த நாற்காலியை ஒதுக்கிவிட்டு நகர்ந்து அறை வாசற்படியைத் தாண்டி வெளியே சென்ருன்.

பழைய சம்பவத்தை நினைப்பூட்டிவிட்டு அவன் சடக்கென்று வெளியேறியதால் சில விநாடி காலம் ருக்கு சித்தப் பிரமை கொண்டவள்போல நின்று போனுள். அன்றிரவு அவன் கெஞ்சியும் கொஞ்சியும் பார்த்தபோது ஒரே பிடிவாதமாக அவன் உரிமையை அவன் அநுபவிப்பதில் தனக்கு, 'இஷ்டமில்லை!' என்று தாக்ஷிண்யமின்றிக் கூறிச் சென்ற அதே ருக்கு, இன்று அவன் உரிமையைப் பற்றி அவனுக்கு ஞாபகமூட்டுவது போலப் பேசுவதெல்லாம் வெறும் பாசாங்கு என்று அவன் கருதுவானுகில் அதில் தவறு என்ன இருக்கிறது?

ருக்கு மாத்திரம் தவறு இழைத்தாளா என்ன? அன்றிரவு அவள் நடந்துகொண்ட விதமெல்லாம் அவன் நன்மைக்

காகத்தானே! தன் மாங்கல்யத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும்! அவன் உயிரைக் காக்கவேண்டும். சந்நியாசி சொன்னபடி ஒரு மண்டல காலம் ஜாக்கிரதையாக இருந்து நாகப் பிரதக்ஷிணம் செய்து தங்கள் தோஷத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தினுல்தானே அவள் அவனுக்குப் 'பிடி' கொடாமல் இருந்தாள்! 'யாரோ ஒரு சந்நியாசி என்ன என்னவோ பிதற்றிவிட்டான் என்று அதை யெல்லாம் மதித்து ஒரு பெண் இப்படியும் நடந்துகொள்ளு வாளா!' என்று கேட்கலாம். இந்தச் சந்தர்ப்பத்தில் அவள் இப்படித்தான் நடந்துகொள்வாள், அவள் ஓர் உண்மையான ஸ்திரீயானுல்! அதுவும் ஹிந்து ஸ்திரீ. தர்மரீதியாக மாங்கல் யத்துக்கு இணையான பொக்கிஷம் ஸ்திரீகளுக்கு வேறு எது வுமே இல்லை. சந்நியாசி கூறியது வெறும் வார்த்தையாகவே இருந்தாலுங்கூட அந்த வெறும் வார்த்தைக்கும் அந்தச் சந்தர்ப்பத்தில் மதிப்பு உண்டாகத்தான் உண்டாகும். ஏனெனில் தன் அஜாக்கிரதையின் மூலம் விளைவு விபரீதமாக இருந் தால்! என்று ஒரு ஸ்திரீ நினைப்பாளேயாகில் அந்த நினைப்பு ஒன்றே போதும், அவளை எந்த விதமான தியாகத்துக்கும் சித்தமாக்க. 'வாழ்வு பெரிதல்ல; மாங்கல்யமே பிரதானம்!' என்றுதான் அவள் முடிவு கட்டுவாள். இந்த நிலையில் ருக்கு வும் இதே முடிவுக்கு வந்தது சகஜந்தானே?

ரங்கநாதன் அறையைவிட்டு வெளியே சென்ற பிறகு ருக்குவுக்கு ஒரே வழிதான் தோன்றியது. சிறிது நேரம் நின்றுவிட்டு மெல்ல வெளியே வந்தாள். ரங்கநாதன் மொட்டை மாடியில் வாசல் பக்கமாகப் பார்த்துக்கொண்டு கைபிடிச் சுவரண்டை நின்றிருந்ததைக் கண்டாள். அவன் அருகில் சென்றபோது அவளுக்குக் கொஞ்சம் பயமாகத் தான் இருந்தது. இருப்பினும் மெல்லத் தயங்கித் தயங்கி நடந்து சென்று அவன் கால்களில் விழுந்து, "என்னை மன் னியுங்கள்!" என்று சொன்னபோது அவளுக்கு அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது.

"ஏன்? ஏதற்காக?"

"ஏதாவது வாய் பிசகித் தவருகப் பேசியிருந்தால்."

"வாய் பிசகி?...ஹூம்! வாய் பிசகியல்ல. வாய்க் கொழுப்பு!"

"இல்லவே இல்லை. ஏதோ விளையாட்டாகப் பேசி விட்டேன்!"

"விளையாட்டு! நல்ல விளையாட்டு! பாம்பு தேரையுடன் விளையாடுகிறதே அந்த மாதிரி விளையாட்டு இது!" என்று சொல்லித் தன் காலை விடுவித்துக்கொண்டு சற்று எட்டப் போய் நின்றுகொண்டான் ரங்கநாதன்.

அவன் வார்த்தைகளைக் கேட்டு ருக்கு குற்றயிராய்ப் போனாள். 'பாம்பு தேரையுடன் விளையாடுகிறதே அந்த விளையாட்டு!' என்று அவள் வாய் அவளையும் அறியாமல் மெல்லப் பிதற்றிக்கொண்டது. ஆனால் அவள், பாம்பா? தேரையா? 'யார் பாம்பு? யார் பாம்பு? நானா?' என்று அரற்றிய வார்த்தைகள் மட்டும் ரங்கநாதன் செவிகளில் விழுந்தன.

"ஆம். சந்தேகமென்ன? நீதான் பாம்பு. 'கரும்பு போலக் காணப்படும் விஷம்' என்று உன்னைப்பற்றி நீ அன்று சொன்ன வார்த்தைகள் இந்தக் காதுகளில் இன்னும் ஒலித்துக்கொண் டிருக்கின்றன. ஆஹா! எத்தனை உண்மை! நாகசர்ப்பம் நடனமாடுகிறது. பார்ப்பதற்கு மகா வசீகரமாக இருக்கிறது. ஆனால் அதைக் கட்டி அணைத்து முத்தமிடுவதா?"

"ஆனால் நானல்லவே அந்த நாக சர்ப்பம்! அதுவன்றோ இத்தனைக்கும்......"—சட்டென்று வார்த்தையை நிறுத்திக் கொண்டாள் ருக்கு."

அவள் சொன்ன வார்த்தைகள் ரங்கநாதன் காதில் சரிவரக் கேட்கவில்லை. ஆனால் அவள் ஏதோ சொல்லவந்து சொல்லாமல் நிறுத்திக்கொண்டதை மட்டும் உணர்ந்தான் அவன். எனவே, "என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டான் கொஞ்சம் அதிகாரத் தோரணையில்.

"ஒன்றும் இல்லை."

"ஒன்றுமே இல்லையா?"

"இல்லை."

“சற்று முன் ஏதோ சொல்ல வந்து திடீரென்று மறைத்து விட்டாயே?”

“மன்னிக்கவேண்டும்!”

“ஏன்?”

“அதைச் சொல்வதற்கு இல்லை.”

“அப்பேர்ப்பட்ட ரகசியமா?”

“ஆம்!”

“என்னிடம் கூடச் சொல்லக் கூடாத ரகசியம்?”

“ஏன்? யாரிடமுமே சொல்லக் கூடாத ரகசியம் அது!”

“அப்படியா?”

இடியிடிப்பதுபோலச் சிரித்தான் ரங்கநாதன். ருக்குவின் தேகம் நடுங்கியது.

“அப்படியானால் உன் ரகசியத்தை உன்னிடமே வைத்துக்கொள். உன் ரகசியம் உன்னிடம் மட்டுமே இருக்க வேண்டும் அல்லவா? அப்படியே வைத்துக்கொள் அதை. நான் ஒரு ரகசியம் சொல்லப் போகிறேன். அது இன்றைக்கு உன் வரையில் ரகசியமாயிருக்கும். நாளைக்கு ஊரறிந்த ரகசியமாக ஆகிவிடும். சொல்லட்டுமா?”

இந்தப் பேச்சைக் கேட்டு ருக்கு கலக்க மடைந்தாள். ‘அவன் என்ன சொல்லப் போகிறானோ? தன்மீது எந்த விதமான பழியைச் சாட்டப் போகிறானோ?’ என்று கண நேரம் சிந்தனை செய்த அவள் மனம் அந்தக் கண நேரத்தில் நரக வேதனையை அநுபவித்துவிட்டது. ஏன்? பெண்மைக்கே இயற்கைதானே?

ருக்கு பதில் சொல்லாமல் மௌனமாயிருப்பதைக் கண்டு ரங்கநாதனே பேசினான். “நாளைக்கு நீ ஊருக்குப் போகிறாய்!” என்று.

ருக்குவின் நெஞ்சிலிருந்த வேதனை முற்றும் ஒரே நொடியில் அகன்றது. அவள் இருதயத்திலிருந்து ஒரு பெருமூச்சு வந்தது. அவன் என்ன சொல்லப் போகிறானோ என்று அஞ்சிய உள்ளத்துக்கு, அவன் சொன்ன வார்த்தைகள் சர்வ சாதாரணமாகப் பட்டன. “ஏதோ ரகசியம் என்றீர்களே!” என்று வெடுக்கென்று கேட்டுவிட்டாள் சர்வ சகஜமாக.

"ஆம். ரகசியந்தான். நாளைக்கு நீ ஊருக்குப் போகிறாய். இது உனக்கு இது வரையில் தெரியாதல்லவா?"

"தெரியாது. தெரிய வேண்டியதும் இல்லை."

"என்ன? இன்னும் மிடுக்காகவே பேசுகிறாய்!"

"மிடுக்கென்ன? எடுத்ததற்கெல்லாம் இப்படித் தப்புக் கண்டுபிடித்தால் எப்படி? 'தெரியவேண்டிய அவசியம் இல்லை' என்று சாதாரணமாகத்தான் சொன்னேன்?"

"சபாஷ்! அவசியம் இல்லையா? அவசியம் நேரிடும் போது தானாகத் தெரியுமல்லவா?"

"அப்போது தெரியட்டும். அதற்கென்ன இப்போது? நான் நாளைக்கு ஊருக்குப் போகவில்லை. அவ்வளவுதானே!" என்று படபடப்புடன் பேசிவிட்டுக் கண்களிலிருந்து கரகர வென்று வழிந்த கண்ணீரை முந்தானையால் துடைத்துக் கொண்டு, அதற்கப்புறம் ஒரு விநாடி கூட அங்கே தங்க முடியாமல் சரேலென்று மொட்டை மாடியை விட்டுப் படுக்கை அறைக்குள் போகக் கிளம்பினாள். அப்போது கீழே கூடத்திலிருந்த கடிகாரம், 'டண், டண், டண், டண்' என்று நாலு முறை அடித்தது. இந்தச் சப்தத்தைக் கேட்டுச் சில விநாடி காலம் ஏதோ எண்ணுவதுபோல நின்றுவிட்டுப் படுக்கை அறைக்குள் போகாமல் சரசரவென்று மாடிப்படி இறங்கிக் கீழே சென்றாள்.

அவள் கடைசியாகக் கூறிச் சென்ற வார்த்தைகளைக் கேட்டு ரங்கநாதன் அப்படியே அயர்ந்து போனான். 'நான் நாளைக்கு ஊருக்குப் போகவில்லை. அவ்வளவுதானே!' என்று மிகவும் கண்டிப்புடன் அவள் கூறிய வார்த்தைகள் அவன் இருதயத்திலே சம்மட்டியால் அடிப்பதுபோல, அவள் சென்று வெகுநேரம் ஆனபின்னரும் சப்தித்துக்கொண்டிருந்தன. மெல்ல மெல்லத் தன்னுணர்வை அடைந்த போதுதான் அவன் இன்னமும் அந்த மொட்டை மாடியில் நின்றுகொண்டிருப்பதை அறிந்தான். சிலு சிலுவென்று காலைக் காற்று அவன்மேல் பட்டு அவன் தேகம் சிலிர்த்தது. மொட்டை மாடியை விட்டுப் படுக்கை அறைக்குள் போய் நாற்காலியில் உட்கார்ந்தான்.

தலை ஒரே கற்பாறைபோலக் கனத்தது. தலையைக் கெட்டியாகப் பிடித்து அமுக்கிய வண்ணம் நாற்காலியை இழுத்து மேஜைக்கு எதிராகப் போட்டுக்கொண்டு உட் கார்ந்து, மேஜைமேல் கவிந்தாற்போல் சாய்ந்துவிட்டான்.

மறுபடியும் அவன் கண்ணைத் திறந்தபோது எதிரே மேஜைமேல் ஒரு செம்பில் ஜலமும் ஒரு பல்பொடி டப்பியும் காணப்பட்டன. அவற்றை மேஜைமேல் வைத்த ஓசையைக் கேட்டுத்தான் அவன் மயக்கம் கலைந்ததோ என்னவோ!

அவன் தலை தூக்கிப் பார்த்தபோது ருக்கு அறை வாசற் படியைத் தாண்டிச் சென்றுகொண் டிருந்தாள்.

## 31

## உணர்ச்சியின் வேகம்

ருக்கு ஊருக்குப் போகவில்லை. 'ஊருக்குப் போ!' என்று ரங்கநாதன் இன்னொரு தடவை அவளிடம் சொல்லவில்லை. 'எது வந்தாலும் வரட்டும், ஊருக்கு மாத்திரம் போகக் கூடாது!' என்று தீர்மானமாக இருந்தாள் ருக்கு. அவள் மன உறுதி அவள் முகத்தில் பிரதிபலிப்பதைக் கண்டு கொண்டான் ரங்கநாதன். அவளை, 'ஊருக்குப் போ!' என்று நிர்ப்பந்தப்படுத்த அவனால் முடியவில்லை.

ரங்கநாதன் மைசூருக்குத் திரும்பி வந்து நாலைந்து நாட்கள் ஆயின. மைசூருக்கு வந்த நாளன்று இரவு அவளுடன் சம்பாஷித்த பிறகு, அவன் வெகு ஜாக்கிரதையாக இருந்தான். ருக்கு நின்றிருக்கும் பக்கமாகக்கூட அவன் போவதில்லை. தன்னிடங்கூடச் சொல்லக்கூடாத அத்தனை ரகசியம் ருக்குவுக்கு என்ன இருக்கப்போகிறது என்று அவன் எண்ணி எண்ணிப் பார்த்தான். அவனது எண்ணங்கள் அவனுக்குக் கொஞ்ச நஞ்சம் இருந்த நிம்மதியையும் போக்கிவிட்டன.

சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் ருக்கு ரங்கநாதனிடம் சென்று பேச முயன்றாள். ஆனால் அவன் அந்தச் சந்தர்ப்பங்களையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு ஒதுங்கிப் போவதை உணர்ந்தபோது அவளுக்குப் பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டது. எனினும் அவள் மனம் ஆயாசப்படவில்லை.

நாச்சியாரம்மாள் இப்போது பெரு மகிழ்ச்சியுடன் காணப்பட்டாள். நிமிஷத்துக்கு ஒருதரம் ருக்குவைக் கூப்பிடுவாள். ஏதாவது காரியம் செய்யச் சொல்லுவாள். நினைத்தபோதெல்லாம் புதுப்புடைவை கட்டிக்கொள்ளச் சொல்லுவாள். தானேகூடச் சிலசமயம் ருக்குவுக்கு அலங்

காரம் செய்வாள், ரங்கநாதன் மாடியில் இருக்கும் சமயம் பார்த்து ஏதாவது ஒரு காரணத்தைக்கொண்டு ருக்குவை மாடிப்பக்கம் போய் வரும்படி செய்வாள். அலங்கார பூஷிதை யாக விளங்கும் ருக்குவைப் பார்த்து, 'ருக்கு, இந்தக் கிச்சி லிக்காயைக் கொண்டுபோய் வெயிலில் வச்சுட்டு வா', 'என் ஈரப்புடைவையை மொட்டை மாடியிலே கட்டிவிட்டு வா' என்பதுபோல ஏதாவது வேலை இட்டுக்கொண்டே இருப்பாள்.

ருக்கு ஒரு நாளைக்கு நூறு தடவை மாடிப்படி ஏறி இறங்குவாள். அவள் கால்கள்தாம் வலிக்காவோ? ஆனல் ரங்கநாதன் இருதயத்தில் விவரிக்க முடியாத வலி ஏற்பட் டது. தளதள வென்றிருக்கும் ருக்குவின் மேனி அவன் கண் களில் படும்போதெல்லாம் அவன் மனக் கட்டுப்பாட்டையும் மீறி இயற்கை உணர்ச்சி பொங்கி எழும். அந்த உணர்ச்சியை அடக்கிக்கொள்வதற்கு நிரம்பவும் சங்கடப்படுவான், பாவம்! ருக்கு அடிக்கடி தன் எதிரில் தோன்றிச் சித்திரவதை செய்வ தைப் பார்க்கும்போது, அவளை எப்படியாவது ஊருக்கு அனுப்பிவிட்டால் கூடத் தேவலை என்று தோன்றியது ரங்க நாதனுக்கு. ஆனல் எந்த வியாஜ்யத்தைக் குறிப்பிட்டு அவ ளைப் போகச் செய்வது என்று சிந்திக்கும்போதுதான் சங் கடம் உண்டாயிற்று. அத்தையோ அப்போதுதான் புது நாட்டுப் பெண்ணைப் பார்த்துக் காணுது கண்டவள்போல ஆனந்த சாகரத்தில் மூழ்கிப் போயிருக்கிருள். ருக்கு தன்னை விதவிதமாகச் சிங்காரித்துக் கொள்ளுவ தெல்லாங்கூட அத்தையின் தூண்டுதலின்பேரில்தான் என்பதை நன்ருக அறிந்தான் ரங்கநாதன். அந்த நிலையில் அவளை ஊருக்கு அனுப்பினல் அத்தை காரணம் கேட்கமாட்டாளா? அப் போதுதான் ருக்குவின் பெற்ருேர் அவளைக் கொண்டுவந்து விட்டுவிட்டுத் திரும்பிப் போயிருக்கிருர்கள். உடனே அவ ளைத் திரும்ப ஊருக்கு அனுப்புவதென்ருல் அத்தைக்குச் சந்தேகம் விழும். அவளிடம் சரியான காரணத்தைச் சொல் லவும் முடியாது, எப்படிச் சொல்லமுடியும்?

இப்போது ரங்கநாதனுக்கு ஒரே ஒரு யோசனைதான் தோன்றியது. அதன்படி நடக்கவும் துணிந்தான். எத்தனை

யோ தடவை ருக்கு மாடிக்கு வந்தும் அவளைக் கண்ணெடுத்தும் பாராதவன்போல் இருந்த ரங்கநாதன், ஒருநாள் மாலை ஆபீஸிலிருந்து வந்த சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் மாடிக்கு வந்ததைக் கண்டு, ''ருக்கு!'' என்று கூப்பிட்டான்.

அவன் குரல் சற்றுக் கடுமையாகவே இருந்தது. இருப்பினும் அந்தக் குரல் ருக்குவை அப்படியே ஆகர்ஷித்துவிட்டது. மைசூரிலிருந்து திரும்பிய பின் முதல் முதலாக அவளைப் பெயரிட்டு அழைக்கிறன் ரங்கநாதன்! அந்த அழைப்பின் தொனி எப்படியிருந்தால்தான் என்ன? அவள் உள்ளக் கிளர்ச்சியைப் பற்றிச் சொல்லவேண்டுமா? வெகு ஆவலுடன் ருக்கு ரங்கநாதன்முன்வந்து நின்று கொண்டாள். அவள் இதழ்களில் அவளையும் மீறி ஒரு புன்னகை மலர்ந்தது.

''இதோ பார். நான் இந்த வீட்டில் வசிப்பது உனக்குப் பிடிக்கவில்லையா?'' என்று கேட்டான் ரங்கநாதன்.

ருக்கு திடுக்கிட்டுப் போனுள். இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்லுவதென்றே தெரியவில்லை அவளுக்கு. அவள் பதில் சொல்லுவதற்கு முன் ரங்கநாதனே மறுபடியும் பேசினுன். ''இந்த மேஜையைப் பார்; இதன்மேல் இருக்கும் கட்டு முழுவதையும் இன்று ராத்திரிக்குள் தீர்த்தாகவேண்டும். இல்லாவிட்டால் நாளைக்கு ஆபீஸுக்கே போகவேண்டியதில்லை.''

ருக்குவின் இருதயத்திலிருந்து ஒரு நீண்ட பெருமூச்சு வந்தது. ''ஹும்! இரண்டு நாளுக்கு முன் என்னை ஊருக்குப் போகச் சொன்னீர்கள். இப்போது நீங்கள் சொல்லியதைப் பார்த்தால் எங்கே நீங்களே ஊருக்குக் கிளம்பப் 'பிளான்' போட்டுவிட்டீர்களோ என்று பார்த்தேன்'' என்று வெடுக்கென்று பதில் சொல்லிவிட்டுக் கிளம்பி அறையைவிட்டு வெளியே போனுள் ருக்கு.

அவளுடைய துடுக்கான பதில் ரங்கநாதனையே சிறிது நேரம் திக்குமுக்காடச் செய்துவிட்டது. அன்றிரவு சாப்பிட்டு முடிந்தபின் ருக்கு மறுபடியும் அவன் அறைக்கு வந்தபோது அந்த அறையில் ஒரு மாறுதலைக் கண்டாள். அங்கிருந்த மேஜை, நாற்காலி, மேஜைமேல் இருந்த கட்டுகள்

ஒன்றையும் அங்கே காணவில்லை. ரங்கநாதன் படுக்கை ஒரு புறமும் அவள் படுக்கை வேருெரு புறமும் கிடந்தன. அறையில் மட்டும் எலெக்டிரிக் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. விளக்கு எரிவதிலிருந்து மேஜை, நாற்காலி முதலிய சாமான்கள் அப்போதுதான் அந்த அறையிலிருந்து வெளியேற்றப்பட்டன என்று தெரிந்துகொண்டாள் ருக்கு. சந்தடி செய்யாமல், கால்மெட்டிகளின் ஓசைகூடக் கேட்காமல் மெதுவாக அடி வைத்து நடந்து அடுத்த அறையின் பக்கம் போனுள்.

அந்த அறையிலும் விளக்கு வெளிச்சம் தெரிந்தது. ரங்கநாதன் மேஜை, நாற்காலி, ஆபீஸ் கட்டுகள் முதலியவற்றை அறையில் ஒழுங்காக அமைத்துக்கொண்டிருந்தான். ருக்கு வந்ததை அவன் பார்க்கவில்லை: ருக்கு அடுத்த விநாடியே அங்கிருந்து திரும்பி முன் அறைக்கு வந்தாள். வேண்டுமென்றே ரங்கநாதன் படுக்கையை எடுத்து அறை மத்தியில் விரித்துவிட்டு, அந்தப் படுக்கை இருந்த இடத்தில் வேருெரு மூலையில் இருந்த தன் படுக்கையை எடுத்துச் சப்தம் செய்யாமல் வைத்துவிட்டு, எலெக்டிரிக் விளக்கை அணைத்துவிட்டுப் படுத்துக்கொண்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ரங்கநாதன் அந்த அறைக்கு வந்தான். விளக்கு அணைந்திருந்ததைக் கண்டதும் அவனுக்கு ருக்கு மறுபடியும் வந்துவிட்டாள் என்பது தெரிந்துவிட்டது. அவன் இருதயம் மட்டும் திக்திக் என்று அடித்துக் கொள்ளாமல் இல்லை. எனினும் விளக்கைப் போட்டான். ருக்கு தூங்குகிறவள் போலக் கண்களை அழுந்த மூடிக்கொண்டு படுத்திருந்தாள். அவள் படுத்திருக்கும் பக்கம் திரும்பிப் பார்க்கக்கூட மனமில்லாதவன்போல, ரங்கநாதன் தன் படுக்கை இருந்த இடத்துக்குச் சென்றுன். அங்கே அவன் படுக்கையைக் காணவில்லை. அவள் படுக்கைதான் இருந்தது. அவன் படுக்கையை விரித்துப் போட்டுக்கொண்டு அதில் ருக்கு நிம்மதியாகத் தூங்குவதுபோல் இருப்பதை உணர்ந்தான். ஆயினும் அவளுடன் எந்தக் காரணத்தை முன்னிட்டும் அந்த நேரத்தில் பேச்சுக் கொடுக்கக் கூடாது

என்று நினைத்து, அந்தப் படுக்கையைத் தூக்கிக்கொண்டு அடுத்த அறைக்குப்போய் அதை ஒரு மூலையில் அலக்ஷ்ய மாக எறிந்துவிட்டு, நாற்காலியில் உட்கார்ந்து ஆபீஸ் கட்டு களைப் புரட்டலானான்.

ரங்கநாதன் படுக்கையைத் தூக்கிக்கொண்டு போன போது எலெக்டிரிக் விளக்கை அணைக்க மறந்துவிட்டானோ என்னவோ? தூங்குவதுபோல் பாசாங்குசெய்த ருக்குவுக்கு வெளிச்சம் கண்ணைக் குத்தியது. படுக்கையைவிட்டு எழுந்து விளக்கை அணைத்துவிட்டு மறுபடியும் படுத்தாள். ஆனால் தூங்கினாளா என்ன?

அடுத்த அறையில் ராத்திரி நெடுநேரம் வரையில் விளக்கு எரிந்துகொண் டிருந்தது. கீழே கூடத்துக் கடி காரத்தில் மணி இரண்டு அடித்த பிறகுங்கூட விளக்கு அணையவில்லை. ருக்கு படுக்கையில் படுத்தபடியே சிந்தனை வெள்ளத்தில் மிதந்தாள். மணி சுமார் இரண்டரை இருக்கலாம். பக்கத்து அறையின் விளக்கு அவிந்தது. ருக்கு வின் சிந்தனைக்கும் தடை ஏற்பட்டது.

ரங்கநாதன், தான் ஆபீஸ் கட்டுகளைப் பார்த்துக்கொண் டிருந்த அறையிலேயே ருக்குவின் படுக்கையை விரித்துக் கொண்டு விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தான். தலையணை மேல் அவன் முகம் பட்டவுடனே புஷ்பங்களின் வாசனை அவன் மூக்கில் ஏறியது. அவன் தேகம் பூராவும் மயிர்க்கூச் சல் உண்டாயிற்று. அது ருக்குவின் தலையணை. அவள் கூந்த லில் சூடியிருந்த மலர்களின் மணம் அந்தத் தலையணையில் படிந்திருந்தது. அந்தச் சுகந்தம் ரங்கநாதன் மனத்தில் ஒரு துடிப்பை உண்டாக்கியது. ருக்குவைப்பற்றிய நினைவு நெஞ் சில் எழாமல் இருக்கவேண்டுமென்று அவன் செய்யும் எந் தக் காரியத்துக்கும் உடனடியாகவே தோல்வியா? வீட்டில் இருக்கும்போது அடிக்கடி அவளைக் காண நேரிடுவதால் ஏற்படும் அவஸ்தையையும் அதனால் சரீரத்துக்கும் மனத்துக் கும் உண்டாகும் துன்பத்தையும் போக்கிக்கொள்ள வேண்டு மென்றுதான் ஆபீஸ் கட்டுகளை அவன் வீட்டுக்குக் கொண்டு வந்தான்.

சில நாட்களாக இரவில் தூக்கமே இல்லாமல் அவன் கஷ்டப்பட்டான். உடம்பு அலுத்துத் தூக்கம் வரும் வரையில் ஆபீஸ் கட்டுகளை வைத்துக்கொண்டு வேலை செய்வது என்று எண்ணினன். ஆனல் கட்டுகளை மேஜைமேல் வைத்துக்கொண்டு நடு ராத்திரிக்குமேல் கண்ணை விழித்துக் கொண்டிருந்ததுதான் மிச்சமே யொழிய வேலை ஒன்றும் சாயவில்லை. எழுதவேண்டியது இன்னும் ஏராளமாகப் பாக்கி இருந்தது. கடைசியில், 'தூங்கியாவது தொலைக்கலாம்!' என்றுதான் படுக்கையில் படுத்தான். தலையணையிலிருந்து எழுந்த நறுமணம் அவன் மனத்திலே ஒரு லாகிரியை உண்டாக்கி அவனது இயற்கை உணர்ச்சியைப் பின்னும் தூண்டி விட்டது: படுக்கையில் மலைப்பாம்பு போலப் புரண்டான் ரங்கநாதன். அவனுடைய சுய நினைவும் தன்னடக்கமும் மனக் கட்டுப்பாடும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து கொண்டன. ஒரு வெறியன் போலப் படுக்கையை விட்டு எழுந்தான். எதிரே நிலவரம் தெரியாத இருட்டு, கப்பிக் கொண்டிருந்தது. அந்த இருட்டோடு இருட்டாக நடந்து, ருக்கு இருந்த அறைக்குப் போனன்.

அறை வாசற்படி தாண்டி உள்ளே அவன் நுழையும் போதே அவன் வரவை உணர்ந்துகொண்டாள் ருக்கு. அவள் இருதயம் அதிவேகமாக அடித்துக்கொண்டது. ஆனல் அவள் தன் நிலையை மறக்கவில்லை. அவள் ஸ்திரீ! அடக்கத்தின் உறைவிடம் அவள்! உணர்ச்சிகளின் சிறை அவள் இருதயம்! கட்டுப்பாடுகளின் சிலாபீடம் அவள் மனம்! அவள் உணர்விழக்கவில்லை. அவன் வந்த நிலையிலிருந்தே அவன் வெறிபிடித்த உள்ளத்தை அவள் நன்கு உணர்ந்து கொண்டாள். இனிமையாகப் பேசிக்கொண்டே எதிரே சென்று நின்றபோதெல்லாம் கண்ணெடுத்துக்கூடப் பாராதவன் கருக்கிருட்டில் கள்ளனைப்போல உள்ளே வந்தது அவளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. அந்தப் புருஷ மிருகத்தின் சுயநல மனப்பான்மை அவளுக்கு வெறுப்பைத்தான் அளித்தது.

ரங்கநாதன் உள்ளே வந்து ருக்குவைத் தீண்டினன். மின்னலைப்போல் தாக்கிய அந்த ஸ்பரிச உணர்ச்சிகூட அவள் மனத்தில் போதையை உண்டாக்கவில்லை. சட்டென்று துள்ளி யெழுந்தாள் படுக்கையினின்றும். அடுத்த விநாடியே அந்த அறையில் எலெக்டிரிக் விளக்கின் பிரகாசம்! ருக்கு வேறு புறமாகத் திரும்பியபடி ஜன்னலண்டை நின்றிருந்தாள். ரங்கநாதன் வெளிச்சத்தைக் கண்டு பிரமித்தவன்போலப் படுக்கைமீதே உட்கார்ந்துவிட்டான். "ஆபீஸ் கட்டுகள் இங்கே இல்லை. அடுத்த அறையில் இருக்கின்றன" என்று சற்று அழுத்தமான குரலில் பேசினுள் ருக்கு.

ரங்கநாதன் மண்டைமேல் ஓங்கி அடித்ததுபோல் இருந்தன அந்த வார்த்தைகள். சரேலென்று எழுந்தான். ஒருதரம் ருக்குவைப் பார்த்தான். அதே சமயத்தில் ருக்குவும் அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவன் கண்கள் கள்ளுண்டவன் கண்கள் போலச் சிவந்திருந்தன. அவளது ஊடுருவும் பார்வைக்கு முன் அந்த வெறிக் கண்கள் இமை அசைத்தன. அவன் பார்வை தரையில் விழுந்தது. அடுத்த விநாடியே அவன் அந்த அறையை விட்டு விரைந்து சென்றுன். ஜன்னல் கம்பிகளைப் பிடித்தபடியே ருக்கு எதிரே பரவியிருக்கும் இருட்டைத் தன் கண்களால் துருவிக்கொண் டிருந்தாள்.

32

## எதிர் பாராதது

பொழுது விடிவதும் அஸ்தமிப்பதும் உலகத்தில் சர்வ சாதாரணமான காரியங்கள்; ஆனுல் இந்த இரண்டும் எத்தனை பேர்களுக்கு எத்தனை விதமான தொல்லைகளை அளித்து வருகின்றன! ரங்கநாதனும் ருக்குவும் அதற்கு விதிவிலக்கா? நளாயினி பொழுதே விடியாமல் இருக்கவேண்டுமென்று சாபம் கொடுத்துவிட்டாள். ஆனுல் அஸ்தமிக்காமலே இருக்கவேண்டுமென்று ருக்குவால் சபிக்க முடியவில்லை. ஏன்? பகற்பொழுது எப்படிக் கழிந்துபோன போதிலும் ராத்திரி காலம் ருக்குவுக்கும் ரங்கநாதனுக்கும் சொல்லமுடியாத வேதனையைத் தந்தது. நாள் ஏற ஏற ரங்கநாதன் மேஜை மேல் ஆபீஸ் கட்டுகள் அதிகரித்து வந்தன. ருக்குவின் மனக் கட்டுப்பாடும் அதிகரித்து வந்தது. ருக்குவின் அந்தரங்கத்தை எப்படியேனும் தெரிந்துகொள்ள வேண்டுமென்று முயன்று பார்த்தான். ஆனுல் அந்த ரகசியம் அவன் உயிரின் ரகசியம்; அவள் வாழ்வின் ரகசியம். வாழ்வே இல்லாமற் போனுலுங்கூட அவள் மாங்கல்யத்தைக் காத்து அவள் முகத்தின் ஒளி மங்காமலிருக்க உதவும் ரகசியம். அதை வெளியிடக் கூடாதென்பது சந்நியாசியின் கட்டளை. அதை எவ்விதம் அவனிடம் கூறமுடியும் அவளால்? அதைமட்டும் சொல்லவே முடியாதென்று மறுத்துவிட்டாள் அவள்.

ரங்கநாதனுக்கு வேறு வழியில்லை. இப்போதெல்லாம் காலையில் வெகு சீக்கிரமாகவே ஆபீஸுக்குப் போய்விடுவான். மாலையில் நெடுநேரம் ஆன பிறகுதான் வீடு திரும்புவான். வரும்போது சுமக்க முடியாமல் தூக்கிக்கொண்டு

வருவான், ஆபீஸ் கட்டுகளை. ருக்குவுடன் பேசுவதைக்கூட அடியோடு நிறுத்திவிட்டான் என்றும் சொல்லலாம்.

நாச்சியாரம்மாளுக்கே அவன் போக்கு விசித்திரமாகத் தோன்றியது. புதிய வாழ்வின் ஆரம்ப காலத்திலே புதுத் தம்பதிகள் எப்படி நடந்துகொள்வார்கள் என்பது அவளுக்குத் தெரியாதா என்ன? இவர்கள் நடவடிக்கை முற்றும் மாருக இருந்ததை நாச்சியாரம்மாளின் பெண்மையுள்ளம் எளிதில் கண்டுகொண்டது. ருக்கு தன்னுல் ஆன மட்டும் சகஜமாகவே பழகுவதுபோல நடித்தாள். தன் கணவனும் தானும், 'எல்லோரையும் போலவே' இருப்பதாக உலகத்தின் கண்களுக்குத் தெரியும்படியாகப் பாவனை செய்தாள். ஆனுல் நாச்சியாரம்மாளுக்கா இதெல்லாம் தெரியாமல் போய்விடும்? தன் மருமகனும் நாட்டுப்பெண்ணும் சந்தோஷமாக இல்லை என்பதை அறிந்த அவள் மனத்திற்கும் நிம்மதி யில்லாமற் போய்விட்டது.

ஓர் இரவு நடு நிசிக்குமேல் நாச்சியாரம்மாள் பூனைபோல் சந்தடி செய்யாமல் மாடிப்படி ஏறிச்சென்று கவனித்தாள். ரங்கநாதன் ஓர் அறையில் விளக்கடியில் உட்கார்ந்துகொண்டு ஆபீஸ் கட்டுகளில் ஏதோ எழுதிக்கொண் டிருந்தான். ருக்கு வேருேர் அறையில் இருட்டோடு இருட்டாக முடங்கிக் கிடந்தாள்.

மறுநாள் காலையில் ரங்கநாதன் ஆபீஸுக்குக் கிளம்பும் போது, "ஏண்டா ரங்கண்ணு, ஆபீஸிலே வேலை ஜாஸ்தியா என்ன? இப்படி எழுந்ததும் எழுந்திருக்காததுமாப் பறக்கப் பறக்க ஓடறயே! சாயந்தரத்திலேயும் வீடு வந்துசேர ரொம்ப நாழியாறது. ராத்திரிக்கூட ஓய்ச்சல் ஒழிவு இல்லாமெ என்னமோ எழுதிண்டிருக்கயே!" என்று கேட்டாள் நாச்சியாரம்மாள்.

இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவேயில்லை ரங்கநாதன். எனினும் சமாளித்துக்கொண்டு, "சீமையிலிருந்து துரை வந்திருக்கிருன். அதனுல் ஆபீஸில் வேலை ஜாஸ்தி" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். ஆனுல் நாச்சியாரம்மாள் மனம் சமாதானம் அடையவில்லை.

ஒரு நாள் சாயந்திரம் ரங்கநாதன் வழக்கத்துக்கு மாருக ஆபீஸிலிருந்து சீக்கிரம் வந்துவிட்டான். அன்றியும் அவன் கையிலும் கட்டுகளைக் காணும். அவன் வரும்போதே நாச்சியாரம்மாள் கூடத்திலிருந்துகொண்டு கவனித்தாள். ஆபீஸ் கட்டுகள் ஒன்றும் இல்லாமல் அவன் வந்தபடியால், 'சீமையிலிருந்து வந்திருந்த துரை போய்விட்டானே என்னமோ? அதனுல் வேலை குறைந்திருக்கும்' என்ற எண்ணம் உண்டாயிற்று அவளுக்கு. இந்த எண்ணம் ஏற்பட்ட பிறகு நாச்சியாரம்மாளுக்குத் தன் மருமகன் சொன்னது உண்மையாக இருக்கலாம் என்றும் தோன்றலாயிற்று.

ஆனுல் ருக்குவுக்கல்லவா உண்மை தெரியும்.? ஆபீஸில் எந்தத் துரையும் வரவில்லையென்பதும், 'ஆபீஸ் கட்டு நாடகம்' எல்லாம் தன் பொருட்டுத்தான் என்பதும் அவளுக்குத் தெரிந்த விஷயந்தானே! அவள் காபியை எடுத்துக்கொண்டு மாடிக்குப் போனபோது ரங்கநாதன் மேஜைமேல் ஆபீஸ் கட்டுகள் இல்லாததைக் கண்டாள். காபியை மேஜைமேல் வைத்துவிட்டுத் திரும்பியபோது ரங்கநாதன், "ருக்கு!" என்று அழைத்தான்.

ருக்கு நின்ருள்.

ஒரு தடவை அவளை ஏறெடுத்துப் பார்த்தான். அவளும் அவனைப் பார்த்தாள். நாள் கணக்கில் நித்திரையின்றி இரவுகளைக் கழித்ததால் அவன் முகம் வெளிறியிருந்தது. கன்னங்களிலும் நெற்றியிலும் தென்பட்ட சுருக்கக் கோடுகள் அவன் முகத்துக்குக் கிழத் தோற்றத்தை அளித்தன. பாதாளக் கிடங்கிலிருந்து விளக்கின் வெளிச்சம் தெரிவதுபோல இருந்தன அவனுடைய குழிவிழுந்த கண்கள்.

ருக்குவுக்குப் பச்சாத்தாபம் உண்டாயிற்று. அவள் கண்களில் கண்ணீர் துளும்பியது. அதைக் கண்டான் ரங்கநாதன். "ருக்கு, நான் உன்னிடம் ஏதாவது தவருக நடந்துகொண்டிருந்தால் தயவு செய்து மன்னித்துவிடு!" என்ருன் தீனமான குரலில்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ருக்குவுக்கு அழுகை பீரிட்டுக்கொண்டு வந்தது. அணையை உடைத்துக்கொண்டு

பெருக்கெடுத்து வரும் ஆற்று வெள்ளம்போல அவள் இருத யத்தின் துன்பம் முற்றும் கண்ணீர் வெள்ளமாகக் கரைந்து வடிந்தது.

ரங்கநாதனுக்கே மனம் தாளவில்லையோ என்னவோ? அவள் அருகில் போய் அவள் கைகளைப் பிடித்துக்கொண்டு, "ருக்கு, ருக்கு!" என்று மன்றுடுவதுபோல அழைத்தான்.

ருக்கு சட்டென்று அவன் பிடியினின்றும் கைகளை உதறிக்கொண்டு திணறித் திணறிப் பேசத் தொடங்கினுள்: "உங்களை மன்னிக்க எனக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? நீங்கள் புருஷர். ராஜா! என்ன தவறு வேண்டுமானுலும் செய்யலாம். எப்படி வேண்டுமானுலும் நடந்துகொள்ளலாம். ஆனுல் நான் ஸ்திரீ! கேவலம் ஸ்திரீ! தவறு ஒன்றும் செய்யாவிட்டாலும் தவறு செய்தவளாகக் கருதப்பட்டாலே போதும்! அழிய வேண்டியதுதான்!......"

அன்றிரவு அவன் வெறி பிடித்தவன்போல இருட்டில் சென்று திடுதிடுப்பென்று அவளைத் தீண்டியதைப் பற்றித் தான் அவள் குறிப்பிட்டுப் பேசுகிருள் என்பதை நொடிப் பொழுதில் உணர்ந்துகொண்டான் அவன். "ருக்கு, என்னை மன்னித்துக்கொள். இந்த மாதிரியான தவறு இனி எப்போதும் நடைபெருது!" என்ருன் அவன்.

அவள் ஒன்றும் புரியாதவள்போல விழித்ததைக் கண்டு மறுபடியும் அவனே பேசினுன்: "கோயமுத்தூருக்கு மாற்றலாகிவிட்டது. இன்னும் மூன்று நாட்களில் போய்ச் சார்ஜ் எடுத்துக்கொள்ள வேண்டும். அத்தையைக்கூட இப்போது அழைத்துப் போவதாக உத்தேசம் இல்லை.

"உங்கள் உடம்பு இப்போது இருக்கும் நிலையில் ஹோட்டல் சாப்பாடு ஒத்துக்கொள்ளாது!"

"ஆனுல் என்ன செய்வது? வேறு வழி?"

"நான் கூட வருவது உங்களுக்கு இஷ்டமில்லை என்று தெரியும். அத்தையை மட்டுமாவது அழைத்துக்கொண்டு போங்கள்."

"அது எப்படி முடியும்?"

"ஏன் முடியாது?"

" நீ ?"

" நான் ஊருக்குப் போகிறேன் !"

நெஞ்சை உடைத்துக்கொண்டு எழும்பிய விம்மலை அடக்க முடியாமல் அடக்கிக்கொண்டு சரேலென்று அந்த இடத்தைவிட்டு நீங்கினாள் ருக்கு.

ரங்கநாதன் இருதயத்தில் ஏதோ ஒன்று சுருக்கென்று தைத்ததுபோல் இருந்தது. 'நான் ஊருக்குப் போகவில்லை' என்று சில நாட்களுக்கு முன்புதான் சொன்னவள் இப்போது, 'நான் ஊருக்குப் போகிறேன்' என்று தானாகக் கூறுகிறாள் ! தனது சுயநல மனப்பான்மைக்கு எதிராக அவளது தியாக உணர்ச்சியைக் கண்டறிந்த அவன் முகம் வெட்கத்தால் குன்றியது. ஒரு பெருமூச்சுடன் மெதுவாகத் திரும்பி மேஜையண்டை சென்றான். காபியை எடுத்து ஒரு வாய் குடித்தான். காபிகூடக் கசந்தது !

அடுத்த நாளே ரங்கநாதன் மைசூரை விட்டுப் புறப்பட்டான். அவனுடன் நாச்சியாரம்மாள் போகவில்லை. நாச்சியாரம்மாள் அவனுடன் போகவேண்டுமென்று ருக்கு நினைத்தாள். ஆனால் அவள் நினைத்தது நடைபெறவில்லை.

ருக்கு, 'ஊருக்குப் போகிறேன்' என்று ரங்கநாதனிடம் கூறினாள். ஆனால் அவள் ஊருக்குப் போகவில்லை. நாச்சியாரம்மாள் உத்தரவுப் பிரகாரம் அவளும் ரங்கநாதனுடன் மைசூரை விட்டுக் கிளம்பினாள்.

ரங்கநாதன் இதை எதிர்பார்க்கவில்லை. அவன் எதிர்பார்த்தபடி எதுதான் நடக்கிறது ? அத்தையில்லாமல் ரங்கநாதனுடன் போக ருக்குவுக்கே என்னவோபோல் இருந்தது. ஆயினும் அத்தையே நிர்ப்பந்தமாகச் சொல்லும்போது அவள் என்ன செய்ய முடியும் ?

## 33

## தாம்பத்திய நாடகம்

ரங்கநாதனைக் கோயமுத்தூருக்கு மாற்றிவிட்ட செய்தியைக் கேட்டவுடனே நாச்சியாரம்மாள் மூட்டை முடிச்சுகளைக் கட்டுவதில் முனைந்தாள். அடுத்த வீட்டு ராஜலக்ஷ்மியிடம் விஷயத்தைச் சொன்ன பிறகுதான் அவள் பிரயாணம் நின்றது. சில நாட்களாகவே ரங்கநாதன், ருக்கு இருவரையும் ராஜலக்ஷ்மி கவனித்து வந்தாள். கூட நாச்சியாரம்மாளும் பேச்சோடு பேச்சாகத் தன் மருமகனும் நாட்டுப்பெண்ணும் சந்தோஷமாக இல்லை என்பதை ராஜலக்ஷ்மியிடம் சொல்லியிருந்தாள். ஒருகால் அதற்குக் காரணம் நாச்சியாரம்மாளின் 'நாட்டாண்மை' யாகக்கூட இருக்கலாமோ என்கிற சம்சயம் உண்டாயிற்று ராஜலக்ஷ்மிக்கு. எனவே இப்போது கோயமுத்தூருக்கு மாற்றலாகியிருப்பதைக்கேள்விப்பட்டதும் அவள் அத்தையை மைசூரிலேயே நிறுத்திக்கொண்டால் நல்லது என்று எண்ணினாள். 'ஏற்கனவே ரங்கநாதன் ருக்குவிடம் பிடிப்பில்லாமல் இருக்கிறான். ஒரு டம்ளர் தண்ணீர் வேண்டுமானாலும் அத்தையைத்தான் கேட்கிறான். நேரடியாக ருக்குவைக் கேட்பதில்லை. ருக்கு இருந்த பக்கங்கூட கண்ணைத் திருப்புவதில்லை அவன்' என்பதெல்லாம் ராஜலக்ஷ்மிக்கும் தெரிந்த விஷயமாகையால், இப்போது கோயமுத்தூரில் அந்தப் புதுத் தம்பதிகள் தனியாகக் குடித்தனம் பண்ணும்படி விட்டுவிட்டால், நாளடைவில் எல்லாம் சரியாய்ப் போகும் என்று கருதினாள் அவள். எனவே நாச்சியாரம்மாளைப் பார்த்து, "அத்தை, இன்னும் தஸரா பண்டிகை பதினஞ்சு நாள்தானே இருக்கு. இருந்த நாளெல்லாம் இருந்துவிட்டு, தஸராவுக்கு இல்லாமல் போறதா?" என்று சாமர்த்தியமாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

"ஆமாண்டி, தஸராவுக்கு இங்கே இருக்கிறதுன்னு எப்படி முடியும்? அவனை மாத்திவிட்டாளே" என்ருள் நாச்சியாரம்மாள்.

"மாத்திணுல் என்ன? நாட்டுப்பெண் இல்லையா என்ன? கூடப் போகட்டுமே அவள். பதினஞ்சு நாளைக்கு அவள் தனியாகத்தான் குடித்தனம் பண்ணட்டுமே; எப்பவுமே நீங்க கூடவே இருக்கணும்னு முடியுமா?"

"அதுக்கில்லேடி ராஜலக்ஷ்மி! அந்தப் பொண் கையாலே தீர்த்தங்கூட வாங்கிச் சாப்பிடல்லையே அவன். இப்படி இருக்கிறபோது தனியா எப்படி அனுப்பறது அவனை?"

"அதனுலேதான் சொல்றேன். தஸரா சாக்கை வச்சுண்டு நீங்க இங்கேயே இருந்துவிடுங்கோ. அவா ரெண்டு பேரும்போகட்டும். தனியா இருந்தா அவன் தீர்த்தம் வேணும்னு அவளைக்கேக்காமே வேறே யாரைக் கேப்பான்?"

"ஏண்டி ராஜலக்ஷ்மி, இதென்ன பரீக்ஷையா? அப்படியெல்லாங்கூட விட முடியுமா? நம்மைப்போல் பெரியவா கூட இருந்துகொண்டு திருப்பிணுத்தானே நல்லது?"

"அதெல்லாம் நியாயந்தான். ஆனு சாதாரணக் கூச்சமா யிருந்தா நீங்க சொல்றதெல்லாம் சரியாயிருக்கும். உங்க மருமான் விஷயத்திலே ஆம்படையான், பெண்டாட்டி ரெண்டு பேரும் ஒண்ணு இருந்து நேருக்கு நேர் பழகிணுத்தான் நல்லதுன்னு எனக்குத் தோணறது. அதுக்காகத்தான் உங்களை இப்பப் போக வேண்டாம்னு சொல்றேன்."

நாச்சியாரம்மாள் சிறிதுநேரம் மௌனமாகவே யோசனை செய்து பார்த்தாள். ராஜலக்ஷ்மி சொல்லுவதுபோலச் செய்வதுதான் நல்லது என்று அவள் மனத்துக்குள்ளும் தோன்றியது. எனவே அவள் ரங்கநாதன் கிளம்பினபோது ஒரேயடியாகத் தான் கூட வரமுடியாதென்றும் ருக்குவை மாத்திரம் அழைத்துக்கொண்டு போகும்படியும் சொல்லிவிட்டாள்.

ரங்கநாதனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. ருக்குவைத் தனியாகச் சந்திக்கச் சந்தர்ப்பம் கிடைத்தபோது, "ருக்கு, அத்தை வர இன்னும் ஒரு மாசம் பிடிக்கும்போல் இருக்கிறது" என்ருன்.

''நான் வருகிறேன்!'' என்று மிகவும் அடக்கமான குர லில் பதிலளித்தாள் அவள்.

ஒரு மாத லீவு கழித்து, மைசூருக்குத் திரும்பிவந்த ரங்க நாதன், மைசூரை அடைந்தபோது மறுபடியும் கோயமுத் தூருக்குப் போக நேரிடும் என்று கனவில்கூட நினைக்க வில்லை. மனத்தை விட்டே ருக்குவை அடியோடு அகற்றி விடுவதென்கிற நம்பிக்கையுடன்தான் அவன் மைசூருக்கு வந்தான். ஆனால் வீட்டுக்கு வந்தவுடனே முதல் முதலாகச் சந்தித்தது ருக்குவைத்தான். இப்படியிருக்க அவன் ருக்கு வை எப்படி மனத்தைவிட்டு அகற்றமுடியும்?

ஆபீஸில் மறுபடியும் அவன் வேலைகளில் தவறுகள் ஏற் படத் தொடங்கின. ஆபீஸிலும் வேலை ஓடவில்லை; வீட்டிலும் வேலை ஓடவில்லை. ஆபீஸ் கட்டுகளை வீட்டுக்குத் தூக்கிக் கொண்டு வருவதும், வீட்டிலிருந்து மறுநாள் ஆபீஸுக்குத் தூக்கிச் செல்வதுமே மிச்சமேயொழிய வேலையில் நாளுக்கு நாள் தவறுகள் அதிகரித்தே வந்தன. ராத்திரி முற்றும் கண்ணை விழித்துக்கொண்டு எலெக்டிரிக் விளக்கின் அடியில் தூக்கமின்றி உட்கார்ந்து கிடந்ததால் 'கரென்ட் சார்ஜ்' அதிகமானதுதான் கண்ட பலன். ஆபீஸ் மானேஜர் ரங்க நாதன் வேலையை இப்போது கண்ணில் விளக்கெண்ணெ யைப் போட்டுக்கொண்டு கவனித்து வரலானார். நாள் ஏற ஏற அவன் தவறுகளும் அதிகமாகவே, அவர் இரண்டொரு சமயம் நேரில் அழைத்து எச்சரிக்கை செய்தும் பார்த்தார். ஆனால் பலன் இல்லை. கண்டித்தும் பார்த்தார்; பிரயோஜனப் படவில்லை. இப்படியே போனால் அவன் உத்தியோகத்துக்கே ஆபத்து வந்துவிடும் என்றும் உரைத்தார். ரங்கநாதனுக்கும் யோசனை ஏற்பட்டது. 'உத்தியோகம் இருந்தாலும் ஒன்று தான், போனாலும் ஒன்றுதான்' என்றுகூடத் தோன்றிற்று அவனுக்கு, அவன் மனமிருந்த நிலையில். ஆனால் மானேஜர் அவனைப் பயமுறுத்தினரேயொழிய அவனை வேலையைவிட் டுப் போ என்று சொல்லத்தக்க அத்தனை கல் நெஞ்சம் படைத்தவர் அல்ல அவர். அவன் தேகநிலை இன்னும் சரியாக வில்லை என்றே கருதினர். எனவே தலைமை ஆபீஸிலிருந்து

தமது ஆபீஸ்மீது புகார் வருமுன் தம் பழியைக் கழித்துக் கொள்ள விரும்பினர். அதன் பலன்தான் ரங்கநாதனுக்குக் கோயமுத்தூருக்கு மாற்றலானது.

கோயமுத்தூரில் ரத்னசபாபதிபுரம் என்னும் பகுதியில் ஒரு தனி வீட்டையே வாடகைக்கு அமர்த்திக்கொண்டு ரங்கநாதனும் ருக்குவும் தமது வாழ்க்கையில் மற்றொரு புது அத்தியாயத்தை ஆரம்பம் செய்தனர். அந்த ஊருக்குப் போனதும் பிரதிதினமும், ரங்கநாதன் ஆபீஸ் நேரம் தவிர மற்ற நேரமெல்லாம் ஊர் சுற்றுவதிலும், சினிமா, டிராமா பார்ப்பதிலும், புதிய நண்பர்களைப் பிடிப்பதிலும் கழிப்பது என்று நிச்சயித்துக்கொண்டானோ என்னவோ? காலையில் எழுந்தவுடன் காபி குடித்துவிட்டுக் கடைத்தெருப் பக்கமாகப் போய் ஒரு பத்திரிகையை வாங்கிக்கொண்டு ஏதாவதொரு கடை வாசலில் உட்கார்ந்தபடி பத்திரிகையில் ஓர் எழுத்துக் கூட விடாமல் படித்து முடித்துவிட்டு வீடு திரும்புவான். இதற்குள் மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிடும். வீட்டுக்கு வந்ததும் ஸ்நானம் செய்துவிட்டுச் சாப்பிட உட்காருவான். சாப்பிடும்போது ருக்குவுடன் அதிகமாகப் பேச்சுக் கொடுக்க மாட்டான். அவளும் அவனுடன் அநாவசியமாகப் பேசுவதில்லை. ஆபீஸிலிருந்து மாலை ஐந்து மணிக்குத் திரும்பிவிடுவான். ஆனால் நேராக வீட்டுக்கு வருவதில்லை. ஹோட்டலிலேயே காபி சாப்பிட்டு விட்டுக் 'காரனேஷன் பார்க்கில்' போய் உட்காருவான். பார்க் பூராவும் காலியான பிறகும் நெடுநேரம் வரையில் உட்கார்ந்து கிடப்பான். அவன் வீடு திரும்பும்போது ராத்திரி ஒன்பது மணிக்கு மேல் ஆகிவிடும். சில நாட்களில் பத்து மணிக்கு மேலும்கூட ஆகிவிடும். வீட்டுக்கு வந்ததும் சாப்பாடு மிகவும் சுருக்கமாக முடிந்துவிடும். பிறகு நேராகப் படுக்கை! இப்படி ஒருவார காலம் கழிந்தது.

ருக்குவும் அவன் இஷ்டப்படியே நடந்துகொள்ளும்படி விட்டு வந்தாள். சாப்பிடும்போது, "இன்னும் கொஞ்சம் குழம்பு வேணுமா, கறி வேணுமா?" என்பதுபோன்ற சாதாரண வார்த்தைகளைத் தவிர வேறு எந்தவிதமான பேச்சும் அவனிடம் பேசக்கூடாது என்று சற்றுக் கண்டிப்புடனேயே

நடந்துவந்தாள் அவள். அவள் மனத்தில் ஆயிரம் கட்டுத் திட்டங்கள் ஏற்படுத்திக்கொண் டிருந்தபோதிலும் அவளாலும் சமாளித்துக்கொள்ள முடியாத ஏதோ ஓர் உணர்ச்சி அவளைத் தகித்து வந்ததை அவள் அறியாமல் இல்லை. இருப்பினும் அவளுடைய மன உறுதிதான் அந்த உணர்ச்சியை அடக்கிக்கொள்வதற்கும் ஒத்தாசை புரிந்தது.

ரங்கநாதன் ருக்குவுடன் அதிகமாகப் பேச்சுக் கொடுக்காமலும் பழகாமலும் இருந்தது தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே யாகும். ஆனால் எவ்வளவுதான் முயன்றபோதிலும் அவனது இயற்கை உணர்ச்சி அவனை மீறியதாக இருந்தது. அவனது வயதின் துடிப்பு, சில சமயங்களில் அவன் தேகத்தில் விவரிக்க முடியாத அவஸ்தைகளை உண்டாக்குகிறதே! அந்தச் சமயங்களில்தான் அவன் அறிவிழந்து போகிறான்! அந்தச் சமயங்களில் என்ன நேரிடுமோ என்கிற பயமே அவனை ருக்குவிடமிருந்து தூர விரட்டுகிறது!

வீட்டில் ருக்குவுக்கும் ரங்கநாதனுக்கும் தனித்தனியாகப் படுக்கையறைகள் இருந்தன. அந்த அறைகள் இரண்டும் வீட்டின் மத்தியிலிருந்த ஹாலுக்கு இருபுறங்களிலும் இருந்தன. வீட்டில் குடிபுகுந்த நாளன்று ராத்திரியே ரங்கநாதன் ருக்குவைப் பார்த்து, "ருக்கு, இந்த அறை எனக்கு, எதிர்ப் பக்கத்து அறை உனக்கு" என்று சொல்லிவிட்டான்.

அவன் சொன்னதைக் கேட்டவுடனே ருக்குவுக்குக் கொஞ்சம் சிரிப்புக்கூட வந்தது. 'இந்த ஏற்பாடு ஒரு நாள் காரிய சாத்திய மற்றதாகப் போய்விடும்' என்று அவள் எண்ணத்தான் எண்ணினாள். இருப்பினும் அவள் அப்போது ஒன்றும் சொல்லவில்லை. தன் பெட்டி, படுக்கை, துணிமணிகள் முதலியவற்றை அந்த அறையில் கொண்டுபோய் வைத்துக்கொண்டாள். அன்றிரவு படுத்துக்கொள்ளும்போது அவள் அறைக் கதவை உள்புறம் தாழிட்டுக்கொண்டு படுத்தாள். ரங்கநாதன் அவள் செய்கையைக் கண்டான். அவனுக்கே என்னவோபோல் இருந்தது.

இரண்டு வார காலம் வாழ்க்கை ஒரு வெறும் வறட்டு யந்திரம் சுழலுவதுபோலச் சுழன்றது. ருக்கு, வீட்டுக்

காரியங்களில் வெகு மும்முரமாக ஈடுபட்டுப் போனாள். ஒரு நிமிஷ காலமாவது ஓய்ந்து உட்கார்ந்து யோசனைசெய்யத் தொடங்கினால், அவளது மன அமைதியும் உறுதியும் குலைந்து போகும் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். எனவே வீட்டில் வேலை யில்லாத போதிலும் ஏதாவது ஒரு வேலையை ஏற்படுத்திக்கொண்டு அதைச் செய்வதில் ஈடுபடுவாள். சில சமயங்களில் ஹாலில் உட்கார்ந்து தனக்குத் தானாகப் பாடிக் கொள்வாள். இதெல்லாம் ரங்கநாதன் வீட்டில் இல்லாத போதுதான். அவன் வீட்டில் இருக்கும்போது அவள் மனம் அவனையே ஏமாற்றத்தான் ஏமாற்றும். அது சகஜந்தானே!

ஒரு நாள் இரவு பத்து மணிக்கு மேலாகியும் ரங்கநாதன் வீடு திரும்பவில்லை. ருக்கு, தன் வேலைகளையெல்லாம் முடித்து விட்டு வாசலுக்கும் உள்ளுக்குமாக ஆயிரந் தடவை நடந்து தீர்த்தாள். ஆனால் மணி பத்தரை, பதினொன்றுகூட ஆகி விட்டது! ரங்கநாதனைக் காணவில்லை. ருக்குவின் மனத்தில் கவலை உண்டாயிற்று. காலை ஒன்பது மணிக்கே சாப்பிட்டு விட்டுச் சென்றவன்; ராத்திரிப் பதினொரு மணி ஆன பிறகும் வரவில்லை என்றால் அவள் மனம் பல பயங்கரமான கற்பனைக ளுக்கு இடங் கொடுத்தது. வேதனைப் பட்டுக்கொண்டே ஹாலில் உட்கார்ந்திருந்தாள். மணி பன்னிரண்டும் அடித் தது. சில நிமிஷங்களுக்குப் பின் ரங்கநாதன் வந்தான். ருக்குவின் இருதயத்திலிருந்து ஒரு நீண்ட மூச்சு வெளி வந்தது.

ஹாலுக்குள் நுழையும்போதே ருக்கு அங்கு உட்கார்ந்தி ருப்பதைக் கவனித்தான் ரங்கநாதன். ஆனால் அவளிடம் வழக்கம்போலவே ஒரு வார்த்தையும் பேசாமல் நேரடியாகத் தன் அறைக்குச் சென்றான். கோட்டு, சட்டை எல்லாவற் றையும் கழற்றிவிட்டு மறுபடியும் அவன் ஹாலுக்கு வந்த போது ருக்குவை அங்கே காணவில்லை. சமையலறையில் விளக்கு எரிந்தது. ரங்கநாதன் சமையலறைக்குச் சென்றான். ருக்கு இலை போட்டுவிட்டு அவன் வரவை எதிர்பார்த்து நின்றுகொண் டிருந்தாள். சமையலறை வாசற்படி யண்டை நின்றுகொண்டே ரங்கநாதன், "எனக்குச் சாதம் வேண்

டாம்!'' என்று சொல்லிவிட்டுச் சட்டென்று திரும்பித் தன் அறைக்குப் போய்விட்டான்.

ருக்கு உடனே ஒரு டம்ளர் பாலை எடுத்துக்கொண்டு, சமையலறை விளக்கை அணைத்துவிட்டு ரங்கநாதன் அறைக்குப் போனாள். படுக்கையில் தலையணை மேல் ஒரு புஸ்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு குப்புறப் படுத்தபடி படித்துக்கொண் டிருந்தான் ரங்கநாதன். ருக்குவைப் பார்த்ததும், '' பால் வேண்டாம்'' என்றான்.

'சாப்பிடக் கூட இல்லையே'' என்று தயக்கத்துடன் கேட்டாள் ருக்கு

ரங்கநாதன் பதில் ஒன்றும் சொல்லவில்லை. '' ச்சூ!'' என்று சூள் கொட்டிவிட்டு மீண்டும் புஸ்தகத்தில் பார்வையைச் செலுத்தினான்.

பால் டம்ளரும் கையுமாகச் சிறிது நேரம் நின்றாள் ருக்கு. ரங்கநாதன் அவள் பக்கம் திரும்பவில்லை. ருக்குவுக்கு மனத்தில் சொல்ல முடியாத வேதனை உண்டாயிற்று. ஏதோ நெஞ்சை அடைப்பது போன்ற உணர்ச்சி! மெல்லச் சமாளித்துக்கொண்டு, '' உடம்புக்கு என்ன?'' என்றாள்.

'' ஒன்றும் இல்லை!''

'' அத்தைக்கு ஒரு கடுதாசி எழுதினால்......''

'' ஏன்?''

'' உங்கள் உடம்பு வரவர இப்படி இளைத்துக்கொண்டே போனால்...''

'' அதற்காக?''

'' அத்தைக்கு நானாவது ஒரு கடுதாசி போடுகிறேன்!''

'' வேண்டாம். அவள் இப்போது வரப்போகிறதில்லை. இன்னும் ஒரு மாசம் கழித்துத்தான் வரப்போகிறதாகக் கடிதம் எழுதியிருக்கிறாள்.''

'' கடுதாசி இன்றைக்கா வந்தது!''

'' ஆமாம்.''

'' ஆனால் இப்படி ஒன்றுமே சாப்பிடாமல் படுத்துக்கொண்டால் உடம்பு என்னத்துக் காகும்?''

'' உடம்பைக் காப்பாற்றி என்ன ஆகவேண்டும்?''

ருக்குவுக்குத் துக்கம் பொங்கி யெழுந்தது. சரேலென்று அந்த அறையை விட்டுக் கிளம்பிச் சமையலறைக்குச் சென்று பால் டம்ளரை வைத்துவிட்டுத் தன் அறைக்குப் போய்க் குப்புறப் படுத்துக்கொண்டு விக்கி விக்கி அழுதாள். காலை முதல் வேலை செய்த களைப்பும் கணவன் வருகைக் காகப் பன்னிரண்டு மணி வரையில் பசியுடன் கண் விழித் திருந்ததால் உண்டான சோர்வும் சேர்ந்து அவள் கண்களை மூடச்செய்தன. ஜன்னல் வழியாக வந்த குளிர்ந்த காற்று அவள் துக்கத்தை ஆற்றித் தூக்கத்தை அளித்தது. அறைக் கதவை வழக்கம்போல மூடி உள்ளே தாழிட்டுக் கொள்ளவும் இல்லை அவள்.

ரங்கநாதன் புஸ்தகத்தைப் பார்த்தபடியே யோசனையில் ஆழ்ந்து போனான். இந்தப் பதினைந்து நாட்களுக்கு மேலாக ருக்குவும் அவனும் நடத்திவரும் வாழ்க்கையைப் பற்றித்தான் அவன் யோசனையெல்லாம். வெளியுலகம் அவர்களைப் பார்த்து என்ன நினைத்துக்கொண் டிருக்கும் என்று எண்ணிப் பார்த்தபோது அவனுக்குச் சிரிப்பு வந்தது. ஆனால் இந்த வெளி யுலகத்துக்காகவென்று அந்தரங்கமாக உள்ள ஒன்றை எத்தனை காலம் மறைத்து நாடகம் ஆடி வர முடியும்? அவன் மனம் நிம்மதி என்பதை அடியோடு இழந்து போயி ருந்தது. மணியும் மூன்று அடித்தது. ரங்கநாதன் படுக் கையை விட்டு எழுந்தான். அவன் நெற்றி நரம்புகள் முறுக் கேறிஉயர்ந்து பயங்கரமாகத் துடித்தன. அவன் கன்னங்க ளிலும் தாடைகளிலும் எலும்புகள் சதையைப் பிய்த்துக் கொண்டு வெளியே வந்துவிடும்போலப் பிதுங்கியிருந்தன. மோவாய்க்கட்டை முன்னுக்கு வந்து உதடுகள் இரண்டும் அழுந்த மூடியிருந்தன. மூக்கின் நுனியில் ரத்தம் ஏறியிருந் தது. ஆனால் மூச்சுமட்டும் வெகு நிதானமாகவே வந்தது. ஏதோ மனத்துக்குள் ஒரு தீர்மானத்துக்கு வந்தவன்போலத் தென்பட்டான் அவன். நிதானமாக நடந்து ஹாலுக்கு வந்தான். சற்று நேரம் ஏதோ யோசிப்பவன்போல நின்று விட்டு, மெதுவாக ருக்குவின் அறைக்குச் சென்றான். அறை யில் ஒரு சுவர் ஓரத்தில் ருக்கு நன்றாகத் தூங்கிக்கொண்

டிருந்தாள். ரங்கநாதன் அவளை ஒரு விநாடி காலம் இருட்டிலேயே நின்று பார்த்தான். அவனையும் அறியாமல் அவன் இருதயத்தினின்று ஒரு நீண்ட மூச்சு வெளிவரப் பார்த்தது. அதை வெளிவர வொட்டாமல் அடக்கிக்கொண்டு, "ருக்கு!" என்று கூப்பிட்டான் மெதுவான குரலில்.

ருக்குதான் மெய்ம்மறந்து தூங்குகிறாளே! அவள் காதில் அவன் குரல் எப்படி விழும்! "ருக்கு!" என்றான் மறுபடியும்; ருக்குவின் தேகம் அசையக்கூட இல்லை!

அறையிலிருந்த விளக்கைப் போட்டான். "ருக்கு!" என்று கொஞ்சம் கெட்டியான குரலில் அழைத்தான். ருக்கு மெல்லப் புரண்டுவிட்டு எழுந்து உட்கார்ந்தாள். எதிரே தன் கணவன் நிற்பதை உணர்ந்ததும் எழுந்து நின்று கொண்டாள்.

"ருக்கு, இந்த அகாலத்தில் உன்னை எழுப்பியதற்கு மன்னிக்க வேண்டும்!" என்றான் ரங்கநாதன்.

ருக்குவின் முகத்தில் ஆச்சரியக் குறி தோன்றியது!

அவளது ஆச்சரியத்தை எதிர்பார்த்தவன் போல மிகவும் சாவதானமாகப் பேசினான் ரங்கநாதன். "ருக்கு, என் பேச்சு உனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும்" என்றான் அவன்.

ருக்கு பதில் ஒன்றும் பேசவில்லை. அவன் வாயிலிருந்து அடுத்தபடியாக இன்னும் என்ன என்ன வார்த்தைகள் வரப் போகின்றனவோ என்று ஆவலுடன் இருப்பவள் போல மௌனமாகவே அவனைப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

"ருக்கு!"

…………

"நமது வாழ்க்கையைப்பற்றி உலகம் என்ன நினைக்கிறது தெரியுமா?"

ருக்கு பெருமூச்செறிந்தாள்.

"அண்டை அயலில் வாழும் தம்பதிகளுக்கும் நமக்கும் வித்தியாசம் இருப்பதாக உலகத்துக்குத் தெரியாது. இது உனக்குத் தெரியுமா?"

இந்த மாதிரிக் கேள்விக்கெல்லாம் அவள் என்ன பதில் சொல்வாள்? ருக்கு மௌனம் சாதித்தாள்.

"இன்றைக்கு நம் வாழ்க்கையைப்பற்றி உலகத்துக்கு ஒன்றும் தெரியாமல் இருக்கலாம். ஆனுல் இது எப்போதும் சாத்தியமா? இந்த நாடகம் எத்தனை காலந்தான் நடைபெற முடியும்?"

"இது சாத்தியமல்ல என்று எனக்கும் அடிக்கடி தோன்றத்தான் தோன்றுகிறது ஆனுல்......"

"ஆனுல் என்ன?"

"இதற்கு வழி என்ன என்றுதான் தெரியவில்லை."

ருக்கு நிதானமாக ஒவ்வொரு வார்த்தையையும் யோசித்துப் பேசுகிறவள் போலவே பேசினுள். இருப்பினும் அவள் குரலில் தென்பட்ட தடுமாற்றத்தை ரங்கநாதன் உணர்ந்துகொண்டான்.

"வழி தெரியவில்லையா? ஏன்? வழி இருக்கிறது" என்று, அழுத்தந் திருத்தமாக ரங்கநாதன் சொன்னபோது, ருக்கு மிகுந்த நம்பிக்கையுடன் அவன் முகத்தைப் பார்த்தாள். ஆனுல் அவன் மறுகணமே, 'ருக்கு, ஒரே வழிதான் அது. உன் அந்தரங்கத்தில் மறைந்து கிடக்கும் அந்த ரகசியம் எனக்குத் தெரியவேண்டும். அது தெரிந்தால்தான் அந்த முதல் இரவு நீ விபரீதமாக நடந்துகொண்டதுபற்றி என் மனத்தை இடைவிடாமல் துன்பப்படுத்திக்கொண்டிருக்கும் கணக்கற்ற சிந்தனைகளைக் குழி தோண்டிப் புதைக்க முடியும். அப்போதுதான் என் நெஞ்சத்தின் ஏக்கம் ஒழியும். இல்லாவிடில் கஷ்டந்தான். இந்த அமைதியற்ற வாழ்வின் முடிவை நினைக்கும்போது என் உள்ளமும் உடலும் துடிக்கும் துடிப்பு...!" என்று சொல்லிக்கொண்டே வந்தபோது ருக்குவுக்குச் சஞ்சலம் உண்டாயிற்று.

"உங்கள் மன உணர்ச்சிகள் எப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியாதா? ஆனுல் உங்களை ரொம்பவும் வேண்டிக்கொள்கிறேன். அந்த ரகசியத்தைப்பற்றி மாத்திரம் வற்புறுத்தவேண்டாம். எந்தக் காரணத்தைக் கொண்டும் அதை வெளியிட முடியாதவளாக இருக்கிறேன்."

" உன் பேச்சுக்கு உலகம் என்ன அர்த்தத்தைக் கற்பித்துக்கொள்ளும் தெரியுமா?"

" உலகம் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளட்டும். அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. உங்கள் மனமே எனக்குப் பிரதானம்."

" நான்மட்டும் என்ன தேவனா? உலகத்தை முற்றும் துறந்த ஞானியா? உன் அந்தரங்கத்தை அறிந்துகொள்ளக் கூடிய ஞானதிருஷ்டி எனக்குக் கிடையாது என்பது உனக்கே தெரியும்."

" இந்த ஒரு மாச காலத்திற்குப் பிறகும் என்னை உங்களால் அறிந்துகொள்ள முடியவில்லையா?" என்று ருக்கு கேட்டபோது அவள் குரல் மிகவும் பரிதாபகரமாக இருந்தது.

" இந்த ஒரு மாச காலத்தில் உனக்கும் எனக்கும் இடையே உள்ள தூரம் நாளுக்கு நாள் அதிகரித்து வந்ததைத் தவிர வேறொன்றும் எனக்குத் தெரியவில்லை" என்று சற்றுக் கண்டிப்பாகப் பேசினான் ரங்கநாதன்.

ருக்குவின் கண்களில் ஜலம் வந்துவிட்டது. " நீங்கள் அப்படியா நினைக்கிறீர்கள்? நிச்சயமாகச் சொல்லுங்கள். என்னைப்பற்றி நீங்கள் நினைப்பது இதுதானா?" என்று விம்மல்களுக்கிடையே வார்த்தைகளையும் உதிர்த்தாள் ருக்கு.

" ஆம்!"

" இந்த அழுத்தமான பதில் ருக்குவின் செவிகளில் கர்ண கடூரமாக விழுந்தது. அவளால் கால்களை ஊன்றிக்கொண்டு நிற்கக்கூட முடியவில்லை. மெல்லத் தள்ளாடிய வண்ணம் பின்னாலிருந்த சுவரில் சாய்ந்துகொண்டாள்.

" ருக்கு, இந்த நிலை இனிமேல் ஒரு நிமிஷங்கூட நீடிக்க முடியாது. உன்னை நான் அறியவேண்டும்; அல்லது இத்தகைய சந்தர்ப்பங்களில் உலகம் எப்படித் தீர்மானிக்குமோ அந்தத் தீர்மானத்துக்கு மதிப்புக் கொடுக்கவேண்டும்."

" உங்கள் பேச்சுப் புரியவில்லையே!"

" நாம் இருவரும் ஒன்றாக வாழவேண்டும்; அது சாத்தியமில்லாவிட்டால் பிரிய வேண்டும்."

"பிரிவதா!" என்று கேட்டபோது ருக்குவின் நெஞ்சில் அடைபட்டுக் கிடந்த துக்கம் பொங்கி எழுந்தது. ஆனல் அவள் துயரத்தைக் கண்டு ரங்கநாதன் மனம் இளக வில்லை.

"ஆம். வாழ்வு சாத்தியமில்லாவிட்டால் அது ஒன்று தானே சாத்தியமானது?"

அழுகையை அடக்கிக்கொண்டு முகத்தில் கொஞ்சம் புன்னகையையும் வருவித்துக்கொண்டு, "ஏன்? வாழ்வைச் சாத்தியமாக்கிக் கொள்வோமே" என்று தயங்கித் தயங்கிப் பேசினள் ருக்கு.

"சாத்தியமாக்கிக் கொள்ளுவதும் சாத்தியமற்றுப் போகும்படி செய்வதும் உன் கையில்தான் இருக்கின்றன. ருக்கு, என் மனத்தில் மாசு படிந்துவிட்டது. உன் நடவடிக கைதான் என் இருதயத்தில் கறைபோலப் பதிந்துவிட்டது. அதை நீக்க உன்னல்தான் முடியும். ஆனல் அது உனக்கு விருப்பமில்லை. இந்த நிலையில் நம் வாழ்வு எப்படிச் சாத்திய மாகும்?"என்று உருக்கமான குரலில் கேட்டான் ரங்கநாதன்.

'ஏன் சாத்தியமாகாது? உங்கள் இருதயத்தில் கறை படிந்துவிட்டதாக நீங்கள் தவருக நினைக்கிறீர்கள். அது கறையல்ல; வெறும் திரை. கறை அழுத்தமானது; சில சமயம் அழித்தால்கூட அழியாது. ஆனல் உங்கள் இருத யத்தை மூடியிருக்கும் திரை மிகவும் சன்னமானது. ஒரு சிறு கத்தியால் எளிதில் கிழித்து எறிந்துவிடலாம், அதை அந்தத் திரைக்கு உட்புறத்திலே உங்கள் இருதயத்தில் அன்பின் ஊற்று, தேங்கிக் கிடக்கிறது. அதை நான் நன்ருக அறிவேன். அந்தத் திரையைக் கிழித்தெறிவதும் கஷ்ட மல்ல. ஆனல் கத்தியை நான் உபயோகிக்க முடியாதே! ஒருகால் திரையைக் கத்தியால் கீறப்போய் இருதயத்தின் மீதே கத்தி பட்டுவிட்டால்...' என்று ருக்கு மனத்துக்குள் ளேயேதான் பதில் சொல்லிக்கொண்டாளேயன்றி அவன் கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை அவளால்.

அவள் மௌனமாகவே யோசனை செய்துகொண் டிருந்த போது, "ருக்கு, நீ இதைப்பற்றித் தீர யோசனை செய்து ஒரு

முடிவுக்கு வரவேண்டும். உன் தீர்மானத்தை இன்னும் சில நாட்களில் அறிய விரும்புகிறேன்'' என்று சொல்லிவிட்டு அவள் பதிலைக்கூட எதிர்பாராமல் ரங்கநாதன் அவன் அறைக்குச் சென்ருன். கலங்கிய உள்ளத்துடன் ருக்கு சிந்தனையில் ஆழ்ந்து போனுள்.

ரங்கநாதன் தவணை அளித்துவிட்டுச் சென்ற பிரகாரம் ருக்கு ஒரு தீர்மானத்துக்கு வரச் சில நாட்கள் கூடப் பிடிக்கவில்லை. அவள் இந்த விஷயத்தைப் பற்றி ஏற்கனவே ஒரு முடிவுக்கு வந்திருந்தாள். இப்போது நேருக்கு நேராகத் தன் புருஷன் இதைக் குறிப்பிட்டுப் பேசவே, அவன் முன்னிலையில் தன் முடிவைச் சொல்வது அவள் சக்திக்கு மீறிய செய்கையாக இருந்தது. அவள் அந்தரங்கமான ரகசியம் ரங்கநாதனுக்குத் தெரிந்தாலொழிய அவர்கள் வாழ்வில் சந்தோஷம் ஏற்படாது என்பது அவளுக்கு நன்ருகத் தெரிந்துவிட்டது. ஆனுல் அந்த ரகசியத்தைச் சொல்லக்கூடாத நிலைமையில் இருக்கிருளே அவள். என்ன செய்வது? அவள் வாழ்வைவிட அவள் புருஷனின் உயிர்தானே முக்கியமானது. சந்நியாசி சொன்ன ரகசியத்தை ரங்கநாதனிடம் கூறிவிட்டால் போதும்; அவன் கொண்டிருக்கும் சந்தேகங்கள் ஒரே விநாடியில் பறந்தோடிப் போகும். ஆனுல் அதைப் பிறரிடம் வெளியிடக்கூடாது என்பது அவர் கட்டளையல்லவா? அந்தக் கட்டளையை ருக்கு மீறுவதால் அவள் கணவன் உயிருக்குத் தீங்கு நேரிடுமாயின் என்ன செய்வது? இந்த ஒரே யோசனைதான் அவளை ஏற்கனவே அந்தத் தீர்மானத்துக்கு வரும்படி செய்திருந்தது. ரங்கநாதன் மனத்தில் மாசு படிந்துவிட்டது. 'என்னைப்பற்றி அவர் கொண்டுள்ள கேவலமான அபிப்பிராயத்தை அவர் மாற்றிக்கொள்வது முக்கியமா? இல்லாவிடில், என்னைப்பற்றிக் கேவலமாகவே எண்ணிக்கொண்டாவது அவர் உயிர் வாழ்வது முக்கியமா?' என்கிற கேள்விகள் கிளம்பின அவள் உள்ளத்தில். 'அவர் எப்படி எண்ணிக்கொண்டாலும் சரி; அவர் உயிருடன் இருந்து தன் மாங்கல்யத்தின் பசுமை மறையாமல் இருந்தால் போதும்' என்றுதான் தீர்மானித்தாள் அவள்.

இந்த முடிவினல் யாருக்கு என்ன நன்மை? ருக்குவுக்காவது, வாழ்வு இல்லாமற்போனலும் தன் ரகசியம் காப்பாற்றப்படுவதால் வாழ்வின் ஒளியாக மாங்கல்யம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது என்கிற திருப்தி இருக்கக்கூடும். ஆனல் ரங்கநாதனுக்கு என்ன திருப்தி இருக்கிறது? வண்டு முகராத மலராகவே இருந்து வெயிலில் காய்ந்து மழையில் நனைந்து வாடி வதங்கி உதிர்ந்து போக ருக்கு தயாராக இருக்கிருள். அந்த வண்டு தன்னை முகராவிட்டாலும் பாதகமில்லை; தன்னிலிருந்து தேனைச் சுவைக்காவிட்டாலும் பெரிதல்ல அவளுக்கு. ஆனல் அது தன்னைச் சுற்றிச் சதா சர்வகாலமும் வட்டமிட்டு ரீங்காரம் செய்துகொண் டிருந்தால் போதும். ஆனல் எத்தனை காலந்தான் வண்டு மலரைச் சுற்றி வட்டமிட்டுக்கொண் டிருக்கும்? அதன் மணம் அந்த வண்டின் தலையைக் கிறுங்கச் செய்கிறதே. முகராமல் வட்டமிட்டுக்கொண் டிருப்பதென்ருல் அது எப்போதும் சாத்தியமா? 'ஏ மலரே! உன்னை முகர முடியவில்லை. உன்னிடம் இருக்கும் தேனைச் சுவைக்க முடியாதபடி முள் வேலி போட்டுக்கொண்டு நிற்கிருய். அதனல் வேறு மலர்மீது என் நாட்டம் செல்லுமானல் அதை என் குற்றம் என்பாயே?' என்று, நீண்டகாலமாகப் பொறுத்துப் பார்த்த வண்டு கேட்கத்தானே கேட்கும்? அதில் என்ன தவறு இருக்கிறது?

தன் வாழ்வைத் தான் தியாகம் செய்துவிடுவதுமட்டும் போதாது என்கிற உண்மை ருக்குவுக்குப் புலப்பட்டது. அவள் ஸ்திரீ! தனது ஆசைகளை அடக்கிக்கொள்ளும் சக்தி அவளுக்கு இருக்கிறது. அவன் புருஷன்! தன் ஆசைகளை அவள் பொருட்டு அவனும் அடக்கிக்கொண்டுதான் ஆக வேண்டும் என்று எந்தச் சட்டத்தில் சொல்லியிருக்கிறது? அவன் விரும்பிய பதிலைச் சில நாட்களுக்குள் அளிக்காவிட்டால் என்ன என்ன விபரீதங்கள் ஏற்படும் என்று சிறிது நேரம் கற்பனை செய்து பார்த்தாள் ருக்கு. அவளுக்கு நெஞ்சில் பயமும் உண்டாயிற்று. ஆயினும் அஞ்சுவதால் மட்டும் ஆவது ஒன்றும் இல்லை என்று மனத்தைத் தேற்றிக்கொண்டாள். எனினும் அவன் விரும்பிய பதிலை மட்டும் அவனுக்கு அளிப்ப

தென்பது இந்த ஜன்மத்தில் முடியாத காரியம் என்று திட சங்கல்பம் கொண்டுவிட்டாள் அவள்.

அன்றிரவில் எஞ்சியிருந்த இரண்டொரு மணி காலம் கழிவதுதான் மிகவும் கடினமாக இருந்தது. ஆனல் இத்தகைய சந்தர்ப்பங்களில்தானே நேரங்கூட நீர் ஆமைபோல நகருகிறது?

## 34

## திடும்பிரவேசம்

சில நாட்களில் ருக்குவிடமிருந்து முடிவான பதில் கிடைக்கவேண்டும் என்று ரங்கநாதன் கூறினனேயொழிய அவளாக வந்து எந்தப் பதிலும் சொல்லமாட்டாள் என்பதையும் அவன் அறிந்தேயிருந்தான். அன்றிரவு அவளைச் சந்தித்த பிறகு அவள் முகத்தில் ஏதாவது மாறுதல் தென்படுகிறதா என்று ஆராய்வதிலேயே அவன் மனம் ஈடுபட்டிருந்தது. ஆபீஸுக்குப் போகும் நேரம், வெளியே திரியும் நேரம் நீங்கலாக மற்ற வேளைகளில் அவனை அறியாமல் அவள்மீது கண்ணோட்டம் செலுத்திவந்தான். ருக்குவின் உள்ளத்தில் அவன் எழுப்பியுள்ள பிரச்னையினுல் கவலை தேங்கியிருக்கும். அந்தக் கவலை அவள் முகத்தில் தென்படும் என்று நினைத்தான் அவன். ஆனுல் அவள் முகம் நிர்மலமாக இருந்ததைக் காண அவனுக்கே ஏமாற்றம் உண்டாயிற்று. தான் படும் அவஸ்தைகளுக்கு நேர்மாருக அவள் நிம்மதியுடன் இருக்கிருளே, அது எப்படி ? என்று அடிக்கடி தன்னைத்தானே கேட்டுக்கொண்டான் அவன். கடைசியாக அவன் மனத்தில் ஒரு புதிய யோசனை உண்டாயிற்று.

ஒருநாள் ஆபீசுக்குப் புறப்படும்போது, "ருக்கு, சாயந்தரம் உன்னைச் சினிமாவுக்கு அழைத்துக்கொண்டு போகப் போகிறேன். ஐந்து மணிக்கெல்லாம் தயாராக இரு" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினுன்.

ருக்குவுக்கு என்னவோபோல் இருந்தது. அவனுடன் சினிமாவுக்காவது வேறு எங்கேயாவது இதுவரையில் அவள் தனியாகப் போனதில்லை. இப்போது திடும் என்று அவளைத் தயாராக இருக்கும்படி சொல்லிவிட்டு அவன் ஆபீசுக்குப்

போய்விடவே ருக்குவின் மனத்தில் பலவிதமான எண்ணங்கள் உண்டாயின. அவனுடன் போவதா வேண்டாமா என்று கூட ஒரு கேள்வி எழுந்தது அவள் உள்ளத்தில். போகாமல் இருந்தால் அதனுல் அநாவசியமான மனஸ்தாபம் உண்டாகும் என்றும் தோன்றியது. எனவே மத்தியான்னம் மூன்று மணி வரையில் எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணிவிட்டுப் புறப்படத் தீர்மானித்தாள், ருக்கு. வெளியே புறப்பட ஆயத்தப்படவேண்டும் அல்லவா? நல்ல புடைவை ஒன்றை எடுத்துத் தரித்துக்கொண்டு நகை நட்டு எல்லாம் அணிந்து நாலு, நாலரை மணிக்கே ஆஜரானுள், அவள். தன் அலங்காரங்களையெல்லாம் கண்ணுடியில் பார்த்தபோது அவளுக்கே கூச்சமாக இருந்தது. மைசூரில் அத்தையுடன் இருந்தபோது அவள் இப்படியெல்லாம் அலங்கரித்துக்கொண் டிருக்கிருள். ஆனுல் கோயம்புத்தூருக்கு வந்தபிறகு இந்த அலங்காரங்களைச் செய்துகொள்ளுவது இதுதான் முதல்தடவை. எனவே அவளுக்கே தன் பிம்பத்தைக் கண்ணுடியில் பார்த்தபோது என்றும் இல்லாத கூச்சம் ஏற்பட்டது.

கண்ணுடிக்கு எதிரில் தன் அழகைக் கண்டு தானே மயங்கிய நிலையில் இளமுறுவல் பூத்த இன்ப வதனத்துடன் நின்றிருந்தபோது, எங்கிருந்தோ திடுதிப்பென்று வந்து குதித்தாள் நாச்சியாரம்மாள்! ரங்கநாதனின் அத்தைதான். 'உஸ்! அப்பாடா! போறும் டாப்பா இந்தப் பஸ்ஸூம் எழவும்!' என்று அலுத்துக்கொண்டே கையில் ஒரு சின்ன மூட்டையுடன் ஹாலுக்கு வந்தாள். எதிரே கண்ணுடிக்கு எதிராக நின்றிருந்த ருக்குவைக் கண்ணுற்றதும், "ஏண்டி, ருக்குவாடி அங்கே நிற்கிறது? இது என்ன சிங்காரம் சினிமாக்காரி மாதிரி!" என்று வெடுக்கென்று கேட்டாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சட்டென்று திரும்பினுள் ருக்கு. எதிரே அத்தை நிற்கிருள்! அதுவும் எதிர்பாராத சமயத்தில் எதிரே வந்து நிற்கிருள்! ருக்குவின் முகம் சவம் போல் வெளுத்தது. "அத்தை, நீங்களா! எப்போது வந்தீர்கள்? கடுதாசிகூடப் போடவில்லையே! நீங்கள் வர இன்னும் ஒரு மாசம் ஆகும் என்று சொன்னுரே!" என்று

அந்தச் சமயத்தில் வேறொன்றும் பேசத் தெரியாமல் அசடு வழியும் முகத்துடன் பேசினாள் ருக்கு.

"ஆமாண்டியம்மா ஆமாம்! நீ இப்ப இருக்கப்பட்ட தினுசு தெரிஞ்சிருந்தா இன்னும் ஒரு மாசம் என்ன, ஒரு வருஷம்கூடக் கழிச்சுத்தான் வருவேன். ஏன்? வராமெ கூட இருப்பேன். ஆமாம், அப்ப எல்லாம் நான் ஆயிரம் தடவை வேண்டி வேப்பிலெ யடிச்சும் இப்படிச் சிங்காரிச்சுக்க இஷ்டப்படாதவள் மாதிரி வேஷம் போட்டாயே! இப்ப நான் இல்லாமல் போகவே..." என்று நிறுத்திவிட்டு மறுபடியும், "ஆமாம் இத்தனை திரிசமமும் எங்கிருந்து கத்துண்டே? ஹூம்" என்று சொல்லிக் கையில் இருந்த மூட்டையைத் தொப்பென்று ஓசைப்படும்படி தரையில் வைத்தாள்.

ருக்கு வெலவெலத்துப் போனாள். ஒரு நாளும் இல்லாமல் இன்று அவள் அலங்காரம் செய்துகொண்டது போக அதைக் கண்டு சீற்றமடையத் திடீரென்று இந்த அத்தை வந்து சேரவேண்டுமா என்று தோன்றியது அவளுக்கு. ஆனால் மைசூரில் இருந்தபோது இதே அத்தை, தன்னை, 'இந்தப் புடைவையை உடுத்துக்கொள்! அந்த நகையைப் போட்டுக்கொள்' என்று ஆயிரம் தடவை ஆசை ஆசையாகத் தூண்டினாளே! அவளா இப்போது நேர் மாறாகப் பேச வேண்டும்?' என்று எண்ணியபோது ருக்குவின் மனம் குழப்பமடைந்தது.

"அத்தை, நீங்கள் நினைக்கிறபடியெல்லாம் ஒன்றும் இல்லையே. 'சினிமாவுக்குப் போகவேண்டும்; தயாராக இரு' என்று உங்கள் மருமான் சொல்லிவிட்டுப் போனார். இன்றைக்குத்தான் இங்கே வந்த பிறகு இந்தப் புடைவையை உடுத்துக் கொண்டேன்.."

"சினிமாவுக்கும் போறெகளோ, சினிமாவுக்கு! ஹூம்!" என்று உறுமிக்கொண்டே ஹாலைவிட்டுக் கிளம்பி வீட்டின் பின்பக்கம் போனாள் நாச்சியாரம்மாள்.

ருக்குவும் சமாளித்துக்கொண்டு அத்தைக்குக் கை கால் அலம்பிக்கொள்ளவென்று ஒரு செம்பில் ஜலம் எடுத்துக் கொண்டு அவள் பின்னால் சென்றாள்.

அவர்கள் இருவரும் ஹாலைவிட்டுச் சென்ற சில நிமிஷங்களுக்கெல்லாம் ரங்கநாதனே வந்துவிட்டான். ஒரு நாளாவது அவன் ருக்குவைக் கூப்பிட்ட வண்ணமோ இப்படி ஆர்ப்பாட்டம் செய்த வண்ணமோ வந்ததில்லை. ஹாலுக்குள் நுழையும்போதே, "ருக்கு, ரெடியா? இந்தா இந்தக் கனகாம்பரத்தை வாங்கிக்கொள்!" என்று உரத்த குரலில் கூறிக்கொண்டே வந்தான்.

பின்கட்டிலிருந்த அத்தை பிரமித்தே போனாள். ருக்குவும் திகைப்புற்றாள். அவர்கள் பிரமை தீரு முன்பே ரங்கநாதன் கையில் கனகாம்பர மலர்ச் சரத்துடன் பின்கட்டுக்கு வந்து சேர்ந்தான். அங்கே ருக்குவுடன் அத்தையும் நிற்பதைக் கண்டு அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டான்.

35

## ஆணும் பெண்ணும்

ரங்கநாதன் நின்ற நிலையைக் கண்டதும் நாச்சியாரம்மாளுக்கு ஆத்திரம் பின்னும் அதிகரித்தது. "ஏண்டாப்பா! என்ன அப்படி என்னைப் பார்த்ததும் பேயையோ பிசாசையோ கண்டதுபோல நின்னுட்டே! நீங்க ரெண்டு பேரும் குஷாலாயிருக்கிற சமயத்திலே, 'பானகத் துரும்பு மாதிரி இவள் எங்கேடா வந்து சேர்ந்தாள்?'னு நினைக்கிறையா என்ன? உம், சாக்கடைப் புழுவுக்குப் போக்கிடம் எங்கே இருக்கு? என் கண்தான் பாவிக் கண். நீங்க ரெண்டு பேரும் இப்படி இருக்கறதைப் பார்த்துச் சந்தோஷப்படமாட்டேனு என்ன நான்? அங்கே இருந்த வரைக்கும் ரெண்டு பேரும் தீண்டாச் சூஸ்திரமா இருந்தெகளே! நானு இப்படியெல்லாம் இருக்கிறதை வேண்டாம்னு சொன்னேன்?" என்று வாயில் வந்ததையெல்லாம் உளறிக் கொட்டினுள் நாச்சியாரம்மாள்.

அவளைத் திடுதிப்பென்று காண நேரிட்ட பிரமை நீங்கவே ரங்கநாதனுக்குச் சிறிது நேரம் பிடித்தது. பிறகு தன்னையும் அறியாமல் வாய்விட்டுச் சிரித்துவிட்டான். 'ஒரு நாளும் இல்லாமல் திருநாளுக்குப் போகத் திருநாளும் வெறு நாளாய்' மாறியதுபோல இருந்தது, அந்தச் சந்தர்ப்பத்தில் ஏற்பட்ட சம்பவம். ருக்குவின் மனத்தை ஊக்கி அவள் இஷ்டப்படியெல்லாம் நடந்துகொண்டு அவளை மிகவும் அன்புடன் நடத்துவதுபோல நடத்தி அவள் மனத்தில் ஆசை அலைகளை எழுப்பி எப்படியாவது தந்திரமாக அவள் அந்தரங்கத்தை அறிய எண்ணினுன் ரங்கநாதன். அதற்காகத்தான் அன்றைத் தினம் அவளைச் சினிமாவுக்குக் கூட்டிச் செல்வதாக அவன் திட்டம் போட்டிருந்தான். ஆனல், அவன்

நடத்தவிருந்த நாடகம் ஆரம்பமாவதற்கு முன்பே, 'திரை தூக்கும் முன்னரே கொட்டகையில் தீப்பிடித்தது' போல ஆகிவிட்டது, நாச்சியாரம்மாளின் திடும் பிரவேசத்தால். இந்த உணர்வுதான் அவன் அப்படிச் சிரித்ததற்குக் காரணம்.

ரங்கநாதன் தன் பேச்சைக் கேட்டுவிட்டுச் சிரித்தது அவன் தன்னை வேண்டுமென்று அவமானப்படுத்தியதுபோல இருந்ததோ என்னவோ, நாச்சியாரம்மாளுக்கு? "ஆமாண்டாப்பா ஆமாம். வந்தவளை, 'எப்ப வந்தே?'ன்னுகூட ஒரு வார்த்தை கேக்கத் தெரியல்லே. சிரிக்க மாட்டையோ பின்னே! எல்லாம் என் எழுத்து! நீயா சிரிக்கிறே? உன்னைப் பிடிச்சு அப்படி ஆட்டருளே இந்தச் சித்திராங்கி? அவள் அப்படிச் சிரிக்க வைக்கிரு! இல்லாதெ போனு ஆயிரம் அனுப்பறேன், ஐந்நூறு அனுப்பறேன்னு ஆசை காட்டி மோசம் பண்ணுவானு அவள் அப்பன். பார்க்கப்போனு நாந்தான் பணத்துக்குப் பேயாப் பறக்கிறேன்னு சொல்லுவான் இவளண்டை. நான் பணம் கேட்டேனு, காசு கேட்டேனு? இவா சாவகாசமே வேண்டாம்னுதான் நான் அன்னிக்கும் அடிச்சுண்டேன், இன்னிக்கும் அடிச்சுக்கறேன். இன்னமே என் பேச்சுக்கு எங்கே மதிப்பு இருக்கப் போகிறது!" என்று நாச்சியாரம்மாள் தன் சுயரூபத்தைக் காட்டத் தொடங்கிவிட்டாள்.

ரங்கநாதனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தன் அத்தையின் வார்த்தைகளுக்கு என்ன அர்த்தம் என்றுகூட அவன் ஆராயப் புகவில்லை. அவன் மனத்தில் ஒரே எண்ணந்தான் இப்போது குடிகொண்டிருந்தது: 'ருக்கு விஷயத்தில் தான் எப்படி நடந்துகொள்ள முயன்ருலும் ஏதாவது ஒரு தடை ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது' என்பதுதான் அந்த எண்ணம். இந்த எண்ணம் மனத்தில் ஏற்பட்டவுடனே அவனுல் அந்த இடத்தில் அதிக நேரம் நிற்க முடியவில்லை. வந்த வழியே திரும்பித் தன் அறைக்குப் போய் உன்மத்தம் பிடித்தவன்போல உட்கார்ந்துகொண்டான்.

நாச்சியாரம்மாளின் கூச்சலைக் கேட்டு ருக்குவும் பயந்து போனுள். அவள் தன் பெற்ருேரைக் குறிப்பிட்டுக் கூறிய வார்த்தைகள் அவள் நெஞ்சில் வேதனையை அளித்தன. ஆசை காட்டி மோசம் செய்தார்கள் என்று அத்தை அவர்களைத் தூற்றியதைப் பொறுக்க முடியவில்லை ருக்குவால். அவள் கண்களில் கரகரவென்று வந்த கண்ணீர் கன்னங்களிலும் வழிந்துவிட்டது. அதை மறைத்துக்கொள்ள அவளும் சரேலென்று உள்ளே போய்விட்டாள்.

விஷயம் இதுதான். மைசூரைவிட்டு இத்தனை சீக்கிரத்தில் நாச்சியாரம்மாள் கோயம்புத்தூருக்கு வரப்போவதாக அவன் கருதவே இல்லை. தசராவுக்கு இருந்து போகும்படி ராஜலக்ஷ்மி வற்புறுத்தியதையும், தன் மருமானும் நாட்டுப் பெண்ணும் தனிக்குடித்தனம் செய்யும்படி விடவேண்டும் என்று அவள் எடுத்துரைத்ததையும் நம்பி மைசூரிலேயே சில காலம் தங்கிய நாச்சியாரம்மாளுக்கு வேதவரத்திலிருந்து வந்த கடிதம் ஒன்றுதான் எல்லையற்ற கோபத்தை உண்டாக்கியது. தேவராஜ ஐயங்காரும் செங்கமலமும் ருக்குவை நாச்சியாரம்மாளிடம் ஒப்படைத்துவிட்டு ஊருக்குத் திரும்பிய பின் ரங்கநாதன் மைசூர் வந்து சேர்ந்த விஷயமும் ருக்குவின் க்ஷேமாதிசயங்களும் அவ்வப்போது ராஜலக்ஷ்மியின் கடிதங்கள் மூலமாகத்தான் அவர்களுக்குத் தெரிந்த வரலாயின.

ஒரு கடிதத்தில் ராஜலக்ஷ்மி ரங்கநாதனுக்கு மைசூரை விட்டுக் கோயம்புத்தூருக்கு மாற்றலாகியிருப்பதைக் குறித்து எழுதியிருந்தாள். அதே கடிதத்தில் ரங்கநாதனும் ருக்குவும் கோயம்புத்தூரில் தனியாகக் குடித்தனம் செய்யப் போவதாகவும், நாச்சியாரம்மாள் தற்காலிகமாக மைசூரில் தன்னுடனேயே இருக்கப் போகிருள் என்றும், அவள் இருக்கும் போதே அவர்கள் அனுப்புவதாகச் சொல்லிச் சென்ற பணத்தை அனுப்பிவிடும்படியும் எக்காரணத்தை முன்னிட்டும் இன்னும் சில காலம் வரையில் அவர்கள் தங்கள் பெண்ணையோ மாப்பிள்ளையையோ பார்க்கவேண்டும் என்கிற நினைவை ஒத்திப்போட்டு வைக்கவேண்டும் என்றும் எழுதியிருந்தாள்.

இந்தக் கடிதத்துக்குப் பதிலாக வேதவரத்திலிருந்து வந்த கடிதமே நாச்சியாரம்மாளுக்கு நஞ்சாகக் கசந்தது. பெண்ணும் மாப்பிள்ளையும் மைசூரில் தனிக் குடித்தனம் நடத்துவது பற்றித் தங்களுக்குள்ள சந்தோஷத்தைத் தெரிவித்துவிட்டு, நேரில் சொல்லியபடி அந்தச் சமயம் பணம் அனுப்பச் சௌகரியப்படவில்லை என்பதுபற்றிச் சற்று விஸ்தரமாகவே அந்தக் கடிதம் வர்ணித்துவிட்டது. இது தான் நாச்சியாரம்மாளுக்குப் பிரமாதமான கோபத்தை உண்டாக்கிவிட்டது. "பாத்தையாடி ராஜலக்ஷ்மி, அவா குணத்தைக் காட்டிவிட்டா பாத்தையா? பெண்ணும் மாப் பிள்ளையும் தனிக்குடித்தனம் பண்ணறது சந்தோஷமா யிருக் காம். நான் ஒத்திதானே அதிகமாப் போச்சு. இவா எண்ணத்தைப் பாரேன்! பணம் அனுப்ப முடியாதுங்கறத் துக்கு எத்தனை சாக்கு, என்ன என்ன சால்ஜாப்பு! இந்த ராமாயணமெல்லாம் யார் கேட்டா இவாளை? ஹூம்! வேதவ ரத்தான் புத்தி, நாம்ப அமுக்கி வச்சாக்கூட மறைந்து போகுமா என்ன?'' என்று அப்போதே ராஜலக்ஷ்மியிடம் தன் அதிருப்தியைக் காட்டிவிட்டாள் அத்தை நாச்சியாரம் மாள்.

அதற்குமேல் அவளை இரண்டு நாட்கள்கூட மைசூரில் தங்கச் செய்வது ராஜலக்ஷ்மிக்கே மிகவும் கடினமான காரிய மாயிருந்தது. இதற்குள் அவளும் சொந்தக் காரியமாகச் சென்னைக்குப் போகும்படி நேர்ந்தது. எனவே மைசூரிலி ருந்து நாச்சியாரம்மாளை நீலகிரிக்குப் பஸ்ஸில் போகும்படி ஏற்பாடு பண்ணிவிட்டு, அங்கிருந்து கோயம்புத்தூருக்குப் பஸ் மூலமாகவே பிரயாணம் செய்யும்படி கூறி அனுப்பி விட்டாள் ராஜலக்ஷ்மி. அடக்க முடியாத கோபத்துடன் சாமுண்டீசுவரி மகிஷாசுரனை மர்த்தனம் செய்யக் கிளம்பியது போலப் புறப்பட்டாள். வழிநெடுகப் பஸ் பிரயாணந்தான்; அதுவும் காடு, மலை, வனம், வனாந்தர மார்க்கமாகக் கோயம் புத்தூரை அடைந்தபோது அவள் சொரூபம் எப்படி இருந்தி ருக்கும்? எந்த நிமிஷத்தில் ருக்குவின் பெற்றோரிடமிருந்து பணம் அனுப்பச் சௌகரியம் இல்லை என்று கடிதம் வந்ததோ

அந்த நிமிஷமே நாச்சியாரம்மாளுக்கு ருக்கு வேப்பங் காயாகக் கசந்து போனுள் என்பது சொல்லத் தேவையில்லை. இந்த நிலையில் மிகவும் பிரயாசையான பிரயாணத்துக்குப் பிறகு கோயம்புத்தூர் வந்து சேர்ந்து வீட்டில் அடியெடுத்து வைத்ததும், அவள் வேப்பங்காயாகக் கருதியவள் அவள் மருமானுக்குக் கனிந்த திராக்ஷைப் பழம்போல விளங்குவ தாகக் கற்பனை செய்துகொண்டதும் அவள் வெறி பதின் மடங்கு அதிகமாயிற்று.

கடைசியாக, அத்தையின் எதிர்பாராத வரவினுல் ரங்க நாதன் போட்டிருந்த திட்டம் முரிந்தது. ருக்கு, சற்று நேரத் துக்குள்ளாகவே அலங்காரங்களைக் களைந்துவிட்டு ஒரு நீண்ட பெருமூச்சுடன் வீட்டுக் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினுள். ரங்கநாதன் மெதுவாக வீட்டைவிட்டே நழுவிவிட்டான். அங்கே இன்னும் சிறிது நேரம் இருந்தால் அத்தையின் கோபம் அதிகமாகும் என்று எண்ணினுனே, அத்தையின் சினம் ஆறிய பிறகு சாவதானமாக வந்து அவளுடன் பேசலாம் என்று கருதினுனே?

நாச்சியாரம்மாள் மாத்திரம் ஆத்திரத்தோடு ஆத்திரமாக ருக்குவை அழைத்து, “இதோ பார். எனக்காக நீ ஒண்ணும் பண்ணவேண்டாம். ராத்திரிக்கு நான் ஒண்ணும் சாப்பிடப் போறதில்லே!” என்று கண்டிப்பாகக் கூறிவிட்டு ஹாலில் போய்ச் சிறிது நேரம் உட்கார்ந்திருந்த பின்னர் எழுந்து வாசல் பக்கமாகப் போனுள்.

அன்றிரவு ரங்கநாதன் தன் அறையில் ஒரு முக்கியமான மாறுதலைக் கண்ணுற்ருன். அது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. அத்தை வந்து சேர்ந்த சிறிது நேரத்துக்கெல்லாம் வெளியே போய்விட்டவன் திரும்பி வீட்டை அடைந்தபோது இரவு பதினெரு மணிக்கு மேல் ஆகிவிட்டது. ஹாலில் ஓர் இருட்டு மூலையில் அத்தையின் குறட்டைச் சப்தம் கேட்டுக் கொண்டிருந்தது. பிரயாண அலுப்பு, பசி, கோபம் எல்லா மாகச் சேர்ந்து அவளை ஓர் அலக்கு அலக்கிய பின் பேயாடி விட்ட புளியமரம் போலச் சோர்ந்து போய்த் தூங்கிவிட்டாள் அவள்.

ரங்கநாதன் தன் அறையில் நுழைந்தபோதே ஊது வத்திப் புகையின் சுகந்தம் அவன் மூக்கில் ஜம்மென்று ஏறி யது. அறைக்குள் கால் வைத்தவன் கணநேரம் அப்படியே நின்றுவிட்டான். 'என்றும் இல்லாதபடி இன்று இங்கே ஊதுவத்தியின் வாசனை ஏன் ?' என்று ஒரு கேள்வி அவன் உள்ளத்தில் எழுந்தது. அவன் கண்கள் அறையை ஒரு தரம் சுற்றிக் கவனித்தன. அவன் படுக்கையின் பக்கத்தில் அவள் படுக்கை இருந்தது. அதைக் கண்டதும் அவனுக்கு மயிர்க்கூச்சல் எடுத்தது. ஆயினும் அவன் இருதயத்தின் மீது ஏதோ ஒரு கனமான வஸ்து அழுத்தியது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று அவனுக்கு.

ரங்கநாதன் அறைக்குள் நுழைந்த சிறிது நேரத்துக் கெல்லாம் ருக்கு அங்கே வந்தாள். அவனைச் சாப்பிட அழைத்தாள். அவன் உள்ளம் இருந்த நிலையில் சாப்பிட வேண்டுமென்றே தோன்றவில்லை அவனுக்கு. ஆனால் அவளை ஒரு தரம் குழப்பத்துடன் பார்த்தான். சாயந்தரம் அவன் வீட்டுக்கு வந்தபோது கணநேரமேதான் அவளைப் பார்த் தான். அப்போது ஒரு சௌந்தரிய தேவதைபோலத் தென் பட்டாள் அவள், அவன் கண்களுக்கு. இப்போதும் அவள் சௌந்தரியம் ஒன்றும் குறைந்துவிடவில்லை. ஆனால் அப் போது அது பொங்கிவழியும் பால்போல இருந்தது. இப் போது அந்தப் பால் பொங்கி அடங்கிவிட்டது. நன்றாகச் சுண்டக் காய்ந்து தணிந்தபின் ஆறிப்போய் உறைந்து கொண்டிருந்தது அது. எப்படி இருந்தபோதிலும் நிலைமை ஒன்றுதானே? பூரிப்புடன் பொங்கி எழும் பாலையும் உடனே பருக முடியாது; வாய் வெந்துபோகும். உறைந்துபோன பாலையும் பருக முடியாது; அது உடம்புக்கு ஆகாது.

ரங்கநாதன் அவளைப் பார்த்த பார்வையில் என்ன அர்த் தத்தை உணர்ந்தாளோ ருக்கு. "நீங்கள் சாப்பிடப் போகிற தில்லையா ?" என்று கேட்டாள் மெதுவான குரலில்.

"இல்லை."

"சரி."

அடுத்த விநாடியே ருக்கு அந்த அறையை விட்டுப் போய்விட்டாள்; பின்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் திரும்பவும் அங்கே வந்துசேர்ந்தாள்.

இதை எதிர்பார்த்துக்கொண்டுதான் ரங்கநாதன் தன் படுக்கையைக்கூட விரித்துக்கொள்ளாமல் நாற்காலியிலேயே உட்கார்ந்திருந்தான். ருக்கு அவனிடம் வந்ததும், "உங்களைக் கேட்காமல் ஒரு காரியம் செய்துவிட்டேன். அது உங்களுக்குப் பிடிக்காதிருக்கலாம். இருந்தாலும் என்னை மன்னியுங்கள்" என்று சொல்லிவிட்டு அவன் என்ன பதில் சொல்லப்போகிருன் என்று அறிய விரும்புகிறவள்போல அவன் எதிரே இருந்த மேஜையின்மேல் கையை ஊன்றிக் கொண்டு அவனையே பார்க்கலானுள்.

"ஆம். இந்த ஊதுவத்திப் புகை என் மூக்கைத் துளைக்கத்தான் துளைக்கிறது. இது ஏன்?" என்று வறட்டுக் குரலில் பேசினுன் ரங்கநாதன்.

"அது மட்டுந்தானு? இதோ இந்த ஜன்னலைத் திறந்தால் அது ஒரே நொடியில் ஓடிப்போய்விடும். ஆனுல் அதை விடப் பெரிய காரியம் ஒன்று செய்திருக்கிறேனே" என்ருள் ருக்கு.

அவள் தன் படுக்கையை அந்த அறைக்குக் கொண்டு வந்ததைப் பற்றித்தான் குறிப்பிடுகிருள் என்று எளிதில் உணர்ந்துகொண்டான் ரங்கநாதன். எனவே, "ஆமாம் அதுவும் தெரிகிறது. ஆனுல் அதுவுந்தான் ஏன்? உன் முடிவை என்னிடம் நீ தெரிவிக்கவில்லை. தெரிவிக்கமாட்டாய் என்பதும் தெரியும். இப்படியிருக்கையில் சாத்தியமற்ற காரியத்தைச் செய்ய முயலுவதால் பலன் என்ன?" என்ருன்.

"பலன் என் வரையில் ஒன்றும் இல்லை. உங்கள் மனத்தில் படிந்திருக்கும் பாசியை அழிக்க இயலாதவளாக இருக்கிறேன். இருப்பினும் பரிசுத்தமான உள்ளத்துடன் என்னை நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றுதான் நான் மன்ருடுகிறேன்."

"பரிசுத்தமான உள்ளத்துடன்! ஹூம்! பாசி படர்ந்த உள்ளம் அந்தப் பாசியை அகற்றினுலன்றிப் பரிசுத்தமடையுமா?"

அந்தக் கேள்வி ருக்குவின் மனத்தில் சிந்தனையைக் கிளப்பியது. ஆம்! அவன்மீது துளிகூடத் தவறில்லை. அவன் இருதய பூர்வமான அன்பை அவள் வேண்டுகிறாள். அதற்கு அவள் அருகதையுடையவள் அல்ல என்று அவன் கருது கிறான். அவன் தூய்மையான அன்புக்குத் தான் தகுதி யுடையவளே என்று அவள் நிரூபிக்கவேண்டும். அதற்கு அந்த ரகசியம் அவனுக்குத் தெரிந்தாகவேண்டும். இது அசாத்தியம். இந்த நிலையில் உலகம் அவர்களைப்பற்றி வேறு விதமாக நினைக்கிறது. அவர்கள் இருவரும் பரஸ்பரம் தமது காதலைப் பரிமாறிக்கொண்டு இனிய வாழ்க்கை நடத்து கின்றனர் என்று கருதுகிறது உலகம். அத்தை நாச்சியா ரம்மாளோ உலகத்தைவிட ஒருபடி மிஞ்சியே போய்விட்டாள், தன் அபிப்பிராயத்தில். 'அவள் அவனைத் தன் இஷ்டப்படி யெல்லாம் ஆட்டுகிறாள்; எல்லாம் தலைகீழாக மாறிவிட்டது; அவன் அவள் கைப்பொம்மையாக ஆகிவிட்டான்' என்று எண்ணுகிறாள் அவள். இது எத்தனை கசப்பான அநுபவம்! எட்டிக்காய்கூட இதைவிட அதிகமாகக் கசக்குமா?

ருக்குவின் சிந்தனை இன்னும் ஒருபடி முன்னேறியது. 'உண்மை நிகழ்ச்சிக்கும் உலக அபிப்பிராயத்துக்கும் மலைக் கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம் இருக்கிறது. இருவரும் கஷ்டப்படுவதை உலகம் சுகம் என்று நினைக்கிறது. என்ன நேர் மாறான அபிப்பிராயம்?'

ருக்குவின் சிந்தனை பின்னும் மேலோங்கியது. புருஷன் தன்னைப் பரிசுத்தமான உள்ளத்துடன் ஏற்றுக்கொள்ள முடியாது. தன்னை ஏற்றுக்கொள்ளாவிட்டால் அவன் வாழ்க் கையில் சுகம் அடையப்போவதில்லை. அவன் சுகத்தைக் கெடுப்பது தருமமா? அவன் சுகத்துக்காக அவள் தன்னைத் தானே தியாகம் செய்யவேண்டும். எப்படி? அவன் பருவ காலத்தின் துடிதுடிப்புடன் இருக்கிறான். வாலிபத்தின் இயற்கையான ஆவலுடன் அவளை நாடியபோது அவனைக் கேவலம் மிருகமாக எண்ணினாள் அவள். மனசின் பக்குவத் திற்கும் தத்துவபூர்வமான சிந்தனைக்கும் மதிப்புக் கொடுத்த அவளது உள்ளம், அவனுடைய பருவகாலத்தின் இயற்கை

நியதிகளுக்கு மரியாதை செலுத்தவில்லை. இந்த உதாசீனந் தான் அவர்களிடையே இருந்த தூரத்தை அதிகரிக்கச் செய்தது.'

ருக்குவின் சிந்தனை எல்லை மீறியது. 'இதன் பலன் என்ன? இன்று அவன் படும் கஷ்டந்தான் அவள் கண்ணுக் குத் தெரிகிறது. அவளுக்குந்தான் இருக்கிறது கஷ்டம். ஆனால் அவள் பெண். சகிப்புத்தன்மை என்கிற மண்ணைப் பிசைந்து அவள் ஓவ்வோர் அணுவும் உருவாக்கப்பட்டிருக் கிறது. பொறுமையின் பொக்கிஷம் அவள். ஸ்திரீ தர்மத்தை அவள் காப்பாற்ற வேண்டும்.'

ருக்குவின் சிந்தனை பிரளயமாகி விட்டது. அந்த ஸ்திரீ தர்மத்தை அவள் எப்படிக் காப்பாற்றுவது! அவள் புருஷன் சுகமடையவேண்டும்! எப்படி? எப்படியாவது! அதற்காக அவள் எந்த விதமான தியாகத்தையும் செய்யத் தயாராக இருக்கவேண்டும். அவள் நல்வாழ்வு வாழ்வதாக உலகம் பழி சாற்றுகிறது, அவள்மீது. அவள் சகித்துக்கொண் டிருக் கிறாள். அவள் தன் ரகசியத்தைக் கூறாதபடியால் அவளைப் பற்றித் தவறாகக் கருதுகிறான் அவள் புருஷன். அதைச் சகித் துக்கொள்ள முடியவில்லையே அவளால். இதனால்தானே அவன் சுகம் சிதறியது? இதிலும் தன் சகிப்புத் தன்மையைக் காட்டினால் என்ன?'

ருக்குவின் சிந்தனைப் பிரளயம் ஓய்ந்துபோய் அமைதி ஏற்படுகிறது அவள் உள்ளத்தில். அப்போதுதான் அந்த எண்ணம் உதயமாகிறது, வெள்ளக்காடான பிரதேசத்தி லிருந்து வெள்ளம் வடிந்து வெள்ளத்தின் சேதமும் அளவிடப் பட்டு, நிவாரண வேலைக்கு அஸ்திவாரம் போடுவதுபோல.

மிகவும் அமைதியான குரலில் பேசுகிறாள் ருக்கு இப் போது: ''உங்கள் மனைவிக்கு உரிய அந்தஸ்தை எனக்கு அளிக்க உங்கள் மனம் இடங்கொடுக்கவில்லை. உங்களுடைய தாசியாகவாவது அங்கீகாரம் செய்யுங்கள்.''

அதைக் கேட்டதும் திடுக்கிட்டுப் போனான் ரங்கநாதன். அவன் ஏதோ பேச வாயெடுக்குமுன் மீண்டும் ருக்குவே பேசினாள். ''உங்கள் சுகந்தான் முக்கியம். அதற்காக

நான் எந்த விதமான சிறுமைகளையும் சகிக்கத் தயாராக இருக்கிறேன். என்னை இந்த அறையைவிட்டுப் போகச் சொல்ல வேண்டாம். இங்கேயே ஒரு மூலையில் முடங்கிக் கிடக்கிறேன்'' என்று சொல்லி அவன் பாதங்களில் விழுந்து வணங்கினுள் ருக்கு.

ரங்கநாதன் தன்னையும் மீறி அவள் கைகளைப் பற்றித் தூக்கினுன். அவள் சரீரம் அவன்மேல் பட்டபோது மின் சாரம் பாய்ந்தது போன்றதோர் உணர்ச்சி ஏற்பட்டது அவனுக்கு. இந்த உணர்ச்சி அவனை மெய்ம்மறக்கச் செய்தது.

ரங்கநாதனுடைய மன உணர்ச்சிகளை நொடிப்பொழுதில் உணர்ந்துகொண்டாள் ருக்கு. அவன் இருதயம் அவள் இருதயத்துடன் இழைந்த தருணத்தில் அவனது ஜீவசக்தி யின் துடிப்புகள் அவள் இருதயத்தில் பதிந்தன. தன்னை மறந்து நின்ற நிலையிலே, அவனது உணர்ச்சிகளின் முத்திரை அவள் இதழ்களில் விழுந்தது. இதனுல் அவள் வேண்டுகோளை அவன் அங்கீகரித்து விட்டான் என்கிற எண்ணந்தான் ருக்குவின் மனத்தில் உண்டாயிற்று.

இந்த எண்ணம் ஏற்பட்டவுடன் ருக்குவின் கண்களில் அவளையும் அறியாமல் கண்ணீர் ததும்பியது. தன் சிறுமை உணர்ச்சியைச் சகித்துக்கொள்ளத்தான் அவள் முயன்ருள். ஆனுல் இயற்கையின் வலிமை அவள் தியாகத்தின் சக்தியை மீறுவதாக இருந்தது. உணர்ச்சி வசப்பட்டு மெய்ம்மறந் திருந்த ரங்கநாதன்கூட இதை உணர்ந்துகொண்டான். ததும்பிய அவள் கண்ணீர் சுடச்சுட அவன் மார்பில் பட்ட போது அவன் துணுக்குற்றுப் போனுன். அவளை அணைத்தி ருந்த அவன் கரங்கள் விலகிக்கொண்டன.

சற்று எட்டப் போய் நின்றுகொண்டு, "ருக்கு!" என்று அடித் தொண்டையிலிருந்து அழைத்தான்.

ருக்கு தலை நிமிராமலே பதிலளித்தாள்: "உங்கள் அடிமை'' என்று ஈன ஸ்வரத்தில்.

"அழுகிருயே!"

"இல்லை, அழவில்லை."

"அழவில்லையா? அப்படியானால் உன் கண்ணீர்?"

"ஆனந்தக் கண்ணீர். என் வேண்டுகோளை நீங்கள் ஏற்றுக்கொண்டதனால் உண்டான ஆனந்தம்" என்று சட்டென்று சாமர்த்தியமாகப் பதில் சொன்னாள் ருக்கு.

"உன் வேண்டுகோளை நான் ஏற்றுக்கொண்டேனா...?"

"ஆம். இந்த நிமிஷம் முதல் நான் உங்கள் தாசி. உங்கள் ஊழியக்காரி. உங்கள் சுகத்துக்காகவே உயிர் வாழும் ஒரு ஜீவன் நான். இந்த ஜன்மத்தில் இவ்வளவுதான் எனக்குப் பிராப்தம்."

"ருக்கு, ஏன் இப்படிப் பேசுகிறாய்? இந்த மாதிரியான வேண்டுகோளையா நான் ஏற்றுக்கொள்வது? முடியாது. உன் வேண்டுகோளை அங்கீகரித்து, உன் பெண்மைக்கே அவமானம் இழைக்க என்னால் முடியாது."

"உங்களை ரொம்பவும் கேட்டுக்கொள்ளுகிறேன். வேறு வழி இல்லை."

"ஒரே ஒரு வழி இருக்கிறது."

"அந்த வழி அபாயகரமானது. தயவு செய்து அதைத் திரும்பவும் ஞாபகப்படுத்த வேண்டாம். அது என் சக்திக்கு மீறியது. அந்த வழியில் செல்வதற்குப் பதிலாக நான் இந்த அவமானத்தைக்கூடப் பொறுத்துக்கொள்ளத் தயார்."

ஆனால் இது சாத்தியமானதல்லவே?"

"ஏன்?"

"மனைவியைத் தாசியாகப் பாவிப்பது மனித தர்மத்துக்கே முறைகேடானதல்லவா? உன் பெண்மையை அவமதித்து, உலகத்தின் பெண்மைக்குத் தீங்கிழைப்பதா? இது என் சக்திக்கு மீறியது."

"ஆனால் என்னை அங்கீகரிக்க மாட்டீர்களா?"

"முடியாது."

"என் கதி?",

"அது உனக்குத்தான் தெரியும்."

"உங்கள் சுகம்?"

"ஆண்டவனுக்கே வெளிச்சம்!"

"இல்லை, அப்படி விட்டுவிட முடியாது. இதனால் உங்களுக்கு வாழ்க்கையில் சுகமே இருக்காது. உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். உங்கள் சுகம் ஒன்றுதான் என்னை உயிருடன் இருக்கச் செய்யும். நீங்கள் நன்ருக இருக்கவேண்டாமா? நாளுக்கு நாள் இப்படித் தேய்ந்து போகிறீர்களே! என்னால் பார்த்துச் சகிக்க முடியவில்லையே!

ருக்கு விக்கி விக்கி அழத் தொடங்கிவிட்டாள். ரங்கநாதன் உள்ளத்திலும் துயர அலைகள் பொங்கி எழுந்தன. "ருக்கு, என் சுகத்துக்காக—ஏன்? வெறும் சரீர சுகத்துக்காக உன்னை ஒரு கருவி யாக்குவதா? இது சுயநலம். கண்ணியமுள்ள எந்த மனிதனும் இதை விரும்பவே மாட்டான். ஜீவ தத்துவமே இதற்கு மாருனது. இந்த வாழ்க்கையில் இனிமை காண முடியாது. இதில் தர்மத்துக்கு இடமில்லை; சத்தியத்துக்கு இடமில்லை. வாழ்க்கையின் லக்ஷ்யம் இதுதானு? கேவலம் சதை உணர்ச்சியின் பொருட்டு உன்னை உயிர்ப்பலி கொடுப்பதா? கூடாது: கூடவே கூடாது!"

"ஆனுல் இயற்கையின் நியதி இந்தத் தர்க்க நியாயங்களுக்கெல்லாம் கட்டுப்படுமா!"

"அந்த இயற்கையின் நியதியேதான் உன் வேண்டுகோளையும் மறுக்கச் செய்கிறது."

"வாஸ்தவம்!"

ருக்குவின் தொண்டையை ஏதோ ஒன்று அடைப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது அவளுக்கு. அதற்கு மேல் அவளால் ஒன்றும் பேச முடியவில்லை. சில விநாடிகளில் அங்கிருந்த அவள் படுக்கை அவளுடன் அந்த அறையை விட்டு நீங்கியது.

## 36

## புதியவள்

கோயம்புத்தூர் போய்ச் சேர்ந்த சில நாட்களுக் குள்ளாகவே நாச்சியாரம்மாளுக்கு விஷயம் தெரிந்துவிட்டது. அவள் வந்த தருணத்தில் ருக்குவின் அலங்காரத்தைக் கண்டு அவள் நினைத்தது தவறு என்பதை அவள் உணர்ந்து விட்டாள். ருக்குவுக்கும் ரங்கநாதனுக்கும் இடையே ஒழுங் கான தாம்பத்திய வாழ்வு இல்லை என்பதை நாச்சியாரம் மாளின் பெண் மனசு எளிதில் கண்டுகொண்டது. இந்த நிலைமை தெரிந்தபின் அவளுக்கு ருக்குவிடம் உண்டான அசூ யையும் எரிச்சலும் அதிகரிக்கத்தான் அதிகரித்தன. ஏற் கனவே அவள் சீரும் செனத்தியுமாக வரவில்லை என்ற குறை. அதனுடன் அவள் பெற்ருேர் வாக்களித்துப் போனபடி பணம் அனுப்பாமல் ஏதோ சால்ஜாப்புக் கூறிவிட்டார்கள் என்று கோபம். இங்கேயோ தன் மருமகனுக்கு அந்தப் பெண்ணுல் தாம்பத்திய சுகங்கூடக் கிடைக்கவில்லை என்று அறிந்தபோது அவள் ரௌத்திரம் கட்டு மீறியது. இவ்வளவுக்கும் பலன் இல்லாமற் போகுமா?

அப்போது ருக்கு அத்தையின் நாட்டாண்மைக்கும் அதிகாரத்துக்கும் உட்பட்டே எந்தக் காரியத்தையும் செய்ய வேண்டும். 'நில்!' என்ருல் நிற்கவேண்டும்- 'உட்கார்!' என்ருல் உட்காரவேண்டும். சமையல் அறையில் ருக்குவுக்கு இருந்த சுதந்தரத்தைக்கூட நாச்சியாரம்மாள் பறிமுதல் செய்துவிட்டாள். "நீ சமைச்சுப் போட்டு என் மருமான் உடம்பு குதிராப் போச்சு. போறும். இப்படி வாயிலே வைக்க வழங்காதபடி பண்டங்களைப் பாழாக்கினு வீடும் வெடிஞ்சு போகும். இந்த மாதிரியெல்லாம் பண்ணிப்போட்டுச் சாப்

பிடணும்னு எங்களுக்குத் தலையெழுத்து இல்லையே. நான் தான் ஒத்தி இருக்கேனே. பாத்துக்கறேன். சமையல் ஜோலிக்கு நீ வரவேண்டாம்!'' என்று ஒரு சமயம் வெகு கண்டிப்பாகக் கூறிவிட்டாள். நாச்சியாரம்மாள்.

நாச்சியாரம்மாளை எதிர்த்துச் சண்டை போட்டுக் கொண்டு ருக்குவுக்கு என்ன ஆகவேண்டும்? இப்போ தெல்லாம் அவளுடைய ஒரே எண்ணம் தன் புருஷன் சுகமாக வாழவேண்டுமானல் அதற்கு அவள் என்ன செய்ய வேண்டும் என்பதுதான். எனவே நாச்சியாரம்மாள் வசவு களை அவள் சற்றும் பொருட்படுத்தவில்லை. அவள் செய்ய வேண்டாம் என்கிற காரியத்தைச் செய்வதும் இல்லை.

வீட்டு வேலைகள் அவளுக்குக் கொஞ்சம் கொஞ்ச மாகக் குறைந்துபோய் அவள் சிந்தனைக்கும் வேதனைக்கும் நேரம் நிறைய இருந்தது! இதனல் அவள் மனத்தின் துன் பங்களும் அதிகமாயின. மூலைக்கு மூலை நிற்பதும் யோசிப்பது மாகப் பைத்தியக்காரிபோல் இருந்தாள் ருக்கு. ஆயினும் இதெல்லாம் ரங்கநாதன் வீட்டில் இல்லாத சமயத்தில்தான். அவன் வீட்டில் இருந்தபோது அவள் கவனம் பூராவும் அவன்மீதே இருந்தது. அவன் பேச்சிலும் பார்வையிலும் நடையிலும் உடையிலும் எந்த விஷயத்திலும் அவன் காட்டும் அசிரத்தையிலிருந்து அவன் படும் கஷ்டங்களை அவள் மனக் கண்கள் படம் பிடித்தன. அவன் வீட்டிலிருந்த சமயத்தில் அவள் மனம் பிடித்த படங்கள் எல்லாம் அவன் வீட்டை விட்டுக் கிளம்பியபின் மறுபடி திரும்பிவரும் வரையில் அவள் இருதயத் திரையில் சினிமாப் படங்கள்போல ஓடி அவளைச் சித்திரவதை செய்தன. அந்த வேளைகளில் அத்தையின் ஆக்கினைகள், ஆசீர்வாதங்கள் ஒன்றும் ருக்குவின் செவி களில் விழுவதில்லை.

இப்படிப் பல நாட்கள் கழிந்தன.

ஒருநாள் சாயந்தரம் வழக்கத்துக்குச் சற்று முன்ன தாகவே ரங்கநாதன் ஆபீசிலிருந்து திரும்பி வீடுவந்து சேர்ந்தான். அவன் வீட்டை அடைந்தபோது சமையற் கட்டில் பலத்த சப்தம் கேட்டது. அத்தையின் குரல்; ருக்கு

வைக் கண்டபடி அவள் திட்டிக்கொண் டிருந்தாள். இது ரங்கநாதனுக்கு முற்றும் புதிய அநுபவம். அவன் வீட்டில் இருந்தபோது நாச்சியாரம்மாள் ருக்குவை ஒரு வார்த்தை யாவது துச்சமாகச் சொல்லிக் கேட்டதில்லை. எனவே, இன்று அவள் கூப்பாடு போட்டுக்கொண் டிருந்தது அவன் மனத் திலே சஞ்சலத்தை உண்டாக்கியது. ஒன்றும் தோன்ருத வனுக அவன் மெல்ல நடந்து சென்று உன்மத்தம் பிடித் தவன் போலத் தன் அறையில் உட்கார்ந்துகொண்டான்.

அத்தையின் வசவுகள் உச்ச ஸ்தாயியில் கேட்டன: "மூதேவி, உன்னைக் கட்டிண்டு அவன் என்ன சுகத்தைக் கண்டான்? உங்கப்பன் கருமித்தனம் இந்த வீட்டையே துடைச்சுவிட்டுத்தான் நிற்கும். கால்வழியே சரியாயில்லையே! பீடை! இப்ப காலம் இருக்கிற இருப்பிலே இந்த மாதிரி ஒரு வெண்கலப் பானை வாங்க எத்தனை ரூபாய் பிடிக்கும் தெரி யுமா! தரித்திரக் கை! எதை எடுத்தாலும் தவறல்!"

'ஆம். தரித்திரக் கைதான்! எதை எடுத்தாலும் தவறத் தான் செய்கிறது! அன்று அவர் எழுதின [illegible]த்தைக் கை தவறி விளக்கின்மேல் போட்டுக் கருக[illegible]த கைதானே இது!' என்று ருக்குவின் மனம் தனக்குத்தானே அங்கலாய்த் துக்கொண்டது. அத்தை திட்டியதைப்பற்றி அவள் கவலைப் படவே இல்லை. அது அவளுக்குச் சகஜமாகப் போய்விட்டது. ஆனால் அத்தையின் வார்த்தைகளிலிருந்து அவளுக்குப் புல னுகிய சில உண்மைகள்தாம் அவள் நெஞ்சைச் சுட் டெரித்தன.

அத்தை போட்டுக்கொண் டிருந்த கூச்சலிலிருந்து விஷயம் என்னவென்று ரங்கநாதனுக்கு ஒருவாருகத் தெரிந் தது. ருக்கு ஏதோ ஒரு வெண்கலப் பானையைக் கைதவறிக் கீழே போட்டுவிட்டாள்; அது உடைந்து போய்விட்டது. அதற்குத்தான் இத்தனை ஆர்ப்பாட்டம்! இதை அறிந்ததும் ரங்கநாதனுக்கே பச்சாத்தாபம் உண்டாயிற்று. 'இதற்காகவா ருக்குவுக்கு இத்தனை வசவுகள்?' என்று அவன் மனம் தன்னைத்தானே கேட்டுகொண்டது. அத்தையின் கூச்சல் அடங்கச் சிறிது நேரம் பிடித்தது. அதுவரையில் அறையை

விட்டே வெளிவர வேண்டுமென்று ரங்கநாதனுக்குத் தோன்றவில்லை. சற்றுநேரம் சென்றது. ரங்கநாதன் அறையை விட்டு வெளியே வந்தபோது அத்தை வீட்டில் இல்லை. அவள் கூச்சலிட்டு ஓய்ந்தபின் ஏதோ காரியமாக அடுத்த வீட்டுப் பக்கம் போய்விட்டாள்.

ரங்கநாதன் சமையற் கட்டுக்கு அடுத்தாற்போல் இருந்த முற்றத்தண்டை சென்றான். பாத்திரங்களுக்கிடையில் ருக்கு ஒரு வெண்கலப் பானையின் உடைந்த துண்டுகள் இரண்டைக் கையில் வைத்துக்கொண்டு அதை ஒட்டவைக்கும் பாவனையில் ஆழ்ந்த யோசனையுடன் நின்றிருந்தாள். அவள் பின்னால் போய் நின்றுகொண்டு ரங்கநாதன், "ருக்கு!" என்றான் கனிவுடன்.

ருக்கு திடுக்கிட்டாள். அந்தச் சமயத்தில் அவன் வரவை அவள் எதிர்பார்க்கவில்லை.

"ருக்கு, உடைந்துபோன துண்டுகள் எங்கேயாவது ஒட்டுமா? அதிலும் வெண்கலம்?"

ருக்குவின் கண்களைக் கண்ணீர் மறைத்தது. அவள் மனத்துக்குள்ளேயே, 'இந்த மாதிரிதானே இருக்கிறது நம் இருவர் மனசும்?' என்கிற ஒரு கேள்வி பிறந்தது. ஆனால் வாய் திறந்து அவள் அவன் கேள்விக்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

அவள் மௌனமாகவே அந்த இரு துண்டுகளையும் கையில் வைத்துக்கொண் டிருப்பதைக் கண்டு ரங்கநாதனே மீண்டும் பேசினான்: 'ருக்கு, அவற்றைத் தூர எறிந்துவிடு. போனால் போகிறது. அதற்காக ஏன் மூளையைக் குழப்பிக் கொள்ளுகிறாய்? அத்தை சுத்தக் கர்நாடகம். பழங் காலத்து மண். குடியே முழுகிப் போனது போலக் கூச்சலிடுவாள். அதையெல்லாம் பாராட்டாதே. நாளைக்கே புது வெண்கலப் பானை வாங்கிவிட்டால் போகிறது!"

ருக்குவின் கண்கள் அகலத் திறந்தன. அவன் பேச்சுக்கள் அவள் மனத்தில் என்ன என்ன எண்ணங்களை உண்டாக்கினவோ! பழைய வெண்கலப்பானை உடைந்து போய் விட்டது; அதை மறுபடியும் உபயோகிக்க முடியாது; புதுப்

பானேதான் வாங்கவேண்டும் என்று ரங்கநாதன் வாய் மூலமாக வெளியான வார்த்தைகள், அவள் மனத்தில் ஒரு பெரும் புயலேக் கிளப்பின. அவன் வார்த்தைகள் ஓர் உண்மையான தத்துவத்தை உபதேசம் செய்வதுபோல் இருந்தன அவளுக்கு. மனப்புயல் அடங்கி எண்ணம் உருப் படியாகத் திரளுமுன்னரே, "ஆம். நாளேக்கே ஒரு புது... வெண்கலப்பானேயை வாங்கிவிடலாம்" என்று குரலில் கொஞ்சம் பதற்றத்துடன் பேசினுள் ருக்கு.

ரங்கநாதன் ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தான் ஆனுல் அவன் பின்னுலிருந்து கேட்ட ஒரு புதிய குரல் அவன் பேச்சைத் தடை செய்தது. "இல்லே அத்தை! இன்னெரு நாள் வருகிறேன். காரியம் இருக்கிறது."

ரங்கநாதனும் ருக்குவும் குரல் வந்த திக்கில் திரும்பினர்.

ஹாலில் ஒரு பெண்ணின் கையைப் பற்றிக்கொண்டு நாச்சியாரம்மாள், "எல்லாம் பரவாயில்லே. தினமுந்தான் காரியம் இருக்கு உனக்கு. பொறந்த வீட்டிலேயே இப்படிக் காரியம் காரியம்னு பறக்கிறே நீ. இன்னும் மாமியார் வீட்டுக் குப் போனுல்....உம். எனக்குந்தான் ஒரு நாட்டுப் பெண் இருக்கா. ஒண்ணும் தெரியாமே ஒதிமரமாட்டமா நிக்க!" என்று சொல்லிக்கொண்டே வந்தவள், ரங்கநாதன் எதிரே, சற்றுத் தூரத்தில் ருக்குவின் அருகே நிற்பதைக் கண்டு திடுக் கிட்டுப் போனுள்.

நாச்சியாரம்மாள் பேச்சைக் கேட்டதும் கணநேரம் ரங்க நாதன் ஒன்றும் தோன்ருதவனுக நின்று போனுன். வேருெரு பெண்ணின் முன்னிலேயில் அத்தை தன்னே அவமானப்படுத் தியது ருக்குவுக்கே என்னமாயிருந்ததோ? சரேலென்று அவள் அந்த இடத்தை விட்டுப் பின்பக்கமாகச் சென்று மறைந்தாள். ரங்கநாதன் தன் உணர்வு பெற்றதும் எதிரே நின்றிருந்த அத்தையைப் பார்த்தான். ஆனுல் அவளே அங்கே காணவில்லே. அந்தப் பெண் மாத்திரம் ஹாலின் மறு கோடியில் போய்க்கொண் டிருந்தாள். அவள் ஹாலேத் தாண்டிப் போகும் வரையில் அவளேயே பார்த்தபடி இருந் தான் ரங்கநாதன். அவள் மறைந்ததும் அவன் இருதயத்தி

னின்றும் மிக்க கஷ்டத்துடன் ஒரு பெருமூச்சு வெளிவந்தது. அடுத்த சில விநாடிகளுக்கெல்லாம் அவன் மெதுவாக நடந்து சென்று தன் அறையில் குப்புறப் படுத்துக்கொண்டான். அவன் புருஷன்தான்; எனினும் அப்போதிருந்த நிலையில் அவன் இருதயம் விம்மி எழுந்ததையும் அவன் கண்களில் நீர் கசிந்ததையும் பற்றி எண்ணும்போது அவன் மனத்தை எத்தகைய துன்பச் சிந்தனைகள் துளைத்துக்கொண் டிருந் தனவோ என்று இரங்கும்படிதான் தோன்றுகிறது.

அத்தையை நேரடியாக இரண்டு வார்த்தைகள் கேட்டு விடலாமா என்றுகூட எண்ணினன் அவன். ருக்குவைப் பற்றி இப்படிக் கண்டபடியெல்லாம் அவள் பிறத்தியாரிடம் பேசுவது அவனுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. அவளைக் குறிப்பிட்டுத் துடுக்காக அவள் ஒரு வார்த்தை சொன்னாலும் அது தன்னைப் பாதிப்பதாகவே கருதினன் அவன். இல்லற வாழ்க்கை ஒழுங்காக அமைந்திருந்தால் ரங்கநாதனுக்கும் இவை யெல்லாம் குடும்ப வாழ்க்கையில் சாதாரணமான நிகழ்ச்சிகள், வெகு சகஜமான சம்பவங்கள் என்பது பிறரைப் போல எளிதில் தெரிந்திருக்கும். ஆனல் அத்தகைய வாழ்க் கைதான் அவன் விஷயத்தில் விபரீதமாக விளைந்திருக்கி றதே! எனவே அவன் இப்பொழுது அத்தையின் சாதார ணப் பேச்சுக்களில்கூடக் குத்தல்களையும் கோளாறுகளையும் கற்பனை செய்துகொண்டான். அதே சமயத்தில் அத்தை யைக் கண்டிப்பதற்கும் அவனுக்குப் போதிய தைரியமோ உணர்ச்சியோ உண்டாகவில்லை. அவள் ருக்குவைத் திட்டு வதுகூட நியாயந்தானே என்றும் அவன் உள்ளத்தில் தோன் றலாயிற்று. ஏனெனில் அவளும் ஒரு பெண். ஓர் ஆணை விடப் பெண் தன் இனத்தைப் பற்றிய மர்மங்களைப் பற்றிச் சுலபமாக அறிந்துகொள்ள இயற்கை வசதிகள் இருக்கின் றன. இந்த நினைவுதான் அத்தையின் பேச்சுக்களுக்கு அவன் மதிப்புக் கொடுக்கவும், அவற்றை எதிர்த்து முறியடிக் காதிருக்கவும் உதவி செய்தது.

ஆயிரம் சிந்தனைகள் அவன் மனக்கடலில் தத்தளித்துத் தடுமாறிக்கொண் டிருந்தன. ஆனல் ஒன்றுவது அத்தையை

எதிர்க்கும்படி அவனிடம் கூறவேயில்லே. அதற்கு மாருக, ‘அவள் உன்னேச் சிறு வய்து முதல் வளர்த்து மனிதனுக்கிய வள். அவள் ஆஸ்தியையெல்லாம் உனக்காகச் செலவழித் திருக்கிருள். உன் முன்னேற்றத்தையும் உன் சுகத்தையுமே கோரித் தவம் செய்கிருள் அவள். அவள் வார்த்தைக்குக் குறுக்காகப் பேசுவதா? நேற்று வந்தவள் ஒரு ரகசியத்தைச் சொல்ல முடியாதென்று மறைக்கிருள். அந்த ரகசியத்தைக் காக்க வேறு எந்தத் தியாகமும் செய்வதாகக் கூறுகிருள். ஆனல் அத்தை அப்படியா? அவளிடம் ரகசியம் ஏது? அப்படித்தான் இருந்தாலும் அதை உன்னிடம் மறைப் பாளா அவள்? நீதானே அவளுக்கு இந்த உலகம் பூராவும். உனக்காக ஏற்கனவே அவள் சகலத்தையும் தியாகம் செய்து விட்டாளே! இப்போது கூச்சலிடுகிருள் என்ருல் அது யாருக் காக? உன் சுகத்தைக் கோரித்தானே?’

‘நேற்று வந்தவள் ஒரே ஒரு விஷயத்தை அந்தரங்கத் தில் ஒளித்து வைத்துக்கொண்டு, மற்ற எந்தத் தியாகத்துக் கும் தயாராக இருப்பதாகக் கூறுகிறள்! ஆனல் அத்தையோ அடிநாளிலிருந்து எத்தனேயோ தியாகத்தைச் செய்துவந் திருக்கிருள் உன்பொருட்டு. இனிமேல் அவளிடம் தியாகத் துக்கு ஒன்றுமே இல்லே. இந்த இரண்டு பேரில் யார் உயந் தவர்கள்? சந்தேகமில்லாமல் அத்தைதானே?’ என்றுதான் சிந்தனேகளுக்கு உருவம் கிடைக்கும் அவன் உள்ளத்தில்.

குப்புறப் படுத்துக்கொண்டு மாறி மாறி அத்தையைப் பற்றியும் ருக்குவைப் பற்றியும் எண்ணி எண்ணிப் பார்த் தான்.

‘உங்கள் சுகந்தான் எனக்குப் பிரதானம். அதன் பொருட்டு நீங்கள் என்ன செய்யச் சொன்னுலும் தயார். என்னேத் தாசியாகக்கூட அங்கீகரிக்க முடியாது என்று கூறி விட்டீர்கள். என்னேப்பற்றி எனக்குக் கவலேயில்லே. ஆனல் உங்களுத்குச் சுகம் எங்கே? நான் இப்படி இங்கே இருந்து தான் என்ன பயன்?’ என்று ருக்கு கெஞ்சுவது போலத் தோன்றும். மறு விநாடியே, ‘உன்னே வளர்த்து முன்னுக்குக் கொண்டுவந்து என்ன பலனேக் கண்டேன்? என் பாவிக்

கண்களுக்கு நீ சுகமா யிருப்பதைப் பார்க்கக் கூடாதென்று சாபமா? கல்யாணம் பண்ணியும் பிரம்மசாரி என்பது சரியாகப் போச்சே. உன்னுடைய இந்தக் கஷ்டத் தைப் பார்க்க முடியாமல்தான் நான் அந்தப் பெண்ணைக் கண்டபடி திட்டுகிறேன்; இது தவரு?'' என்று அத்தை நியாயம் கேட்பதுபோல இருக்கும். இதை அடுத்தாற் போலவே அந்தப் புதிய பெண்ணின் உருவம் - ஆம்! அத்தை சற்றுமுன் அழைத்து வந்தாளே, அவள்தான்; ஏனே தெரியவில்லை—அவன் முன்னே பிரசன்னமாகும். ஆம்! அதே புன்சிரிப்புடன்தான்; அதே தளதளப்பான மேனியுடன்தான்! ஏன்?

யார் அவள்? ஏன் இந்த அசந்தர்ப்பமான வேளையில் அவன் மனக்கண் முன் அவள் பிரசன்னமாக வேண்டும்? இதற்குமுன் அவளை அவன் பார்த்ததில்லையா?

அவள் இந்தக் கதைக்குப் புதியவள். ஆனல் அவனுக் குப் புதியவள் அல்ல. அடுத்த வீட்டு ஜன்னலண்டை அடிக் கடி நின்று அவள் இந்த வீட்டைப் பார்த்திருக்கிருள். ஏன்? அவனைக்கூடச் சிலசமயம் பார்த்திருக்கிருள் அவள். அவனுந் தான் பல தடவை அவளைப் பார்த்திருப்பான். ருக்குவும் அவளும் அநேக முறை நேருக்கு நேராக நின்று பேசியும் இருக்கிருர்கள். அவள் தாயாரிடம் பேசுவதற்காக ஒரு நாளைக்கு நாலு தடவையாவது அத்தை அடுத்த வீட்டுக்குப் போவாள். அந்த அம்மாளும் இங்கே வருவாள்.

பக்கத்து வீட்டில் இருக்கும் மனிதர்களுக்கும் அதிலும் ஸ்திரீகளுக்கும் தன் வீட்டு மனிதர்களுக்கும் இடையே போக்குவரத்து, பேச்சு வார்த்தை, எல்லாம் இருந்து வருவது சகஜந்தானே! அதேமாதிரிதான் இன்றும் நடந்தது. இதெல் லாம் ரங்கநாதனுக்கும் சாதாரணமான விஷயங்கள்தாம். ஆனல் இதில் இன்று ஒரே ஒரு புதுமை இருந்தது. அன்று வரையில் அந்தப் பெண் தன் வீட்டுக்குள்ளேயே வந்ததில்லை. அவளை நேருக்கு நேராக அதுவரையில் ஒருநாளும் அவன் பார்த்ததில்லை. இன்றுமட்டும் ஏன் வந்தாள்? காரணம்

அத்தையின் பலவந்தந்தானு? வேறு என்னவாக இருக்க லாம்? அப்படி வரத்தான் வந்தாளே! அந்தச் சந்தர்ப்பத் திலா? நேருக்கு நேர் வந்து நின்றுகொண்டு ருக்குவுக்கு வசவு வாங்கித்தரவா வந்தாள் அவள்?

ருக்குவுக்கு வசவு வாங்கி வைக்கக் காரணமாயிருந்த அவளிடம் ரங்கநாதனுக்கு வெறுப்பன்ரூே ஏற்படவேண்டும்? அப்படியொன்றும் இல்லேயே? இந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் காரணம் சொல்லிக்கொண்டிருக்க முடியுமா? அவள் வந்தாள். அவன் அவளேப் பார்த்தான். அவ்வளவுதான் நடந்த விஷயம்.

37

# போராட்டம்

அடுத்த வீட்டுப் பெண்ணை வலுக்கட்டாயமாக அழைந்துவந்த நாச்சியாரம்மாள் தன் வீட்டில் நுழைந்தவுடனே ரங்கநாதனைக் கண்டு திடுக்கிட்டுப்போனுள் அல்லவா? ரங்கநாதனை அந்த வேளையில் அங்கே எதிர்பார்க்கவே இல்லை அவள். அதோடு அவன் இருப்பது தெரியாமல் ருக்குவைப்பற்றி அடுத்த வீட்டுப் பெண்ணிடம் குறை கூறிவிட்டாள். இதனுல்தான் அவள் திடுக்கிட்டுப்போனுள்.

ரங்கநாதன் தன் வார்த்தைகளுக்குப் பதிலாக என்ன சொல்லுவானே என்கிற பயந்தான் அவள் திகைப்புக்குக் காரணம். ருக்குவுக்காகப் பரிந்து பேச எண்ணி அவன் துடுக்காக என்ன சொல்லிவிடப்போகிருனே என்றே அஞ்சினுள் நாச்சியாரம்மாள். ஆனுல் அவள் பயத்துக்குக் காரணம் இல்லாமற் போயிற்று. ரங்கநாதன் அவளை எதிர்த்து ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. அவனை அங்கே கண்டதும் அந்த அடுத்தவீட்டுப் பெண்ணுக்கும் கூச்சமாயிருந்ததோ என்னவோ? அத்தையுடன் மௌனமாகவே தன்னைப் போக விடும்படி சமிக்ஞை செய்துவிட்டுக் கிளம்பினுள் அவள். ரங்கநாதன் மௌனமாகவே தலை குனிந்துகொண்டு போய்த் தன் அறைக்குள் நுழைந்ததைச் சமையலறைக் கதவுக்குப் பின்னுலிருந்தே அத்தை கண்டுகொண்டாள். சிறிதுநேரம் அவன் அறையைவிட்டு வெளியே வரக்கூட இல்லை. அத்தையும் ஒரு பெருமூச்சுடன் தன் பயத்தை உதறியெறிந்தாள்.

ரங்கநாதன் தன்னை எதிர்க்காமல் இருந்ததே அவள் உடலில் ஒரு பலம் ஏற்பட்டதுபோல் இருந்தது. 'இன்னும் ரங்கண்ணு என் ரங்கண்ணுவாகவேதான் இருக்கிருன்'

என்கிற நிச்சயம் எற்பட்டது அவளுக்கு. ருக்குவும் அவனும் தனிக் குடித்தனம் பண்ணியும் அவர்கள் வாழ்க்கையில் மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லை என்று ஏற்கனவே உணர்ந்திருந்த அவள் பெண்மை உள்ளத்திற்கு, 'ருக்கு ஒருகால் அவனை அவளுடையவனாக ஆக்கிக்கொண்டிருப்பாளோ?' என்று ஒரு சந்தேகம் சில சமயங்களில் தோன்றுவது நியாயந்தானே! அந்தச் சந்தேகத்துக்குக்கூட இடமில்லை இப்போது. ஒரே வீட்டில் வசிக்கும் தம்பதிகள், இப்படித் தனித்தனி அறைகளில் படுத்துறங்குவதும், கூடுமானவரையில் நெருங்கி நேருக்கு நேர் பேசும் சந்தர்ப்பங்களைக்கூடப் பயன்படுத்திக் கொள்ளாமல் இருப்பதும், அப்படிச் சந்தித்துப் பேசினாலும் அதில் உணர்ச்சியோ உற்சாகமோ காட்டாததும் இப்படி இன்னும் பல காரியங்களும் நாச்சியாரம்மாள் கண்களில் படாமலா இருக்கும்? அவர்கள் நிலைமையை அவள் பெண்மை உள்ளம் உணர்ந்துகொள்ளாமலா இருக்கும்? இந்த உணர்வுதான் ஏற்கனவே அவளுக்கு ருக்குவிடமிருந்த மனக்கசப்பைப் பன்மடங்கு அதிகமாக விருத்தி செய்ய உதவியது. அதற்கு ஏற்றாற்போல இப்போது ருக்குவை அவள் அவன் எதிரிலேயே திட்டியபோதும், அவன் அவளுக்குப் பரிந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. 'அவளுக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்!' என்று ஆமோதிப்பவன் போல ஆழ்ந்த மௌனத்துடன் போய்விட்டான்.

'ஆம். அவளால் அவன் என்ன சுகத்தைக் கண்டான்? பொன்னும் மணியும் பூஷணமுமாக ஒன்றும் கொண்டு வந்து 'காட்டிவிடவில்லை' அவள் தன் பிறந்தகத்திலிருந்து. அதெல்லாந்தான் அவள் தாய் தகப்பன்மார் அலக்ஷ்யம் என்றாலும், புருஷனுக்குப் பிடித்த பெண்டாட்டியாகவாவது வாய்த்திருக்கிறாளா? அதுகூட இல்லை. ஆணைக் கண்டு பெண் ஆறு காதம் ஓடுகிறது; பெண்ணைக் கண்டு ஆண் பிணக்கமுற்றுப் பிரிகிறது. இந்த லக்ஷணத்தில் அவளிடம் அவனுக்கு அநுதாபம் எப்படி ஏற்படும்? வயதுக்குரிய சுகங்களை அநுபவிக்கவேண்டிய காலம். இந்தக் காலம் இப்ப[illegible] கழிவதானால் அவளிடத்தில் வெறுப்புத்தானே மிஞ்சும்[illegible]னுக்கு?' என்றுதான் நினைத்தாள் அத்தை.

இந்த நினைவு அவள் நெஞ்சுக்குத் தைரியத்தை அளித்தது. இதற்குமுன் ரங்கநாதன் கண்முன்னே ருக்குவைத் திட்டாத அத்தை இப்போது தைரியமாக அவளை அவன் எதிரில்கூடத் திட்டத் தொடங்கினாள். சில நாட்களுக்குள்ளாகவே அந்த வீட்டில் இது ஒரு சகஜமான நிகழ்ச்சி ஆகிவிட்டது. விடிந்ததுமுதல் ராத்திரிவரையில் ஏதாவது குற்றங்கள் கண்டுபிடித்து ருக்குவைத் திட்டுவதையே காரியமாக மேற்கொண்டாள் நாச்சியாரம்மாள். ருக்குவின் முகத்தைப் பார்த்தால் அவள் அத்தையின் வசவுகளால் படும் கஷ்டங்களைக் கிரகித்துக்கொள்ளலாம். ஆனால் ரங்கநாதன் அவள் முகத்தைப் பார்க்கவே அஞ்சினான். அதனுடன் அத்தையின் வாய்க்குக் கடிவாளம் போடுவதும் அவன் சக்திக்கு மீறிய செய்கையாகவே தோன்றியது.

நாட்கள் பல சென்றன. இப்போதெல்லாம் ரங்கநாதன் ருக்கு இருக்கும் இடத்தைக்கூடக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை. தன் வேலை உண்டு தான் உண்டு என்று இருக்கலானான். ஆபீசில் எப்படி ஒரு யந்திரம்போல வேலை செய்து வந்தானோ அதேமாதிரிதான் வீட்டிலும் அவன் இயங்கிவந்தான். காலம் தவறாமல் குளிப்பது, சாப்பிடுவது, ஆபீசுக்குப் போவது, வருவது, வெளியே போவது, திரும்புவது, ஏதாவது படிக்க முடியுமானால் படிப்பது, இல்லாவிட்டால் தூங்குவது - ஏன் இந்த இடத்தில்தான் கஷ்டம் வந்து சம்பவிக்கிறது; ஏனெனில் அவன் சரியாகத் தூங்கியே வெகுகாலம் ஆயிற்று- அல்லது தூங்க முயலுவது இப்படியாகவே அவன் காலந் தள்ளி வந்தான்.

வீட்டில் அத்தையின் ராஜ்யந்தான். எனவே ருக்கு இருக்குமிடம் தெரியாமல் இருந்து வந்தாள். அத்தையின் கொடுமைகளை எப்படியோ சகித்துக்கொண்டாள், பாவம். நாளுக்குநாள் துன்பம் அதிகரிக்கத்தான் அதிகரித்தது. அத்தை அவளைக் கேவலம் ஒரு வேலைக்காரிக்கும் கீழ்த்தர [illegible]க மதித்து வந்ததோடு நிற்காமல், சரிவர அவள் சாப்பிடு [illegible] இல்லையா என்பதைக்கூடக் கண்டுகொள்ளாதவள் [illegible] இருந்தாள். இந்த நிலைமையைக்கூடக் காலம் மாற்றி

விட்டது. ஒருநாளுக்கு ஒருவேளைகூட, உயிர் வாழ்வதற்கு அவசியமான ஆகாரம் கிடைப்பது ருக்குவுக்கு அரிதாகிவிட்டது. சாதாரணமாக அவள், ரங்கநாதன் ஆபீசுக்குப் புறப்பட்டுப் போனபின் நெடுநேரம் கழித்துக் கொஞ்சம் சாப்பிடுவது வழக்கம். இப்போதெல்லாம் அதில்கூட மண் விழுந்துவிட்டது. அவள் சாப்பிட உட்கார்ந்ததுமே ஹாலிலிருந்து அத்தையின் குரல் தொனிக்க ஆரம்பித்துவிடும். 'பாழும் வயிறு! இப்படி வெக்கம் மானம் இல்லாமலே கொட்டிண்டாவது உசிரைக் காப்பாத்தி என்ன சாதிக்கணும்? ஒரு குடித்தனத்தை வேரோடு கெடுக்கணும்னு எத்தனை நாளைய தவசோ? அடேயப்பா நானும் பார்த்தாலும் பார்த்தேன்; இந்த மாதிரிச் சண்டிகளைப் பார்த்ததே இல்லே. கெணறு, கொளங் கூடவா துந்துபோச்சு!' என்பதுபோலத் தினசரி பல வர்ணனைகள் ருக்குவின் காதில் விழும். இப்படியெல்லாம் கேட்டுக்கொண்டும் சோறு தின்னவேண்டும் என்று தோன்றுமா?

அத்தையின் வார்த்தைகளைப் பொருட்படுத்தாத ருக்குவுக்கே இப்போது ஒவ்வொரு சொல்லும் சுடு சரம்போல் தாக்கியது. ரங்கநாதனுக்குத் தன் மூலம் கிஞ்சித் சுகமாவது கிடைத்தாலும் போதும்! அத்தையின் கொடுமைகள் எல்லாவற்றையும் சகித்துக்கொள்ளலாம் என்று நினைத்தாள் ருக்கு. ஆனால் தன் மூலமாக அவனுக்கு வாழ்க்கையில் எந்த விதத்திலும் சுகம் என்பதே கிடைக்காது என்று தெரிந்துவிட்டது அவளுக்கு. தன் உடலும் உயிரும் வெறும் சுமையே என்கிற எண்ணமும் கொஞ்சம் கொஞ்சமாகத் தலையெடுக்க ஆரம்பித்தது அவள் உள்ளத்தில்.

உள்ளத்தில் ஏறிய சுமை உடலை மாத்திரம் விட்டு விடுமா? உடலும் சிறுகச் சிறுக நலியத் தொடங்கியது. ஆனால் அவள் அத்தைக்கோ ரங்கநாதனுக்கோ இதெல்லாம் துளிகூடத் தெரியாதபடி வெகு சாமர்த்தியமாக நடந்து வந்தாள். இருந்த போதிலும் நாச்சியாரம்மாள் மாத்திரம் ருக்குவின் தேகம் நாளுக்கு நாள் தேய்ந்து வருவதைக் கவனித்துக் கொண்டுதான் இருந்தாள். ஆயினும் அதைப்பற்றி அவள் கவலைப்படவே இல்லை. ருக்கு தேயத் தேய, நாச்சியாரம்

மாள் உள்ளூறப் பூரிப்படைந்து வந்தாள். அடுத்த வீட்டுப் பெண்ணை அடிக்கடி தன் வீட்டுக்குக் கூட்டி வந்து அவளுக்குத் தலை பின்னுவதும் அலங்காரம் செய்வதும் ரங்கநாதன் காதில் விழும்படி, 'என்ன இருந்தாலும் உன் கண்ணே ஒரு அழகுதாண்டி, சகுந்தலா! உங்கம்மாகிட்டே சொல்லு; கொஞ்சம் கர்ப்பூரமாவது சுத்திப் போடட்டும்; என் கண்ணே பட்டிருக்கும். இன்னிக்கி உன் முகத்திலே லக்ஷ்மி களை தாண்டவமாடறது; எந்த மகராஜன் குடுத்து வச்சிருக்கானோ, உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள?' என்றெல்லாம் புகழ்ந்து பேசுவதுமாக நாச்சியாரம்மாள் 'ராஜ்ய பாரம்' நடத்தி வந்தாள்.

நாச்சியாரம்மாளின் மனநிலையைக் கொஞ்சம் கொஞ்சமாக அறிந்துகொண்டாள் ருக்கு. அந்த வீட்டில் தான் இருப்பதற்குக்கூடத் தகுதியில்லை என்று நாச்சியாரம்மாள் கருதுகிருள் என்பது தெரிந்துவிட்டது. ரங்கநாதன் தன்னைத் திரும்பிக்கூடப் பாராமல் இருந்தபோதிலும் அவன் நடவடிக்கைகளையும் ருக்கு ஊன்றிக் கவனித்து வந்தாள். நாளடைவில் அவள் மனத்துக்குள்ளேயே ஓர் உறுதியான முடிவும் வளர்ந்து உருப்பெற்றது.

அந்த முடிவை ரங்கநாதனிடம் தெரிவிப்பதா வேண்டாமா என்கிற போராட்டந்தான் இப்போது அவள் உள்ளத்தில் நிகழ்ந்துகொண் டிருந்தது.

ஒரு நாள் மாலை அத்தை அடுத்த வீட்டுப் பக்கம் போயிருந்தபோது தன் முடிவை எப்படியும் அவனிடம் சொல்லிவிடுவது என்கிற தீர்மானத்துடன் ருக்கு ரங்கநாதன் அறைப் பக்கம் சென்ருள். அப்போது ரங்கநாதன் ஆபீசிலிருந்து திரும்பிச் சற்று நேரம் ஆகியிருக்கும். ருக்கு அறைக்குள் கால் வைத்ததுதான் தாமதம். "ருக்கு!" என்று வாசலிலிருந்து ஒரு குரல் கேட்டது.

அப்படியே திரும்பிப் பார்த்தாள் ருக்கு.

சகுந்தலா! அப்பொழுதுதான் வாசற்படி தாண்டி உள்ளே வந்துகொண் டிருந்தாள்.

## 38

## பாத பூஜை

சகுந்தலாவைப் பார்த்ததும் ருக்கு ஒரு விநாடி காலம் அறை வாசற்படியிலேயே நின்றுவிட்டாள். சகுந்தலாவும் அவள் அருகில் வந்து சேர்ந்தாள். உள்ளே ரங்கநாதன் இருந்ததைச் சகுந்தலா கவனிக்கவில்லை. ருக்குவின் கையைப் பற்றிக்கொண்டு, ''ருக்கு, உன் ஆகாச நீலப் புடைவையை இன்று சாயந்தரத்துக்கு மாத்திரம் கொஞ்சம் இரவல் கொடுப்பாயா? அம்மா வாங்கிண்டு வரச் சொன்னுள்'' என்ருள் சகுந்தலா.

அவள் அங்கே நின்று பேசியது ருக்குவுக்குப் பிடிக்க வில்லையோ, அல்லது உள்ளே தன் புருஷன் இருக்கும்போது சகுந்தலாவுக்குச் சரியாக உரத்த குரலில் பதில் சொல்லக் கூச்சமாக இருந்ததோ தெரியவில்லை. ''சகுந்தலா, உள்ளே வா'' என்று மிகவும் மெதுவான குரலில் சொல்லி அவளையும் அழைத்துக்கொண்டு அந்த இடத்தைவிட்டுக் கிளம்பினுள் ருக்கு.

இருவரும் ஹாலைத் தாண்டிச் சமையலறைக்கு முன்னி ருந்த வேருேர் அறைக்குச் சென்றனர். சகுந்தலாவின் குரல் முதல் முதலாகக் கேட்டவுடன் ரங்கநாதன் தன் இருப்பிடத் திலிருந்தே கதவின் பக்கமாகப் பார்த்தான். கதவண்டை ருக்கு நிற்பதைக் கண்டதுமே அவன் மனம் திக் திக் என்று அடித்துக்கொண்டது.

சிறிது நேரத்துக்குள்ளாகவே சகுந்தலாவும் அங்கே வந்து நின்று அவளுடன் பேசியதைக் கண்ணுற்ருன். அவன் மனம் பின்னும் அதி வேகமாக அடித்துக்கொண்டது. இருவ ரும் அந்த இடத்தைவிட்டு மறைந்ததும் அவன் தன் இருப்பி

டத்தை விட்டு எழுந்தான். அவன் கால்கள் அவனை அந்த அறையை விட்டு வெளியே தள்ளிச் சென்றன. ஹாலுக்கு வந்தான். அங்கிருந்த ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தான். அவன் முகம் பைத்தியக்காரன் முகம்போல அசடு தட்டி வெறிச்சென்றிருந்தது. சற்றுத் தூரத்திலிருந்த அறைக்குள்ளிருந்து பேச்சுக் குரல் கேட்டது. சகுந்தலா கணீரென்றே பேசினுள்; ருக்கு மாத்திரம் அடக்கமான குரலிலேயே பேசினுள்.

"அத்தைகூட எங்கள் வீட்டில்தான் இருக்கிருள். அவள் தான் உன்னைக் கேட்டுப் புடைவை வாங்கி வரச்சொன்னுள்" என்ருள் சகுந்தலா.

"சகுந்தலா, உனக்குக் கொடுக்காமல் வேறு யாருக்குக் கொடுக்கப் போகிறேன்! ஆனுல் அத்தை விஷயந்தான் தெரிந்ததாயிற்றே. இங்கே உன்னை அனுப்பி வாங்கிக் கொண்டு வரச் சொல்லிவிட்டுப் பிறகு என்னிடம் வந்து, 'ஏன் கொடுத்தாய்? உனக்கென்ன பெரியதனம்?' என்று கேட்கப் போகிருளே என்றுதான் பயமாயிருக்கிறது!" என்று துக்கத்துடன் பேசினுள் ருக்கு.

"ருக்கு, அத்தை மாத்திரம் அப்படிச் சொல்லட்டும்! நான் விட்டுக் கொடுப்பேனு?"

"சகுந்தலா, நீ குழந்தை. கோடை வெயில் உஷ்ணத்தை அறிந்துகொள்ளாத புதுமலர் நீ.........உம்...நீ அதை அறிந்துகொள்ளாமல் இருக்கப் பகவான் அருள்புரிவாராக!...இதோ...இந்தா!...அத்தை கொஞ்ச நேரம் கூச்சலிடப் போகிருள், வழக்கம்போல. அவ்வளவுதானே! நீ இதைக் கட்டிக்கொண்டு அதனுல் அடையப் போகும் ஆனந்தத்தைப்பற்றி எண்ணும்போது, அத்தையின் வசவு பெரிதல்ல என்று தோன்றுகிறது."

"ருக்கு, உனக்கே இஷ்டமில்லை என்ருல் வேண்டாம். இதற்காக நீ ஏன் அத்தையிடம் வசவு வாங்கிக்கொள்ள வேண்டும்! உன் கண்ணில் ஜலம் வரப் பார்க்கிறது. இப்படி அரை மனசுடன் நீ கொடுக்கவே வேண்டாமடி அம்மா!"

என்று சொன்னபோது அவள் நடந்ததால் அந்த அறையில் அவள் காலணிகளின் ஓசை கேட்டது.

"அரை மனசுடன் கொடுக்கிறேனு? அசடே! என்னை நீ அறிந்துகொண்டது அவ்வளவுதான். ஏன்! என்னை அறிந்துகொள்ள வேண்டியவருக்கே." என்று ஏதோ சொல்ல வந்தவள் சட்டென்று நிறுத்திக்கொண்டு, "அது கிடக்கட்டும், உன்னை ஒன்று வேண்டிக்கொள்ளுகிறேன். அதைச் செய்வாயா?" என்று கேட்டாள் ருக்கு.

ருக்குவின் பேச்சுப் பிடிபடாமல் சகுந்தலா விழித்தாளோ என்னவோ? "என்ன செய்யவேண்டும்?" என்று அவள் கேட்டபோது அவள் குரலில் கரகரப்புத் தட்டியிருந்தது.

"ஒன்றும் பிரமாதமில்லை. உன் அலங்காரங்களைக் களையுமுன் ஒரு தரம் என் கண்ணுல் பார்க்கவேண்டும்."

சகுந்தலாவின் முகத்தில் ஆச்சரியக் குறி தோன்றி யிருக்க வேண்டும்.

"நான் இப்படிப் பேசுவது உனக்கு ஆக்சரியமாகத்தான் இருக்கும். இருந்தபோதிலும் உன்னை மிகவும் கேட்டுக் கொள்ளுகிறேன். அப்படியே இங்கே வருகிருயா?" என்ருள் ருக்கு.

"சரி" என்று பதில் கிடைத்தது. சில விநாடிகளுக் கெல்லாம் சகுந்தலா புடைவையுங் கையுமாக ஹாலுக்கு வந்தாள். ஹாலின் ஓர் ஓரத்தில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்த ரங்கநாதன் அவளை ஒரு தடவை உற்றுப் பார்த்தான். அவள் முகம் நாணத்தால் சிவந்தது. தலை குனிந்துகொண்டே வேகமாக நடந்து சென்ருள். ரங்கநாத னுக்குப் பின்பக்கமாக வந்த ருக்கு சாய்வு நாற்காலியின் பின்னுல் நின்றுகொண்டு அவன் பார்க்கும் திக்கிலேயே பார்க்கலானுள். வாசலைத் தாண்டிச் சகுந்தலாவின் உருவம் மறைந்தது. ரங்கநாதன் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, 'உஸ்!' என்றுகொண்டே நாற்காலியில் சாய்ந்தான். அவன் கண்கள் ஹாலின் மேற்கூரையை நோக்கியபடியே சற்றுப் பின்புறமாகப் பார்வையைச் செலுத்தின. அடுத்த விநாடி உதிர விருக்கும் வாடின மலர் போன்ற ருக்குவின் முகம் அவன் பார்வையில் பட்டது.

ருக்குவின் முகம் பார்வையில் பட்டதுமே சட்டென்று எழுந்தான். அவன் முகம் சவம்போல் வெளுத்துவிட்டது. இதை எளிதில் கண்டுகொண்டாள் ருக்கு. நாற்காலியை விட்டு எழுந்தவனைப் பார்த்து, "ஏன், பயப்படுகிறீர்கள்? உட்காருங்கள். நான்தான். பேய் பிசாசு அல்ல" என்ருள் மிகவும் பிரயாசையுடன் புன்சிரிப்பை வருவித்துக்கொண்டே.

"ருக்கு, நீயா? உன்னை எதிர்பார்க்கவே இல்லை" என்ருன் ரங்கநாதன் தடுமாற்றத்துடன்.

"ஆம். உங்கள் எதிரில் வந்தே பல நாட்கள் ஆயின அல்லவா? வரவேண்டாம் என்றுதான் பார்த்தேன். ஆனல்.."

"ருக்கு, உன்னை நேரில் பார்க்காவிட்டாலும் உன் நிலைமையை நான் நன்ருக அறிவேன். இதற்கு என்ன வழி என்று நானுந்தான் யோசித்துக்கொண் டிருக்கிறேன்!" என்று சொன்னபோது அவன் குரலில் சற்று நிதானம் தோன்றியது.

"யோசிக்கவேண்டிய அவசியமே இல்லை. நான் முடிவுக்கு வந்துவிட்டேன். உங்களிடம் சொல்லவேண்டும் என்று சில நாட்களாகவே எண்ணம். ஆனல் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை" என்று கூறியபோது ஏதோ ஒன்று தொண்டையை அடைப்பது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று ருக்குவுக்கு. சற்று நிதானித்தாள்.

ரங்கநாதன் அப்போதுதான் அவளை நன்ருகக் கவனித்தான். மலர்ந்த ரோஜாவைப்போல் இருந்த அவள் வதனம் சுருங்கிய முல்லைபோலச் சுண்டிக்கிடந்தது. அந்த முகத்திலிருந்த அழகிய செந்நிறமே மாறிப்போய், முல்லைமலர் வதங்கி உலர்ந்தால் எப்படி விகாரமாகச் சிவப்பேறி இருக்குமோ அந்தமாதிரி இருந்தது. தளதளவென்று பூரித்துப் பொங்கி வழிந்துகொண் டிருந்த அவள் யௌவனம் எங்கே மறைந்தது என்கிற கேள்வி அவன் மனத்தில் உண்டாயிற்றென்ருல் அவள் தேகத்தின் நலிவைப்பற்றி வர்ணிக்கவேண்டிய அவசியமே இல்லையல்லவா?

அவன் தன்னைக் கூர்ந்து கவனிப்பதைக் கண்டதும் ருக்குவின் இதழ்களில் ஒரு வறண்ட புன்னகை படர்ந்தது. "ஏன், என்ன இப்படிப் போய்விட்டேனே என்று பார்க்கிறீர்களா ?" என்று அவள் கேட்டபோது ரங்கநாதன் கண்களிலே ஈரக் கசிவெடுத்தது.

"உங்களுக்கு எந்தவிதத்திலும் உபயோகமில்லாத இந்தச் சரீரம் இனி எப்படிப் போனால்தான் என்ன? உங்கள் தாசியாகக்கூட இருக்க நான் தகுதியற்றவள் என்று ஆகிவிட்டது. உங்கள் சுகத்தைத்தான் நான் கோரினேன். ஆனால் அதற்காக நான் ஒன்றும் செய்யமுடியாது என்று தெரிந்துவிட்டது. இப்போது உள்ள நிலையில் என்னால் உங்கள் சுகத்துக்கு இடையூறு ஏற்படும்படி நான் விடப்போவதில்லை. உங்களை மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன். என் கோரிக்கைக்கு நீங்கள் உடன்படவேண்டும்" என்று மிகவும் பரிதாபகரமான குரலில் கேட்டாள் ருக்கு.

ரங்கநாதன் உள்ளம் குழைந்தது, "ருக்கு, உன் மனத்தில் இருப்பதை என்னால் அறியமுடியவில்லையே!" என்றான் மெதுவாக.

"மனத்தில் இருப்பதை அறியவேண்டாம். ஆனால் சொல்லப்போகிறதை மாத்திரம் அறிந்துகொண்டால் போதும். எனக்காக இனி ஒரு க்ஷணமும் நீங்கள் இப்படி இருக்கக்கூடாது."

"நீ சொல்வது புரியவில்லையே ?"

"உங்கள் மனத்தைக் கேட்டுப் பாருங்கள் !"

ரங்கநாதன் திரு திருவென்று விழித்தான்.

"சகுந்தலா நல்ல அழகியல்லவா ?" என்று சடக்கென்று கேட்டாள் ருக்கு.

"ஏன்? என்னை ஏன் கேட்கிறாய் ?" என்று கேட்டபோது ரங்கநாதன் முகத்தில் சம்சயத்துக்கு உரித்தான ஒரு பிரத்தியேகமான அசட்டுத்தனம் தென்பட்டது.

"இல்லை. சற்று முன் வந்தாளல்லவா ? அதனால்தான் கேட்கவேண்டும் என்று தோன்றிற்று ; கேட்டேன்."

"இந்தக் கேள்வியை என்னிடத்தில் ஏன் கேட்க வேண்டும்?"

"ஏன்? கேட்கக்கூடாதா என்ன?"

"இதற்கு நான் பதில் சொல்ல முடியாது."

"ஆனால் நானே சொல்லுகிறேன், உங்கள் பதிலை. சகுந்தலா நிஜமாகவே நல்ல அழகி, நல்ல குணவதியுங்கூட. அத்தை சொல்லுவதுபோல எந்த மகாராஜன் கொடுத்து வைத்திருக்கிறானோ அவளை மனைவியாக அடைய."

"ருக்கு, இப்படியெல்லாம் நான் எப்போதாவது சொல்லி யிருக்கிறேனா? ஏன் உனக்கு இந்தச் சந்தேகம்?"

"சந்தேகமா? பேஷ்! என் ஜாதகத்திலேயே சந்தேகம் என்பதற்கு இடம் இல்லையே. சகுந்தலா அழகி என்று நீங்கள் வாய்திறந்து சொல்லவேண்டுமா? உங்கள் கண்கள் சொல்லு கின்றனவே. 'உள்ளத்தை மறைக்கும் சக்தி கண்களுக்கு இல்லை' என்கிற உண்மை உங்களுக்குத் தெரியாதா?"

"ருக்கு, நான் பலஹீனன்; புத்தி ஹீனன்; உனக்குத் துரோகம் இழைக்கவேண்டுமென்று நான் மனதார நினைக்க வில்லை" என்று சொல்லும்போதே இடைமறித்து ருக்கு, "நான் அப்படிக் குற்றம் சாட்டினேனா உங்கள் மீது? உங்கள் மீது துளிகூடக் குற்றமே இல்லை. குற்றவாளி நான்தானே! உங்கள் வாழ்வில் சுகம் அளிக்கமுடியாமல் இருந்துங்கூட, உங்கள் சுகத்துக்குக் குந்தகமாக நான் இருக்கிறேனே! இது குற்றமல்லவா? இந்தக் குற்றத்துக்கு ஏற்ற தண்டனையை அளியுங்கள். இதுதான் என் கோரிக்கை. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

"ருக்கு!"

ருக்கு, சரேலென்று ரங்கநாதன் பாதங்களில் விழுந்தாள். அவற்றைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள். "இந்தப் பாவியின் கண்ணீராவது தங்கள் பாதங்களில் பட்டுப் புனிதம் அடையட்டும். தங்கள் பாத தூளியை என் நெற்றி யில் அணிந்துகொள்ளுகிறேன். தங்கள் பாதத்தின் முத்தி ரையை என் மாங்கல்யத்தில் பதித்துக்கொள்ளுகிறேன். இந்த ஜன்மத்தில் இது போதும் எனக்கு!" என்று சொன்ன

போது ரங்கநாதன் நெஞ்சை அடைத்துக்கொண்டிருந்த துக்கம் பீரிட்டுக்கொண்டு வந்தது. ஒரு குழந்தைபோல அவன் விக்கி விக்கி அழுதுவிட்டான். அவன் வாயே அடைத்துப்போயிற்று. அவனுல் ஒன்றும் பேச முடியவில்லை.

மறுபடியும் ருக்குதான் பேசினுள். மண்டியிட்டபடியே பேசினுள் அவள். "இந்தப் பாத பூஜையை இனி நான் மானசிகமாகத்தான் நடத்தமுடியும். இதற்கு முன்னரும் இப்படித்தான் செய்துவந்தேன். இனியும் இப்படியே செய்வேன். நேரில் வணங்கிப் பாதபூஜை புரிய அருகதையுடையவளாக என்னைத் தாங்கள் கருதவில்லை. அந்த ஸ்தானத்திற்கு வேருெருத்தி வேண்டாமா? அப்போதுதானே தங்கள் வாழ்க்கை பூரணத்துவம் அடையும். அதைக் கண்டாவது என் மனம் குளிராதா என்று ஏங்குகிறேன். என் இந்த விருப்பத்தையாவது ஏற்றுக்கொள்வீர்களா?" என்று குழையக் குழையப் பேசினுள் ருக்கு.

ரங்கநாதனது மூளை வட்டத்தைச் சுற்றி ஒரு சாகசப் பறவை சிறகடித்துச் செல்வது போன்ற உணர்ச்சி. அவன் மன உலகத்தின் சுழற்சியில் பல நினைவுக் கோளங்கள் உருண்டு விழுந்தன. நிற்கமுடியாமல் எதிரே இருந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்துவிட்டான்.

சாய்வு நாற்காலியின் பின்னுல் சுவரில் சாய்ந்தவண்ணம் நின்றுகொண்டு ருக்கு மறுபடியும், "என்ன, நான் கேட்கிறேனே?" என்ருள்.

"ருக்கு, நீயா இப்படிக் கேட்கிருய்?"

"ஆம். உங்கள் சுகத்தைக் கோரித்தான். நீங்கள் எப்படியாவது சுகமாக இருக்கவேண்டும். அப்போதுதான் என் மனம் நிம்மதியடையும். எனக்காக உங்கள் வாழ்நாள் முழுவதும் இப்படிப் பலனில்லாமல் கழிவதா? கூடவே கூடாது."

"ருக்கு, இது நடக்கக்கூடிய காரியம் அல்லவே?"

"ஏன்? ஏன் நடக்காது? நான் உயிருடன் இருக்கிறேனே என்று யோசிக்கிறீர்களா? என் மனப்பூர்வமான சம்மதம் உங்களுக்கு எப்போதும் கிடைக்கும். இது சத்தியம்!

உங்களுக்குக் கொஞ்சமும் உபயோகமில்லாத இந்த அபாக்கியவதி உங்கள் சுகத்துக்குக் குறுக்கே நிற்கமாட்டாள். அந்தப் பாபம் வேறு எனக்கு? முடியுமானால் நானே முன்னின்று உங்கள் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்கிறேன். உங்கள் வாழ்க்கைத் தோட்டத்தில் புது மலர்கள் பூக்கும். அத்தைக்கும் இரட்டிப்புச் சந்தோஷம் உண்டாகும். சகுந்தலா இருக்கவே இருக்கிறாள். உங்களைக் கணவனாகப் பெற அந்தப் பெண் செய்த பாக்கியம்!...ஹூம்! அந்தப் பாக்கியம் எனக்குக் கிடைத்தும், நான்தான் கொடுத்து வைக்கவில்லை. சகுந்தலாவின் அம்மாவுக்கும் இதில் பூரண விருப்பம் இருக்கிறது. நீங்கள் ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான்...''

''ருக்கு, இரு இரு. என் தலை சுற்றுகிறது......''

''சுற்றட்டும். நன்றாகச் சுற்றட்டும். மூளையில் ஏற்பட்டிருக்கும் குழப்பங்களெல்லாம் சிதறி விழும் வரையில் சுற்றித் தீரட்டும். பிறகு நிர்மலமான மனத்துடன் நிதானமாக யோசனை செய்து முடிவுக்கு வாருங்கள். உங்கள் சுகத்தைக் கண்ணாரக் கண்டு மகிழக் காத்திருக்கிறேன். இந்த அடிமையின் விருப்பம் நிறைவேற ஈசன் அருள் புரிவாராக......அப்பா! ......அப்பா!...என் மனத்திலிருந்த பெரும் பாரம் கழிந்தது போல இருக்கிறது, இப்போதுதான்! என்...அன்பே!...இன்றிரவு...நான்...நிம்மதியாகத் தூங்குவேன். நான் வருகிறேன்!'' என்று சொல்லி முடித்துவிட்டுச் சரேலென்று அந்த இடத்தைவிட்டுப் போய்விட்டாள் ருக்கு.

சாய்வு நாற்காலியிலிருந்த ரங்கநாதன் நெடு நேரம் வரையில் எழுந்து உட்காரவே இல்லை. அவன் மனம் யோசனைக் கடலில் ஆழ்ந்து போயிற்று. அப்போது, ''அவன் இருந்தால் என்னடீ பிரமாதம்! இப்படி வெக்கப்படறையே! அவன் என்ன சிங்கமா புலியா? உன்னை முழுங்கிவிடப் போறானா என்ன? இப்படியெல்லாம் வெக்கப்பட்டா முடியுமாடி யம்மா? உங்க அம்மாவுக்கு இருக்கிற ஆசைக்கும், உன் வெக்கத்துக்கும் எப்படித்தான் சரிப்பட்டு வருமோ? பரவா

யில்லை. வாடி'' என்று வாசல் பக்கத்திலிருந்து கேட்ட குரல் தான் ரங்கநாதன் யோசனைக்கு முற்றுப் புள்ளி வைத்தது.

வாசலில் அத்தை, சகுந்தலாவின் கையைப் பற்றி வலுக் கட்டாயமாக இழுத்துக்கொண் டிருந்தாள். சர்வாபரண பூஷிதையாக ருக்குவின் ஆகாச நீலப் புடைவைய்யைக் கட்டிக் கொண்டு சந்திர பிம்பம் போன்ற வதனத்துடன் நாணிக் கோணிக்கொண் டிருந்தாள் சகுந்தலா. ரங்கநாதன் கண்கள் அவன் விருப்பத்தையும் மீறி அந்த லாவண்ய சுந்த ரிரைய ஆர்வத்துடன் நோக்கின. அவன் தன்னைப் பார்ப் பதை உணர்ந்ததும் சகுந்தலாவின் சரீரம் பின்னும் அதிக மாகவே நெளிவுற்றது.

''சரி. இப்படிப் பிடிவாதம் பிடிச்சா எப்படி?'' என்று சொல்லிக்கொண்டே அத்தை, ''அடே ரங்கண்ணு, இந்தப் பொண்ணுக்கு உன்னைப் பார்க்க வெக்கமா யிருக்காம். கொஞ்சம் உள்ளே எழுந்து போ!'' என்று சற்று உரத்த குரலில் சொன்னாள்.

அது வரையில் பைத்தியக்காரன்போல் பார்த்துக் கொண்டிருந்த ரங்கநாதன் முகம் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் சட்டென்று வெட்கிக் குனிந்தது. அவன் நாற்கா லியை விட்டு எழுந்து தன் அறைக்குள் போய்விட்டான். அதற்குள் அத்தையின் குரல் கேட்டு ருக்கு ஹாலுக்கு வந்தாள். எதிரே சற்றுத் தூரத்தில் வந்துகொண் டிருந்த நாச்சியாரம்மாளையும் சகுந்தலாவையும் பார்த்தாள். இரண்டே எட்டில் தாவிச் சென்று சகுந்தலாவின் கைகளைப் பற்றிக்கொண்டு, ''சகுந்தலா, வா அம்மா. என் குல தெய்வத்தின் சந்நிதியில் நீ என்றும் தூண்டா விளக்காக விளங்கவேண்டும். உன்னை அவர் பார்த்தால் என்ன வெட்கம்? பார்க்க வேண்டியதுதானே!'' என்று இனிய குரலில் பேசினாள்.

சகுந்தலா ருக்குவின் பேச்சைக் கேட்டு ஒன்றும் புரியா மல் பிரமித்தாளா அல்லது ருக்கு அணிந்திருந்த ஆடை ஆபர ணங்களைப் பார்த்துப் பிரமித்தாளா என்று தெரியவில்லை. ஒரே விழிப்பாய் விழித்துப் போனாள்.

ஆம்! இப்போது ருக்கு சிவப்பு நிறமுள்ள புதுப்புடைவை ஒன்றைக் கட்டிக்கொண் டிருந்தாள். அவள் பெட்டியிலிருந்த ஆபரணங்கள் எல்லாம் அவள் உடலில் ஏறியிருந்தன.

ருக்குவின் அலங்காரத்தைப் பார்த்து நாச்சியாரம்மாளே ஒரு கணம் பிரமித்துப்போய் நின்றுவிட்டாள். 'இந்த எலும்புக் கூட்டுக்கு இந்தச் சிங்காரிப்பெல்லாம் என்ன வேண்டியிருக்கு!' என்று நினைத்தாளோ என்னவோ? ஆனால் அவள் வாய் மாத்திரம் துடுக்காகத்தான் பேசியது வழக்கம்போல். "போறும்; அவள் கையை விடு. இப்பத்தான் மகாலக்ஷ்மி மாதிரி சிங்காரிச்சுண்டு வரா. உன் மூதேவிக் கையாலே தொடவேண்டாம் அவளை!" என்றாள் அத்தை வெடுக்கென்று.

"மூதேவியல்ல அத்தை, பூதேவி இங்கே இருப்பவள். அந்த மகா லக்ஷ்மியை வீட்டுக்கு வரவேற்கத்தான் இந்தப் பூதேவிகூடத் தக்கபடி அலங்காரம் செய்துகொண் டிருக்கிறாள்!" என்று கணீரென்ற குரலில் பேசிச் சிரித்தாள் ருக்கு.

இந்தப் பதிலைக் கேட்டு அத்தையே திடுக்கிட்டுப் போனாள்.

அறைக்குள்ளிருந்த ரங்கநாதனும் ஏதோ ஓர் உணர்ச்சியால் தூண்டப்பட்டு அறையை விட்டு வெளியே வந்தான். அவன் கண்கள் அத்தையைப் பார்க்கவில்லை. சகுந்தலாவையும் ருக்குவையும் மாறி மாறிப் பார்த்தன. தேகம் இளைத்து, முகம் வெளிறடைந்து, உணர்ச்சி குன்றிக் கிடக்கும் ருக்குவின் அலங்காரங்கள் பயங்கரமாகத் தெரிந்தன அவன் கண்களுக்கு. எண்ணெய் வற்றிப்போய் திரி மாத்திரம் படர்ந் தெரியும் தீபத்தின் பிரகாசம்போல் இருந்தது, அவளது வதன சௌந்தரியம். வயதுக்கேற்ற வனப்புடன் வசீகரமாகத் தோன்றிய சகுந்தலாவின் அலங்காரம் அப்போது புதிய திரி போட்டு ஏற்றி வைத்த தீபத்தின் ஒளி போல இருந்தது.

## 39

## சுகம் எங்கே?

ருக்குவையும் சகுந்தலாவையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே சில விநாடி காலம் நின்றுபோன ரங்கநாதன் தன் உணர்வு பெற்றதும் சரேலென்று ஹாலை விட்டுத் தன் அறைக்குள் போய் ஒரு மூலையில் குப்புறப் படுத்துக்கொண் டான். அவன் மனத்தில் விஸ்தரிக்க இயலாத எண்ணங்களின் போராட்டம் மிகவும் கடுமையாக நடக்கலாயிற்று. தேகம் மெலிந்து போய்க் கிடந்த ருக்குவின் பயங்கரமான சௌந்தரி யத்தையும் தேகப் பூரிப்புடன் விளங்கும் சகுந்தலாவின் மனோகரமான அழகையும் அவன் உள்ளம் ஆயிரம் தினுசாக அர்த்தம் பண்ணிப் பார்த்துப் பரிதவித்தது. சிவப்புச் சேலையும் சிங்காரக் கோலமும் தீக்ஷண்யமான பார்வையும் கம்பீரமான பேச்சும் பெண்மையின் உன்னதம் ஜொலிக்கும் லக்ஷ்ய நோக்கும் நிறைந்த ருக்குவின் உருவம் அவன் மனத் தில் மகா சக்தியின் தேஜோ மயமான ரூபத்தை நினைப்பூட்டி யது. நீலப் புடைவையும் நளின சிங்காரமும் குளிர்ந்த பார்வையும் இனிய தோற்றமும் பெண்மையின் இன்ப உணர்ச்சிகளை வாரிச் சொரியும் வசீகரப் புன்னகையும் ததும் பும் சகுந்தலாவின் வடிவம் அவன் உள்ளத்திலே திருமகளின் திவ்ய ரூபத்தை ஞாபக மூட்டியது. இந்த இரண்டு எழில்க ளுள் எது மேம்பட்டது, எதை ஆச்ரயிக்க வேண்டும் என்பது பற்றியதல்ல அவன் மனத்தின் போராட்டம். 'இந்த இரண் டில் ஒன்றை ஏன் விலக்க வேண்டும்? மற்றொன்றை ஏன் புதிதாகக் கைக்கொள்ள வேண்டும்' என்றுதான் மனம் போராடியது.

அவன் மனத்தில் பழைய சிந்தனைகள் எழும்பின. அதே ஆகாச நீலப் புடைவையுடன் வேதவரத்தில் அவன் முதல்

முதலாக ருக்குவைச் சந்தித்த காட்சி அவன் மனக்கண் முன் வந்தது. அந்த லாவண்யத்துடன் இப்போது சகுந்தலா எதிரில் நின்ற காட்சியை ஒப்பிட்டுப் பார்த்தான். 'ஆம்! அன்று ருக்குவிடம் யௌவனத்தின் சோபை துளும்பிக் கொண் டிருந்தது. இன்று அது மறைந்துவிட்டது. ஆனல் அதே யௌவனந்தான் சகுந்தலாவிடம் இன்று காணப்படுகிறது. அதனுல்தானே இந்த மகிமை' என்று எண்ணத் தொடங்கினுன், மிக்க குழப்பமான சிந்தனேகளுக்குப் பின். அதே சமயத்தில் ருக்குவின் யௌவனம் அப்போது அவனுக்குப் பயன்படாது போன சம்பவமும் நினைவுக்கு வந்தது. இந்த நினைவு ஏற்பட்டவுடன் அவன் மனத்தின் சஞ்சலம் சிறிதே நீங்கியது. ருக்குவை அவன் விரும்பி மணம் புரிந்து கொண்டான். ஆனுல் அவளால் வாழ்க்கையில் என்ன சுகம் கிட்டியது? இப்போது சகுந்தலாவிடத்தில் அத்தகைய எண்ணமே அவனுக்கு ஏற்பட்டிருப்பதாக அவன் நெஞ்சுக்குத் தெரியவில்லை. அவன் வயதுக் காலத்தின் இயற்கை வேட்கைகள் தலை தூக்கி நின்ற தருணங்களிலும், மனிதசக்தியின் கட்டுப்பாட்டு வரம்பை மீறி, இயற்கை வக்கரித்துக்கொள்ளும் சமயங்களிலும் மாத்திரமே ஏதோ ஓர் உணர்ச்சி-ஓர் அற்ப ஆசை-அவனுக்குத் தோன்றக் கூடும். அந்த வேளைகளில் அகஸ்மாத்தாகச் சகுந்தலா தென்பட்டாலும்கூட மனம் என்னவோ பண்ணும். வாஸ்தவந்தான்! இதைக்கொண்டு அவன் அவளைக் கல்யாணம் செய்து கொண்டுவிட முடியுமா? 'வேண்டுமென்று கல்யாணம் செய்துகொண்ட ருக்குவே அவன் வாழ்க்கை இனிமையாயிருக்க உதவவில்லையே! இந்தப் பெண் மாத்திரம் உதவக் கூடும் என்பது என்ன நிச்சயம்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான்.

'இப்படியிருக்க ருக்கு ஏன் என்னிடம் மன்றுடுகிருள், சகுந்தலாவைக் கல்யாணம் செய்துகொள்ளச் சொல்லி? பாவம்! பேதை. தன்னுல் எனக்குத் தர முடியாத சுக வாழ்வை இந்தச் சகுந்தலாவாவது அளிக்கட்டும் என்ற நினைப்போ? ஐயோ! ருக்கு இப்படிச் செய்தது பெரிய தவறு

என்பது அவளுக்கே தெரியவில்லை. புருஷன் எப்படியாவது சுகமடைந்தால் போதும் என்கிற எண்ணத்தினல் பலி பீடத் துக்கு மற்ருெரு பெண்ணைச் சிங்காரித்து அனுப்புகிருள்! வெறும் சதையுணர்ச்சியா வாழ்க்கை? வெறும் சரீர சுகமா குடும்ப சுகம்? " இதுதான் சுகம், இதுதான் வாழ்வு" என்று தான் எண்ணியிருந்தால், ருக்கு அன்று, " தாசியாகவாவது இருக்கிறேன்" என்று வேண்டியதை ஏற்றுக்கொண் டிருக்க மாட்டேனு? ருக்குவால் என் அந்தரங்கத்தை அறிந்து கொள்ள முடியவில்லை. அவள் அதை அறிந்துகொள்ள முயன்றதாகவும் தெரியவில்லை. அவள் அந்தரங்கத்தில் புதைந்து கிடக்கும் அந்த மர்மத்தை என்னல் அறிய முடிய வில்லை. நான் அறிந்துகொள்ள முயன்றும் பலிக்கவில்லை. மகாவிஷ்ணுவும் பிரம்மதேவனும் மகாதேவனின் அடிமுடிக ளைத் தேட முயன்ற கதைபோலல்லவா இருக்கிறது விஷயம்? இந்த லக்ஷணத்தில் வேருெரு பெண்ணு? இதை நினைக்கும் போதே சிரிப்பு வருகிறது. இந்தக் காரியத்துக்கு எக்கார ணத்தைக் கொண்டும் இடமளிக்கக் கூடாது. ஆனல்... அத்தை...' என்று ரங்கநாதன் சிந்தித்துக்கொண் டிருக்கும் போதே அவன் சிந்தனைக்குத் தடை ஏற்பட்டது.

அத்தையின் குரல் உச்சஸ்தாயியில் கேட்டது. " போறுமடி இந்த மாமாலம் எல்லாம். அவளுக்கென்ன புடைவை இல்லையா நகை நட்டு இல்லையா? உங்கள் அப்பன் ஆத்தாளைப்போலப் பிசுனரித்தனம் உண்டா அவள் அம்மா வுக்கு? இந்த மாதிரி ஆகாச நீலப் புடைவை நாளைக்கே ஆயிரம் வாங்கிக் கொடுப்பா அவள் அம்மா. கட்டிண்டா நன்னயிருக்கான்னு கொஞ்சம் கேட்டு வாங்கிண்டு போனத் துக்கு இத்தனை வக்கணை பேசறையே. ஏன்னு உங்க குடும் பத்திலேயே எல்லோரும் தரும தாதக்களோன்னே? புடைவை யைத் தானம் கொடுக்கிருளாமே, தானம்! அழகாத்தான் இருக்கு உன் அட்டகாசம்! லக்ஷாதிகாரி இந்தப் பிக்ஷாதிகாரி யிடம் யாசகத்துக்குத்தான் வந்தா பாவம்!"

ரங்கநாதன் உள்ளே இருந்தப்டியே கவனித்தான்.

" அப்படித்தான் இருக்கட்டுமே அத்தை. லக்ஷாதிகாரி ஐசுவரிய தேவதை. பிக்ஷாதிகாரி தரித்திர தேவதை. தரித்திர தேவதையிடம் தனம் கிடைத்தால் அதைக் கட்டிக் காக்கவும் தெரியாது; அநுபவிக்கவும் தெரியாது. தனம் தனத்துடன் சேர வேண்டும். தரித்திரத்துடனு இருப்பது? அதனுல்தான் கொடுக்கிறேன். இந்த ஆகாச நீலப் புடைவையை மட்டும் அல்ல. மற்ற எல்லாப் புடைவைகளையுந்தான். ஏன்? என் நகை நட்டுக்களைக்கூட நான் சகுந்தலாவுக்குக் கொடுக்கப் போகிறேனே! உங்களுக்குத் தெரியாதா? இந்தத் தரித்திரத்திற்குப் புடைவை என்ன, பூஷணங்கள் என்ன? முக்கியமான பூஷணம்; என் பிரதான தெய்வம்-அதையே... அவரையே-என் இருதயத்தில் அணிந்துகொள்ளத் தெரியவில்லை எனக்கு. இந்த அலங்கார பூஷணங்கள் மாத்திரம் எதற்கு? அந்தப் பூஷணத்தைக்கூட—அந்த என் தெய்வத்தைக்கூட—..." அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லையோ என்னவோ? சட்டென்று வார்த்தைகள் நின்றன.

உள்ளே இருந்த ரங்கநாதனின் பிடரியைப் பிடித்து ஏதோ ஒன்று அவனை நெட்டித் தள்ளியது. அவன் வெளியே வந்தான். ஏதோ சொல்ல வேண்டுமென்று தோன்றியது அவனுக்கு. ஆனுல் அத்தையின் முன்னிலையில், அந்த அந்நியப் பெண்ணின் எதிரே சொல்ல முடியவில்லை அவனுல். அப்படியே நின்றுவிட்டான்.

நாச்சியாரம்மாளுக்குக்கூட மூச்சுத் திணறிப் போகும் போல் இருந்தது. சகுந்தலா பிரமை பிடித்தவள் போல நின்று போனவள், மெள்ளச் சமாளித்துக்கொண்டு, "ருக்கு, ஏன் இப்படியெல்லாம் பேசுகிருய்? இதற்குத்தான் என்னை அலங்காரத்துடன் வரச் சொன்னுயோ?" என்று கேட்பதற்குள் போதுமென்று ஆகிவிட்டது அவளுக்கே.

" சகுந்தலா, வேறு விதமாக நினைக்காதே. உன்னைக் கண் குளிரப் பார்க்கத்தான் வரச் சொன்னேன். என் உள்ளம் குளிர்ந்தது. இதோ...என் தெய்வம்...அவரை மனப்பூர்வமாக உனக்கு அளிக்கிறேன். அத்தையின் ஆசீர்வாதம் உனக்கு இருக்கட்டும். நீயாவது சுகமாக இரு அம்மா!

உன்னாலாவது அவருக்கு வாழ்க்கையில் சுகம் உண்டாகட்டும். இதுதான் என் மனத்துக்கு நிம்மதியளிக்கும். என் ஆத்மாவுக்குச் சாந்தி தரும்...சகுந்தலா! நீ என் சகோதரி. உன்மேல் எனக்குக் கொஞ்சமும் விரோதம் இல்லை. நீ சுகமாக இருப்பாய் கண்ணே!'' என்று உணர்ச்சி பொங்கும் குரலில் சொல்லி ருக்கு சகுந்தலாவை அணைத்து உச்சி மோந்து அவள் இரு கன்னங்களிலும் முத்தமிட்டாள்.

"ருக்கு, உன் உடம்பு என்ன இப்படிக் கொதிக்கிறதே! ஜுரம் நெருப்பாய்க் காய்கிறதே!'' என்றாள் சகுந்தலா சற்றே பயத்துடன். வேறொன்றும் பேசத் தெரியவில்லை, அந்த அப்பாவிப் பெண்ணுக்கு.

"ஜுரமும் இல்லை, ஒன்றும் இல்லை; ஏதோ கொஞ்ச காலமாக ஏற்பட்ட மன உளைச்சல். இன்னும் சிறிது நேரத்தில் தணிந்துவிடும்'' என்று நிதானமான குரலில் சொல்லி விட்டு ருக்கு நாச்சியாரம்மாளைப் பார்த்து, "அத்தை, உங்களிடம் எனக்கு முக ராசி இல்லாமற் போயிற்று. ஏதோ என் பாக்கியம் அவ்வளவுதான்! சகுந்தலாவின் கண்கள் கமல மலர் போன்றவை; அவை கலங்காமல் பார்த்துக்கொள்ளுங்கள். தாமரை மலரின் அழகைத் தண்ணீருக்கு மேலிருந்து பார்க்க வேண்டும். மலரைக் கிள்ளித் தண்ணீருக்குள் தோய்த்துப் பார்க்கக் கூடாது'' என்று நிறுத்தினாள்.

நாச்சியாரம்மாளுக்கு மனத்தில் ஏதோ பயம் உண்டாயிற்று. "என்னடி, என்ன என்னவோ பேத்தறே? அடே ரங்கண்ணா, இந்தப் பொண்ணுக்குப் பைத்தியம் பிடிச்சு விட்டாப்போல் இருக்கே. ஒண்ணுக்கொண்ணு சம்பந்தமில்லாமே ஒளறரு!'' என்றாள் திரும்பி ரங்கநாதன் அறைப் பக்கம் பார்த்தபடியே.

ருக்குவும் சகுந்தலாவுங்கூட, சட்டென்று ரங்கநாதன் அறைப் பக்கம் திரும்பினார்கள். அறை வாசற்படியில் அவன் நின்றிருந்ததைக் கண்டதும் ருக்குவின் மனத்தில் என்ன தோன்றியதோ, சரேலென்று அந்த இடத்தை விட்டு நீங்கி உள்ளே போய்விட்டாள்.

அதற்குமேல் ஒரு விநாடி கூட அத்தையும் சகுந்தலாவும் அங்கே நிற்கவில்லை.

## 40

## பணம் வந்தது

அடுத்த நாள் காலையில் நாச்சியாரம்மாளைப் பெரும் பைத்தியமாகவே அடித்துவிடக் கூடிய சம்பவம் ஒன்று நடந்தேறியது. அன்றைத் தபாலில் ருக்குவின் பெயருக்கு 'இன்ஷூர்' செய்யப்பட்டு வந்திருந்த எண்ணூறு ரூபாய்ப் பணந்தான் காரணம். பணத்துடன் ருக்குவின் பெயருக்கு ஒரு கடிதமும் வந்திருந்தது.

பணம் வந்தபோது ரங்கநாதன்கூட வீட்டில்தான் இருந்தான். ருக்கு கையெழுத்துப் போட்டுப் பணத்தைப் பெற்றுக்கொண்டதும் அதை நேரடியாக எடுத்துக்கொண்டு போய் அத்தையின் பாதங்களில் வைத்து விட்டு அவளைச் சேவித்தாள். "அத்தை, இதை எடுத்துக்கொள்ளுங்கள். உங்கள் மருமான் கல்யாணத்திற்காக இதை உபயோகித்துக்கொள்ளலாம்; அல்லது சகுந்தலாவுக்கு ஏதாவது புதிய நகை செய்து போட்டாலும் சரி. எனக்கு ஏன் இந்தப் பணம்? பைத்தியக்காரர்கள்! தெரியாமல் என் பேருக்கு அனுப்பிவிட்டார்கள்" என்று சொல்லி எழுந்து பணத்தை எடுத்து ஒரு தட்டில் வைத்து அத்தையிடம் கொடுத்தாள்.

அத்தைக்குச் சிறிது நேரம் உலகமே தலைகீழாகச் சுற்றுவதுபோல் இருந்தது. கொள்ளு என்றால் வாயைத் திறந்து, கடிவாளம் என்றால் வாயை மூடும் குதிரையைப் போலத் தானே இருக்கிறாள் அவள்? "உங்க அப்பாவா பணம் அனுப்பி யிருக்கார்? ஐயோ பாவம்! அவருக்கு ஏன் இந்தக் கஷ்டம் இப்போ? இங்கே பணம் வேணும்னு யாராவது கேட்டாளா என்ன?" என்று அசடு வழியும் குரலில் கேட்டாள் பித்துக்குளி போல்.

"என்னவோ அனுப்பியிருக்கிறுர்!" என்பதற்கு மேல் ருக்கு ஒன்றும் சொல்லவில்லை.

"நீ கடுதாசி எழுதினையா என்ன? எழுதியிருப்பே."

"இல்லை. இல்லவே யில்லை. நான் ஊரை விட்டு வந்த பிறகு என் கைப்பட ஒரு கடுதாசிகூட எழுதவே இல்லை"

"யாரையாவது விட்டு எழுதச் சொல்லியிருப்பே!"

"உம். அதுவும் இல்லை" என்று அழுத்தமான குரலில் சொன்னுள் ருக்கு.

அதற்கு மேல் துருவித் துருவிக் கேட்க வேண்டு மென்று தோன்றவில்லை நாச்சியாரம்மாளுக்கு. தட்டுடன் பணத்தை எடுத்துக்கொண்டு பத்திரப்படுத்தப் போய்விட்டாள். இதை யெல்லாம் கவனித்துக்கொண் டிருந்தான் ரங்கநாதன்.

அத்தை பணத்துடன் மறைந்தவுடனே ருக்குவும் அந்த இடத்தை விட்டுச் சென்றுள். நேராகத் தன் அறையில் போய்ப் படுத்துக்கொண்டாள். முதல் நாள் ராத்திரி நல்ல ஜுரம் அடித்த உடம்பு; இன்னும் ஜுரம் இருந்துகொண்டு தான் இருக்கிறது. மிகுந்த ஆயாசத்துடன் கண்களை மூடினுள். "ருக்கு!" என்று குரல் கேட்டது. கண்களை விழித்தாள். எதிரே ரங்கநாதன் இருந்தான். மெல்ல எழுந் திருக்க முயன்றுள்; கஷ்டமாக இருந்தது. "வேண்டாம். எழுந்திருக்காதே, உன் உடம்பு கொஞ்சங்கூட நன்ருக இல்லை" என்றுன் ரங்கநாதன்.

"எனக்கே தெரிந்துவிட்டதே. நன்ருகத்தான் இல்லை. இனி நன்ருக ஆகவும் முடியாது!" என்றுள் ருக்கு படுத்த படியே.

ரங்கநாதன் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்துகொண்டான். "ருக்கு, ராத்திரி நன்ருகத் தூங்கினுயா?" என்றுன் மெல்லிய குரலில்.

"உம், தூங்கினேன்!...ஆனுல் இந்த ஜுரம்..இருந்தாலும் பரவாயில்லை...மனசு..."

"எப்படித்தான் நிம்மதியா யிருந்ததோ?...ருக்கு, நிச்சய மாக உனக்குத் தூக்கம் வந்ததா?"

"ஆமாம்!"

"பேதைப் பெண்!"

பேதைப் பெண்ணுகத்தான் இருந்துவிட்டுப் போகிறேனே! அதனுல் குறைவு ஒன்றும் இல்லே. உங்கள் வாழ்க்கையில் இனிச் சுகம் உண்டாகும் என்கிற நிம்மதி ஒன்றே போதுமே எனக்கு. தூக்கம் ஏன் வராமல் போகிறது?"

ரங்கநாதன் தன் தீர்மானத்தைச் சொல்லிவிடலாமா என்று ஒரு கணம் சிந்தித்துப் பார்த்தான். ஆனுல் ருக்குவுக்கு அதன் மூலம் கொஞ்ச நஞ்சம் இருந்த மன அமைதியும் போய்விடும். ஏற்கனவே நொந்து கிடக்கும் அவள், தன் தீர்மானத்தை அந்தச் சந்தர்ப்பத்தில் அறிவதால் பெரிய அதிர்ச்சியாகப் போய்விடுமோ என்கிற பயமே அவன் வாயைக் கட்டி வைத்தது. சிறிது நேரம் மௌனம் சாதித்தபடியே அவளே உற்று நோக்கிக்கொண் டிருந்தான்.

அவன் பார்வை அவளுக்குச் சங்கடமாக இருந்தது. அதை அவள் விரும்பவே இல்லே. இனிமேல் அடிக்கடி அவன் தன்னேப் பார்ப்பதும், தன்னிடம் வந்து பேசுவதுங் கூடச் சரியல்ல என்று எண்ணினுளோ என்னவோ? "இதோ பாருங்கள். இனிமேல் நீங்கள் இங்கே வரக் கூடாது. உங்கள் நன்மைக்குத்தான் சொல்லுகிறேன்" என்ருள்.

ரங்கநாதன் பேச்சை மாற்ற எண்ணி, "அதிருக்கட்டும். உனக்கு உன் அப்பாவிடமிருந்து கடுதாசி வந்ததே; என்ன எழுதியிருக்கிருர்?" என்று கேட்டான்.

இந்தக் கேள்விக்குப் பிறகுதான் ருக்கு கடிதத்தைப் பிரித்துப் பார்த்தாள். மைசூரிலிருந்து ஊருக்குப் போனவுடனே பணம் சாயவில்லே என்றும், பிறகு சில அசந்தர்ப்பங்களால் அனுப்பத் தாமதம் ஏற்பட்ட தென்றும் தேவராஜ ஐயங்கார் எழுதியிருந்தார். அவர் ஒரு சமயம் சென்னேக்குச் சென்றபோது, அங்கே ராஜலக்ஷ்மியைச் சந்திக்க நேரிட்ட தென்றும் அவள் சொன்ன சில விஷயங்களிலிருந்து எப்பாடு பட்டாவது பணத்தை உடனே அனுப்பிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்க வேண்டுமென்று தாம் தீர்மானத்துவிட்ட

தாகவும் குறிப்பிட்டிருந்தார். கடிதத்தின் முடிவில், 'இனி மேலாவது உனக்கு நல்ல காலம் பிறக்கும் என்று நம்புகிறேன். அப்போது ஒரு கடுதாசி எழுது. உன் அம்மாவும் நானும் வந்து பார்க்கிறேம்' என்று எழுதியிருந்ததைப் படிக்கும்போது ருக்குவின் பார்வை கண்ணீரால் சூன்யமாயிற்று. சிறிது நிதானித்தாள். ரங்கநாதனும் அவளைக் கவனித்தான். கடிதத்தின் முடிவில் தேவராஜ ஐயங்காரின் கையெழுத்துக்குப் பிறகு ஒரு குறிப்புக் காணப்பட்டது, (இப்போது பணம் வந்து சேர்ந்திருப்பதால் உன்னைச் சில நாட்கள் இங்கே அனுப்பி வைக்க, உங்கள் அத்தை மறுக்க மாட்டாளென்று நினைக்கிறேன். மாப்பிள்ளையையும் உன்னையும் சேர்ந்தாற் போலப் பார்த்தால் எங்களுக்குப் பெருமை பிடி படாது) என்கிற வாக்கியத்தைப் படித்து முடிப்பதற்குள் கண்களில் திரையிட்ட கண்ணீரைப்பல தடவை துடைத்துக்கொள்ளும் படி ஆயிற்று ருக்குவுக்கு. கடைசியில் ஒரு பெருமூச்சுடன் கடிதத்தை உறைக்குள் போட்டுவிட்டு, ஏதோ யோசிப்பவள் போன்ற முகபாவத்துடன் இருந்தாள் சிறிது நேரம்.

ரங்கநாதன் இப்போது கேட்டான் மறுபடியும்: "என்ன எழுதியிருக்கிறர்?" என்று.

"உங்களை வரச் சொல்லி எழுதியிருக்கிறர், என்னையும் அழைத்துக்கொண்டு" என்று பரிதாபமான ஒரு வறட்டுச் சிரிப்புடன் பதில் சொன்னுள் ருக்கு.

"நிஜமாகவா?"

"ஆம். என்னைப் பார்க்கவேண்டும்போல் இருக்கிறதாம்...ஆனல் கொண்டு விடுவதற்கு உங்களுக்கு லீவு கிடைக்க வேண்டுமே?"

"உம். அதற்கென்ன? மூன்று நாள் லீவுகூடவா கிடைக்காது?...ஆம்...உன் உடம்பு சரியாக இல்லை. அங்கே போய்ச் சில காலம் இருந்து உடம்பைத் தேற்றிக்கொள்வது நல்லதுதான்."

"உம். உடம்பு கிடக்கிறது. எப்படியும் இனி நான் ஊருக்குப் போக வேண்டியவள்தானே! இப்போது அங்கிருந்தே கடுதாசியும் வந்திருக்கிறது. நாளைக்கே என்னைக்

கொண்டுபோய் விட்டுவிடுங்கள்'' என்று சொன்னபோது வேறே ஏதோ சொல்ல வேண்டும்போல் தோன்றியது ரங்க நாதனுக்கு. ஆனால் சொல்லாமல் நிறுத்திக்கொண்டு, ''நாளைக்கா? உடல்நிலை இப்படி இருக்கும்போதா? சில நாள் இருந்து வைத்தியம் பண்ணிக்கொண்டு..'' என்று சொல்லி வரும்போதே இடை மறித்து, ''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். வைத்தியமாவது, மண்ணுங்கட்டியாவது?'' என்று ஒரேயடியாக ருக்கு மறுத்துவிட்டாள்.

அவள் ஊருக்குப் போவதாகத் தீர்மானித்து அந்தச் சமாசாரத்தை நாச்சியாரம்மாளிடம் கூறியபோது, நாச்சியா ரம்மாள் நிலை கலங்கிப் போனாள். அவள் என்ன நினைத் தாள், என்ன சொல்லவேண்டுமென்று இருந்தாள், என்ன சொன்னாள் என்பதுகூட அவளுக்கே தெரியவில்லை. ஏதோ அசட்டுப் பிசட்டென்று பேசினாள், சந்தர்ப்ப சாதகங்களுக்கு அடிமைப்பட்டுப் போய். ''ஏண்டியம்மா, இங்கே இருந்தா நான் கவனிக்க மாட்டேனா என்ன? கஞ்சி வச்சுக் கொடுக்க மாட்டேனா, காபி வச்சுக் கொடுக்க மாட்டேனா? இந்த ஊரிலே என்ன டாக்டர் இல்லையா? மருந்து இல்லையா?'' என்று ஏதேதோ உளறிக் கொட்டினாள் அவள். அரைப் பட்டினிக்காரன் அளகாபுரிக்கு அரசனானால் எப்படி இருக் குமோ, அப்படி இருந்தது அவள் நிலைமை அப்போது.

ஆனால் ஒரே வார்த்தையில் ருக்கு அத்தையை மடக்கி விட்டாள்: ''அத்தை, நான் போகிறேன். உங்கள் மருமான் சுகத்தைக் கோரியே போகிறேன். என்னைத் தடை செய்ய வேண்டாம்'' என்று.

அதற்கு மேல் நாச்சியாரம்மாளால் வாயைத் திறக்க முடிந்ததா? ஊஹும்!

## 41

## பிரார்த்தனே

ருக்குவின் தேக நிலேயைப் பற்றி நினேக்கும்போது அந்தச் சமயத்தில் அவள் வெகுதூரம் ரயிலில் பிரயாணம் செய்வது உசிதமல்லவென்றே ரங்கநாதன் கருதினுன். சில நாட்கள் கோயம்புத்தூரிலேயே இருந்து டாக்டரிடம் சிகிச்சை செய்துகொண்டு, அவள் உடலில் கண்டிருந்த ஜுரத்தை நிறுத்திய பிறகு அவள் ஊருக்குக் கிளம்புவது பற்றி யோசிக்கலாம் என்பதுதான் அவன் எண்ணம். இதை இரண்டொரு தடவை ருக்குவிடம் சொல்லிக்கூடப் பார்த்தான். ஆனுல் ருக்கு கேட்கவில்லே. ஒரே பிடிவாதமாக இருந்தாள் அவள்.

மறுநாள் விடிந்ததும் விடியாததுமாக ஊருக்குப் போகும் பிரச்சினேயைக் கிளப்பினுள். நாச்சியாரம்மாள்கூடக் கொஞ்சம் பயமடைந்தாள். 'உடம்பு இப்படி இருக்கும்போது ஊருக்கு அனுப்பினு லோகத்தார் என்ன சொல்லுவா? அதுவும் இப்பத்தான் அவ அப்பா சுளே சுளேயா எட்டு நூறு ரூபா அனுப்பி யிருக்கார்!' என்று அவள் மனம் எண்ணத்தான் எண்ணியது. அவள்கூட ருக்குவுக்குப் பரிந்து பேசுப்வள் போல நாலு வார்த்தை சொல்லிப் பார்த்தாள். ருக்கு கேட்டால்தானே!

ரங்கநாதன் ஆபீசுக்குப் புறப்படும்போது மூன்று நாளேக்காவது லீவு வாங்கிக்கொண்டு வரும்படி கூறி விட்டாள் ருக்கு. அவன் மிகுந்த வேதனேயுடன்தான் ஆபீசுக்குப் போனுன். அவன் சாயந்திரம் வீடு திரும்புவதற்குள் ருக்கு அத்தையிடம் எப்படி எப்படிச் சொல்ல முடியுமோ அப்படியெல்லாம் சொல்லித் தீர்த்தாள் தன் அபிப்பிராயத்தை.

''அத்தை, இதிலே எனக்குத் துளிகூட மனசுக்குக் கஷ்டமே இல்லே. எப்படியாவது அவா நன்ருயிருந்தால் போதும். இந்தப் பாவிக்குத்தான் அதிருஷ்டம் இல்லே. அவராவது சகுந்தலாவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு சுகமாக இருக்கிருர் என்று காதால் கேட்டாலும் போதும். என் மனசு திருப்தி அடையும்'' என்று முடிவாகச் சொல்லிவிட்டாள் ருக்கு.

நாச்சியாரம்மாளுக்கே அவள் பேச்சு மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது. 'லோகத்திலே இப்படிக்கூட ஒத்தி இருக்க முடியுமா?' என்று எண்ணி எண்ணிப் பிரமித்துப் போனுள் அவள். எனினும் மனத்துக்குள்ளேயே ஒரு விதச் சந்தோஷம் உண்டாயிருந்தது அவளுக்கு. 'வந்தபோதே நேரே முழிக்கல்லே; சனியன், போய்த் தொலேயட்டும். அப்புறமாவது ரங்கண்ணு சுகமாயிருந்தால் போதும்' என்று தான் நினைத்தாள் அவள்.

ரங்கநாதன் ஆபீசிலிருந்து வந்தபோது ருக்கு ரெயிலுக்குத் தயாராக இருந்தாள். அவன் வந்ததும் வராததுமாக, ''நான் என்ன சொல்லியும் கேக்கல்லே. அவள் ஒரே பிடிவாதமா இருக்கா. உடம்புந்தான் சரியாயில்லே. அவள் தாயார் தகப்பனுரண்டைதான் போய் இருக்கட்டுமே'' என்று நாச்சியாரம்மாள் சொன்னது, அவன் செவிகளில் விழுந்தது. அவன் ஒன்றும் பதில் பேசவில்லே. பதில் பேசும் நிலேயில் இல்லே அவன் மனம்.

ஸ்டேஷனுக்குப் போக வண்டி வந்து நின்றது. ஒரு சிறு பெட்டியும் படுக்கையும் வண்டிக்குள் போய்ப் புகுந்து கொண்டன. ரங்கநாதன் ஹாலில் தயாராக நின்றுகொண்டிருந்தான்.

ருக்கு உள்ளே போய்ப் பெருமாள் மேடை மேல் இருந்த குத்து விளக்கை ஏற்றினுள். பிறகு மிகுந்த பக்தி சிரத்தையுடன் தரையில் விழுந்து சேவித்துவிட்டு எழுந்தாள். தீப ஒளியில் அவள் முகத்திலே அவளது நிர்மலமான அகம் தெரிந்தது. உடம்பு ஜுரத்தினுல் இன்னும் மழுவாய்க் கொதித்துக்கொண்டுதான் இருக்கிறது. ஆயினும் அவள்

உள்ளத்தின் கொதிப்புப் பூராவும் தணிந்திருந்தது இப்போது. சில விநாடி காலம் கண்களை மூடிக்கொண்டு பெருமாள் மேடையின் எதிரே நின்று பிரார்த்தனை செய்துவிட்டு வெளியே வந்தாள் ருக்கு. அவள் முகத்தில் தென்பட்ட அமைதியைக் கண்டு அத்தை நாச்சியாரம்மாளே அதிசயப் பட்டாள். அவள் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண் டிருந்த போதே ருக்கு அவள் காலில் விழுந்து நமஸ்காரம் செய்தாள். அத்தையிடம், "போய் வருகிறேன்" என்று ஒரு வார்த்தை சொல்ல அவள் மனம் துடிக்கத்தான் துடித்தது. ஆனால் என்ன காரணத்தாலோ தெரியவில்லை, அவள் வாயிலிருந்து வார்த்தை கிளம்பவில்லை.

ரங்கநாதனை ருக்கு வணங்கியபோது அவன் கண்களில் நீர்ப்பெருக் கெடுத்தது. அவன் அடக்கிக்கொள்ளத்தான் பார்த்தான்; முடியவில்லை. அவள் விழுந்து நமஸ்கரித்தபோது அவன் பாதங்களில் ஏதோ ஒன்று உராய்ந்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது அவனுக்கு. சட்டென்று குனிந்தான். அப்போதுதான் அவள் நமஸ்கரித்துவிட்டு எழுந்தாள். அவள் கழுத்திலிருந்த மாங்கல்ய சூத்திரம் அவள் மேலாக்குக்கு மேல் தென்பட்டதை அவன் கண்கள் கண்டன. ஆம்! அவள் வணங்கியபோது அவன் பாதங்களில் உராய்ந்தது அந்த மாங்கல்யந்தான் என்பதை நொடிப் பொழுதில் உணர்ந்துகொண்டான் அவன். அவன் தேகம் சிலிர்த்தது.

ருக்கு எழுந்து அவன் பாத ஸ்பரிசம் பெற்ற மாங்கல்யத்தை இரு கைகளாலும் பற்றிக் கண்ணில் ஒற்றிக்கொண்டாள். அந்தக் காட்சியைக் கண்ட ரங்கநாதன் உள்ளம் பாகாய் உருகிவிட்டது. அடுத்த விநாடி அங்கே நிற்க முடியாமல் வாசலுக்குப் போய்விட்டான் அவன். ருக்கு அவனைப் பின்பற்றி வாசலுக்கு வந்து வண்டியில் ஏறிக்கொண்டாள். ரங்கநாதனும் ஏறிக்கொண்டான். அவர்கள் மௌனத்தைப் போலவே வீதியிலும் மௌனம் தோய்ந்து கிடந்தது.

வண்டி கிளம்பியது!

## 42

## அடுத்த வீட்டுக்காரி

பதினைந்து நாட்கள் பறந்தோடின.

சகுந்தலாவின் வீட்டுக் கூடத்தில் நாச்சியாரம்மாளும் சகுந்தலாவின் தாயார் ஆண்டாளம்மாளும் ஒரு நாள் மத்தியான்னம் வழக்கம்போல ஏதேதோ பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தனர். அவர்கள் பேச்சு, கொஞ்சங் கொஞ்சமாகக் கல்யாண விஷயமாகத் திரும்பியது. இதுவும் நாள் கணக்காக நடந்துவரும் பேச்சுத்தானே!

"ஆண்டாளம்மா, நீங்கதான் சொல்லுங்களேன். எத்தனை காலம் இப்படியே இருக்க முடியும்? அவனுந்தான் எப்படி எப்படியோ நடந்துதான் பார்த்தான். அது பொண்ணுயிருந்தால்தானே. பிரம்ம ராக்ஷஸான்னு வந்து சேர்ந்தது? ஆம்படையானுக்குப் பெண்டாட்டியா இருக்கணுமே ஒரு நாளாவது? ஊஹூம்! கடைசியிலே நோவுன்னு ஒரு சாக்கு ஏற்பட்டதே; அதை வச்சுண்டு, 'நான் ஊருக்குத்தான் போவேன்'னு ஒரே பிடியாப் பிடிச்சுது. நானுந்தான் கிளிப்பிள்ளைக்குச் சொல்ற மாதிரி சொல்லிப் பார்த்தேன். கேட்டாத்தானே! இனிமே ஒரு நிமிஷங்கூட இங்கே இருக்க முடியாதாம்!" என்று மெல்ல ஆரம்பித்தாள் நாச்சியாரம்மாள்.

ஆண்டாளம்மாள் அடுத்த வீட்டுக்காரிதான். ருக்குவும் ரங்கநாதனும் நடந்துகொண்ட விதமெல்லாம் அவள் கவனத்துக்கும் அவ்வப்போது வந்துகொண்டுதான் இருந்தன. சகுந்தலா அடிக்கடி அங்கே போய் நேரில் ருக்குவிடம் பேசி வருவதிலிருந்தும் தானே நேரில் சில சமயம் சென்று கண்டறிந்து கொண்டதிலிருந்தும், ருக்குவுக்கும் ரங்கநாதனுக்கும்

இடையே தாம்பத்திய வாழ்வு சாத்தியம் இல்லாதபடி ஏதோ ஒன்று குறுக்கிட்டிருக்கிறது என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். சகுந்தலா அவளுக்கு ஒரே பெண். அவள் இரண்டு வயதுக் குழந்தையாக இருந்தபோது கோயம்புத்தூருக்கு விஜயம் செய்திருந்த பிளேக் அவள் தகப்பனுரைக் கொண்டுபோய்விட்டது. அன்றைத் தினத்திலிருந்து ஆண்டாளம்மாளுக்குத் தன் கணவன் வாங்கி வைத்திருந்த வீடும் பாங்கியில் போட்டிருந்த பத்தாயிர ரூபாய் பணமும் உடம்பில் அணிந்திருந்த நகைகளும் ஒரே பெண்ணுன சகுந்தாலவுந் தாம் பிரபஞ்சம்.

சகுந்தலா கொழு கொழுவென்று வளர்ந்தாள். பதினைந்து வயதாகித் தளதளவென்று இருந்தாள். ஆண்டாளம்மாளுக்குப் பெண்ணின் பேச்சுத்தான் வேதம். சகுந்தலாவின் விருப்பத்தை மீறி ஒரு காரியமும் செய்யமாட்டாள். அன்றியும் கொஞ்சம் இரண்டுங்கெட்டான் சுபாவம். எந்த விஷயத்தைப்பற்றியும் தீர யோசனை செய்யும் 'பெரிய புத்தி' இல்லை அவளுக்கு. ஏதோ புருஷன் இருந்த வரையில் அவள் அசட்டுத்தனம் வெளியே பரவாமல் கட்டிக் காத்து வந்தார். அவர் காலமான பிறகு, சகுந்தலாவுக்குப் புத்தி தெரியும் வரையில் சுத்த இரண்டுங் கெட்டானுக இருந்தாள் ஆண்டாளம்மாள். ஊர்ச் சண்டையை யெல்லாம் விலைக்கு வாங்கிப் போட்டுக்கொள்ளுவாள் என்று கூறினுலும் மிகையாகாது. அதனுல் பலன் என்ன தெரியுமா? அண்டை அயலில் இருப்பவர்கள்கூட ஆண்டாளம்மாள் வீட்டுக்கு அடிக்கடி போவது நின்றுபோனதுதான். சகுந்தலா வளர வளர அவள் தந்தையின் குணங்கள் அவளிடம் தென்பட்டன. தந்தை உயிருடன் இருந்தால் அவள் குணமும் அழகும் பதின் மடங்கு அதிகமாகப் பிரகாசம் அடைந்திருக்கும். அவர் இல்லாத குறையாலும், தாயாரின் செல்லத்தாலும் சகுந்தலாவின் இயற்கையான சுபாவம் மங்கிக் கிடந்தது. அண்டை அயலாருக்கும் தங்களுக்கும் இடையே போக்கு வரத்து, பேச்சு வார்த்தை இதெல்லாம் ஒழுங்காக இல்லை என்பதைச் சகுந்தலா உணர்ந்துகொள்ளக் கூடிய வயதும் வந்தது.

அப்போதுதான் அவளுக்கு இது விஷயமாக வருத்தம் ஏற்பட்டது. இரண்டொரு வருஷ காலம் அவள் மிகவும் வேதனைப் பட்டுக்கொண்டிருந்தாள். இந்தச் சமயத்தில்தான் அடுத்த வீட்டில் வெகு காலமாக இருந்தவர்கள் மாற்றலாகி வெளியூர் போன சம்பவமும், அந்த வீட்டுக்குப் புதுக் குடித்தனம் வந்த சம்பவமும் நிகழ்ந்தன. ருக்குவும் ரங்கநாதனும் வந்து குடியேறியதால் மாத்திரம் எவ்விதமான மாறுதலும் ஏற்பட்டுவிடவில்லை. அத்தையின் பிரவேசந்தான் மாறுதலை உண்டாக்கியது. சகுந்தலாவின் உள்ளத்துக்கும் ஆறுதலைத் தந்தது. அதிலிருந்து அடுத்த வீட்டுக்கும் தங்களுக்கும் போக்கு வரத்து நேரிட்டு, விஷயம் இவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டது.

இந்தக் கல்யாணப் பேச்சு இப்படி வளருவதற்கும் ஒரு காரணம் சகுந்தலாதான். ஆயினும் அவள் அதை உணரவில்லை. தன் தாயாரிடம் அடுத்த வீட்டார் சமாசாரத்தைப் பேசும்போது வார்த்தைப் போக்கில் ரங்கநாதனைப் பற்றியும் சில நல்ல வார்த்தைகள் சொல்லுவது அவள் வழக்கம். இதை வேறு விதமாக நினைத்துக்கொண்டாள் ஆண்டாளம்மாள். அதற்கேற்றாற்போல நாச்சியாரம்மாளும் சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி பேசி, காரியாநுகூலம் செய்துகொள்வதில் முனைந்தாள்.

நாச்சியாரம்மாள் கோயம்புத்தூர் வந்து சேர்ந்த சில தினங்களுக்குள்ளாகவே ஆண்டாளம்மாளின் சுபாவத்தை உணர்ந்துகொண்டாள். அவளது 'ஆஸ்தி பாஸ்தி'களைப் பற்றியும் தெரிந்துகொண்டாள். 'இந்தப் பணக்கார இடத்தை விட்டுவிடக் கூடாது' என்கிற தீர்மானமும் நாளடைவில் தோன்றலாயிற்று அவளுக்கு. அவள் எண்ணத்திற்கு அநுசரணையாகவே வீட்டிலும் நடந்தது. ரங்கநாதனும் ருக்குவும் 'தீண்டா சூஸ்திரமாக' இருந்ததைக் கண்டு கொதித்துப்போன நாச்சியாரம்மாள் உள்ளத்திலே, இப்படியெல்லாம் யோசனைகள் உண்டாவது தவறு? பணப்பித்துப் பிடித்தவள்; பணத்தை மருமானுக்காகச் செலவழித்து அவன் சுகத்தைக் காண விரும்பி ஏமாந்தவள்; இந்த ஏமாற்றம்

அவளை என்னதான் செய்யும்படி தூண்டாது? ருக்குவின் தகப்பனரிடமிருந்து பணம் வந்தபோது அவளுக்குச் சிறிது தடுமாற்றம் ஏற்பட்டது. ஆனல் ருக்குவின் பிடிவாதக் கொள்கையும் முடிவான பேச்சும் ஊருக்குக் கிளம்பிய நெஞ்சுச் துணிச்சலும் நாச்சியாரம்மாளின் சுயரூபத்தைக் காட்டும்படி செய்துவிட்டன. அவள் மும்முரமாக ரங்கநாத னுக்குச் சகுந்தலாவை மறு விவாகம் செய்துவிடத் திட்டம் போட்டுவிட்டாள். இதற்குச் சாதகமாக அமைந்தது ஆண்டாளம்மாளின் இரண்டுங் கெட்டான் சுபாவம்.

நாச்சியாரம்மாள் இப்போது கல்யாணப் பேச்சை ஆரம் பம் செய்தபோது சகுந்தலா வீட்டில் இல்லை. பின்புறத் தோட்டத்தில் பூப் பறித்துக்கொண் டிருந்தாள். நாச்சியாரம் மாள் பேச்சுக்குப் பதிலாக, "அப்படீன்ன இப்ப நீங்க என்ன செய்யறதா யோசனை?" என்று கேட்டாள் ஆண்டா ளம்மாள்.

"செய்யறது என்ன? ஊருக்குப் போனவள் இனிமேல் இந்தப் பக்கங்கூடத் திரும்பப் போறதில்லையாம். 'உங்க மருமானுக்குச் சகுந்தலாவைக் கல்யாணம் பண்ணிக்கொள் ளுங்கோன்னு சொல்லிவிட்டாள்."

"அப்படியா?" ஆண்டாளம்மாள் யோசனையில் ஆழ்ந் தாள். ஒரு நாள் சகுந்தலா சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. 'ருக்குவே சொன்னளாமே இவ ளண்டை, "நீ கல்யாணம் பண்ணிக்கொள்; நான் போகிறேன்" என்று. என்ன அதிசயம்!' என்று எண்ணி ளுள் ஆண்டாளம்மாள். அன்று சாயந்தரம் ருக்குவின் ஆகாச நீலப் புடைவையைக் கட்டிக்கொண்டு சகுந்தலா நாச்சியாரம்மாளுடன் அவள் வீட்டுக்குப் போனபோது, ருக்கு கூறிய வார்த்தைகளை, அப்போது இருந்த அகப்பதைப்பில் சகுந்தலா தன் தாயிடம் கொஞ்சம் உணர்ச்சியோடு சொல்லி யதைத்தான் இப்போது ஆண்டாளம்மாள் சிந்தித்துப் பார்த் தாள்.

அவள் யோசனையைக் கண்ட நாச்சியாரம்மாள், "ஏன்? உங்களுக்கு இஷ்டமாயிருந்தா இந்த மாசத்திலேயேகூட

முகூர்த்தம் வச்சுக்கலாம். சகுந்தலாவுக்கு இதிலே ரொம்ப இஷ்டம்னு தெரிஞ்சுதான் நான் சொல்றேன்'' என்று தேனொழுகப் பேசினாள்.

'சகுந்தலாவுக்கு இஷ்டந்தான்! ஆமாம், இஷ்டந்தான். இல்லாவிட்டால் அவள் ஏன் இப்படியெல்லாம் சொல்லுகிறாள்?' என்று மனத்துக்குள்ளேயே கேட்டுப் பதிலும் சொல்லிக் கொண்டாள் ஆண்டாளம்மாள்.

இதற்குப் பிறகு நடந்த விவரங்களை எல்லாம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. எப்படியோ நாச்சியாரம்மாள் தனது சாமர்த்தியத்தினால் ஆண்டாளம்மாளை வசப்படுத்தி விட்டாள். நாச்சியாரம்மாளே ஒரு நல்ல நாளும் பார்த்து நிச்சயதார்த்தம் வைத்துக்கொள்ளவும் ஏற்பாடு பண்ணி விட்டாள்.

சகுந்தலாவுக்கும் விஷயம் தெரிந்தது. ஒரு சமயம், 'இது தவறு; ருக்குவுக்குத் துரோகம் இழைப்பதாகும்' என்றுகூட எண்ணினாள் அவள். ஆனால் அடுத்த விநாடியே, 'ருக்குவேதான் அனுமதி தந்திருக்கிறாளே!' என்கிற எண்ணம் உண்டாகும். அந்த எண்ணத்தை உறுதிப்படுத்துவது போல, 'ரங்கநாதன் நல்லவர்; நன்றாயிருக்கிறார். அவரைக் கணவனாகப் பெறுகிறவள் பாக்கியசாலி. ஏன்? ருக்குவேதான் சொல்லிருயிக்கிறாளே—''என்னால் சுகம் இல்லை; உன்னாலாவது அவருக்குச் சுகம் உண்டாகட்டும். அதுதான் என் மனத்துக்கு நிம்மதி யளிக்கும்'' என்று. நான் ஏன் அவரைக் கல்யாணம் செய்துகொள்ளக் கூடாது?' என்று நினைப்பாள். எனினும் உண்மையில் அவள் ரங்கநாதனைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறாளா இல்லையா என்பதுபற்றியே அவளுக்கு ஒரு நிச்சயம் ஏற்படவில்லை. இந்த நிலையில் நாச்சியாரம்மாளின் நயமான வார்த்தைகளும், தன் தாய் அவளுக்கு இசைந்ததும் சேர்ந்து அவளது விவேகத்தையே மூடித் திரையிட்டுவிட்டன. நிச்சயதார்த்தத்துக்கு நாள் கணிக்கப்பட்ட பின்கூட அவளுக்கு உள்ளத்தில் கிளர்ச்சி உண்டாகவில்லை. வீட்டிலுள்ள பெரியோர்கள் பார்த்து ஒரு வரனை நிச்சயம் செய்து கல்யாண ஏற்பாடு

செய்யும்போது, சொந்த அபிப்பிராயம் என்று எதுவும் இல்லாத ஒரு கல்யாணப் பெண்ணுக்கு எந்த விதமான உணர்ச்சி ஏற்படுமோ அப்படி இருந்தது சகுந்தலாவுக்கும்.

ஆனால் ரங்கநாதனுக்கு இந்தக் கல்யாணத்தில் இஷ்டந்தானா என்று ஒரு சமயம் அறிய விரும்பினாள் ஆண்டாளம்மாள். அதற்குப் பதிலாக, "ரங்கண்ணாவா? அவன் எடுப்பார் கைக்குழந்தை. நான் சரீன்னா சரிதான் அவனுக்கும். அதுவுமில்லாமே அவனே வேணும்னு போய்ப் பண்ணிண்ட கல்யாணந்தான் இத்தனை சவரணையா முடிஞ்சுதே! இனிமே அவன் வாயைக் கையைத் தெறக்கமாட்டான். நீங்க அதைப் பத்திக் கவலைப்படவேண்டாம்" என்று கூறி விட்டாள் நாச்சியாரம்மாள். அப்புறம் அசட்டு ஆண்டாளம்மாளுக்குப் பேச என்ன இருக்கிறது? அவ்வளவுதான்!

கடைசியாக நிச்சயதார்த்தத்துக்குக் கணிக்கப்பட்டிருந்த நாளும் வந்து சேர்ந்தது.

## 43

## தீர்மானம்

அன்றிரவு எட்டு மணிக்கு நிச்சயதார்த்தத்துக்கு நல்ல வேளை. காலையில் எழுந்ததுமே நாச்சியாரம்மாளுக்குத் தேகத்தில் ஒரு பரபரப்பு உண்டாயிருந்தது. 'ரங்கண்ணு விடம் இன்னிக்கி வரைக்கும் இதைப்பத்தி ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லையே. இப்போ சொல்லலாமா வேண்டாமா?' என்று ஒரு கேள்வி மனத்தை அரிக்கத் தொடங்கியது. 'உம். என்ன சொல்லப்போறான்? நானே இஷ்டத்தோடே இந்தக் காரியத்தைச் செய்து வைக்கிறபோது அவன் குறுக்காக என்ன சொல்லப் போறான்?' என்கிற தைரியமும் கூடவே உண்டாயிற்று. இருந்தாலும் மனத்துக்குள் ஏதோ ஒன்று, 'இப்படி நீ மறைமுகமாக விஷயத்தை வைத்திருப்பது தப்பு' என்று சொல்லிக்கொண்டே இருப்பது போன்ற உணர்ச்சி. அதுவுமின்றி, 'அவன் ஆபீசுக்குக் கிளம்பிப் போய்விட்டு, ஒரு வேளை ராத்திரி எட்டுமணி வரையில் வராமல் இருந்துவிட்டால் என்ன செய்வது? எதற்கும் விஷயத்தை முன்னெச்சரிக்கையாக இப்போதே சொல்லி வைப்பதுதான் நல்லது' என்று கருதினாள் அவள்.

ரங்கநாதன் தன் வார்த்தைக்குக் குறுக்காக நிற்க மாட்டான் என்று நாச்சியாரம்மாள் இத்தனை நம்பிக்கையுடன் இருந்ததற்குக் காரணம் இல்லாமலும் போகவில்லை. ருக்குவைக் கொண்டுபோய் விட்டுவிட்டு அவன் மறுநாளே திரும்பிவிட்டான். வேதவரத்துக்குப் போய் வரக்கூட நாளில்லையே என்று அத்தை கேட்டதற்கு, "அவள் சிநேகிதி ஒருத்தி பட்டணத்தில் இருக்கிறாள். அங்கே இருந்தால் வைத்தியத்துக்குச் சௌகரியமாக இருக்கும் என்று அவள்

சொன்னதால் அங்கேயே விட்டுவிட்டுத் திரும்பிவிட்டேன். அவள் அப்பா அம்மாவுக்கு விஷயம் தெரிவித்துக்கொள்ளுவதாக அவள் சொன்னுள்'' என்று மனமின்றியே பதிலளித்துவிட்டு, அதற்குமேல் அத்தை வற்புறுத்தினுல்கூட ருக்குவின் பேச்சையே எடுக்கப் பிடிக்காதவன் போல நடந்து வந்தான். இதற்குக் காரணம் அவன் உள்ளத்தில் இருந்த வேதனை தான். ஆனுல் ருக்குவிடம் அவன் கொண்டிருந்த வெறுப்புத் தான் காரணம் என்று எண்ணினுள் நாச்சியாரம்மாள். உடனே தன் பாணங்களை அவள் தொடுக்க ஆரம்பித்தாள். இந்த இருபது இருபத்தைந்து தினங்களாக அவள் இடைவிடாமல் ரங்கநாதன் வீட்டில் இருக்கும்போதெல்லாம் ஜாடைமாடையாகச் சகுந்தலாவின் அழகு, குணம் முதலியவற்றைப் பற்றி வர்ணித்தும், கிடைத்தால் அவளைப்போல நாட்டுப் பெண் கிடைக்கவேண்டும் என்றும், கொஞ்சம் கொஞ்சமாகப் போதனை செய்து வந்தாள். அப்போதெல்லாம் ரங்கநாதன் அவள் பேச்சுக்களைக் காதில் வாங்கிக்கொள்ளுவது போல் இருந்தானேயொழிய ஒரு வார்த்தைகூடத் தன் விருப்பத்தைத் தெரிவிப்பதுபோலப் பதில் சொல்லவே இல்லை.

அவனது இந்த ஆழ்ந்த மௌனத்துக்கு நாச்சியாரம்மாள் ஒரே அர்த்தத்தைத்தான் கற்பனை செய்துகொண்டாள். அந்த அர்த்தந்தான், 'மௌனம் சர்வ சம்மதம்' என்பது. எனவே அவள் தீவிரமாக நிச்சயதார்த்தத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் ஈடுபட்டாள். அவை முடிந்து எல்லாம் தயாராக இருந்தன. இப்போது அவள் விஷயத்தை அன்றைத் தினமாவது பட்டவர்த்தனமாக அவனிடம் சொல்லத் தீர்மானித்தாள்.

ரங்கநாதன் காபி குடித்துவிட்டுத் தன் அறையில் உட்கார்ந்து ஏதோ ஒரு வேதாந்த புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். ருக்குவைப் பட்டணத்தில் கொண்டு போய் விட்டுவிட்டுத் திரும்பியது முதலாக அவன் மனம் பூராவும் வேதாந்த ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுவிட்டது. காலேஜில் இன்டர்மீடியட் வகுப்பில் படித்துக்கொண்டிருந்த போது தர்க்க சாஸ்திரம் அவன் பாடங்களில் ஒன்றுக இருந்

தது. அப்போது அவனுக்குத் தர்க்க சாஸ்திரத்தில் ஆர்வம் இருந்தது. காலேஜ் புத்தகசாலையிலிருந்து பல தர்க்க நூல் களையும் சில வேதாந்த நூல்களையும் அவன் அப்போது படித் தான். ஆனால் பி. ஏ. வகுப்புக்குப் போனபோது அவன் நண்பர்கள் சிலர் தர்க்கமும் வேதாந்தமும் தத்துவமும் பிற்கால வாழ்க்கையில் பயன்படா என்றும், பொருளாதார சாஸ்திரமோ கணக்கோ விஞ்ஞானமோதான் 'படிப்புக் கூலி' தரும் என்றும் சொல்லக்கேட்டுப் பொருளாதார சாஸ்திரத்தை முக்கிய பாடமாக எடுத்துக்கொண்டான். படிப்பு முடிந்து பட்டங் கிடைத்ததும், இந்தக் கம்பெனி உத்தியோகத்துக்கு மனுப்போட்டு வேலை கிடைத்தவுடன் பொருளாதார சாஸ்தி ரத்தின் உபயோகம் நின்றுபோயிற்று. நடைமுறை வாழ்க் கையில் பொருளாதார சாஸ்திரம் துளிகூட உதவவில்லை. அன்றியும் அவன் வாழ்க்கையோ தர்க்கமும் தத்துவமும் புதி ரும் நிறைந்ததாக அமைந்துவிட்டது. இப்போது ருக்குவின் பிரிவு வேதாந்த விசாரணையில் கொண்டுவந்து விட்டது அவனை. அதில்தான் அவன் இப்போது அமைதி கண்டான். அத்தையின் பேச்சுக்களுக்கு அவ்வப்போது பதில் சொல்லி அந்த அமைதியைக் குலைத்துக்கொள்ள அவன் விரும்பவில்லை.

புஸ்தகத்திலிருந்த விஷயத்தின் சாரத்தில் ரங்கநாதன் ஊறிக் கிடந்தபோது அத்தை அங்கே வந்தாள். "ரங்கண்ணு!" என்றாள்.

ரங்கநாதன் தலை நிமிர்ந்து அத்தையைப் பார்த்தான்.

"சாயந்தரம் சீக்கிரமா வந்துவிடு ஆபீசிலிருந்து!"

"ஏன்?"

"இன்னிக்கி நாள் நன்னாயிருக்கு. எட்டு மணிக்கு நல்ல வேளை."

"எதற்கு?"

"நிச்சயதார்த்தத்துக்கு."

ரங்கநாதன் திடுக்கிட்டான். விஷயம் வெகு தூரம் போய்விட்டது. இனி மௌனமாக இருப்பதில் பலன் இல்லை என்று உணர்ந்தான். எனவே, "யாருக்கு நிச்சயதார்த் தம்?" என்று கேட்டான் சற்றுக் கண்டிப்பான குரலில்.

"ஏண்டா? ஒண்ணும் தெரியாதவன் போலக் கேக்க றையே. நானுந்தான் இத்தனை நாளாப் படிச்சுப் படிச்சுச் சொல்லிண்டு வறேன். ராத்திரி எட்டு மணிக்கு நல்ல வேளை. சகுந்தலாவுக்கும் ஆண்டாளம்மாவுக்கும் ரொம்ப இஷ்டம்."

"ஆனல் எனக்கு?"

"உனக்கா? உன் இஷ்டப்படி பண்ணிப் பார்த்துத்தான் ஆச்சே. இப்படி இனிமே நீ இருந்துண் டிருக்கிறது துளிகூட நன்னயில்லே. நாலு பேர் என்ன சொல்ரு தெரியுமா?"

"யார் என்ன வேண்டுமானலும் சொல்லிக்கொள்ளட்டும். நான் இன்னொரு கல்யாணம் பண்ணிக்கொள்ள முடியாது."

"அப்புறம் எப்படி ஆகிறது?"

"இதோ இப்படியேதான்."

"நன்னயிருக்குடா. உனக்காக உசிரை வச்சுண் டிருந்ததுக்கு இதுதானு நான் கண்ட பலன்? பணக் கஷ்டத்தையும் பாராமே, சரீரக் கஷ்டத்தையும் பாராமே சேஞ்சும் கடைசியிலே அந்தத் தரித்திரப் பிணந்தான் வந்து சேர்ந்தது. வந்தால்தான் என்ன? தானும் கெட்டுச் சந்திர புஷ்கரணியையும் கெடுக்க வேண்டுமா? அட ரங்கண்ணு! நீ சௌக்கியமாயிருக்கணும், நான் பார்க்கணும்னு ஆசைப் பட்டதெல்லாம் இப்படி நாசமாப் போகவா காலம்? என்னலே பொறுக்க முடியல்லேடா. நீ இப்போ சகுந்தலாவைக் கல்யாணம் பண்ணிக்காமே போன, நான் நாக்கைப் பிடுங்கிண்டு சாக வேண்டியதுதான். அவளுக்குத்தான் மானம் இல்லே. விட்டுட்டு ஓடின! உனக்குக்கூட எங்கேடா போச்சு புத்தி? மேலே நடக்கவேண்டியதைப் பார்க்க வேண்டாமா? சாயந்தரம் நல்ல வேளை. சொல்றதைக் கேளு. நல்ல பிள்ளைன்னு பேரெடுத்துக்கோ. இன்னியோடயாவது உன் கஷ்டம் வெடியட்டும்."

அத்தை தனக்காகப் பட்ட கஷ்டங்களைப்பற்றி நினைப் பூட்டியதும் ரங்கநாதன் வாய் அடங்கிப் போயிற்று. அவன் உள்ளம் விரிந்தது. மறுபடியும் மௌனியானன். அவன் முகத்திலே அவன் தோல்வியைக் கண்டாள் நாச்சியாரம்மாள். "சாயந்தரம் சீக்கிரமா வந்து சேரு. நிச்சயதார்த்

தத்துக்கு எல்லாம் தயாராயிருக்கு'' என்று கட்டளையிட்டு விட்டுக் கிளம்பினுள் அந்த அறையை விட்டு.

சிறிது நேரத்தில் ரங்கநாதனும் குழம்பிய உள்ளத்துடன் ஆபீசுக்குப் புறப்பட்டான்.

மாலை வந்தது. ரங்கநாதன் வழக்கம்போல் வீடு வரவில்லை.

இரவு வந்தது. நிச்சயதார்த்தத்துக்குப் பழம், பாக்கு வெற்றிலை, இத்தியாதி, சில பந்துமித்திரர்கள் இத்தியாதி, எல்லாம் தயாராக இருந்தன.

சகுந்தலாவும் சர்வாலங்கர பூஷிதையாக ஓர் அறையில் நின்றிருந்தாள்.

நேரம் செல்லச் செல்ல நாச்சியாரம்மாளுக்கு நெஞ்சரிப்பு அதிகமாகிக்கொண்டே வந்தது.

கடைசியில் நல்ல வேளையும் வந்தது.

இரவு எட்டு மணி!

ரங்கநாதன் வரவில்லை.

சில நிமிஷங்களுக்கெல்லாம் ரங்கநாதன் ஆபீசிலிருந்து ஒரு பியூன் வந்தான். அவன் நாச்சியாரம்மாளிடம் ஒரு சீட்டைக் கொடுத்தான்.

அதைப் பிரித்துப் பார்த்தாள் நாச்சியாரம்மாள்.

அவள் மனக்கோட்டை பூராவும் நொடிப் பொழுதில் இடிந்து விழுந்தது.

நிச்சயதார்த்தம் எப்படிச் செய்வது? ரங்கநாதன் ரெயிலேறி விட்டான்!

## 44

# இருளிலிருந்து

இருட்டைத் துருவிக்கொண்டு ரெயில் வெகுவேகமாக ஓடிக்கொண் டிருந்தது. அந்த ரெயிலின் வேகத்தைவிட அதிலிருந்த ரங்கநாதன் மனம் அதி வேகமாக ஓடியது. அத்தையின் வற்புறுத்தலைக் கேட்டபின் ரங்கநாதன் அவளுக்குத் தக்கபடி பதிலளிக்க முடியாமல் தயக்கத்துடன் ஆபீசுக்குப் போய்விட்டான் அல்லவா? அங்கே போன பின்னும் அவனுக்கு ஆபீஸ் வேலையில் மனம் செல்லவில்லை. அத்தையிடம் தனக்குள்ள கடமையைப்பற்றிய நினைவு அவனை நிலை தடுமாறச் செய்தது. அவனுக்காக அவள் பட்ட கஷ்டம் பலனளிக்காமல் போய்விடுவதா என்று அவன் மனம் சிந்தனை செய்யத் தொடங்கியது. அவள் சுகத்துக்காகவாவது, அவள் கவலையற்று நிம்மதியாக இருக்க வேண்டியாவது அவன் இப்போது சகுந்தலாவைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்று தோன்றியது அவனுக்கு. ஆனால் அடுத்த படியாகவே அந்தக் கல்யாணத்தின் மூலம் மற்றொரு கஷ்டம் ஏற்படும் என்றும் உணர்ந்துகொண்டான் அவன்.

ருக்கு, அவன் சுகந்தான் பிரதானம் என்று கருதினாள். ஆனால் இப்போது என்ன ஆயிற்று? அவனை விட்டுப் பிரிந்து சென்றால் அவனுக்கு வாழ்க்கையில் மீண்டும் சுகம் ஏற்படக் கூடும் என்று கருதினாள் அவள். அந்தச் சுகத்தைப் பற்றிய சிந்தனைதான் அவனுக்கு இல்லையே. உண்மையில் இன்னொரு கல்யாணத்தில் ரங்கநாதனுக்கு விருப்பமில்லை. ருக்கு அவனை விட்டுப் பிரிந்ததுதான் மிச்சம். இப்போது அத்தைக்கு நிம்மதி அளிப்பதற்காக அவன் சகுந்தலாவை மணந்துகொண்டால் என்ன ஆகும்? அந்தக் கல்யாணத்தின்மூலம் தன்

மருமான் பணமும் பாக்கியமுமாக நன்ருக இருக்கிருன் என்று நினைத்து அத்தை நிம்மதியடைவாள். அவ்வளவுதான் அவளுடைய ஆனந்தம்! கல்யாணம் பண்ணிக்கொள்ளும் தம்பதிகளுக்குச் சுகம் ஏது? ரங்கநாதன் சகுந்தலாவைக் கல்யாணம் செய்துகொள்ளவே எண்ணவில்லை. அவளைக் கல்யாணம் செய்துகொள்வதன் மூலம் வாழ்வில் சுகம் ஏற்படாது என்பதே அவன் கருத்து. அவன் மனம் அப்படி இருந்தது அப்போது. இந்த நிலையில் அந்தக் கல்யாணத்தினல் சகுந்தலாவின் வாழ்க்கையில் துன்பந்தான் மிஞ்சும். அப்படி அத்தையின் திருப்தியைக் கோரி ஒரு காரியம் செய்யப் போய்ச் சகுந்தலாவின் எதிர்காலத்தை இருட்டடிப்பது பெரும் பாதகமல்லவா? இப்படித்தான் எண்ணினன் ரங்கநாதன்.

சகுந்தலாவைக் கல்யாணம் செய்துகொள்வதால் ருக்குவுக்கு மன அமைதி உண்டாகும். நாச்சியாரம்மாளுக்குச் சந்தோஷம் உண்டாகும். மன அமைதியைத் தேடி வேதாந்த விசாரணைகளில் ஈடுபட்டு வரும் ரங்கநாதன் மறுபடியும் அமைதியை இழப்பான். சகுந்தலாவுக்கும் அந்த அமைதியின்மையில் பங்கு கிடைக்கும்! அந்த இளந் தளிர் போன்ற குழந்தை சகுந்தலாவை ஏன் இந்தப் பயங்கரமான அந்தகாரத்திற்குள் புகுத்த வேண்டும்? இந்தச் சிந்தனைதான் தலை தூக்கிக்கொண்டது ரங்கநாதன் உள்ளத்தில். எப்படியாவது நிச்சயதார்த்தத்தை நிறுத்தி, அத்தையின் மனத்தை மாற்றியாக வேண்டும் என்று எண்ணமுண்டாயிற்று உடனடியாகவே. ஆனல் அதற்கான திட்டங்கள் எதையும் அவன் வகுத்துக்கொள்ளவில்லை. அதற்கு நேரமில்லை. திடீரென்று வந்து சேர்ந்தது அந்தத் தந்தி!

சென்னையிலிருந்துதான்! ருக்குவின் நிலைமை மோசமாகி விட்டதாகச் சாரதா தந்தியடித்திருந்தாள். ஆம், ருக்குவின் பால்ய சிநேகிதியே. அவள் இருப்பிடத்திலேதான் ரங்கநாதன் ருக்குவைக் கொண்டுபோய் விட்டுவிட்டுத் திரும்பினன். சாரதாவின் இருப்பிடத்திலேயே தன்னை விட்டுச் செல்லும்படி ருக்குதான் சொன்னள். ஏனெனில் தேவராஜ ஐயங்கார் பெண்ணையும் மாப்பிள்ளையையும் ஒன்ருகப் பார்க்க

வேண்டும் என்று கடிதம் எழுதியிருந்ததற்கும், இருவரும் ஒன்ருக இப்போது புறப்பட்டுப் போகும் நிலைமைக்கும் இடையே வாழ்க்கை எத்தனை கோரமாக விளையாடி இருக்கிறது! இதனுல்தான் ருக்கு சாரதாவிடமே தன்னை விட்டுச் செல்லும்படி கூறிவிட்டாள். ரங்கநாதனுக்கும் அந்தச் சந்தர்ப்பத்தில் வேதவரம் சென்று அவர்களையெல்லாம் பார்ப்பது என்னவோபோல் இருந்தது. எனவே சாரதாவிடம் ருக்குவைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு அடுத்த வண்டியிலேயே அவன் கோயம்புத்தூர் திரும்பிவிட்டான். அதிலிருந்து அவனுக்கு ஏற்பட்டிருந்த மன மாறுதல்களும் பின்னர் நடந்த சம்பவங்களும் தெரிந்த விஷயங்கள்.

நிச்சயதார்த்தத்தைத் தடுப்பது எப்படி என்று யோசிக்க ஆரம்பித்தபோதே சாரதாவின் தந்தி வந்து சேர்ந்தது. உடனே அவனுடைய இதர சிந்தனைகள் எல்லாம் பறந்தோடி ட்டன. ருக்குவைக் கடைசி முறையாக ஒரு தடவை ணத் துடித்தது அவன் உள்ளம். ஆபீசை விட்டு வீட்டுக் த் திரும்பிச் செல்லக்கூட அவன் நினைக்கவில்லை. 'ருக்கு ணத் தறுவாயில் இருக்கிருள். நான் புறப்பட்டுவிட்டேன்' என்று இரண்டே வரி எழுதி ஆபீஸ் பியூனிடம் கொடுத்துவிட்டு, நேராக ரயில் ஸ்டேஷனுக்குக் கிளம்பிவிட்டான்.

பிரயாணத்தின்போது அவன் மனம் ருக்குவின் அருகிலேயே இருந்தது. சரீரத்தைச் சுமந்து சென்ற ரயிலின் வேகந்தான் அவன் மன வேகத்துடன் போட்டி போட முடியவில்லை. ருக்குவை ஜுரத்துடன் கொண்டு போய் விட்டு விட்டுத் திரும்பும்போதே ஏதோ ஒன்று அவன் உள்ளத்தில், 'இனி ருக்கு பிழைக்கமாட்டாள்' என்று சொல்வதுபோல் இருந்தது. அந்தச் சொல் இத்தனை சீக்கிரம் பலித்துவிடும் என்று அவன் எண்ணவில்லை. இப்போது கடைசி முறையாக ருக்குவைப் பார்க்கவேண்டும் என்கிற ஒரே எண்ணந்தான் அவனுக்கு இருந்தது. ஒருகால் அவன் போய்ச் சேருமுன் அவள் உயிர் பிரிந்துவிடுமோ என்றும் நினைத்தான். இந்த நினைவு ஆரம்பத்தில் அவனுக்குப் பயத்தையும் ஏக்கத்தையும் துயரத்தையுமே அளித்தது.

அவனது பயமும் துக்கமும் அவன் உள்ளத்தில் சிந்தனை அலைகளை எழுப்பின. கொஞ்சம் கொஞ்சமாகச் சிந்தனை விரிந்தது. ஆரம்பத்தில் கரைமேல் மோதும் கடல் அலைகள்போல எழும்பிய சிந்தனை அலைகள், அவனது உள்ளக் கடலின் ஆழத்துக்கே போய்விட்டன. இப்போது அலைகள் கரைமீது மோதவில்லை; அஞ்ஞானத்துடன் உறவாடவில்லை. அலைகள் கிளம்பி ஆழியிலேயே கலந்தன.

இப்போது அவன் மனக் கண்கள் ருக்குவைப் பார்த்தபடியே இருக்கின்றன! அவளது ஆத்ம தீபம் அவள் தேகத்தை விட்டுப் பிரிந்து செல்வதை அவன் அகக் கண்ணால் காண்கிறான். ஒரு நிமிஷ காலம் அவன் இருதயமே பிளந்துவிடும் போன்ற ஓர் உணர்ச்சி, ஒரு வேதனை அவனைச் சித்திரவதை செய்கிறது. பிறகு வந்த பெருமூச்சிலே அந்த வேதனையும் விடைபெற்றுக் கொள்கிறது. ருக்குவைப் பார்க்கச் செல்கிறோம் என்கிற உணர்ச்சி இப்போது அவன் இருதயத்தில் இல்லை. அவளது உயிரற்ற உடலுக்குச் செலுத்த வேண்டிய மரியாதைகளைக் குறித்துத்தான் இப்போது போய்க்கொண்டிருக்கிறோம் என்று எண்ணினான் அவன். இந்த வேதாந்தியின் உள்ளம் மறுபடியும் மேகங்களற்ற நிர்மலமான நீல வானம்போல ஆகிவிட்டது. அந்த நீல வானத்திலே இருந்து சாந்தி என்னும் பூர்ண சந்திரிகை தன் தண்ணொளியைச் சொரியத் தொடங்கியது. எனினும் இந்தச் சாந்தியின் இடையேகூடச் சந்திரனுக்குள்ள களங்கம்போல, 'அந்த ரகசியம் என்ன?' என்கிற கேள்வி ஒன்று குறுகுறுத்து நிற்கிறது?

ஆம்! அந்தக் களங்கங்கூட இல்லாமல் இருந்தால்?- அவனது சாந்திக்குப் பரிபூர்ணமான தத்துவ ரூபம் ஏற்பட்டுவிடும் அல்லவா? சந்திரிகையின் குளிர்ச்சியிலே பனியும் பொழிகிறது. சந்திரிகையின் குளிர்ச்சி தேகத்துக்கும் மனத்துக்கும் இன்பத்தைத் தருகிறது. ஆனால் பனியின் குளிர்ச்சியில் விஷத்தன்மையல்லவா இருக்கிறது. தேகத்துக்குப் பீடையல்லவா தருகிறது பனி? அதுபோல் அன்றோ இருக்கிறது, அவன் உள்ளத்தை நிரப்பியிருக்கும் சாந்தியின் இடையே

அந்தக் குறுகுறுப்பும் இடம் பெற்றிருப்பது? அதையும் அகற்றிவிட்டால் அவன் சாந்தி பூர்ணத்துவம் அடையும்) அந்த எண்ணந்தான் இடையிடையே வந்துகொண் டிருந்தது அவன் அமைதியைக் கெடுக்க. அதற்காகத்தான் அவன் ஓடுகிருன் இப்போது. அந்தக் களங்கத்தை நீக்கிக் கொண்டு அமைதியின் நிறைவைக் காண ஓடுகிருன்.

எதிரேயிருந்த மனிதர்கள், ஸ்திரீகள், புருஷர்கள், உறக்கத்தில் ஓய்வு கண்ட பிரயாணிகள், குதூகலத்தில் பொழுது போக்கிய இளம் தம்பதிகள், சீட்டுக் கச்சேரியிலே மூட்டைக் கடியை மறந்திருந்த மனிதர்கள், நாட்டு விவகாரம் பேசுவதிலே ஈடுபட்டிருந்த நவயுவர்கள், இவர்கள் யாருமே அவன் திருஷ்டியில் பட்டதாகத் தோன்ற வில்லே. ரயில் ஓடும் சப்தங்கூட அவன் செவிகளுக்குக் கேட்கவில்லே. வேதவரத்திலிருந்து ருக்குவைப் பிரிந்து ரயிலேறி வந்தபோது அவன் உள்ளம் கொதித்த கொதிப்பும், இப்போது அதே உள்ளத்திலே நிலவியிருந்த அமைதியும்! என்ன நேர்மாருன உணர்ச்சிகள்! ஆம்! வாழ்க்கையே இப்படித்தானே!

ஜன்னலுக்கப்பால் பரந்து கிடக்கும் இருட்டிலே கூட எத்தனே மேடுகள், எத்தனே பள்ளங்கள், எத்தனே மலேகள், எத்தனே மடுக்கள், எத்தனே மரங்கள், எத்தனே செடிகள், எத்தனே தந்திக் கம்பங்கள், எத்தனே தனித் தனிப் பாதைகள்? எல்லாம் ஓடுகின்றன! ஒரே ஓட்டம்! ஆனல் ஏன் எல்லாம் அவனுக்கு எதிர்ப்புறமாகவே ஓடுகின்றன! ஒன்ருவது கூட வருகிறதா? கூட அதே திசையில் ஓடுகிறதா? கண்ணெதிரே பார்ப்பனவெல்லாம் எதிர்ப்புறமாக ஓடுகின்றன! ஆனல் அந்த ரயில்! அதுமட்டும் கூட ஓடுகிறது. ஓ!......இல்லேயில்லே. அதுகூட அவனுடன் ஓடுகிறதா? அதை அவன் உணர்ந்தானு? இல்லே. அது அவனுடன் ஓடவில்லே. அவனே ஓட்டிச் செல்கிறது! அந்த மலேகளுக்கும் மடுக்களுக்கும் மரங்களுக்கும் தந்திக் கம்பிகளுக்கும் எதிராக ஓட்டிச் செல்லுகிறது அந்த ரயில் அவனே. ஏன்? ஐயோ! ஏன்?

எல்லாவற்றையும் கடந்து போகிருன் அவன். அந்த ரயில் அவனைக் கொண்டுபோகிறது. எங்கே?

இருட்டைத் துருவிச் சென்ற ரயில் இருட்டைப் பின்னே தங்கச் செய்து, முன்னேறிவிட்டது. ஆம்! அதோ வெளிச்சம் தெரிகிறது. கீழ்த் திசையிலிருந்துதான் வெளிச்சம் தெரிகிறது. வெளிச்சத்தில் புகுந்த ரயில் அந்த ஆனந்தத்தில் வெறிபிடித் ததுபோல ஓடுகிறது. பல சின்ன ஸ்டேஷன்கள் அதன் ஓட்டத்தைக் கண்டு திகைத்து நின்று கிடக்கின்றன. ரயில் ஓடிப்போய்விட்டது! எங்கே? மறுபடியும் இருட்டுக்குள் புகத்தாஞ? ஆம்! அதுதானே இயற்கையின் நியதி! அதற்கும் அதுதானே? ஸென்ட்ரல் ஸ்டேஷன் வந்ததும் அதன் ஓட்டம் ஓய்ந்து போய்விட்டது.

ரங்கநாதன் ரெயிலை விட்டு இறங்கிஞன்; அந்த ஸ்டேஷனின் இருட்டில்தான். ஆஞல் அந்த ஸ்டேஷனுக்கு வெளியே வெளிச்சம்! ஒரே வெளிச்சம். அந்த ஸ்டேஷனின் இருட்டைப் போன்ற இருள் எதிரே அவன் வாழ்க்கைப் பாதையில் தேங்கிக் கிடந்தது. அந்த இருட்டைக் கண நேரம் காணவேண்டும், அவன் கடக்கவும் வேண்டும். அதற்கப்பால் எல்லையற்ற வெளிச்சம்! அதுவும் சந்திர வெளிச்சம் போலக் களங்கத்துடன் கூடியதல்ல. களங்கமற்ற, பழுதற்ற சூரிய வெளிச்சம். சந்திரன் மறைந்த பின் சூரியன்தானே உலகத்தின்மீது ஒளி வீசுகிருன்? இருட்டைப் பரிபூர்ணமாகத் துடைக்க முடியாத சந்திரன், தன் குளிர்ச்சியால் உலகத்தை மயக்கப் பார்க்கிருன். ஆஞல், 'அது வெறும் மயக்கந்தான்; அஞ்ஞானந்தான்' என்று உணர்த்துவதுபோலச் சூரியன் தோன்றிச் சந்திரனை விரட்டிவிடுகிருன். சந்திரனது களங்கம் சூரியனுக்கு இல்லை; சந்திரனது குளிர்ச்சியும் சூரியனுக்கு இல்லை. குளிர்ச்சியிலே மயக்கம்; மயக்கத்திலே ஓர் இன்பம்; இன்பத்திலே போதை! அதனல் துன்பம்! மீண்டும் இன்பம், துன்பத்துக்கு அடிகோலவே! இப்படித்தானே உலகத்தைத் துடிக்கச் செய்கிருன் சந்திரன். அவனது களங்கந்தான் அதற்குக் காரணமோ? அல்லது அவனது நிரந்தரமற்ற ஒளிதானே? அதோ சூரியன் வந்த

தும் சந்திரன் ஒளி எங்கே? தேய்ந்தே போய்விட்டது. அந்தப் பழுத்த ஞானியைக் கண்டு அந்த அஞ்ஞானி பதுங்கி விட்டான்.

அஞ்ஞான மயக்கத்தில் ஊறிக் கிடக்கும் உலகத்துக்கு ஞான சூரியன் உதயம் முதலில் கொஞ்சம் சிரமத்தைத்தான் தரும். ஆனல் அதுதானே உலகத்தை உய்விக்கிறது? உலகக் காரியங்களுக்கு அது இல்லாமல் முடியுமா? அந்தச் சாசுவத மான ஜோதி உதயமாகிவிட்டது. அந்த நிரந்தரமான வெளிச் சத்திலே தேயும் சந்திரனும் அவனது களங்கமும் இருக்கு மிடம் தெரியாமல் மறைய வேண்டியதுதானே? ஆம்! அந்த வெளிச்சத்திலே நுழைகிருன் அந்த வேதாந்தி; அவன் உலகம் இப்போது எல்லேக்கோடின்றி விஸ்தரித்து நிற்கிறது. இந்த உலகத்திலே இனி இருட்டுக்கு இடம் இல்லே. எங்கே பார்த்தாலும் ஒரே வெளிச்சம்; ஒரே ஒளி மயம்! அந்த ஒளி உலகத்திலேதான் அவனது வாழ்க்கைப் பாதை வியாபித் திருக்கிறது.

அதோ நடந்து செல்கிருன் ரங்கநாதன். அவன் முன்னேறிப் போகப் போக, அவன் பின்னல் அந்தப் பாதை யும் மறைந்துகொண்டே இருக்கிறது.

அதுவுந்தான் வாழ்க்கை! அதுவுந்தான் உலகம்! ஏன் வேதாந்தியின் உலகமே விசித்திரமானதுதானே?

45

## வாழ்வின் ஒளி

அந்த அறையில் மின்சார விளக்கு எரிந்துகொண் டிருந்ததைக் கண்டு திடுக்கிட்டாள் சாரதா. விடிய இன்னும் சிறிது நேரந்தான் இருக்கிறது. இரண்டு மணி நேரத்துக்கு முன்புதான் டாக்டர் வந்து ஓர் இஞ்செக்ஷன் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார். ருக்குவும் சிறிது கண்ணை மூடியிருக்கிறாள். பிறகுதான் சாரதா அடுத்த அறைக்குச் சென்று படுத்துக்கொண்டாள். ராத்திரி முழுவதும் கண் விழித்ததால் கொஞ்சம் கண்ணை இழுத்துக்கொண்டு போயிற்று அவளுக்கும். அப்படியே தூங்கிவிட்டாள். ஆனால் அதிக நேரம் தூங்கவில்லை. நெஞ்சிலிருந்த வேதனையில் நல்ல தூக்கம் வருமா? ஏதோ ஓர் உணர்ச்சி! சட்டென்று தூக்கம் கலைந்துவிட்டது; அடுத்த அறையில் மின்சார விளக்கு எரிவதை உணர்ந்தாள். திடுக்கிட்டு எழுந்து போய்ப் பார்த்தாள். படுக்கையிலே குப்புறப் படுத்துக்கொண்டு ருக்கு தலையணை மேல் ஒரு வெள்ளைத் தாளில் ஏதோ எழுதிக்கொண் டிருந்தாள்,

"ருக்கு, என்னடி இது? உன் உடம்பு இருக்கிற இருப்பிலே என்ன எழுதுகிறாய்? கடிதமா? டாக்டர், 'குப்புறப் படுத்துக்கொள்ளவே கூடாது' என்று சொன்னாரே உன்னை? இருதயத்தின்மேல் இப்படிப் பளுவுண்டாகும்படி படுத்துக்கொண்டிருக்கிறாயே?" என்று பரபரப்புடன் கேட்டாள் சாரதா.

"சாரதா, என்னை ஏன் இப்படிக் கட்டிப் பிடித்து வைக்கப் பார்க்கிறாய்? அதனால் யாருக்கு என்ன பிரயோஜனம்? உனக்குங்கூடத் தொல்லைதானே?"

"சீ! அசட்டுப் பிசட்டென்று உளருதே. அதெல்லாம் அப்படியொன்றும் இராது. நீ ஏன் அந்தப் பயம் எல்லாம் வைத்துக்கொள்ளுகிருய்? அதெல்லாம் ஒன்றும் இல்லே. டாக்டர் சொன்னபடி கேட்டால் உடம்பு சீக்கிரம் குணம் ஆகும்."

"வேண்டாமே. இந்த உயிரின்மீது இனி ஆசையே கிடையாது எனக்கு. அதனுல், 'டாக்டர் கொரமின் இஞ்செக்ஷன் கூட ஏன் கொடுத்தார்? ஒருகால் அதனுல் இருதய நோய் குணமாகிவிடுமோ?' என்றுகூடப் பயமாயிருக்கிறது......ஆனுல்......"

"கொரமின் இஞ்செக்ஷனு? அதெல்லாம் ஒன்றும் இல்லேயே......"

"சாரதா, நீ ஒன்றும் என்னிடம் மறைத்து வைக்க வேண்டியதே இல்லே. டாக்டர் அந்தக் கடைசி இஞ்செக்ஷனேக் கொடுத்தபோது அது இன்னது என்று உனக்குங்கூடத் தெரியாது. பிறகு இந்த அறையைவிட்டு வெளியே போய் வராந்தாவில் உன்னுடன் காதோடு காதாகப் பேசியதை நான் கவனிக்கவில்லேயென்று நினேயாதே. இதோ எதிரில் இருக்கும் கண்ணுடியில் உங்கள் இருவரின் பிம்பமும் எனக்குத் தெரிந்துகொண்டுதான் இருந்தது. டாக்டருடன் வராந்தாவில் நின்றுகொண்டு நீ பேசியபோது இந்த விளக்கு எரிந்துகொண் டிருந்ததும் உனக்கு மறந்து போய்விட்டது. அந்த இரண்டும் எனக்கு உதவின. உங்கள் முகத் தோற்றத்தையும் பேச்சுக்களேயும் கண்ணுடி மூலம் கவனித்தேன். என் அந்திய காலமும் தெரிந்துவிட்டது. கொரமின் இஞ்செக்ஷன் கொடுத்துவிட்டதாக டாக்டர் மெள்ளவேதான் சொன்னபோதிலும் என் பாம்புக்காதுக்கு அது கேட்கத்தான் கேட்டது. அப்போது உன் முகம் மாறியதைக் கவனித்தேன்! உம், சாரதா, பாவம்! உன்னேப் பார்க்க எனக்குச் சிரிப்புத்தான் வந்தது."

சாரதா விக்கி விக்கி அழுதுவிட்டாள். ருக்கு வார்த்தையை நிறுத்திவிட்டுச் சாரதாவின் முகத்தையே நோக்கிஞள்.

"இருந்தாலும் நீ இப்படியெல்லாம் உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாது" என்ருள் சாரதா அழுகையை அடக்கிக் கொண்டே.

"சாரதா, இன்னெருதடவை நீ இப்படிச் சொல்லும்படி நான் வைத்துக்கொள்ள மாட்டேன். தயவு செய்து இன்னும் கொஞ்ச நேரம் என்னைத் தனியாக இருக்க விடு. இதை எழுதி முடித்துவிடுகிறேன்."

"என்ன எழுதுகிருய்? கடிதமா?"

"ஆம்!"

"யாருக்கு?"

"அப்புறம் சொல்லுகிறேன்!"

"உன் அகத்துக்கார......" சாரதா வார்த்தையை அடக்கிக்கொண்டாள். முதல் நாள் மத்தியான்னமே டாக்டர் ருக்குவின் நிலைமை மோசமாகிவிட்டது என்றும் அவளுக்கு இருக்கும் நோயுடன் இருதய நோயுங் கூடச் சேர்ந்துவிட்ட தென்றும் கூறிச் சென்ருர். அன்று வரையில் தன் பெற்ருேருக்கோ புருஷனுக்கோ தன் உடல் நிலையைப்பற்றி ஒரு கடிதங்கூட எழுதக்கூடாது என்று சாரதாவுக்கு நிபந்தனை விதித்திருந்தாள் ருக்கு. அந்த நிபந்தனையின் பிரகாரம் சாரதாவும் நடந்தாக வேண்டியிருந்தது. ஏனெனில் ருக்குவை ரங்கநாதன் சாரதாவின் இல்லத்தில் கொண்டு வந்து விட்டுச் சென்றபோதே, ருக்கு இந்த நிபந்தனையைச் சாரதாவுக்கு விதித்துவிட்டாள். ருக்குவின் தேக நிலையைக் கண்டு பயந்த சாரதா அப்போதே வேதவரத்துக்கு ஒரு கடிதம் எழுதித் தேவராஜ ஐயங்காரையும் செங்கமலத்தையும் வரவழைக்க வேண்டும் என்று கூறினுள். அதற்கு ருக்கு உடன்படவில்லை. அதற்கு மாருகத் தன்னை ஊருக்கே கொண்டு போய் விட்டுவிடும்படி சொன்னுள் சாரதாவிடம். ஆனல் வைத்தியம் பண்ணிக்கொள்ளாமல் ருக்கு ஊருக்குப் போய்விடுவது சாரதாவுக்கு இஷ்டமில்லை. எனவே அவள் பெற்ருேருக்கு உடனே கடிதம் போடவில்லையென்றும் உடம்பு சிறிது குணமான பிறகு போடுவதாகவும் கூறி டாக்டரைத் தருவித்து வைத்தியம் செய்வதில் முனைந்தாள் சாரதா.

ருக்கு இதைத் துளிகூட விரும்பவில்லை. சாராதாவின் திருப்திக்காகச் சில நாட்கள் சும்மா இருந்தாள். ஆனால் உடம்பு குணமானால்தானே! தேகம் கொஞ்சங் கொஞ்சமாகத் தேய்ந்து வந்து, கடைசியில் இருதய நோயும் வந்து சேர்ந்துகொண்டது. டாக்டருக்கும் நம்பிக்கை குறைந்தது. டாக்டருக்கே நம்பிக்கை குறையவே சாரதா பயந்து போனாள். ருக்குவைக் கேட்காமலே முதல் நாள் மத்தியான்னம் டாக்டர் வந்து போனபின் வேதவரத்துக்கும் கோயம்புத்தூருக்கும் தந்தி கொடுத்துவிட்டாள். ரங்கநாதனுக்குச் சாயந்தரமே ஆபீசில் தந்தி கிடைத்துவிட்டது. வேதவரத்துக் குப்பைக்காட்டுக்குத் தந்தி அத்தனை சீக்கிரம் போய்ச் சேருகிறதா? மறுநாள்தான் அது தேவராஜ ஐயங்காருக்குக் கிடைக்க முடியும்! அப்புறந்தானே அவர் வரப்போகிறார்? பாவம்!

இந்த நிலையில், இப்போது மின்சார விளக்கைப் போட்டுக்கொண்டு ருக்கு கடிதம் எழுதுவதைப் பார்த்ததும், 'உன் அகத்துக்காரருக்கா, அப்பாவுக்கா? நான் தந்தி கொடுத்திருக்கிறேன்' என்று சொல்ல நினைத்தாள் சாரதா. ஆனால் தந்தி கொடுத்த விஷயம் ருக்குவுக்குத் தெரிந்தால் அவளுக்கு இன்னும் அதிர்ச்சி உண்டாகுமே என்கிற பயந்தான் அவள் வார்த்தைகளை அடக்கிக்கொள்ளும்படி செய்தது. அதனுடன் ருக்கு தன்னைச் சிறிது நேரம் தனியாக இருக்க விடும்படி கேட்டுக்கொண்டது, சாரதாவின் மனத்தில் என்ன உணர்ச்சியை உண்டாக்கியதோ? கண்களில் கரகரவென்று திரண்டுவந்த கண்ணீரை மறைத்துக்கொண்டே, "ருக்கு, சுருக்கமாக எழுதி முடித்துவிடு. அதிகமாக உடம்பை அலட்டிக்கொள்ளக் கூடாது" என்று சொல்லிவிட்டு அந்த அறையை விட்டு நகர்ந்தாள்.

சில நிமிஷங்களில் ருக்குவும் கடிதத்தை எழுதி முடித்தாள். தலையணையின் கீழே வைத்திருந்த கவரை எடுத்து அதன்மீது ரங்கநாதன் விலாசத்தை எழுதிக் கடிதத்தை மடித்துக் கவருக்குள் போட்டு ஒட்டிவிட்டாள். அதை அன்றைத் தபாலிலேயே சேர்த்துவிடவேண்டும் என்கிற எண்ணம் உண்டாயிற்று அவளுக்கு.

தன் அந்தியகாலம் நெருங்கிவிட்டது என்று தெரிந்தபின் தான் அவளுக்கு இந்தக் கடிதம் எழுதவேண்டும் என்கிற எண்ணம் உண்டாயிற்று. டாக்டர் கடைசி முயற்சியாக இஞ்செக்ஷன் கொடுத்துவிட்டுச் சென்றதுமே அவளுக்கு இந்த எண்ணம் உண்டாகிவிட்டது. இந்த இஞ்செக்ஷன் கொடுத்த பின் பிழைத்தவர்கள் எத்தனை பேர்? ஏதோ நூற்றில் ஒன்று, ஆயிரத்தில் ஒன்று. எனக்கு எப்படியும் மரணந்தான் நிச்சயம். அதுவும் அதி சீக்கிரத்தில்! செத்த பின்னுவது அந்த ரகசியம்-சந்நியாசி சொன்ன அந்த ரகசியம்-ரங்கநாதனுக்குத் தெரியட்டுமே! அவன் உள்ளத்திலே முள்போலத் தைத்திருந்த அந்த ரகசியம் அவள் மரணத்துக்குப் பின் அவனுக்குத் தெரிந்தால் என்ன? அவள்மீது அவன் கொண்டிருந்த மாறுபாடான அபிப்பிராயம் போய்விடுமல்லவா? அவளைப் பற்றிக் கேவலமாக அவன் என்ன எண்ணியிருந்தாலும், அந்த எண்ணம் அகன்றுவிடும் அல்லவா, ரகசியம் தெரிந்தால்? எப்படியும் அவன் சகுந்தலாவைக் கல்யாணம் செய்துகொள்ளப்போகிருன்! இதற்குள் ஒருவேளை கல்யாணம் ஆகியிருந்தாலும் இருக்கும். அதற்கான ஏற்பாடுகளைக் கூட அவள்தான் தன்னுலான வரையில் செய்து வந்திருக்கிருளே! வீட்டைவிட்டுக் கிளம்பும்போதுகூடப் புதிதாகப் பெருமாள் மேடைமீது தீபம் ஏற்றி வைத்துவிட்டு வந்திருக்கிருள்! அந்தத் தீபம் இனியும் எரியும் என்று அவள் நம்புவது சகஜந்தானே!

ஆனுல் அந்தத் தீப ஒளியின் முன்னர் அவன் விட்டில் துடிப்பதுபோலத் துடித்தது அவளுக்கு என்ன தெரியும்? பழைய தீபம் படர்ந்தெரிந்தபோது அதில் விழ வந்து விழாமல் தப்பிச் சென்ற விட்டில் புதிய தீபம் ஏற்றி வைத்த போது அந்தப் பிரதேசத்தை விட்டே பறந்தோடி விட்டதோ! அப்படியல்லவா இருக்கிருன் ரங்கநாதன் இன்று. விளக்கைக் கண்டு மயங்கும் விட்டிலே அல்லவே அவன் இப்போது! அது எப்படித் தெரியும் ருக்குவுக்கு?

அவள் மனத்திலே இப்போது அமைதி குடிகொண் டிருந்தது. இன்னும் சிறிது நேரத்திலே அந்த அமைதி தன் உடலி

லும் பரவிவிடும் என்பதை அவள் உணர்ந்துகொண்டாள். தன் கணவனுடைய சுகத்துக்காக அவள் அவனை விட்டு விலகினாள். அதனால் அவனுக்குச் சுகம் உண்டாகும் என்று நம்பினாள். அந்தச் சுகம் இன்று அவனுக்குக் கிடைத்திருக்கும் என்றும் கருதினாள் அவள். அடுத்த நாள் அவள் உயிருடன் இருக்கப்போவதில்லை. இந்தச் சந்தர்ப்பத்திலே அந்த ரகசியத்தைக் கடிதத்தின் மூலம் அவன் அறிந்து விட்டால், அவளைப்பற்றி அவன் தவறாக நினைத்திருந்தாலும் சரி, அந்த நினைப்பு நீங்கிவிடும். (அவன் உள்ளத்திலே அவள் பரிசுத்தமான தன்மை, பரிபூர்ணமான தியாகம், எல்லாம் நன்கு பதிந்துவிடும். அவனுடைய எதிர்கால வாழ்க்கையின் இன்ப காலத்திலே, அவள் அவன் வாழ்வின் ஒளியாகத் திகழ்வாள் என்கிற எண்ணம் உண்டாயிற்று அவளுக்கு. கடிதத்தை எழுதி முடித்தாள்.)

அவள் பெற்றோரைப்பற்றிக்கூட அவளுக்குக் கவலை யில்லை இப்போது. அவர்களைக் காணவேண்டும் என்று கூடத் துடிக்கவில்லை அவள். அந்தச் சமயத்தில் அவர்கள் எதிரே இருந்தால் தன் அமைதிக்கே பங்கம் உண்டாகும் என்றுகூடத் தோன்றியது. 'இப்போது வந்தால் என்ன? பிறகு வந்தால் என்ன அவர்கள்? பலன் ஒன்றுதானே அவர்களுக்கு? பாவிகள் கொடுத்துவைக்கவில்லை!' என்று தான் நினைத்தாள்.

கடிதத்தை ஒட்டி முடித்தபின்தான் ருக்கு திரும்பிப் படுத்துக்கொண்டாள். இத்தனை நேரம் குப்புறப் படுத்துக் கொண்டு எழுதியதால் ஏற்பட்ட அதிர்ச்சி அப்போதுதான் தெரிந்தது அவளுக்கு. மல்லாந்து படுத்தவுடன் முதுகின் மீது இருதயம் பாறுங்கல் போல அழுத்தியது. அத்துடன் மூச்சுவிடும் சிரமமும் முன்னைவிட அதிகரித்தது. அந்திய காலம் அணுகிவிட்டதை அறிந்துகொண்டாள்.

சாரதாவை உடனே அழைத்து அந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்த்துவிடும்படி சொல்லவேண்டும் என்று எண்ணினாள். "சாரதா!" என்று கூப்பிடவும் கூப்பிட்டாள்

ஆனால் அவள் குரலோசை வெளியே கேட்கவில்லை; அவ்வளவு தீனமாகிவிட்டது!

சாரதா வரவில்லை. இருதயத்திலே ஏதோ படபடப்பது போலத் தோன்றியது அவளுக்கு. ஆனால் நினைவு மறக்க வில்லை. எதிரே அறைச் சுவர்களிலும் அறையிலிருந்த சாமான்களிலும் பூமி சுழல்வதைக் கண்டாள் அவள். சற்றே நிமிர்ந்து உட்கார்ந்து பின் சுவரில் கைக்கு எட்டும் தூரத்தி லிருந்த எலெக்டிரிக் சுவிச்சை அமுக்கினாள்.

அறையில் விளக்கின் வெளிச்சம் இப்போது இல்லை. ஆனால் ஜன்னல் வழியாக வைகறையின் வெளிச்சம் பாய்ந்து வந்தது. மார்பிலே மூச்சடைப்பு இன்னும் அதிக மாவதை உணர்ந்தாள் அவள். ஆயினும் இன்னமும் அவள் நினைவை இழக்கவில்லை. 'ஆகா, என்ன, அடைக்கிறது மூச்சை!...ஒரு வேளை இஞ்செக்ஷன் செய்யும் வேலையோ... இப்படியெல்லாந்தான் இருக்குமோ?......இப்படி இருந்து மறுபடியும்...பிழைத்துக்கொண்டால்...'

சரேலென்று இப்படி ஒரு விபரீதமான எண்ணம் உண்டாயிற்று. உடனே அவள் முகத்திலே ஒரு பயங்கர மான பிரகாசம். 'ஐயோ! இந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்த்துவிட்டால், இது எப்படியும் நாளைக்கு அவரிடம் போய்ச் சேர்ந்துவிடும். அப்போது நான் உயிருடன் இருந் தால்...இந்த இஞ்செக்ஷன் என் உயிரை வெளியேற வொட்டாமல் கட்டிப் போட்டுவிட்டால்...நானும் பிழைத்துக் கொண்டு, இந்த ரகசியமும் அவருக்குத் தெரிந்துபோய்விட் டால்...அதனால் அவருக்கு என்ன ஆபத்து நேரிடுமோ? "இந்த ரகசியம் உன்வரையில் இருக்கட்டும். பிறருக்குச் சொல்லாதே!" ஆம். அந்த ஆக்ஞை! அதை மீறக் கூடாது......இறப்பேன் என்பது என்ன நிச்சயம்? பாவி பிழைத்துக்கொண்டு, இந்த ரகசியமும் அவருக்குத் தெரிந்து போய், அவர் உயிர் துறப்பாரானால்...? அப்பப்பா! என்ன கோரம்! சகுந்தலா...அந்தப் பெண்; பாவம்! அவள் அவரை இன்று கல்யாணம் செய்துகொண்டிருந்தால்—அவள் கதி, அவள் மாங்கல்யம்? ஏன்? என் மாங்கல்யம்?...

கூடாது...கூடாது கூடாது...என்னைப்பற்றி அவர் என்ன நினைத்தாலும் சரி...என்ன தவருக நினைத்தாலும் சரி; பாதக மில்லை. அவர் நன்ருயிருக்கட்டும். சகுந்தலா நன்ருயிருக் கட்டும். அவள் மாங்கல்யம் நன்ருயிருக்கட்டும். என் மாங்கல்யமும் நன்ருயிருக்கட்டும். வாழ்வு எனக்கு இல்லா மற் போனலும் என் வாழ்வின் - என் புருஷனது வாழ்வின்- ஒளியாக இந்த மாங்கல்யம் என்றும் தழைத்திருக்கட் டும்!''

ருக்கு தன் இருகைகளாலும் தன் கழுத்தில் அணிந்திருந்த ரங்கநாதனது பாததூளி பெற்ற மாங்கல்யத்தை மேலாக்குக்கு மேல் தெரியும்படி பற்றிக் கண்களில் ஒற்றிக்கொண்டாள். ஜன்னல் வழியாக வந்த உதய சூரியனின் ஜோதிக் கதிர்கள் அந்த மாங்கல்யத்தைப் பளபளவென்று பிரகாசிக்கச் செய்தன!

அடுத்த விநாடியே அவள் இருதயத்திற்குள் ஏதோ ஒரு பெரிய அதிர்ச்சி. சட்டென்று ரங்கநாதனுக்கு எழுதிய கவரைக் கையில் எடுத்தாள். அதை ஆயிரம் சுக்கலாகக் கிழித்து உருத் தெரியாமல் எறியவேண்டும் என்று மனத்துக் குள் ஒரு நினைவு; ஆனல் அந்த நினைவு மறந்துவிடும் போன்ற ஓர் உணர்ச்சி.

இரு கைகளாலும் கவரைக் கிழிக்க முயன்ருள்; கவர் இரு துண்டாகத்தான் கிழிந்தது. அதனுடன் அவள் கரங்களும் 'தொப்'பென்று படுக்கையில் விழுந்தன.

முற்றும்

